# தொல்காப்பியம்

## பொருளதிகாரம்
## பிற்பகுதி

(மெய்ப்பாட்டியல் - உவமவியல் ~~- செய்யுளியல்~~
மரபியல்)

பேராசிரியர் உரை
(குறிப்புரையுடன்)

*பதிப்பாசிரியர் :*

**டாக்டர் கு. சுந்தரமூர்த்தி**




அண்ணமலைப் பல்கலைக்கழகம்
1985

# முன்னுரை

தொல்காப்பியம் தமிழுக்குக் கிடைத்த மூத்த இலக்கணம். இதன் சீரும் சிறப்பும் வெளிப்படுத்தியவர்கள் உரையாசிரியர்கள். இளம் பூரணர், சேனாவரையர், பேராசிரியர், நச்சினார்க்கினியர், தெய்வச் சிலையார், கல்லாடர் ஆகிய அறுவரும் தொல்காப்பிய உரையாளர்கள். சொல்லதிகாரத்திற்குப் பெயர் தெரியா உரை ஒன்றும் உள்ளது.

உரைகளில் எழுத்துக்கு இளம்பூரணம், சொல்லுக்குச் சேனா வரையம், பொருளுக்கு நச்சினார்க்கினியம் எனச் சிறப்பித்துக் கற்றல் புலமையுலகின் போக்கு பொருளுக்கு நச்சினார்க்கினியம் எனச் சொன்னாலும் முன் ஐந்து இயல்கள் நச்சினார்க்கினியர் உரை கொண்டன. பின் நான்கு இயல்கள் பேராசிரியர் உரை பெற்றன இவ்விரட்டையர் உரையும், இலக்கிய நயமும் இலக்கண நுட்பமும் ஆய்வுத் திறனும் வாய்ந்தன.

பேராசிரியர் உரை விரிவானது. மெய்ப்பாட்டியலும் உவமவியலும் அவர் உரையால் தெளிவு பெறுகின்றன. செய்யுளியலில் அவரது யாப்பறிதிறன் வெளிப்படுகின்றது. 'நோக்கு' என்னும் உறுப்பிற்கு இவர் எழுதிய விளக்கம், அவ்வுறுப்பின் சிறப்புக் காட்டும். இலக்கிய வுரை எழுதும் பேராற்றல் பெற்றவர் என்பதனை இவ்விளக்கம் மெய்ப்பிக்கும்.

பேராசிரியர் உரையை நோக்கின் அவர் இளம்பூரணத்திலிருந்து வேறுபட்டுச் செல்கின்றமையை உணரலாம். 'பேராசிரியரின் இலக்கணக் கொள்கை' என்பது தனியாய்வுக்கு உரியது.

தொல்காப்பியப் பொருளதிகாரம் நச்சினார்க்கினியம் பேராசிரியம் என்னும் பதிப்பு, முத்தொகுதிகள் கொண்டது. இம்மூன்றாம் தொகுதி, பின் நான்கியல்கள் அமைந்த பேராசிரியம். இதன் பதிப்பாசிரியர் பேராசிரியர் கு. சுந்தரமூர்த்தி அவர்கள், தொல் காப்பியச் செல்வர். தொல்காப்பியம் முழுமையும் தமிழ் உலகிற்கு விளக்கப்படுத்தியவர்.

பல்கலைக் கழக மானியக்குழு உதவியுள்ளமை ஈண்டுச் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாம். திருப்பனந்தாள் காசித் திருமடத்தில் 19வது பட்டத்தில் வீற்றிருந்தருளிய ஸ்ரீலஸ்ரீ காசி வாசி சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் இவ்வாறுகிய பழந்தமிழ் நூல்கள் பலவும் வெளி வருதற்கென ஒரு அறக் கட்டளையை நிறுவி அதன்வழி வெளியிடும் பொறுப்பை அண்ணுமலைப் பல்கலைக் கழகத்திற்கு வழங்கியருளினுர்கள். அந்நிதியிலிருந்து இதனை அண்ணுமலைப் பல்கலைக்கழகம் வெளியிட்டு உதவுகின்றது. இதற்குக் காரணமாக இருந்தவர்களும் என் அன்பிற்கும் மதிப்பிற்கும் உரியவர்களுமான மேதகு அமரர் இராஜா சர் முத்தையச் செட்டியார் அவர்கட்கும், அப்பல்கலைக் கழகத்தின் இணைவேந்தராக இருக்கும் மேதகு, டாக்டர் எம். ஏ. எம். இராமசாமி அவர்கட்கும், துணை வேந்தராக இருக்கும் மேதகு பேராசிரியர் சை. வே. சிட்டிபாபு அவர் கட்கும் என் நன்றி என்றும் உரியதாகும்.

எளியேனது பணிகளுக்கெல்லாம் ஆக்கமும், ஆசியும் வழங்கியருள்பவர்களும், திருப்பனந்தாள் காசித் திருமடத்தின் அதிபராக விளங்கி அருள்பவர்களுமான கயிலைமா முனிவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கட்கு என் வணக்கம் என்றும் உரியதாகும்.

பேரன்பிற்கும், பெருமதிப்பிற்குமுரிய தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் திரு. ஆறு. அழகப்பனுர் அவர்கட்கும் என் நன்றி என்றுமுரியதாகும்.

இதனை நன்முறையில் பதிப்பித்துத் தந்த சிதம்பரம் கஜேந்திரா அச்சகத்தார்க்கு என் நன்றி மிகவும் உரியதாகும்.

இங்ஙனம்,

திருப்பனந்தான்
9-11-1985

கு. சுந்தரமூர்த்தி,
முதல்வர்.

# பொருளடக்கம்


| | | பக்கம் |
|---|---|---|
| 1. | முன்னுரை | i — ii |
| 2. | பதிப்புரை | iii — iv |
| 3. | ஆராய்ச்சி முன்னுரை | i —xxxii |
| 4. | மெய்ப்பாட்டியல்-பொருளமைப்பு | 1 — 7 |
| 5. | மெய்ப்பாட்டியல் | 8 — 98 |
| 6. | உவமஇயல்-பொருளமைப்பு | 99 — 104 |
| 7. | உவம இயல் | 105 — 193 |
| 8. | செய்யுளியல்-பொருளமைப்பு | 194 — 209 |
| 9. | செய்யுளியல் | 210 — 580 |
| 10. | மரபியல்-பொருளமைப்பு | 581 — 591 |
| 11. | மரபியல் | 592 — 733 |
| 12. | நூற்பா முதற்குறிப்பு அகரவரிசை | 735 — 740 |



திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து
இருபத்தொன்றாவது பட்டத்தில் எழுந்தருளியுள்ள
அதிபர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி
முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

சிவசிவ

# ஆராய்ச்சி முன்னுரை

(டாக்டர் கு. சுந்தரமூர்த்தி, எம். ஏ. பி. எச். டி.
முதல்வர், திருப்பனந்தாள்)

தன்னடைந்தார்க்கு இன்பங்கள் தருவானைத் தத்துவனை கல்லடைந்த மதில்பிரம புரத்துறையும் காவலனை முன்ன டைந்தான் சம்பந்தன் மொழிபத்தும் இவைவல்லார் பொன் னடைந்தார் போகங்கள் பல அடைந்தார் புண்ணியரே.

இற்றைக்கு இருக்கும் தமிழ் நூல்களுள் தொன்மையும் தலைமையும் சான்ற பெருநூலாக விளங்குவது தொல்காப்பிய மாகும். இவ்வரிய நூல் தாமும் மொழி, சமுதாயம் ஆகிய இரு நலன்களையும் இனிதெடுத்து இயம்புவதாகும். தமிழ் நூல்களுள் உரை பலவாகச் சமைந்த பெரு நூல்கள் நான்காம். அவை இந் நூலொடு, திருக்குறள், திருமுருகாற்றுப்படை, சிவஞானசித்தி யார் ஆகிய நான்குமாம்.

தொல்காப்பியத்திற்கு உரைகண்டார் எழுவராவர். அவர் இளம்பூரணர், நச்சினார்க்கினியர், சேனாவரையர் தெய்வச்சிலை யார், கல்லாடர், பேராசிரியர், பெயர் அறிய இயலாத பழைய உரையாசிரியர் ஆகியோர் ஆவர். முதல் உரையாசிரியராகிய இளம்பூரணர் உரையில் 'என்பாரும் உளர்' என வரும் குறிப்பைக் காணுகிற பொழுது, அவருக்கு முன்னரும் உரை யெழுதியோர் உளர் எனத் தெரிகிறது அப்பெரியாரைப் பற்றி யும், அவர் உரையைப் பற்றியும், முழுமையாகவும், செழுமை யாகவும் அறியயியலாமையின் முதல் உரையாசிரியர் இளம்பூரணர் என்றே குறிப்பிடும் மரபு ஏற்பட்டது.

இவர்களுள் பேராசிரியர் என்பாரின் உரை தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் மெய்ப்பாடு, உவமம், செய்யுள், மரபென வரும் நான்கு இயல்களுக்கு மட்டுமே காணப்படுகிறது. எனினும்

பொருளதிகாரம் முழுமைக்கும் இவர் உரை எழுதியுள்ளமை புலனாகின்றது.

1. இவையெல்லாம் (புகுமுகம் புரிதல்முதல் கையறவுரைத்தல் ஈறாக) முறையானே நிகழ்ந்தமை நோக்கி யாமோர் கூட்டத் தொன்மையும், தோலும் போலப் பொருள் தொடர் நிலையாக்கி உரைப்பாரும் உளர். அஃது ஆகாமைக்குக் காரணம் களவியலுள் கூறினாம் என்பது[1]

2. 'ஒருக்கு நாம் ஆடும் குரவையுள்[2]', மற்று இது முல்லைத் திணைப் பாட்டு அன்றோ எனின், அது நிலத்தான் முல்லையாயிற்று என்பது அகத்திணை யியலுள் கூறினாம்[3]

3. சொல்லோத்தினுள் கூறிய மரபிற்கும், மரபியலுள் உரைப்பனவற்றிற்கும், செய்யுளியலில் கூறப்படும் மரபிற்கும், வேற்றுமை என்னை யெனின் செய்யுளியலில் கூறும் மரபு செய்யுற்கே உரித்து; எஞ்சிய இரண்டும் வழக்கிற்கும், செய்யுட்கும் பொது என்பது. அல்லதூஉம் அவற்றது வேறுபாடு முன்னர் அகத்திணை இயலுள் கூறிவந்தாம்[4]

4. நான்கு நிலத்திலும் ஓரிடத்துப் பொருளை ஓரிடத்தவாகச் சொல்லுதலும், உலகொடு மலைதலும், சமயங்களோடு மலைதலும், கலையொடு மலைதலும், பிறவும் இன்னோரன்னவும், பொருள் மரபின் பால் பட்டடங்கும். இவை நாடக வழக்கின் ஆம் என்பது, முன்னர் அகத்திணை இயலுள் கூறினாம்[5].

5. கைகோள் என்பது ஒழுக்கம் கோடல், எனவே அகத்திற்குப் புறனாயினும் புறத்திணைக்குக்கைகோள் அவ்வாறு வேறு வகைப் படக்கூறப்படா; பொது வகையான் மறைந்த ஒழுக்கமும் வெளிப்பாடும் என இரண்டாகி அடங்கும் அவையும் என்றவாறு. அவை வெட்சியுள்ளும், ஒழிந்த திணையுள்ளும் காட்டப் பட்டன[6] இவற்றால் இவ்வுண்மை அறியப்படும்.

---

1. மெய்ப்பாட்டியல்—18 உரை.
2. கலித்தொகை—104.
3. மெய்ப்பாட்டியல்—19. உரை
4. செய்யுளியல்—1. உரை
5. செய்யுளியல்—81. உரை
6. செய்யுளியல்—188—உரை

இவ்வாறு பொருளதிகாரம் முழுமைக்கு மட்டுமன்றி எழுத்ததிகாரத்திற்கும் உரை எழுதியது போன்ற'ஒரு குறிப்புக் காணப்படுகின்றது. 'வலம்புரிமுத்தில் குலம்புரிபிறப்பும்' என்னும் பொதுப் பாயிரமும், 'வடவேங்கடம் தென்குமரி' என்ற சிறப்புப் பாயிரமும் ஒழிந்த நூற்பாக்கள் போல நூற்பா அகவலாகி நூலின் வேறாகி இன்றியமையாவாயின. அவற்றிற்கு நூற்பா உரையோடு மயங்காமல் வேறு உரையும் ஆண்டெழுதப் பட்டன[1].

பேராசிரியர் எனும் பெயருடையார்:-

இப்பெயருடையார் ஐவர் காணப்படுகின்றனர். அவர்:

1. தொல்காப்பியப் பொதுப்பாயிரம் எழுதிய ஆத்திரையன் பேராசிரியன்.

2. யாப்பருங்கல உரையாசிரியரால் குறிக்கப்படும் பேராசிரியர்.

3 தொல்காப்பியத்திற்கு உரை செய்த பேராசிரியர்.

4. திருக் கோவையார்க்கு உரை செய்த பேராசிரியர்.

5. தமிழ் நாவலர் சரிதையில் குறிப்பிடப்படும் பேராசிரியர்.

தொல்காப்பிய மரபியல் 98 வது நூற்பாவில்.

'வலம்புரி முத்தின் குலம்புரி பிறப்பும்'

என்னும் பொதுப்பாயிரம் செய்தான் ஆத்திரையன் பேராசிரியன் எனப் பாயிரம் செய்தான் பெயர் கூறியவாறு எனத் தொல்காப்பிய உரை கண்ட பேராசிரியர் படர்க்கையில் வைத்துக் கூறுவதால் இவர் அவரின் வேறானவர் என்பது தெளியலாம்.

யாப்பருங்கல உரையில் குறிக்கப்படும் உரையாசிரியர் பல்வேறிடங்களிலும் அடைமொழி கொடுத்தே கூறப்படுகின்றார்

1. மரபியல்—99 - உரை.

'பிறை நெடுமுடிக்கறை மிடற்றரனுர் பெயர் மகிழ்ந்த பேராசிரியர்'

'நீர்மலிந்த வார்சடை யோன்பேர் மகிழ்ந்த பேராசிரியர்'

'காமவேளைக் கறுத்த புத்தேள் நாமந்தாங்கிய நல்லாசிரியர்'

'பெண்ணொரு பாகன் பேர் மகிழ்ந்த பேராசிரியர்'

என அத்தொடர்கள் வருகின்றன. இந்நான்கு தொடர்களுள் மூன்று தொடர்களில் சிவபெருமான் பெயர் மகிழ்ந்த எனவும், ஒரு தொடரில் அப்பெருமானின் நாமம் தாங்கிய நல்லாசிரியர் எனவும் குறிப்பிடப்படுவதால் இவர் மயேச்சுரர் என்னும் பெயருடைய பேராசிரியர் என்பது தெளிவு. மயேச்சுரர் செய்த நூல் மயேச்சுரர் யாப்பெனப்படும். அவர் பேராசிரியர் எனப் பாராட்டப் பெற்றிருப்பதோடு நல்லாசிரியர் என்றும் பாராட்டப் பெற்றிருப்பதால், பேராசிரியர் என்றே குறிப்பிடப்படும் தொல்காப்பியப் பேராசிரியரினும் இவர் வேருவர் என்பது தெளிவு.

இனித்திருக்கோவையாருக்கு உரை செய்த பேராசிரியர் அந்நூற் பாடல்களுக்கு முன்னுரையும், சொற் பொருள் விளக்கமும், இலக்கணக் குறிப்பும், பாடவேறுபாடும், அவ்வப் பாடல்களில் காணும் மெய்ப்பாடு, பயன் ஆகியவற்றைக்கூறி அக்கோவையாரைப்பெரிதும் பாராட்டி மகிழ்ந்துள்ளார். அவரே தொல்காப்பிய உரைகண்ட பேராசிரியராயின் திருக்கோவையார் பாடல்கள் பலவற்றையேனும் ஆங்காங்கே எடுத்துக் காட்டியிருப்பர். அவ்வாறு அந்நூற் பாடல்கள் யாண்டும் காட்டப் படவில்லை. அன்றியும் தொல்காப்பிய உரையாசிரியராகிய பேராசிரியர் தொல்காப்பியரைப் படர்க்கை ஒருமையிலேயே 'கூறினன்' உரைத்தான்' எனக்கூறுகின்ருர் திருக்கோவையார் உரையாசிரியரோ அதன் நூலாசிரியராகிய மணிவாசகரைப் பன்மையிலேயே வைத்து (என்ருர், கூறினர். எனக்கூறுகின்ருர். ஆதலின் திருக்கோவையாருக்கு உரைகண்டபேராசிரியரினும் தொல்காப் பியத்திற்கு உரைகண்ட பேராசிரியர் வேருனவர் என்பது தெளிவு

தமிழ் நாவலர் சரிதையில் 'செங்கால்மட அன்னம்' என்று தொடங்கும் பாடலில் ஒட்டக்கூத்தர் உலாப்பாடியபோது பேராசிரியர் நேமிநாதர் பட்டோலைபிடிக்கப் பாடியது என்ற குறிப்பு

உள்ளது. ஒட்டக்கூத்தார் பன்னிரண்டாம் நூற்றாண்டினர். தொல்காப்பிய உரையாசிரியராகிய பேராசிரியர் பதின் மூன்றாம் நூற்றாண்டினராவர். எனவே மேற்குறிக்கப் பட்ட பேராசிரியர் ஐவரும் வெவ்வேறானவர் என்பது புலனாகும்.

பேராசிரியர்:- இவர் வரலாற்றை அறிதற்கு யாதொரு கருவியும் கிடைத்திலது. சீவகசிந்தாமணி உரையின் சிறப்புப் பாயி ரத்தில்,

'நல்லறிவுடைய தொல் பேராசான்
கல்வியுங் காட்சியும் காசினி யறியப்
பொருள் தெரி குறுந்தொகை இருபது பாட்டிற்கு
இதுபொருள் என்றவன் எழுதா தொழிய
இதுபொருள் என்றதற்கு ஏற்ப உரைத்தும்

எனக் குறிப்பிடப்படுவதிலிருந்து, இவர்தம் அறிவும் ஆற்றலும் அறியப்படுவதோடு,குறுந்தொகையில் 380 பாடல்களுக்கு உரை கண்டமையும் அறிய முடிகின்றது. எனினும் இவ்வுரை இது பொழுது கிடைத்திலது. பேராசிரியர் உரையில் ஏனைய நூல் களில் காட்டப்பட்ட மேற்கோள் பாடல்களைவிடக் குறுந் தொகைப்பாடல்கள் மிகுதியாகக் காட்டப்பட்டிருப்பது கொண்டு இவரே குறுந்தொகைக்கு உரையெழுதினார் என்று துணியலாம். செய்யுளியல் 11வது நூற்பா உரையில் அசையை யும், சீரையும் இசையொடு சேர்த்தி வகுத்து உணர்த்துதல் 'எஃகு செவியும், நுண்ணுணர்வும் உடையார்க்கன்றி உணர லாகா என்ப' எனவும், செய்யுளியல் 212 வது நூற்பாவில் 'வண்ணம் என்பது நூறும் பலவுமாகி வேறுபடினும் அவை யெல்லாம் ஆசிரியர் கூறிய இருபதில் அடங்கும். அச்சந்த வேறுபாடு நுண்ணுணர்வு உடையார்க்குப் புலனாம்.' எனவும் மரபியல் 98 வது நூற்பா உரையில் 'முதல்வன் செய்த நூலா யினும் வழி நூலாயினும் அவ்வழிநூலின் முழுவதும் தெரிந்துணா ரும் நுண்ணுணர்வினார்க்கே முப்பத்திருவகை உத்தியும் புலனாவது எனக்கொள்க' எனவும் இவர் கூறுவதிலிருந்து இவர் தம் நுண்ணுணர்வு புலனாகும். இவரை அடுத்துத் தொல்காப்பி யத்திற்கு உரை கண்ட நச்சினார்க்கினியர் இவரைப் பேராசிரிய

ரென மனங்குளிரக் குறிப்பிடுகின்றார். புகுமுகம் புரிதல் எனத் தொடங்கும் மெய்ப் பாட்டியல் 96வது நூற்பா உரையில் 'அதற்குப் பேராசிரியர் கூறிய உரையானும் உணர்க' எனவும், பேராசிரியர் தாமே மறுத்தவாறு காண்க' (238) எனவும், இது வெள்ளடிமுழுதும் வந்ததென்று பேராசிரியர் காட்டினார்' எனவும் (324) வரும் நச்சினார்க்கினியர் உரையிலிருந்து இவ்வுண்மை விளங்கும்.

நாடு:- இவர் சோழநாட்டினராவர். அந்நாட்டிடத்து மிக்க பற்றும் உடையவராவர். இதனை இவர் எடுத்துக் காட்டும் பாடல்களிலிருந்து அறிய முடிகின்றது. சோழனைப்பற்றிய பாடல்களை மிகுதியாகக் காட்டுவதோடு அமையாது, சோழ நாட்டின் வளத்தை ஓர் அழகான பாடலில் இவர் காட்டுகின்றார்.

வான் பொய்யாது தீம்பெயல் பெய்து
மால்யாறு போந்து கால்சுரந்து பாய்ந்து
சுரைபொய் யாது தந்து நிரை வளஞ்சான்று
வரையாது தந்து பலாப்பழுத்து வீழ்ந்து
பாம்பு கொள்ளாது வீங்குசுடர் நீண்டு
வித்துநாறு வாய்த்து முத்துக் கரும்பு பூத்து
வரம்பு கொள்ளாது நிரம்பு பெருங்கூட்டு
வாழை ஓங்கிய சோழிலைப் பரக்குந்
தண்டா யாணர்த்து என்ப என்றும்
படுவது கூட்டுண்டு கடவது நோக்கிக்
குடிபுறந் தருஉம் வேந்தன்
நெடுநிலைத் தண்குடை நிழற்று நாடே

இதனை இவ்வாசிரியரே செய்தார் என்பர்[1]

சமயம்:- இறையனார் களவியலைச் செய்த இறைவனைப் 'பெருமானடிகள்' எனக் (நூற்பா 649 உரை) குறிப்பிடுகின்றார்

மெய்யுவமத்திற்கு [2] எடுத்துக் காட்டாக

'வேயொன்று தோளொரு பால்'
வெற்பொன்று தோளொரு பால்

என்று எடுத்துக் காட்டுகின்றார்.

---

1. தமிழ் இலக்கிய வரலாறு: 13ஆம் நூற்றாண்டு. பக்கம் 147. மு. அ.
2. தொல் உவம. நூற்பா— 286,

இத்தொடர் யாண்டுள தெனத் தெரியவில்லை. எனினும் அம்மையப்பராக விளங்கும் இறைவனின் திருமேனியை இத் தொடர் குறிக்கிறது. வினை உவமத்திற்கு[1]

'யாழ் கெழு மணிமிடற்று அந்தணன்' என்றும், அன்ன என்னும் உவம உருபு வருமாற்றிற்குச்

'செவ்வானன்ன மேனி'

'அவ்வான் இலங்கு பிறையன்ன விலங்குவால் வையெயிற்று

என்றும், நேர் என்னும் உவம உருபு வருமாற்றிற்குக்

'கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்'

என்றும், அடியும் சீரும் இசையொடு சேர்த்தி உணருமாற்றிற்கு[2]

'நுதலது இமையா நாட்டம் இகலட்டு
கையது கணிச்சியொடு மழுவே'

என்றும் சிவபெருமானைப் பற்றிக் குறிப்பிடும் அகநானூற்றுக் கடவுள் வாழ்த்துப் பகுதியையே தொடர்ந்து காட்டுகின்றார்.

இனி ஆசிரியத்துள் ஈற்றயலடி சிந்தடியாய் வருமாற்றிற்குப்[3] புறநானூற்றில் சிவபெருமானைப்பற்றிய கடவுள் வாழ்த்துச் செய்யுளைக் காட்டுகின்றார். முரண் தொடை வருமாற்றிற்கு[4]

'தீநீர் நஞ்சம் திருமிடற்று ஒடுக்கிய
உவரியன்ன உடைப் பெருஞ்செல்வர்

என்னும் தொடரையும், கொச்சக ஒரு போகிற்குக்[5], கலித் தொகையில் உள்ள சிவபெருமானைப் பற்றிய கடவுள் வாழ்த்துச் செய்யுளையும், வாழ்த்தியல் வகைக்கு [6]மீண்டும் அகநானூற்றுக் கடவுள் வாழ்த்துச் செய்யுளை முழுமையாகவும் காட்டுகின்றார். புறநிலை வாழ்த்திற்கு,

'இமையா முக்கண் இலங்குசுடர் பயந்த
உமை யொருபாகத்து ஒருவன்'

என்வரும் இடம் விளங்கா மேற்கோள் செய்யுளையும்,

---

1. தொல். பொருள். சூ. 287
2. தொல்: பொருள் சூ. 323
3. தொல். பொருள் சூ. 380
4. தொல்; பொருள் சூ. 407
5. தொல், பொருள் சூ. 461
6. தொல், பொருள் சூ. 421

சொற்சீரடி வருமாற்றிற்

'கறையணி மிடற்றினவை
கண்ணணி நுதலினவை
பிறையணி சடையினவை'

எனவரும் தொடர்களையும், கலிவிருத்தத்திற்கு

'நெருப்புக் கிழித்து விழித்ததோர் நெற்றி
உருப்பில் பொடிபட்டு இடைவிழுந்த மாரன்
அருப்புக் கணையால் அடப்பட்டார் மாதர்
விருப்புச் செயநின்னை விரும்புகின்றார்களே'

என்னும் பாடலையும், தாழிசைக் கொச்சகத்திற்குக்

'கொன்றை வேய்ந்த செல்வன் அடியிணை
என்றும் ஏத்தித் தொழுவோம் நாமே'

என்னும் பாடலையும், குறளடி நான்காக வந்தமைக்கு

'நெய்யொடு தீயொக்கச்
செய்யானைச் சேர்வார்க்குப்
பொய்யாத வுள்ளமே
மெய்யாகல் வேண்டுமே'

என்னும் பாடலையும், முச்சீரடியான் வந்த கொச்சகத்திற்கு

'மையணி கண்டனை வானோ
ரையனை யாயிரம் பேழ்வாய்ப்
பையர வம்பல பூணு
மெய்யனை மேயது வீடே'

என்னும் பாடலையும் சிறுபான்மை மூன்றடியான் வந்து, இடையடி குட்டம் பட்டதற்குப்

'பூண்ட பறையறையப் பூதமருள
நீண்ட சடையாளுடு மென்ப
மாண்ட சாயன் மலைமகள் காணவே காணவே'

என்னும் பாடலையும், நிரையசைச்சீர் முதற்கண் வந்த அளவடி நான்கான் வந்தமைக்கு

'ஒருவான்யா றொடுச டாடவிப்
பெரு நாகமே பூணும் பெருமா
னரு வாயினு ளுயினு மன்பர்க்
குரு வாயினு னுள்ளத்தி னுள்ளே'

எனவரும் பாடலையும், கொச்சக வொருபோகு வேறுபட்டு வரு மாற்றிற்கு:

'கல்லாலந் தண்ணிழற் கீழ்க் கல்வித்துறைபயந்த காமர் காட்சி
நல்லானை நல்லாளொரு பாகமாகிய ஞானத் தானை
யெல்லாரு மேத்தத் தகுவானை யெஞ்ஞான்றுஞ்
சொல்லாதார்க் கெல்லாந் துயரல்ல தில்லை தொழுமின் கண்டீர்'

எனவரும் பாடலையும், நான்கடியும் ஒத்தவழி மயங்கியமைக்குத்

'தடந்தாட். கொத்த தமனியச் சிலம்பு
படந்தாழ் கச்சைப் பாம்பொடு தழீஇ
வென்றூடு திருந்தாதை வியந்துகை துடிகொட்ட
நின்றாடு மழகளிற்றை நினைவாரே வினையிலரே'

எனவரும் பாடலையும். நான்கடியும் முடிந்தவழி இரண்டடி வேறுவந்த கொச்சகத்திற்குக்

'கடாமுங்குருதியுங் கால்விழ்ந்த பச்சைப்
படாமும் புலித் தோலுஞ் சாத்தும் பரம
னிடா முண்டா நெற்றியா னெஞ்ஞான்றுங் கங்கை
விடா முண்ட வார்சடையான் வெண்ணீ றணிந்தோன்
மெய்யுறு நோயில்லை வேறோர் பிறப்பில்லை
யையுறு நெஞ்சில்லை யாகாத தொன்றில்லை'

எனவரும் பாடலையும், படர்க்கையவாய்த் தெய்வம் பராஅத லிற் பொருள் வேறுபட்டமைக்குப்

புகலிரும் பனிச்சோலைப் பொன்மலைபோற் பொலிந் திலங்கி
யகல் விசும்பிற் சுடர்மாட்டியைம்பூத மகத்தடக்கி
மண்ணக மிருணீங்க மன்னுயிர் படைத்தக்கா
லண்ணலேற் றெழிலூர்தி யருமறை முதல்வனுந்
தண்ணறுங் கமழ்துழாய்த் தாமரைக்கண்ணனும்
வண்ணம் வேறுடம் பொன்றாய் வானவில்லனையரே'

என்னும் பாடலையும் எடுத்துக் காட்டுகின்றார். ஆசிரியப்பா மூன்றடியான் வந்தமைக்கு ஐங்குறுநூற்றிலுள்ள,

'நீல மேனி வாலிழை பாகத்து' எனத் தொடங்கும் சிவ பெருமானைப் பற்றிய கடவுள் வாழ்த்தையும் காட்டுகிறார்

இவ்வாற்றான் இவரைச் சைவசமயத்தவர் என்று கருதலாம். அன்றியும் 'தாமரை புரையும் காமர் சேவடி' எனவரும் குறுந்தொகைக்கடவுள் வாழ்த்துச் செய்யுள் தொடரைப் பல இடங்களில் எடுத்தாள்வதிலிருந்தும்,

'சேவற் பெயர்க் கொடைசிற கொடுசிவணும்
மாயிருந்தூவி மயிலலங் கடையே'

எனவரும் மரபியல் நூற்பாவில் 'செவ்வேள் ஊர்ந்த மயிற் காயின் சேவல் என்னும் பெயரும் பொருந்தும்' எனக் கூறியிருப்பதும் இதற்கு அரணாகும். இவர்காட்டியுள்ள பாடல்களில் அகநானூறு, புறநானூறு, கலித்தொகை, ஐங்குறுநூறு, கொன்றைவேந்தன் ஆகிய நூல்களின் கடவுள் வாழ்த்துச் செய்யுட்கள்தவிர ஏனையவை யாவும் யாண்டுள்ளன என அறிய இயலவில்லை ஆயினும் அவை சிவபெருமானை வழிபட்டுவரும் தக்கோரால் பாடப் பெற்றவை எனத் தெரிகிறது. இவ்வழி இலக்கண நூல்களின் உரைவழி அறியப் பெறும் இடம் விளங்கா மேற்கோள்பாடல்களைத் தொகுத்து அவற்றைப்பற்றிய தொரு ஆய்வு செய்தலும் பயனுடையதாகும். ஆய்வுலகம் எண்ணுக.

காலம்:- இவர் 11ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த இளம்பூரணருக்கும், யாப்பருங்கல விருத்தி செய்த குண சாகரருக்கும், 12ஆம் நூற்றாண்டில் தோன்றிய தண்டியலங்கார உரைகாரருக்கும், பிற்பட்டவர் என்பது இவர் உரையகத்துக் காணும் குறிப்புக்களால் அறிகிறோம். நச்சினார்க்கினியர் காலம் கி பி 14ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியாகும். அவர் பேராசிரியர் பெயரைப் பல இடங்களிலும் குறிப்பிட்டுக் காட்டுகின்றார். ஆதலின் அவருக்கு முற்பட்டவராவர் என்பது தெளிவு. அன்றியும் இவர் உரையில் நுளம்பர் தலைவனான வல்லமன் என்பானைப் பற்றிய தொருபாடல் காணப்படுகிறது.

'நன்னர் நன்னு டென்னு ளுவகொல்
பொன்னிநன் னாட்டுப் பொருநன் எங்கோன்
தாள் தோய் தடக்கை வல்லமன்
நாடுகெழு திருவிற் பீடுகெழு வேந்தே?

என்பது அப்பாடலாகும். இவன் விக்கிரமசோழனின் காலத்தவன் என்பது. 'மீனவர்தம் - கோட்டாறும் கொல்லமும் கொண்ட கொடை நுளம்பன் — வாட்டார் மதயானை வல்ல

மனும்' என வரும் விக்கிரம சோழன் உலாவால் அறிய இயலு கின்றது. இவன் காலம் 1118—1132 ஆகும். எனவே இப்பேரா சிரியர் காலம் 13ஆம் நூற்றாண்டு எனக் கருதலாம்.

உரைத்திறன்:— இவர் தம் உரை அழகிய, இனிய செவ்விய நடையால் அமைந்ததாகும். ஒவ்வொரு நூற்பாவிற் கும் உரை எழுதுங்கால் இதன் பொருள் என்ற பகுதியில் சொற்படு பொருள் தந்து, அதன்பின் அருகியும் கருகியும் இருக் கும் இடங்களுக்குத் தக்க விளக்கமும் தந்து போதல் இவர்தம் உரைத்திறனாகும். சிலசொற்களுக்கும், சொற் றொடர்களுக்கும் இவர் கூறும் உரை ஆழமும், நுட்பமும் உடையவாம். நூற் பொருளை விளக்குங்கால் தாமே பல உவமைகளை எடுத்தாண்டு பொருண்மையை விளக்குதலும், தாம் கூறும் உரைக்கு வேறாகப் பிறர் கூறியிருக்கும் உரைகளை எடுத்துக் காட்டுதலும், அக் கருத்து ஆசிரியர் கருத்துக்கு மாறாயின் மறுக்க வேண்டுழி மறுத்துச் செல்லுதலும், ஒரு நூற்பாவில் கூறப்படும் பொருண் மைகள் பலவாயின் அவை அந்நிரல் பட வைத்தற்கு உரிய காரணத்தை விளக்கிப் போதலும், பாட வேறுபாடு காட்டிச் செல்லும். சமுதாயத்தில் ஆடவர், பெண்டிர், சில இனத் தவர் ஆகியோரின் இயல்பு கூறிச் செல்லுதலும், தாம் காட்டும் மேற்கோள் பாடல்களுக்கு நயம்பட உரை காண்டலும், சில நூற்பாக்களுக்கு இலக்கண முடிபு கூறிச்செல்லலும், ஆசிரியர் கூறிய நூற்பாக்களின் இன்றியமையாமை கூறிச் செல்லலும், அகத்தியம், தொல்காப்பியம், இறையனார் களவியல் முதலாய நூல்களின் சிறப்புக்களையும் அவை நுவலும் பொருட்டிறன் களையும் ஆங்காங்கு கூறிச் செல்லலும், முச்சங்கங்கள், முத்தமிழ் பற்றிய குறிப்புக்களை இயைபு உள்வழி எடுத்துக் கூறுதலும், பிறவும் இவர்தம் உரையில் காணும் அரிய சிறப்புக்களாம்.

ஆழம் மிகுந்த உரைக்கூறுகள்:—

மெய்ப்பாட்டியலுள் வருத்தம் (மெய்ப்-6), கள்வர், இறை, (மெய்ப்-8), கல்வி, இசைமை, கொடை (மெய்ப்-9), உறுப் பறை, குடிகோள், அலை, கொலை (மெய்ப்-10), செல்வம், புலன் (மெய்ப்-11), தெரிந்துடம்படுதல் (மெய்ப்-16), தெய்வமஞ்சல் (மெய்ப்-24), முதலிய சொற்களுக்கும், சொற்றொடர்களுக்கும்

இவர் கூறும் உரை மிகச் சிறப்பாகவும், ஆழமாகவும் அமைந்துள்ளன. இவையன்றி, செல்வம் உடைமை இவற்றிற்குக் காட்டியிருக்கும் வேற்றுமையும் (மெய்ப்-12), நினைதல், கருதல் என்பவற்றிற்குக் காட்டியிருக்கும் வேற்றுமையும் (மெய்ப்-12) வெருகு, பூசை என்பவற்றிற்குக் காட்டப்பட்ட வேற்றுமையும் (மரபு-68), தத்தை, சிறுகிளி என்பவற்றிற்குக் காட்டப்பட்ட வேற்றுமையும் (மரபு-68), கண்ணி, தார் என்பவற்றிற்குக் காட்டப்பட்ட வேற்றுமையும் (மரபு-69) மிகச் சிறப்புடையன. குதிரையைச் சேவல் என்றதன் காரணம் (மரபு 68). பொருள் நிகழ்ச்சியைக்காலம் என்றதன் காரணம் (செய்யு-202) ஆகிய உரைக்கூறுகளும் நினைவு கூர்தற்குரியன.

உரைவிளக்கம் பெற உதவும் உவமைகள்:—

1. காடு கெழு செல்விக்குப் பேய் கூறும் அல்லல் போல (மெய்ப்-12)
2. கையொடு பட்ட கள் வரைப் போல (மெய்ப்-18)
3. ஒருவரை விலக்க மூவரும் வந்திலர் என்றாற் போல (உவம-37)
4. பொன்மாலையும் பூமாலையும் போல (உவம-37)
5. பளிங்குடன் அடுத்த பஞ்சு வேற்றுமையால் பளிங்கு வேறுபடுமல்லது பஞ்சு வேறுபடாதது போல (செய்யு-62)
6. ஒன்றன் மதுரச்சுவைக்கு அதிசயம் கூறுவார் மயிலினைச் செவ்வன் தின்றன என்பது போலக் கொள்க. (மெய்ப்-14). என வருவன எண்ணற்குரியன.

பிறர் உரையும் மறுப்பும்:—

மெய்ப்பாட்டியல் 18, 20; உவம இயல் 9, 29, 37; செய்யுளியல் 1, 7, 8, 11, 12, 17, 41, 43, 57, 59, 71, 85, 99, 106, 100. 230 ஆகிய நூற்பாக்களிலும், வேறு சில இடங்களிலும் பிறர் உரையும் மறுப்பும் காணப்படுகின்றன.

முறைவைப்புக் கூறல்:—

ஆசிரியர் பல நூற்பாக்களில் பல பொருண்மைகளை அடுக்கிக் கூறுவர். அவ்வாறு கூறப்பட்டவற்றிற்கு இயைபு காட்டி

அவை முறையாக வைக்கப்பட்டன எனக் காட்டுதல் இவருக்கு இயல்பு.

1. மெய்ப்பாட்டியலில் மெய்ப்பாடுகள் நகை முதல் உவகையிறுகச்கூறப்பட்டுள்ளன. (மெய்ப்-3). இவை இம்முறை அமைதற்கு இயைபு காட்டுகின்றார் பேராசிரியர். எனினும் இஃது அத்துணைச்சிறக்கவில்லை.

2. மெய்ப்பாட்டியலில் புணர்ச்சிக்கு முன்னும், பின்னும் நிகழும் மெய்ப்பாடுகளை மெய்ப்பாடு 13 முதல் 18வது நூற்பா வரை ஆசிரியர் கூறுகின்றார். அவை அம்முறையில் அமைந்த வற்றிற்குக் காரணம் கூறியிருப்பது ஓராற்றான் சிறந்துள்ளது.

3. உவம இயலில் வினை, பயன், மெய், உரு என்ற நான்கையும், அம்முறை வைத்தற்குரிய காரணத்தை இவர் விளக்கியுள்ளார். (உவமஇயல்-1). இதுவும் ஓராற்றான் சிறந்து நிற்கின்றது.

4. செய்யுளியலில் [நூற்பா-189] களவினில் கூற்று நிகழ்த்துதற்கு உரியாரை ஆசிரியர் கூறுகின்றார். அவர்களை அந்நிரல் படக் கூறியதற்கு உரிய காரணத்தைக் கூறுகின்றார். அஃது அத்துணைச் சிறப்பினதாய் அமையவில்லை.

5. இவ்வாறே கற்பில் கூற்று நிகழ்த்துதற்கு [நூற்பா-190] உரியாரையும் ஆசிரியர் கூறுகின்றார். இவ்விடத்தும் இந்நிரல் பட வைத்தற்குரிய காரணத்தை இவர் விளக்குகின்றார். இது சிறப்புடையதாக அமைந்துள்ளது.

6. அந்தணர்க்குரிய மரபை

'நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயுங் காலை அந்தணர்க்குரிய'

(மரபு-நூற்பா-70)

என்னும் நூற்பாவில் ஆசிரியர் கூறுகின்றார். இவை இம்முறையில் அமைந்தவற்றிற்கு உரிய காரணம் கூறியிருப்பது சிறந்துள்ளது.

7. மரபியல் 87வது நூற்பாவில் தளிரினும் இலையை முற் கூறியிருப்பதற்குக் கூறப்பட்டிருக்கும் காரணமும் சிறப்பாக அமைந்துள்ளது.

பாடவேறுபாடு:—

மெய்ப்பாட்டியல் முதலாக மரபியல் ஈறுகவுள்ள நான்கு இயல்களிலும் பாடவேறுபாடுகள் பல்வேறு இடங்களில் காணப் படுகின்றன. அவற்றுள் சிறப்பாகச் சில இடங்கள் குறிக்கத் தக்கன.

கிழவோற் குவம மீரிடத் துரித்தே' (உவம-29) என்பது இவர் கொண்ட பாடம்.

இவ்விடத்தில் 'கிழவோர்க் குவமம் பிறிவிடத்துரித்தே' (உவம—29)

எனப்பாடமாகக் கொள்வாரையும் குறிப்பிட்டு அதற்கும் அமைதிகண்டிருப்பதும், மெய்ப்பாட்டியலில் முதுமை, பெருமை எனத் தொடங்கும் நூற்பாவில் (நூற்பா-7) முதுமை பெருமை எனப் பாடம் கொள்வாரைக் குறிப்பிட்டு அதனை மறுத்திருப் பதும்,

'சீரியை மருங்கின் ஓரசை ஒப்பின்'

(செய்யு-56)

எனவரும் செய்யுளியல் நூற்பாவில், 'ஈரசை ஒப்பின்' எனப் பாடங்கொள்வாரைக் குறிப்பிட்டு அதற்கு அமைதி கண்டிருப் பதும் குறிப்பிடத்தக்கனவாம்.

'மெய் வருமரபின்' எனத் தொடங்கும் செய்யுளியல் 101வது நூற்பாவில், 'இனி இக்காலத்து உள்ள ஆசிரியருள் ஒரு சாரார் 'தொண்டு தலையிட்ட பத்துக்குறை 'எழுநூற்று ஒன்றும்' எனப்பாடம் திரிப்பாரும்; இன்னொரு சாரார் 'எழுநூற்று ஒன்றும் எனப்பாடம் திரிப்பாரும் என இருபகுதியர் எனக் கூறியிருப்பது பேராசிரியர் பாடவேறுபாடு காட்டுதல் அன்றிப் பாடம் திரித்துப் பாடங் கொள்வாரையும் உளம்கொண்டு கூறியிருப்பது அவர்தம் ஆற்றலைக் காட்டுகிறது.

ஆடவர் பெண்டிர் இயல்பு:-

இவர் உரையில் ஆடவரைப் பற்றியும், பெண்டிரைப் பற்றியும், ஆங்காங்கு காணப் படுவதோடு பொதுவாக மக்களைப் பற்றிய குறிப்பும் காணப்படுகின்றன.

புகுமுகம் புரிதல் — அஃதாவது தலைமகன் கண்டவிடத்துத் தலைமகள் வேட்டல் என்றவாறும். மற்றிது தலைமகற்கு உரித்தன்றோ வெனின் அவன்தான் காண் பின்னல்லது தற்காண்டலை நயவான்; அது தலைமையன்று ஆகலின் என்பது. அது

'யான் நோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற்
றானோக்கி மெல்ல நகும்'

எனவரும்.

பொறிநுதல் வியர்த்தல்; இம்மெய்ப்பாடும் தலைமகற்கு உரித்தன்று. உட்கும் நாணும் அவர்க்கு இன்மையின்.

நகுநய மறைத்தல்; மடமையாற் றோன்றிய நகையா கலான் இது மறைத்தலும் தலைமகர்க்கு உரித்தன்று; எனவே அவட்காயின் நகை தோன்றப் பெறும் என்பது.

சிதைவு பிறர்க்கின்மை; இதுவும் தலைமகட்கு உரித்தன்று தன் சிதைவு உணர்த்தினல்லது மறைக்கும் துணைச்சிதைவு இன்மையின். என்னை?

'பெருமையும் உரனும் ஆடுஉமேன'

என்பவாகலின்.

'மற்றுத் தலைமகட்குரிய மெய்ப்பாடு போலத் தலைமகற் குரியனவும் இன்னமுறையனவென்று வரையறுத்துக் கூறுரோ வெனின், அற்றன்று; தலைமகன் குறிப்புச்சில பற்றித்தலைமகள் குறிப்புப் பல பிறக்கு மாகலானும் ஐயமுதலாயின மெய்ப்பாடு காமப்புணர்ச்சிக்கு இன்றியமையாதன இன்மையானுந் தலைமகட்குரிய மெய்ப் பாடேசிறந்தன வென்று அவற்றை வரையறுத்துக் கூறினானென்பது' (மெய்-19-உரை)

கொச்சக மென்பது. ஒப்பினாகிய பெயர்; என்னை? பலகோடு படவடுக்கியுடுக்கும் உடையனைக் கொச்சக மென்ப;

அதனைப் பெண்டிர்க்குரிய உடையுறுப்பாக்கியுங் கொய்சக மென்று சிதைத்தும் வழங்குப. (செய்யு-152-உரை)

மக்களுள் நீரக்குறியானைக் குறளனென்றும், அவனினெடியானைச் சிந்தனென்றும், ஒப்ப அமைந்தானை அளவிற் பட்டானென்றும், அவனி னெடியானை நெடியானென்றும், அவனி நெடியானைக் கழியநெடியா னென்றுஞ் சொல்லுப (செய்யு-40-உரை)

ஒருகாலத்துக் குழைபெய்தாரென்றும், ஒருகாலத்துக் குழல் படமுடித்தாரென்றும், ஆண்மக்களை ஒழிந்த காலத்தும் அது கூறுர். பதினெண்பாடைத் தேசிகமாக்கள் அணியினையுங் கோலத்தினையும் விரவிக் கூறுது அவ்வந்நாட்டாரே பூணு மாற்றானும் புனையுமாற்றானும் ஏற்பச் சொல்லுதல் மரபு (செய்யு-80-உரை)

களம் பாடு பொருநர் கட்டுரையும், தச்சுவினைமாக்கள் சொற்ருெடரும் ஏற்று இக்காலத்து உரை நிகழ்ந்தனவும் ஓலைப் பாயிரமும் முதலாயின வெல்லாங் கொச்சக மாகற்கு இழுக்கென்னையெனின்—அவையே அடிவரையறையரையில்லன ஆறென்ற வழி உரை யெனப் பகுத்தோதார்க் கன்றே அது கடாவாதென மறுக்க. (செய்யு-149-உரை).

ஏற்களம் பாடுநரும், போர்க்களம் பாடுநரும் பொருநர் எனப் படுவர். இவர் தம் பேச்சுவழக்கும், தச்சுவினை மாக்களின் பேச்சுக்களும்' ஓலைப்பாயிரமும் அடிவரையிகந்து வரும் உரை என்னும் பகுதியில் அடங்கும். என இப்பகுதியால் அறிய இயலு கின்றது. ஓலைப்பாயிரம் என்பது யாதென விளங்கவில்லை.

இனம் (சாதி) பற்றிய செய்திகள்: -

பேராசிரியர் தம் உரையில் இனம் பற்றிய இயல்புகளை ஆங்காங்குக் குறித்துச் செல்கிறுர்.

1. தன்மை — சாதித்தன்மை அவையாவன பார்ப் பாராயிற் குந்தி மிதித்துக் குறுநடை கொண்டு வந்து தோன்ற லும், அரசராயின் எடுத்த கழுத்தொடும் அடுத்த மார்பொடும் நடந்து சேறலும், இடையராயிற் கோற்கையுங் கொடுமடி யுடையும், விளித்தவிளியும் வெண்பல்லு மாகித் தோன்றலு மென்றின்னோரன்ன வழக்கு நோக்கிக் கொள்க.

2. வரைதல் — காப்பன காத்துக் கடிவன கடிந்தொழுகும் ஒழுக்கம். அவை பார்ப்பாராயின் முத்தீவேட்டலும், புலவுங் கள்ளும் முதலாயின கடிதலு மென்றின்னோரன்ன கொள்க.

3 உலகத்து மக்கட்பிறவி பலவாயினும் நால்வகை வருண மென்ப, அவர் வரையறை யிலக்கணத்தாராகலி லென்பது இனி அவருள்ளும் அந்தணரும் வேளாளரும் போல இடையிருவகை யோரும் பயின்றில ரென்று சிறப்பிலராகாரென்பது.

4. அந்தணர் — 'ஆயுங்காலை' என்றதனுன், ஒரு கோலு டையார் இருவருளர், அவர் துறவறத்து நின்றாராகலின் உல கியலின் ஆராயப்படா ரென்பது. முக்கோலுடையார் இருவருட் பிச்சைக் கொள்வானும் பிருண்டிருந்து தனதுண்பானும் உலகிய லின் நீங்காமையின் அவரையே வரைந்தோதினனென்பது.

5 'உழுதுண்டு வாழ்வார் என்பது இதன் (மரபு-80) பொருளாயிற்று. மற்றுப் பார்ப்பியன் முதலாகிய நால்வகைத் தொழிலும் வாகையுட் கூறினமையின் இச்சூத்திரமும் மேலைச் சூத்திரங்களும் மிகையாம் பிறவெனின், — அற்றன்று, பார்ப் பியலும், அரசியலும் வாணிகத்தொழிலுமாகிப் பொதுப்பட நின்ற ஓதலும், வேட்டலும், ஈதலும் இவர்க்கு ஒத்த சிறப்பின வாகலானும், அவருள் வணிகர்க்கும் ஒழிந்த வேளாளர்க்கும் ஒத்த செய்தியனவாகிய உழவுத் தொழிலும், நிரைகாத்தலும் வாணிகமுமென்பன அவற்றின் ஒத்த சிறப்பின வன்றி அவற்றுள் ஒரோ வொன்று ஒரோ வருணத்தார்க்கு உரிய வாமாகலானும் ஈண்டு அவை விதந்து கூறினனென்பது. நிரைகாவலும், உழவுத் தொழிலும் வணிகர்க்கும். வேளாளர்க்குந் தடுமாறுதல் போலாது வாணிகவாழ்க்கை வேளாண் மாந்தர்க்குச் சிறு வரவிற்றெனவும், உழுதுண்டல் வணிகர்க்குச் சிறுவரவிற் றெனவும், எண்வகை கூலத்தொடுபட்டதே பெருவரவிற் றெனவுங் கூறினன். இச்சூத்திரங்களானென்பது. இதனது பயம்: புலனெறி வழக்கினுள் இவர்க்கு இவை சிறந்த மரபென் றலாயிற்று.

இவ்வாறு எல்லாம் இனம் பற்றிக் கூறியிருக்கும் இவ்வுரை யாகியிருக்கும் பார்ப்பார் சிறப்புடையர் என்பது கருத்தாகும். இதனை அறிவர் எனப்படுவார் மூன்று காலமும் தோன்ற நன் குணர்ந்தோரும், புலன் நன்குணர்ந்த புலமையோரும் ஆகலா

னும், இனிப்பார்ப்பாரும் அவ்வாறே சிறப்புடையர் ஆகலானும் அவர் வழி நிற்றல் அவர்க்கு (தலைமக்கட்கு) இடனாகலானும் என்பது (செய்யு-197) எனவரும் குறிப்பால் அறியலாம். வேளாளரை உயர்ந்தோர் என இவர் கருதவில்லை. இதனை 'வேந்து விடு தொழிலின் என வரும் மரபியல் 81வது நூற்பா வில 'அகத்திணையியலுள் உயர்ந்தோர்க்குரிய ஓத்தினான' என்புழிக் கூறப்பட்டதெனின் வேளாளரை ஒழித்து ஒழிந் தோரை நோக்கிற்று அந்நூற்பா என்பது' என இவர் கூறுவ தால் அறியலாம். தாமும் வாழ்ந்து பிறரையும் வாழ்விக்கும் வேளாண்மக்கள் இவ்வாறு கூறப்பெறும் சூழ்நிலைக்கு ஆளாயின மையை எண்ணுக பார்ப்பனரை இவர் உயர்த்திக் கூறியிருப்பி னும் அவர் பேசுந்தமிழ் நகைச்சுவைக்கு ஏதுவாகும் என இவர் குறித்திருப்பதும் ஈண்டுக் காண்டற்குரியதாம் 'நகைக் சுவைக் குப் பொருளாவன ஆரியர் கூறும் தமிழும், குருடரும் முடவ ரும் செல்லும் செலவும், பித்தரும், களியரும், சுற்றத்தாரை இழந்தோரும் கூறும் சொற்களும், குழவி கூறும் மழலையும் போல்வன என்பது அவ்வுரைக் குறிப்பாகும் (மெய்ப் 1 உரை).

இலக்கிய நயம் பட உரைகாண்டல்:— பேராசிரியர் தம் உரை அளவில் அகன்று ஆழங்கால்பட்டு நிற்பதோடு அமையாது. இலக்கிய நயம் படவும் அமைந்துள்ளமை எண்ணற்குரியதாம்.

உவம இயல் முதல் நூற்பாவில் 'புலியன்னமறவன்' 'மாரியன்ன வண்கை' 'துடியிடை' 'களிற்றிரை தெரீஇய பார்வல் ஒதுக்கின் ஒளித்தியங்கு மரபின் வயப்புலி போல என்பனவாகிய பகுதிகளுக்கு இவர் கூறியிருக்கும் உரையும், 'உவமப் பொருளின் உற்றது உணரும் தெளிமருங்கு உளவே திறத்தியலான' (உவம-20) எனவரும் உவம இயல் நூற்பா விற்குக் காட்டப்பட்ட எடுத்துக் காட்டுகளும் அவற்றில் உற்றது உணரும் முகமாக இவர் காட்டியிருக்கும் உரை நலன் களும், வேறுபட வந்த உவமத் தோற்றத்திற்குக் (உவம-32) காட்டப்பட்டிருக்கும் புறநானூற்றுப் பாடல் பகுதிக்கு இவர் நுணுகிக் காட்டியிருக்கும் உரைநலனும், 'வெண்பாட்டு ஈற்றடி முச்சீர்த்தாகும்' என வரும் செய்யுளியல் 72வது நூற்பாவில் 'அட்டாலும் பால் சுவையில்' எனவரும் மூதுரை வெண்பா, யாப்பில் பிழையாது வந்துள்ளது. எனக்காட்டும் நுட்பமும், 'உகரமொடு புணரும் புள்ளியிறுதி யகரமும் உயிரும்

வரும்வழி இயற்கை' எனவரும் எழுத்ததிகார நூற்பா சூத்திரத்து இயல்பு முழுமையும் அமைந்து சிறந்து விளங்கும் பெற்றியை மரபியல் 10வது நூற்பா உரையில் இவர் விளக்கியிருக்கும் திறமும் இவ்வாற்றான் எண்ணத் தக்கனவாம்.

இலக்கண முடிபு கூறல்:—

நூற்பாக்களுக்கு உரை கூறுங்கால் ஒரோவழி அந்நூற்பா கொள்ளும் வினை முடிபையும் இவர் காட்டிச் செல்வர். உவம இயல் 26வது நூற்பாவிற்கு இவ்வாறு கூறியிருப்பதைக் காணலாம்

ஆசிரியர் கூற்றில் உறுதிப்பாடு உடைமை:—

பண்டைய உரையாசிரியர்கள் அனைவரும் தாம் உரை எழுதும் நூலாசிரியரின் மீது அளவு கடந்த அன்பும், அவர் கூற்றில் ஆழ்ந்த ஈடுபாடும் கொண்டிருந்தனர். ஆதலால் அவர்கள், தத்தம் நூலாசிரியர் கூற்றில் உறுதிப்பாடு கொண்டிருந்தனர்.

1 'அடியிகந்து வரினும் கடிவரையின்றே' (செய்யு-183) என்னும் நூற்பாவிற்கு உரை எழுதுங்கால் 'அவை முற்காலத்து உள்ளார் செய்யுளுள் காணுமையின் காட்டாமாயினும், இக் காலத்து உள்ளனவேல் கண்டு கொள்க.'' இலக்கணம் உண்மையின் இலக்கியம் காணுமாயினும் அமையுமென்பது.'' எனக்குறித்துள்ளார்.

2. 'நண்டும் தும்பியும் நான்கறிவினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே' (மர-31)

என்னும் நூற்பாவில், 'நண்டிற்கு மூக்குண்டோ எனில், அஃது ஆசிரியன் கூறலால் உண்டென்பது பெற்றும்' எனக் கூறியுள்ளார் ஆசிரியர் கூறும் நூற்பாக்கள் பலவும் இன்றியமையாதனவே என்றும், அவர் கூறாத கருத்திற்கு அது கூறத் தேவையின்று எனவும் விளக்கியிருப்பதும் இவருக்கு ஆசிரியர்மாட்டு உள்ள அன்புடைமையைக் காட்டுகின்றது. அந்நிலையில் இவர்க்குள்ள ஆற்றலையும் காண இயலுகின்றது. மெய்ப்பாட்டியலில் தலைமகனுக்கு ஆகாத மெய்ப்பாடுகளை வரையறுத்துக் கூறியுள்ளார் ஆசிரியர் (மெய்ப்-26). ஆனால் தலைமகட்கு அவ்வாறு கூறவில்லை. அவ்வாறு கூறாமைக்கு உரிய காரணத்தைத் 'தலைமகட்கு உரிய

மெய்ப்பாடாயின வரையறுத்துக் கூறினமையின் அவற்றுக்கு ஆகாதன கூறல் வேண்டுவது அன்று என்பது' எனக் கூறியிருப்பது காணலாம். 'கிழவோர்க்காயின் இடம் வரை வின்றே' எனவரும் உவம இயல் :0வது நூற்பாவின் இன்றியமை யாமையை வரையறை இல்லனவற்றிற்கு வரையறை கூறுமை முடியாவோ எனின் அங்ஙனமாயினும் கிழத்திக்கும், தோழிக்கும் இடம் வரையறுத்ததனைக்கண்ட மாணாக்கன் இவ்வாறே தலைமகட்கும் இடவரையறை உண்டுகொல் என்று கருதில் கருதற்க என்றற்கு இது கூறினும் எனபது எனக் கூறியிருப்பது கருதத்தக்கது. உவம இயல் 32வது நூற்பாவில் தோழியும், செவிலியும், உள்ளுறை உவமம் கூறுதற்குரியர் எனக்கூறப்படுகின்றது. அந்நூற்பாவில் தோழி பொருந்திய வழி கூறுமாறு முன் காட்டப்பட்டன. செவிலி பொருந்து வழி கூறுவனவும் கண்டு கொள்க. இலக்கணம் உண்மையின் அவையும் உளதென்பது கருத்து. எனக்கூறியிருப்பதும் இங்குக் கருதத்தக்கதாம்.

எனினும் ஆசிரியர் கூறும் கருத்துக்கள் சிலதம் மனத்துள் பட்டவாறு அதனை வெளிப்படையாகவும் தெரிவிக்கும் இயல் பினர் என்பது இவர் உரையில் இருந்து அறியக் கிடக்கின்றது. 'பிறிது பிறிதேற்றலும் உருபுதொகவருதலும்' என்னும் நூற்பாவை மரபியல் 04வது நூற்பாவிலும், ஆசிரியர் தொல் காப்பியர் கூறிய நூற்பாக்கள் சிலவற்றை நூற்கூறிய குற்றம் கூறும் மரபியல் 108வது நூற்பாவில் எடுத்துக் காட்டியிருப்பதும் இவ்வுண்மையை விளக்கும்.

உரையில் குறிக்கப் பெறும் நூல்கள்

1. அகத்தியம்:— இந்நூல் செய்தார் அகத்தியர் ஆவர். இவரைப்பற்றியும், இந்நூலைப் பற்றியும், பேராசிரியர் பல்வேறு இடங்களில் குறிப்பிடுகின்றார். தொல்காப்பியத்திற்கு முந்து நூல் இந்நூல் ஆகும். இதனை 'அகத்தியமே முற்காலத்து முதல் நூல் என்பதூஉம், அதன் வழித்தாகிய தொல்காப்பியம் அதன் வழி நூல் என்பதூஉம் பெற்றாம்' (தொல்-மரபு-94) எனக் குறிப்பதால் அறியலாம். இயல், இசை, நாடகமாகிய முத்தமிழுக்கும் இலக்கணம் கூறுவது அகத்தியம் ஆகும். இதனைத் 'தோன்று மொழிப்புலவரது பிண்டமென்ப' என்ற

தனுல் பிண்டத்தினையும் அடக்கி நிற்பது வேறு பிண்டம் உளதென்பது. அது முதல் நூலாகிய அகத்தியமே போலும். என்னை? அஃது இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என்னும் மூன்று பிண்டத்தினையும் அடக்கி நிற்றலின்.' (தொல்-செய்-172) என வரும் உரைக்குறிப்பால் அகத்தியம் முத்தமிழிற்கும் இலக்கணம் கூறும் நூல் என்பது அறியலாம். உவமையியல் 3'வது நூற்பா உரையிலும் இக்குறிப்பு உள்ளது. அகத்தியர் தலைவர் வழி நின்ற தலைவர். இதனைத் 'தாமே தலைவராவாரும் அத்தலைவரை வழிபட்டுத் தலைவராயினாரும் பலராகலின் தாமே தலைவராயினார் நூல் செய்யின் முதல் நூல் ஆவதெனின், அற்றன்று. தாமே தலைவராயினார் முற்காலத்துத் தமிழ் நூல் செய்திலராகலின். தலைவர் வழி நின்று தலைவனாகிய அகத்தியனார் செய்யபட்டதும் முதல் நூல் என்பது அறிவித்தற்கும்'. (தொல் மரபு 94) எனவரும் உரைக்குறிப்பால் அறியலாம். அகத்தியர் வானோர் ஏத்தும் வாய்மொழிப்பல்புகழ் ஆனாப் பெருமையுடையார் எனத் தொல் மரபு. 94வது நூற்பா உரையில் இவரைப் பாராட்டியுள்ளார். முதல் நூல் என்பது மொழி பெயர்ப்பாகச் செய்யப்படுதல இல்லை. இதனைத் 'தமிழ் நாட்டு வழக்கிற்கு முதல் நூலாகிய அகத்தியத்துள் மொழி பெயர்த்துச் செய்ய வேண்டும் பொருள் இலவாகலானும்' (தொல் மரபு. 107) எனவரும் உரைக்குறிப்பால் அறியலாம். வழி நூல் என்பது பிறனுடம் பட்டது, தானுடம் படுதல் எனும் உத்திக்கு இலக்காகாது. இதனை 'முதல் நூல் ஆசிரியனைப் பிறன் என எண்ணுமையானும் முதல் நூலின் வழித்தாகிய நூலுள் அவன் உடம்பட்டதொன்று. உடம்படு மென்று உத்திவகையால் கொள்ளாது முழுவதூஉம் கொள்ளுமாகலானும் அவ்வாய்பாடு கூறலாகாது எனபது'(தொல்-மரபு-1:0) எனவரும் கூற்றால் அறியலாம்.

'ஆனந்த உவமை என்பன சிலகுற்றம் அகத்தியனாரால் செய்தாரெனக் கூறுப ஆகலின் அவையிற்றை எவ்வாறு கோடுமெனின் அவைதாம் அகத்துள்ளும், பிறசான்றோர் செய்யுள்ளுள்ளும்' (தொல்-உவமம்-37) எனவரும் உரைக்குறிப்பால் அகத்தியத்துள் உவமை ‡என்பதாகியகுற்றம் உள்ளது ஆனந்த என்பது பெறுகிறது. இதன்முதல்நூல் செய்த ஆசிரியனால் செய்யப்பட்ட யாழ்நூலுள்ளும் சாதியும், உவமத்துருவும்' திரு

விரிசையும் எனக் கூறப்பட்டவற்றுள் கட்டளைப்பாட்டில் சிறப்புடையன சாதிப் பாட்டுக்களே அவை இக்காலத்துப் பயின்றில (செய்யு-51-உரை) எனவரும் உரைக்குறிப்பால் அகத்தியனார் யாழ்நூல் ஒன்றும் செய்திருந்தமை புலனாகிறது.

2. தொல்காப்பியம்:- இவ்வுரை இந்நூற்கு அமைந்தது ஒன்றாதலின் இந்நூலைப் பற்றியும், இவ்வாசிரியரைப் பற்றியும் பல்வேறு இடங்களில் குறிப்பிட்டுச் செல்லல் இன்றியமையாதாகின்றது. தொல்காப்பியம் என்பது எழுத்து, சொல், பொருள் எனும் மூன்றுறுப்பு அடங்கிய பிண்டமாகும்.

'எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் பொருளதிகாரம் என்பன படலம் எனப்படும்;' செய்யுளியல் 172 நூற்பா உரையில் இக்குறிப்புக் காணப் படுகிறது.

எழுத்ததிகாரத்தை எழுத்தோத்து என்றும் குறிப்பர் இவர். (செய்யு-2-18). நேரின மணியெனவே ஒரு சாதியாயினும் தம்மின் ஒத்தனவே கூறல் வேண்டும் என்பதாம். வேற்றுமை ஒத்தும், வேற்றுமை மயங்கியலும், விளிமரபும் என மூன்றன் பொருளும் வேற்றுமை என ஓரினம் என்று ஓர் ஒத்தாக வையாது வேறு வேறு வைக்கப்படும் என்பது (தொல்-செய்யு-170 உரை)

பொருளதிகாரத்தில் எட்டாவது இயலாக அமைந்திருப்பது செய்யுளியல் ஆகும். மரபியல் ஒன்பதாவது இயலாகும் இவ்வாறு வைத்தற்குரிய காரணத்தைக் கூறும் முகமாகச் செய்யுளியலை ஒன்பதாவது இயலாக வைத்து எண்ணும் நிலையும் இருந்தமையைப் பேராசிரியர் விளக்குகின்றார். 'இந்நூல் இலக்கணத்தினை இவ்வோத்தின் (மரபியலில்) இறுதிக்கண் வைத்தான் வழக்குப், செய்யுளும் என்று விதந்து புகுந்த இரண்டிலக்கணமும் முடித்தல்லது அவற்றைக் கூறும் இலக்கணம் கூறலாகாமையின் என்பது. இக்கருத்து அறியாதார் செய்யுளியலினை ஒன்பதாம் ஒத்தென்ப எனவரும் மரபியல் 93வது உரை வழி இதனையறியலாம்.

செய்யுளியலினை யாப்பதிகாரம் என உரைப்பாரும் உளர் எனக் கூறி அதனை மறுத்திருக்கும் திறனும் ஈண்டு அறியத்தக்கது. அங்ஙனம் (யாப்பதிகாரம்) கூறின் வழக்கதிகாரம் எனவும் வேறு வேண்டும் மென மறுக்க. அல்லதூஉம் எழுத்தும், சொல்லும் பொருளும் என மூன்றற்கும் மூன்று அதிகாரமாக்கி அதிகாரம்

ஒன்றற்கு ஒன்பது ஓத்தாகத் தந்திரம் செய்ததனேடு மாறு கோளாம்; இதனை வேறு அதிகாரம் என்பார்க்கு என்பது (செய்யு-1-உரை).

அகத்தியத்துள் செய்யுளிலக்கணம் பரந்து கிடந்ததென்றும் அதனைத் தொல்காப்பியர் சுருங்கச் செய்தார் என்றும் மரபியல் 95வது நூற்பாவில் கூறுகின்றார்.

மாபுராணம் பூதபுராணம் போன்ற இலக்கண நூல்கள் அழியவும், தொல்காப்பியம் நின்று நிலவுதற்குக் காரணம் அதன் பயனும் நயனும் நோக்கியேயாம் என இவர் கூறியிருப்பது தொல்காப்பியத்தின் பெருமையை விளங்கச் செய்கிறது. இதனை 'இனிப் பரந்துபட்ட பொருண்மையவாகிய மாபுராணம் பூதபுராணம் என்பன சில் வாழ்நாள் சிற்றறிவின் மாக்கட்கு உபகாரப் படாமையின் தொகுத்துச் செய்யப்பட்ட வழக்கு நூலாகிய தொல்காப்பியம் இடைச்சங்கம் முதலாக இன்று காறும் உளதாயிற்று எனக்கொள்க' (மரபு-97) எனவரும் உரைக்குறிப்பால் அறியலாம்.

இடைச்சங்கத்தார்க்கும், கடைச்சங்கத்தார்க்கும், நூலாயிற்றுத் தொல்காப்பியம் என நக்கீரர் கூறியிருப்பதும் இங்கு நினைவு கூரத்தக்கதாம். அகத்தியர் வழித் தோன்றிய ஆசிரியர் எல்லாருள்ளும் தொல் காப்பியனாரே தலைவர் என்பதை மரபியல் 94ஆம் நூற்பாஉரையில் மிகச்சிறப்பாகப் பல மேற் கோள்களுடன் விளக்கியுள்ளார். மேற்கண்ட நூற்பா உரையுள் தொல்காப்பியம் செய்த காலத்தையும், அறுதியிட்டு இருப்பது அறியத்தக்கதாம். ஆசிரியர் பனம்பாரனர் 'வடவேங்கடம் தென்குமரி எனக் குமரியாற்றின் எல்லையாகத் கூறிப் பாயிரம் செய்தமையின், சகரர், வேள்விக்குதிரை நாடித் தொட்ட கடலகத்துப்பட்டுக் குமரியாறும் பனை நாட்டோடு கெடுவதற்கு முன்னையது என்பதும்' எனவரும் உரைக்குறிப்பால் குமரியாறு கடல் கொள்வதன் முன் தொல் காப்பியம் செய்யப்பட்டது முன்பது பெறப்படுகிறது.

3. செயிற்றியம்: இது செயிற்றியனார் செய்தது. நாடக நூலின் வழி நூலாக விளங்குவது. சுவை உணர்வும் பொருளும் ஒன்ருக அடக்கிச்சுவையும், குறிப்பும், சத்துவமும் என மூன் ருக்கி அவற்றிற்குத் தனித்தனி இலக்கணமும், இந்நூற்கண்

கூறப்பட்டுள்ளது.

'எண்ணிய மூன்றும் ஒருங்கு பெறுமெனை
நுண்ணிதின் உணர்ந்தோர் நுவன்றனர் என்ப'

என்பது அந்நூற்கண் காணப்படுவதொரு நூற்பாவாகும் (மெய்-2-உரை).

4. காக்கை பாடினியம்:—

இதனைப் பாடியவர் காக்கைபாடினியார் ஆவர். இவர் எழுதிய யாப்பு நூலில் தளை இலக்கணம் கூறப்படவில்லை. (செய்யு-1உரை)

'வடக்கும் தெற்கும் குணக்கும் குடக்கும்
வேங்கடம் குமரி தீம்புனல் பெளவமென்று
இந் நான்கெல்லை அகவயிற் கிடந்த
நூலதின் நுண்மை வாலிதின் விரிப்பின்'

எனக் கூறுவதால் குமரியாறு கடல் கொள்வதன் முன் இவர் வாழ்ந்தவர் எனத் தெரிகிறது. (செய்யு-1-உரை).

5. சிறுகாக்கை பாடினியம்:

காக்கை பாடினியாருக்குப் பின்வந்த காக்கை பாடினியார் பாடியது. இவர் எழுதிய யாப்பு நூலில் தளை இலக்கணம் கூறப்பட்டுள்ளது.

' வடதிசை மருங்கின் வடுகு வரம்பாகத்
தென்திசை உள்ளிட்டு எஞ்சிய மூன்றும்'

என இந்நூற்கண்குறிக்கப்படுவதால் குமரியாறு கடல் கொள்ளப் பட்டதன் பின் இவர் வாழ்ந்தவர் என்பது புலனாகின்றது (செய்யு-1-உரை).

6. பரணி:—

பிற்காலத்தில் சிறுபிரபந்தங்கள் எனக் கூறப்படுவன வற்றுள் இதுவும் ஒன்று. இந்நூல் புறத்திணை பலவும் விராய் வரும் இயல்பினது. காடு கெழு செல்விக்கு பரணி நாளில் கூழும், துணங்கையும் கொடுத்து வழிபடுவதோர் இயல்பும், இந்நூற்கண் இயம்பப்பெறும். (செய்யு-149-உரை)
இந்நூல் தாழிசைக் கொச்சமாகிய யாப்பில் அமைந்து விளங்கும் (செய்யு-156-உரை).

7. கலித் தொகை:—

இந்நூல் அனைவராலும் அறியப்பட்டதொன்று. எனினும் இந்நூலைக்குறிக்கும் தொறும் பேராசிரியர் கலித்தொகை என்னுது அதன் கண் உள்ள பாடல் எண்ணிக்கையைக் குறித்து 'நூற்றைம்பது கலியுள்ளும்' என்றே பல விடத்தும் குறிக்கின் றார். (செய்யு-155,15 உரை முதலியன)

8. பாவைப்பாடலும் அம்மனைப்பாடலும்:—

இவை அடிநிமிர்ந்தோடியதன் சிற்றெல்லை யாகியபத்தடி அளவில் பாடப்பெறுவன (செய்யு-156-உரை)

9. பதினென் கீழ்க்கணக்கும் முத்தொள்ளாயிரமும்:

இவையும் நன்கறியப்பட்ட நூல்களாகும். அளவியல் வெண்பா சிறப்புடைத்தாதல் நோக்கி இந்நூல்கள் இவ் யாப்பில் எழுதப்பட்டன (செய்யு-158-உரை). இரண்டடி முதல் ஐந்தடி வரை உள்ள செய்யுட்கள் இக் கீழ்க்கணக்கு நூல்களின் வந்தவாறும், அவை சிலவாய மெல்லிய சொற்களால் வந்த வாறும், அறம், பொருள், இன்பமென அவற்றுக்கு இலக்கணம் கூறிய பாட்டுப் பயின்று வருமாறும், கார் நாற்பது, களவழி நாற்பது முதலாயன வந்தவாறும் கண்டு கொள்க (செய்யு-235-உரை). முத்தொள்ளாயிரம் விருந்தென்னும் வனப்பு வகையது (செய்யு-239, உரை).

10. கைக்கிளைப் படலம்:

மருட்பா, வெண்பா. ஆசிரியம் ஆகிய இருபாவின் கூட்ட மாதலின் இரண்டடியாகி வாரா; அவை நான்கடியில் சுருங்கா. என்பது உய்த்துக் கொண்டு உணரவைத்தான் ஆசிரியன். இக் கருத்தை விளக்குதற்கு இந்நூற்கண் கைக்கிளைப்படலம்) உள்ள நூற்பா ஒன்று காட்டப்படுகிறது.

'போற்றி வெண்பா வாகி மற்றதன்
இறுதி ஐஞ்சீர் ஆசிரியம் மே'

என்பது அந்நூற்பாவாகும் (செய்யு-160-உரை).

11. தகடூர்யாத்திரை:

உரை வகை நான்கனுள் 'பாட்டிடைவைத்த குறிப்பிற்கு' இந்நூலை எடுத்துக் காட்டியுள்ளார். உரையினும் பாட்டு வருவது சிறுபான்மையாக இருக்கும் என்றும் குறித்துள்ளார்

(செய்யு-173-உரை).

12. நாடகச் செய்யுளாகிய பாட்டுமடையும், வஞ்சிப்பாட்டும், மோதிரப் பாட்டும் கடகண்டும் முதலாயின:

இந்நான்கு நூல்களும் மெய் வழக்கல்லாத புறவழக்கினை அதாவது பண்ணத்தியைப் பொருண்மையாகக் கொண்டு நிற்பன. இவை நோக்கு முதலாய உறுப்பின்மையின் பாட்டெண்ணுராயினர். அவை வல்லார் வாய்க் கேட்டுணர்க (செய்யு-180-உரை).

13. எட்டுத் தொகை:

இவையும் நன்கறியப்பட்டவையே. நற்றிணை முதலாகப் புறநானூறு ஈறுகக் கூறப்படும் வெண்பாவை நினைவு கொண்டு இத்தொகை நூலை நாம் காண்கின்றோம். ஆனால் பேராசிரியர் அகநானூற்றை முதலாகக் கொண்டு இத்தொகை நூல்களைக் குறிக்கின்றார். வனப்பு எட்டனுள் அழகு என்பதும் ஒன்று. அவ்வகையில் அமைந்ததே 'நெடுந்தொகை முதலாய தொகை எட்டும்' என இவர் குறித்துள்ளார். அடிவரையில் மிக்கதாதலின் இதனை முற்கூறினர் போலும் (செய்யு-236-உரை)

14. பொய்கையார் முதலாயினோர் செய்த அந்தாதிச்செய்யுளும். கலம்பகம் முதலாயினவும்;-

இவை புதியதாகத்தாம் வேண்டியவாற்றால் பல செய்யுளும். தொடர்ந்து வரச்செய்யுமாறு பாடப் பெற்ற விருந்தின் வகையின (செய்யு-239-உரை).

15. மணிமேகலையும், பெருங்கதையும்:-

இவையும் நன்கறியப் பட்டவையே. மணிமேகலை சீத்தலைச் சாத்தனரால் செய்யப்பட்டது. பெருங்கதை கொங்கு வேளிரால் செய்யப்பட்டது பெருங்கதையைப் பேராசிரியர் தொடர்நிலைச் செய்யுள் என்று குறிக்கின்றார். 'னகர ஈற்றுன் முடிந்த இயைபு' என்னும் வனப்பிற்கு இவற்றை இலக்கியங்களாகக் குறித்துள்ளார்.

16. விளக்கத்தார் கூத்து:-

இது நாடகச் செய்யுளாகும். புலன் என்னும் வனப்பிற்கு இந்நூல் எடுத்துக்காட்டாகக் காட்டப்பட்டுள்ளது.

(செய்யு-241-உரை).

17. பெரும் பாணாற்றுப்படை:-

'வில்' வேல் முதலியன முடியுடை அரசரல்லாத குறுநில மன்னர்க்கும் உரியவாதல் இந்நூலுள்ளும் பிறவற்றுள்ளும் காணப்படும்' என்பர் (மர-84-உரை). இந்நூல் பத்துப்பாட்டுள் ஒன்று என்பது நன்கறிந்த தொன்றாகும்.

18. மாபுராணமும், பூதபுராணமும்:-

இவை இலக்கண நூல்களாம். சில் வாழ்நாள் சிற்றறிவின் மாக்கட்கு உபகாரப்படாமையின் காலப் போக்கில் அழிந்தொழிவன வாயின. (மர-97-உரை)

19. மலைபடுகடாம்:-

இந்நூல் ஆனந்த குற்றம் உடையதெனப் பிற்காலத்தான் ஒருவன் ஒரு சூத்திரம் காட்டுதல் தன்னுன் ஒரு பொருள் கருதிக் கூறலாம் (மர-109-உரை)- இதுவும் பத்துப் பாட்டுள் ஒன்று என்பது நன்கறிந்ததாகும்.

20. நன்னூல்:-

இந்நூற்கண் பதமுடிப்பு என்பதோர் இலக்கணம் படைத்துக் கொண்டிருப்பது தன்னுன் ஒரு பொருள் கருதிக் கூறலாம். (மர-109-உரை). இந்நூற் பெயரைப் பேராசிரியர் விதந்து கூறவில்லை.

21. ஏழில் கோவை:-

இதன் கண் உள்ள தொருபாடலைக் காட்டுகின்றார்.

'இருள்தீர் மணி விளக்கத்து ஏழிலார் கோவே!
குருடேயும் அன்று நின் கொற்றம்—மருள்தீர்ந்த
பாட்டும் உரையும் பயிலாதன இரண்டு
ஓட்டைச் செவியுமுள

என்பது அப்பாடலாகும். இது ஔவை முனிந்து பாடியது செய்யு-125-உரை

22. வசைக்கூத்து:-

இந்நூலின் கண் வசையாக வரும் கலிப்பாட்டு ஒன்று காட்டப்படுகிறது (செய்யு-125-உரை).

23. பாரதம்: பருப்பதம்:-

பாவின் றெழுந்த கிளவிக்கு இந்நூல்கள் எடுத்துக் காட்டாகக் காட்டப்பட்டுள்ளன செய்யு-173-உரை).

24. சிறு குரீஇ உரையும் தந்திரவாக்கியமும்:-

இவை பொய் யெனப்படாது மெய்யெனப்பட்டும் நடுதற்கு ஏதுவாகும் தொடர் நிலைகளை உடையவாம் (செய்யு-173-உரை)

25. இறையனுர் களவியல்:—

இதனை அருளியவர் இறையனுர் (சிவபெருமான்) ஆவர். இவரை இவ்வுரையாசிரியர் 'பெருமானடிகள் எனக்குறிப்பிடு' கின்ருர். (மர-94), இதற்கு உரை எழுதியவர் மதுரை கணக்காயனுர் மகனுர் நக்கீரர்.

'அன்பின் ஐந்திணைக் களவெனப்படுவது
அந்தணர் அருமறை மன்றல் எட்டனுள்
கந்தர்வ வழக்கம் என்பனுர் புலவர்' (இறையனுர்-.நூ:1)

என்பது பாயிர மின்றித்தானே நூன் முகத்தினின்று இருவகைப் பாயிர உரையும் பெய்து உரைக்கப்பட்டது (மர-98-உரை).

தெற்கண் வாயில்திறவாத பட்டி மண்டபத்தார் பொருட்டு நக்கீரர் ஒருவன் வாழவும் ஒருவன் சாவவும் பாடிய மந்திரம் அங்கதப் பாட்டாயின எனச் செய்யுளியல் 179 உரையில் காணப்படுகிறது இந்நக்கீரர் இறையனுர் களவியல் உரை செய்த நக்கீரர் போலும்.

தொல்காப்பியம், இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், தோழியற்கூட்டம் எனக் களவியல் நெறியை முறைப் படுத்திக் கூறுகின்றது.

'காமப் புணர்ச்சியும் இடந்தலைப்படலும்
பாங்கொடு தழாஅலும் தோழியிற் புணர்வுமென்று
ஆங்க நால்வகையினும் அடைந்த சார்பொடு
மறையென மொழிதல் மறையோ ரானே' (செய்யு-178)

என்னும் தொல் காப்பியம். இறைனுர் களவியல்,

ஆங்கனம் புணர்ந்த கிழவோன் தன்வயின
பாங்கினோரிற் குறிதலைப் பெயலும்
பாங்கிலன் தமியோன் இடந்தலைப் படலும்' (இறை-3).

என இறையனுர் களவியல் கூறுகிறது. இடந்தலைப்பாட்டின் பின் பாங்கற்கூட்டத்தினைத் தொல்காப்பியம் கூறப், பாங்கற் கூட்டத்தின் பின் இடந்தலைப் பாட்டை இறையனுர் களவியல்

கூறுகிறது. இவ்வேற்றுமையில் ஒற்றுமை காண்கின்றார் பேராசிரியர்.

'பாங்கற்கூட்டம் முற்கூறியதாலெனின்,- இது, கைகோள் கூறிய இடமமைமையின் முற்கூறினும் அமையுமென்பது. மற்று இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகனைப் பாங்கன் கண்டு இவ் வேறுபாடு எற்றினானாயிற்றென்று வினவு மன்றே? அதனாற் பாங்கற் கூட்டம் நிகழ்ந்த பின்னரன்றி இடந்தலைப்பாடு நிகழாதாம் பிறவெனின்,—அற்றன்று; யாழோர் கூட்டம் உலகியலாதலான் இல்லதன்றுமாகவே உலகத்தார் நிறையுடையாராகி மறை வெளிப்படாமல் ஒழுகுவாரும், மறை வெளிப்படுத்து விளம்பும் பாங்கனை யுடையாரும், இல்லாதாருமெனப் பலவகை யராதலின் வினுதல் ஒருதலையன்றென்பது; அல்லதூஉம், தன் இடந்தலைப்பாடு நிகழுமதானே துணைவேண்டு மென்பது; என்னை! துணையின்றி நிகழுங் களவு சிறப்புடைத்தாதலானும், பாங்கன் கழறுமென்று அஞ்சி அவனை முந்துற மறைத்தொழுகு மாகலானுமென்பது.

முச்சங்கங்கள்:—

பண்டைத்தமிழ் சான்றோர் தத்தம் கால எல்லையில் சங்கம் வைத்து மொழி வளர்த்தமையை உரையாசிரியர்கள் பலரும் குறித்துள்ளனர். பேராசிரியரும் அச்சங்கங்களைப்பற்றிக் குறித்துள்ளமை நினைவு கூரத்தக்கது. சங்கம் மூன்று இருந்தமையேயன்றி அச்சங்கத்தாரின் செயல் திறங்களும் இவர் உரையால் அறிய இயலுகின்றன

1. தலை, இடை, கடைச்சங்கத்தாரும் பிறசான்றோரும் நாற்சீரடியான் வரும் ஆசிரியமும், வெண்பாவும், கலியுமே பெரும் பான்மையும் செய்தார், வஞ்சிப்பா சிறு வரைவிற்று எனக்கொள்க (செய்யு-35உரை)

2. இந்நூல் செய்த காலத்துத் தலைச்சங்கத்தாரும், இடைச் சங்கத்தாரும் அவ்வாறு கட்டளையடியால் பயின்று வரச் செய்யுள் செய்தார் என்பது இச்சூத்திரங்களால் பெறுதும் என்பது. இனிக்கடைச் சங்கத்தார் 625 அடியும் பயின்று வரச் செய்யுள் செய்தி லராவெனின் —... ... , (செய்யு–51- உரை).

3. அதோளி, இதோளி, உதோளி எனவும், குயின் எனவும் இவை ஒரு காலத்து உளவாகி இக்காலத்து இலவாயின. அவை ஆசிரியர் நூல் செய்த காலத்து உளவாயினும் கடைச சங்கத்தார் காலத்து விழ்ந்தன செய்யு-80-உரை).

4. '150 கலியும் 70 பரிபாடலும் எனச்சங்கத்தார் தொகுத் தவற்றுள்' (செய்யு-149-உரை).

5. வனப்பு எட்டனுள் அழகு என்ற வனப்பில் இடைச் சங்கத்தாரும், கடைச்சங்கத்தாரும் செய்யுள் செய்தார். (செய்யு-236- உரை)

முத்தமிழ்:-

தமிழ் இயல், இசை நாடகம் என முப்பகுதியாக விரிந்திருத் தலின் அதனை முத்தமிழ் என்றல் மரபு. அகத்தியம் இம்முத் தமிழுக்கு இலக்கணம் கூறுவது இம்முத்தமிழைப் பேராசிரியர் பல இடங்களிலும் குறித்துச் செல்லுகிறார். வழக்கியலும் வழக்கியலால் செய்யப்பட்ட செய்யுளியலும் பற்றி எழுந்த இலக்கணம் இயற்றமிழ் எனப்படும். அச்செய்ளின்றி அமையாத இசை இலக்கணம் இசைத்தமிழ் எனப்படும் இவ்விரண்டின் வழி நிகழ்த்தும் கூத்திலக்கணம் நாடகத்தமிழ் எனப்படும் (மரபு-110-உரை)

இனி, இசைநூலாரும் இத்தரவு முதலாயினவற்றை முகம் நிலை கொச்சகம் முரியென வேண்டுப கூத்தநூலார் கொச்சக முள்வழி அதனை நிலை பெற அடக்கி முகம், நிலை முரியென மூன்றாக வேண்டுப. அவரும் இக்கருத்திற்கேற்ப முகத்திற் படுந் தரவினை முகமெனவும், இடைநிற்பன வற்றை இடைநிலையென வும், இறுதிக்கண் முரிந்து மாறுஞ் சுரிதகத்தினை முரியெனவுங் கூறினாரென்பது (செய்யு-132-உரை).

கந்திருவ மார்க்கத்து வரியுஞ் சிற்றிசையும் பேரிசையும் முதலாயின போலச் செந்துறைப் பகுதிக்கே உரியவாகி வருவன வும் கூத்தநூலுள் வெண்டுறையும் அராகத்திற்கே யுரியவாகி வருவனவும், ஈண்டுக் கூறிய செய்யுள் போல வேறுபாடப் பெறும் வழக்கியலவென்பது கருத்து. இக்கருத்தானே அவற்றை இப்பொழுதும் இசைப்பாவென வேறுபெயர்கொடுத்து வழங்குப (செய்யு-153-உரை)

'இசையின் பின்னரது நாடகமாகலிற் பாணன்பின் கூத்தனை வைத்தும், பெண்பாலாகலான் விறல் படஆடும் விறலியைக் கூத்தன் பின் வைத்தும்' (செய்யு-190-உரை).

புலனென்னும் வனப்பு வகையைக் குறிக்குங்கால் அவை விளக்கத்தார் கூத்து முதலாகிய நாடகச்செய்யுளாகிய வெண்டுறைச் செய்யுள் போல்வன வென்பது கண்டு கொள்க' (செய்யு-241 உரை).

இஃது இசைப்பாட்டாகலின் இனி வருகின்றது இசைத் தமிழாகலின் அதற்குபகாரப்பட இதனை இறுதிக்கண் வைத்தா னென்பது. (செய்யு-242-உரை).

அல்லதூஉம் இசைநூலும் கூத்தநூலும் பற்றிப்பிறன் கோட் கூறலென்பதனுற் பிறனென்னினன்றி இயற்றமிழ்க்கண்ணே முதனூலாசிரியனைப் பிறனென்னுனென்பது (மரபு-110-உரை .

அணியிலக்கணம் பற்றிய இவர் கருத்து:

உவமை என்பது தெரியாததொரு பொருளைத் தெரிவிப்பதற்கும், தெரிந்ததொரு பொருளின் அழகையும், சிறப்பையும் விளக்குதற்கும் அமைந்த ஒரு பொருளே யன்றி அதனை அணியாக்கோடல் பொருத்தமின்று என்பது இவர் கருத்தாகும், உவமமையின் வகைகள் சிலவற்றையே உருவகம் என மயங்குகின்றனர் என்பதும் இவர் கருத்தாகும். (உவம-39,. உவமை அணி அன்று என்பதற்கு இவர் கூறும் காரணங்களாவன:—

1. சாத்தனையும், சாத்தனுல் அணியப்பட்டமுடியும் தொடியும் முதலாயினவற்றையும், வேறு கண்டாற்போல அவ்வணியும் செய்யுளின் வேறுகல் வேண்டும்.

2. செய்யுட்கு அணி செய்யும் பொருட்பகுதி யெல்லாம் கூறுது சிலவே கூறி ஒழியின் அது குன்றக் கூறலாகும்.

3. இரண்டு பொருள் எண்ணியவற்றை வினைப் படுக்குங்கால் ஒருங்கு என்பதோர் சொற் பெய்தல் செய்யுட்கு அணியெனின் மூன்று தாழிசையுள் மூன்று பொருள் கூறி எனவாங்கு என்பதோர் சொற் பெய்யின் அதனையும் ஓர் அணியெனக் கூறல் வேண்டும்.

4. பொருளதிகாரத்துள் கூறுகின்ற உவமங்களுள் சில வற்றையும், சொல்லதிகாரத்தினுள்ளும், செய்யுளியலுள்ளும் சொல்லுகின்றன சில பொருள்களையும வாங்கிக்கொண்டு மற்று அவை செய்யுட் கண்ணே அணியாமெனக் கூறுகின்றனர் அவை ஒரு தலையாகச் செய்யுட் கணியாமென்று இலக்கணம் கூறப்படா. என்னே? வல்லார் செய்யின் அணியாகியும் அல்லார் செய்யின் அணி அன்றாகியும் வரும்; தாம் காட்டிய இக்கணத்தில் சிதையா வழியும் என்பது.

திருக்குறள் பற்றிய கருத்துக்கள்:-

வன்கண்குடி காத்தல் கற்றறிதல் ஆளெவினையோடு
ஐந்துடன் மாண்ட தமைச்சு

இக்குறட்பாவில் குடி காத்தல் என்பதைக் குடிப்பிறப்பும், அதனை ஒழுக்கத்தால் காத்தலும் எனப்பொருள் கண்டு ஐந்து என்னும் தொகையை அமைத்துக்காட்டுவர் மணக்குடவர் பருதி யார் கற்றறிதல் என்பதைக் கற்றலும் அறிதலும் எனப் பிரித்து ஐந்தென்னும் தொகை காட்டுவர். பேராசிரியர் இக்கருத்தினர் ஆவர் (மெய் 25-உரை). ஆனல் பரிமேலழகர் இதற்குக் கூறிய உரை எவ்வாற்றானும் பொருத்தமின்று என்பதை யான் பதிப் பித்துள்ள 'திருக்குறள் உரைத்திறன்' என்னும் நூலில் விளக்கி யுள்ளேன். ஆண்டுக் காண்க.

'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு'

இக்குறட்பாவை எடுத்துக்காட்டு உவமைப்பட வந்தது எனப் பரிமேலழகர் கூறுவர். பேராசிரியர் வேறுபட வந்த உவமம் என்பர் (உவமம்-32)

மேலும் நுனிந்தறிந்து இனைய பல உரை நலம் சான்ற இவர் உரையைக் கற்பின் மேலும் பல உண்மைகள் புலனாகும்.

# தொல் - பொருள் - பேராசிரியம்

---o---

## மெய்ப்பாட்டியல்

### பொருளமைப்பு

பொருளதிகாரம் அகமும் புறமுமாய விதந்து கூறுவதாகும். அவற்றுள் அகம் பற்றிய ஒழுகலாறுகளை அகத்திணையியல், களவியல், கற்பியல்- ஆகிய மூன்றியல்களும், புறம் பற்றிய ஒழுகலாறுகளைப் புறத்திணையியலும் விவரிக்கின்றன. பொருளியல் அவ்விரு ஒழுகலாறுகளுக்கும் ஒழிபாய சில செய்திகளை விவரிப்பதாகும். இவ்விருவகை ஒழுகலாறுகளிலும் மக்கட் சமுதாயம் பயின்று வரும் பொழுது அவரவர்கட்கும் உள்ளத்தில் நிகழும் குறிப்புகளுக்கு ஏற்பப் பல மெய்ப்பாடுகள் தோன்றுதல் இயல்பே. அவற்றை இவ்வியல் விரித்துரைக்கின்றது.

மெய்ப்பாடாவது - உலக்கத்தாரது உள்ளத்தே நிகழும் நிகழ்ச்சிகள் அங்கு நிகழ்ந்தவாறே புறத்தார்க்கும் புலனாகுமாற்றான் வெளிப்படுதலாகும். வடநூலார் இதனைச் சத்துவம் என்பர்.

நாடக நூலாசிரியர் கருத்து:

நகை, அழுகை, இளிவரல், வியப்பு, அச்சம், வீரம், உவகை, நடுநிலை ஆகிய எட்டும், சுவைக்கப்படும் பொருள், அதனை நுகர்ந்த பொறி உணர்வு, அது மனத்துட்பட்ட வழி உள்ளத்துள் நிகழும் குறிப்பு, அக்குறிப்புக்கள் பிறந்த உள்ளத்தால் கண்ணீர் அரும்பல் மெய் மயிர்சிலிர்த்தல் முதலாக உடம்பின்கண் வரும் வேறுபாடு ஆகிய நான்கினொடும் உறழ முப்பத்திரண்டாகும். சுவைப்பொருளும் அதனை நுகரும்பொறியும் ஆகிய இரண்டும் கூடிய வழி அல்லது சுவை பிறவாமையால் அவை இரண்டையும் ஒன்றாக்கியும், குறிப்பும் மெய்ப்பாடும் உள்ள நிகழ்ச்சியும் உடம்பின் வேறுபாடுமாகலின் அவை இரண்டையும் ஒன்றாக்கியும் முற்கூறிய எண்வகைச் சுவையுடன் உறழப் பதினாறு ஆதலும் உண்டு. சுவைப்பொருள் அதனை

நுகரும் பொறியுணர்வு அதனால் தோன்றும் உள்ள நிகழ்ச்சி அதனாலாய உடல் வேறுபாடு ஆகிய நான்கும் கூடிய வழியே நகை முதலாயின பிறத்தலின் மேற்கூறிய இரு வகையையும் விடுத்து இவ்வெண்வகைச் சுவைகளையும் கூறலும் உண்டு. இச் சுவை நிகழ்ச்சிகள் முடியுடை வேந்தரும் குறுநில மன்னர் முதலாயினாரும் நாடக மகளிர் ஆடலும் பாடலும் கண்டும் கேட்டும் இன்பம் நுகரும் விளையாட்டிடத்தில் தோன்றுவனவாம். இக்கருத்தினைத் தொல்காப்பியர் இவ்வியலின் தொடக்கத்தே பிறன்கோட் கூறலாகக் கூறுகின்றார்.

தொல்காப்பியர் கருத்து: ஆசிரியர் தாம் எடுத்துக்கொண்ட பொருட்குத் துணையாகும் மெய்ப்பாடுகளை மூன்றாவது நூற்பா முதல் விளக்குகின்றார். அவை அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவாகிய மெய்ப்பாடுகளும் அகத்திற்கே உரிய மெய்ப் பாடுகளுமாக இரு திறத்தனவாம்.

## அகத்திற்கும் புறத்திற்குமுரிய மெய்ப்பாடுகள்

எண்வகை மெய்ப்பாடுகள்: நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்பன.

நகை: நகை - சிரிப்பு. அது முறுவலித்து நகுதலும், அளவே சிரித்தலும், பெருகச்சிரித்தலும் என மூவகைப்படும். இந்நகை, எள்ளல் இளமை பேதைமை மடன் எனும் நான்கு பற்றிப் பிறக் கும். எள்ளல்: இகழ்தல். இது தான் பிறரை எள்ளி நகுதலும், பிறரால் எள்ளப்பட்ட வழித் தான் நகுதலும் என இரண்டாம். இளமை: வயதில் இளமை; இது தன் இளமையால் பிறர் நகு தலும், பிறர் இளமை கண்டு தான் நகுதலும் என இரண்டாம். பேதைமை: அறிவின்மை: இது தன் பேதைமையால் பிறர் நகுத லும், பிறர் பேதைமையால் தான் நகுதலும் என இரண்டாம். மடமை: ஒருவர் கூறியவற்றை அப்படியே ஏற்றுக் கொண்டு அதனை விடாது கடைப்பிடித்தல். இது தன் மடமையால் பிறர் நகுதலும், பிறர் மடமையால் தான் நகுதலும் என இரண்டாம். இவையன்றி உள்ளத்தொடு பிறவாத நகையும் உளதாம்.

அழுகை: அழுகை - அழுதல். இது இளிவு, இழவு, அசைவு, வறுமை எனும் நான்கையும் பற்றிப் பிறக்கும். இளிவு: பிறரால் இகழப்பட்டு எளியனாதல். இழவு: தந்தையும், தாயும் முதலாகிய

சுற்றத்தாரையும் இன்பம் பயக்கும் நுகர்ச்சி முதலானவற்றை யும் இழத்தல். அசைவு: பண்டைய நிலைமை கெட்டு வேறொரு வராகி வருந்துதல். வறுமை: போகம் துய்க்கப்பெறாத பற்றுள்ளம். இவையும் தன் கண்ணும் பிறர்கண்ணும் தோன்றும். இத்தகைய அழுகையால் கண்ணீர் வருதல் போல - உவகை யால் கண்ணீர் வருதலும் உண்டு. அதுவும் இதன்பாற்படும்.

இளிவரல்: இளிவரல் எளியனாதல்; அஃதாவது பிறரினும் இழிந்தவனாதல். இது மூப்பு, பிணி, வருத்தம், மென்மை எனும் நான்கையும் பற்றிப் பிறக்கும்.

மூப்பு: வயது முதிர்ச்சி. பிணி: நோய், வருத்தம்– முயற்சி. மென்மை: வலிமையின்மை. இவையும் தன் கண்ணும் பிறர் கண்ணும் தோன்றும். இவையன்றி வீரம்பற்றி இகழும் இகழ்ச் சியும் உண்டு.

மருட்கை: மருட்கை - வியப்பு. இது புதுமை, பெருமை, சிறுமை, ஆக்கம் எனும் நான்கும்பற்றிப் பிறக்கும். புதுமை: புதியதாய்த் தோன்றுவது.

பெருமை: பெருமைக்குரியது. சிறுமை: சிறுமைக்குரியது. ஆக்கம்: ஒன்று ஒன்றாய்த்திரிதல். இவையும் தன் கண்ணும் பிறர் கண்ணும் தோன்றும். இவ்வாறன்றிச் சிறுமைப்பொருள் பெருந்தொழில் செய்யினும் பெருமைப்பொருள் சிறுதொழில் செய்யினும் அவையும் வியத்தற்குரியனவாம்.

அச்சம்: அச்சம் - ஒன்றைக்கண்டு அஞ்சுவது. இது அணங்கு, விலங்கு கள்வர் இறை எனும் நான்கும் பற்றிப் பிறக்கும்.

அணங்கு: பிறரை வருத்துதற்குரிய பேயும், பூதமும், பாம்பும், பதினென் கணனும், காலனும், இடி முதலியனவும் ஆம்.

விலங்கு: சிங்கம் முதலியன

கள்வர்: தீத்தொழில் புரிவார்.

இறை: தந்தையரும், ஆசிரியரும், அரசரும் முதலாயினார். இச்சுவை பிற பொருள் பற்றியே தோன்றும். இவையன்றி ஊடல் முதலியனவற்றாலும் அச்சம் உண்டு.

பெருமிதம்: பெருமிதம் - வீரம்.

இது கல்வி, தறுகண், இசைமை, கொடை எனும் நான்கும் பற்றிப் பிறக்கும்.

கல்வி: தவ முதலாகிய விச்சை.

தறுகண்: அஞ்சத்தக்கன கண்ட விடத்தும் அஞ்சாமை.

இசைமை: இன்பமும் பொருளும் மிகுதியாகக் கிடைப்பினும் பழியொடு வருவன செய்யாமை.

கொடை: உயிர், உடம்பு, உறுப்பு, முதலிய எல்லாப் பொருளையும் கொடுத்தல், இச்சுவை தன்கண் தோன்றியே நிற்கும். இவையன்றிக் காமம் பற்றிப் பெருமிதம் வருதலும் உண்டு.

வெகுளி: வெகுளி - சினம் - இது உறுப்பறை, குடிகோள். அலை, கொலை, என நான்கும்பற்றிப் பிறக்கும்.

உறுப்பறை: கை, கண், முதலிய உறுப்புக்களைக் குறைத்தல்,

குடிகோள்: தாரமும், சுற்றமும், குடிப்பிறப்பும் முதலாய வற்றுக்கண் கேடு சூழ்தல்.

அலை: தமக்கிருக்கும் ஆட்சியினுலோ, பிறவலிமைகளாலோ பிறரைத்துன்புறுத்தல்.

கொலை: அறிவும் புகழும் முதலாயினவற்றைக்கொன்றுரைத்தல். இது பிறர்கண் தோன்றிய பொருள்பற்றிவரும். இவையன்றி ஊடலித்துத் தோன்றும் வெகுளியும் உண்டு. இது தன்கண் மட்டுமே தோன்றும்.

உவகை: உவகை - மகிழ்ச்சி. இதுசெல்வம், புலன், புணர்வு, விளையாட்டு என நான்கும்பற்றிப் பிறக்கும்.

செல்வம் - நுகர்ச்சி. புலன் - கல்விப்பயனாகிய அறிவுடைமை.

புணர்வு - புணர்ச்சியால் மகிழ்தல். விளையாட்டு - பதியிகந்து யாறும் குளனும், காவும் ஆடி வருதல். இது தன் கண்ணும் பிறர் கண்ணும் தோன்றுவனவாம்.

மேற்கூறிய மெய்ப்பாடுகளே அன்றி உடைமை, இன்புறல். நடுவுநிலை, தன்மை, அடக்கம், வரைதல், அன்பு, கைம்மிகல், நலிதல், சூழ்ச்சி, வாழ்த்தல், நாணுதல், துஞ்சல், அரற்று, கனவு, முனிதல், நினைதல், வெருஉதல், மடிமை, கருதல், ஆராய்ச்சி, விரைவு, உயிர்ப்பு, கையாறு, இடுக்கண், பொச்சாப்பு, பொறாமை, வியர்த்தல், ஐயம் மிகை, நடுக்கம், ஆகிய மெய்ப்பாடுகளும் உளவாம்.

## அகத்திற்கே யுரிய மெய்ப்பாடுகள்

புணர்ச்சிக்கு முன் நிகழும் மெய்ப்பாடுகள் இவை எனவும் புணர்ச்சிக்குப்பின் நிகழும் மெய்ப்பாடுகள் இவை எனவும் ஆசிரியர் வகுத்துக்கூறுகின்றார்.

## புணர்ச்சிக்குமுன் நிகழும் மெய்ப்பாடுகளாவன·

1. புகுமுகம் புரிதல்
2. பொறிநுதல் வியர்த்தல்
3. நகுநய மறைத்தல்
4. சிதைவு பிறர்க்கின்மை
5. கூழைவிரித்தல்
6. காதொன்றுகளைதல்
7. ஊழணிதைவரல்
8. உடைபெயர்த்து உடுத்தல்
9. அல்குல் தைவரல்
10. அணிந்தவைதிருத்தல்
11. இல்வலியுறுத்தல்
12. இருகையுமெடுத்தல்

## புணர்ச்சிக்குப்பின் நிகழும் மெய்ப்பாடுகள்

[1] பாராட்டெடுத்தல் [2] மடந்தப உரைத்தல்.

[3] ஈரமில் கூற்றம் ஏற்றலர் நாணல் [4] கொடுப்பவை கோடல்

[5] தெரிந்துடம்படுதல். [6] திளைப்பு வினைமறுத்தல்.

[7] கரந்திடத்தொழிதல். [8] கண்டவழி உவத்தல்

[9] புறஞ்செயச்சிதைதல். [10] புலம்பித்தோன்றல்,

[11] கலங்கி மொழிதல். [12] கையற உரைத்தல்.

இம்மெய்ப்பாடுகளேயன்றி இவற்றொடு சார்ந்து வரும்சில மெய்ப்பாடுகளும் உளவாம்.

களவினுள் புணர்ச்சி நிகழ்தற்கு ஏதுவாகிய இம்மெய்ப் பாடுகள் தலைவிக்கே உரியனவாம். தலைமகள் குறிப்புச்சிலபற்றித் தலைமகன் குறிப்புப்பல பிறத்தலானும், தலைமகளைக் கண்டு தலைமகன் ஐயுறுதல் முதலாயின காமப்புணர்ச்சிக்கு இன்றி யமையாதன அல்ல ஆதலானும் தலை மகனுக்குரிய மெய்ப் பாடுகள் இவையென ஆசிரியர் விதந்து கூறாராயினர்.

களவினுள் இயற்கைப் புணர்ச்சிக்கு முன்னும் பின்னும் நிகழ்தற்குரிய இம் மெய்ப்பாடுகள் கற்பினுள் இம்முறையே வரவேண்டுமென நியதியின்று. இம்மெய்ப்பாடுகளுள் சில கற்பி னுள் வேண்டியவாறு வருதலும் உண்டு. களவினுள்ளும் தலைவன் தலைவியரிடை ஆற்றாமை மிக்கு இன்ப எழுச்சி உண்டாகுங்கால் இம்மெய்ப்பாடுகள் இம்முறையே வருதல் வேண்டும் என்ற நியதியில்லை.

## களவிற்கும் கற்பிக்குமுரிய மெய்ப்பாடுகள்

இன்பத்தை வெறுத்தல், துன்பத்துப் புலம்பல், எதிர் பெய்து பரிதல், ஏதம் ஆய்தல், பசியட நிற்றல், பசலை பாய்தல் உண்டியிற்குறைதல், உடம்பு நனி சுருங்கல், கண்துயில்மறுத்தல், கனவொடுமயங்கல், பொய்யாக்கோடல், மெய்யே என்றல், ஐயம் செய்தல், அவன்தமர் உவத்தல், அறனளித்து உரைத்தல், ஆங்கு நெஞ்சு அழிதல், எம்மெய்யாயினும் ஒப்புமை கோடல், ஒப்புவழி உவத்தல், உறுபெயர்கேட்டல், கலக்கம் எய்துதல் ஆகிய மெய்ப்பாடுகள் களவின்கண் வரின் மேற்கூறிய இருபத்து நான்கு மெய்ப்பாடுகளின் பின்னர் வரும். கற்பிற்காயின் பயின்று வரும்.

## வரைந்து எய்தும் கூட்டத்திற்கு ஏதுவாகிய மெய்ப்பாடுகள்

முட்டுவயிற் கழறல், முனிவு மெய்ந்நிறுத்தல், அச்சத் தினகறல், அவன் புணர்வு மறுத்தல், தூது முனிவின்மை, துஞ்சிச்சேர்தல், காதல் கைமிகல், கட்டுரையின்மை என வருவன எட்டும் திருமணம் செய்து கொள்வதற்கு ஏதுவா வனவாம்.

## கற்பிற்குரிய மெய்ப்பாடுகள்

தெய்வம் அஞ்சல், புரையறந்தெளிதல், இல்லதுகாய்தல், உள்ளது உவர்த்தல், புணர்ந்துழி உண்மை, பொழுதுமறுப்பு ஆக்கம், அருள்மிகஉடைமை, அன்பு தொக நிற்றல், பிரிவாற்றுமை மறைந்தவை உரைத்தல், புறஞ்சொல் மாணுக்கிளவி ஆகிய பத்தும் கற்பின்கண் நிகழ்வனவாம்.

## தலைவன் தலைவியரிடை இருக்க வேண்டிய ஒப்புமைப்பண்புகள்

ஒத்த பிறப்பு, ஒத்த ஒழுக்கம், தத்தமக்குரிய கடைமையை ஆற்றும் ஆண்மை, பெண்மை பிறந்தற்கும் ஆண்மை பிறத்தற்கு ஏதுவாகிய ஒத்த ஆண்டு, உரு, ஒத்த அன்பு, ஒத்த நிறை, ஒத்த அருள், ஒத்த அறிவு, ஒத்த செல்வம் ஆகியன தலைவன் தலைவியரிடை இருக்க வேண்டிய ஒப்புமைப் பண்புகளாம்.

## தலைமகனிடத்து நிகழத்தகாத மெய்ப்பாடுகள்

பொறாமை தோன்றும் குறிப்பு, கேடு சூழ நினையும் உள்ளம், தலைமகளிடத்துத் தெய்வத்தன்மை கண்டான்போல் வியந்து ஒழுகுதல், புறங்கூறல், கடுஞ்சொற் சொல்லல், நன்றாற்றுதலில உறுதியின்றி நெகிழ்ந்திருத்தல், சோம்புதல், பிறப்பால் தலைவியினும் தான் உயர்ந்தவன் எனக் கருதி ஒழுகுதல், தலைவியினும் தான் இன்புறுவதாகக் கருதி ஒழுகுதல், நுழைந்த உணர்வின்றி வெண்மையான அறிவுடையனாதல், மறதி, இன்னாளை ஒக்கும் இவள் என ஒப்புமை கருதித் தலைவி இடத்து அன்பு செய்தல் ஆகிய பன்னிரண்டும் தலைமகன் மாட்டு நிகழக்கூடாத மெய்ப்பாடுகளாம்.

மேற்கூறிய மெய்ப்பாடுகளைக் கண்ணாலும் செவியாலும் உணரும் அறிவுடையவர்களே உணர இயலும்: ஏனோர் உணர்வதற்கரிதாம்.

—o—

உ

திருச் செந்திலாண்டவன் துணை

## ஆறுவது

# மெய்ப்பாட்டியல்

மெய்ப்பாடு முப்பத்திரண்டும் பதினாறுகவும் அடங்கும்

**249. பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருளுங்**
**கண்ணிய புறனே நானான் கென்ப.**

என்பது சூத்திரம். இவ்வோத்து என்ன பெயர்த்தோவெனின் மெய்ப்பாட்டியலென்னும் பெயர்த்து. மெய்ப்பாடென்பன சில பொருள் உணர்த்தினமையின் அப்பெயர்த்தாயிற்று. இதனானே ஓத்துநுதலியதூஉம் மெய்ப்பாடு உணர்த்துதலென்பது பெற்றாம்.

மெய்ப்பாடென்பது பொருட்பாடு. அஃதாவது, உலகத்தார் உள்ள நிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப் படுவதோர் ஆற்றான் வெளிப்படுதல். அதனது இலக்கணங்கூறிய ஓத்தும் ஆகுபெயரான் மெய்ப்பாட்டியலென்றாயிற்று.

மேலோத்தினோடு இவ்வோத்தினிடை இயைபு என்னையோ வெனின், மேலை ஓத்துக்களுட் கூறப்படும் ஒழுகலாற்றிற்குங், 'காட்டலாகாப் பொருள்' (தொல். பொருள். 247) என்ற வற்றிற்கும் எல்லாம் பொதுவாகிய மனக்குறிப்பு இவை யாகலின் இவற்றை வேறுகொண்டு ஓரினமாக்கி மெய்ப்பாட்டிய லென வேறோர் ஓத்தாக வைத்தமையானே எல்லாவற்றோடும் இயைபுடைத்தென்பது.

இதன் தலைச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், அம் மெய்ப்பாடு பிறர் வேண்டுமாற்றான் இத்துணைப் பகுதிப் படும் என்று உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) **பண்ணைத்தோன்றிய எண்ணான்கு பொருளும்** —முடியுடை வேந்தருங் குறுநிலமன்னரு முதலாயினோர் நாடக மகளிர் ஆடலும் பாடலுங் கண்டுங் கேட்டுங் காமநுகரும் இன்பவிளையாட்டினுள் தோன்றிய முப்பத்திரண்டு பொருளும்,

கண்ணிய புறனே நானான்கு என்ப—அவை கருதிய பொருட் பகுதி பதினாறாகி அடங்கும் நாடக நூலாசிரியர்க்கு (எ. று.)

அது முதனூலைநோக்கிக் கூறியவாறு போலும்.

முப்பத்திரண்டாவன யாவையெனின் — ஒன்பதுசுவை எனப்பட்டவற்றுள் உருத்திரமொழித்து ஒழிந்த எட்டனை யுங் கூறுங்கால், சுவைக்கப்படும் பொருளும், அதனை நுகர்ந்த பொறியுணர்வும், அது மனத்துப்பட்டவழி உள்ளத்து நிகழுங் குறிப்புங், குறிப்புக்கள் பிறந்த உள்ளத்தாற் கண்ணீரரும்பலும் மெய்ம்மயிர் சிலிர்த்தலு முதலாக உடம்பின்கண்வரும் வேறு பாடாகிய சத்துவங்களுமென நான்காக்கி, அச்சுவை யெட்டோ டுங் கூட்டி, ஒன்று நான்கு செய்து உறழ, முப்பத்திரண்டா மென்பது. எனவே, சுவைப்பொருளுஞ் சுவையுணர்வுங் குறிப்பும் விறலுமென நான்காயின. விறலெனிலுஞ் சத்துவமெனினும் ஒக்கும்.

சுவைப்பொருளென்பன, அறுசுவைக்கு முதலாகிய வேம்புங் கடுவும் உப்பும் புளியுங் கரும்பும் போல்வன. அவை யாமாறு: நகைச்சுவைக்குப் பொருளாவன ஆரியர் கூறுந் தமிழும், குருடரும் முடவருஞ் செல்லுஞ் செலவும், பித்தருங் களியருஞ் சுற்றத்தாரை இகழ்ந்தாருங் குழவி கூறும் மழலையும் போல்வன. அச்சப்பொருளாவன,

> "வள்ளெயிற்று அரிமா வாள்வரி வேங்கை
> முள்ளெயிற்று அரவே முழங்கழற் செந்தீ
> ஈற்று மதமா ஏக பாதங்
> கூற்றங் கோண்மா குன்றுறை யசுணம்"

என்று சொல்லப்பட்டனபோல்வன.

இவற்றைச் சுவை கோட லென்பது என்னையெனின், நகையும் அச்சமு முதலாகிய உணர்வு முற்காலத்து உலகியலான் அறிவானொருவன் அவற்றுக்கு ஏதுவாகிய பொருள்பிற கண்ட வழித் தோன்றிய பொறியுணர்வுகள் அவ்வச்சுவை எனப்படும். வேம்பென்னும் பொருளும் நாவென்பொறியுந் தலைப்பெய்துழி யல்லது கைப்புச்சுவை பிறவாததுபோல, அப்பொருள் கண்ட வழியல்லது நகையும் அச்சமுந் தோன்றா. ஒழிந்த காமமுதலி

யனவும் அன்ன. இக்கருத்தே பற்றிப் பிற்காலத்து நாடக நூல் செய்த ஆசிரியரும்.

''இருவகை நிலத்தின் இயல்வது சுவையே'' (செயிற்றியம்) என்றாரென்பது.

இனி இருவகை நிலனென்பன உய்ப்போன் செய்தது காண்போர்க்கு எய்துதலன்றோ எனின் சுவையென்பது ஒப்பினாலாய பெயராகலான் வேம்புசுவைத்தவன் அறிந்த கைப்பறிவினை நாவுணர்வினாற் பிறனுணரான், இவன் கைப்புச்சுவைத்தானெனக் கண்ணுணர்வினான் அறிவதன்றி; அதுபோல அச்சத்துக்கு ஏதுவாகிய ஒரு பொருள்கண்டு அஞ்சி ஓடிவருகின்றான் ஒருவனை மற்றொருவன் கண்டவழி இவன் வள்ளெயிற்று அரிமா முதலாயின கண்டு அஞ்சினான் என்றறிவதல்லது வள்ளெயிற்றரிமாவினைத் தான்காண்டல் வேண்டுவதன்று; தான் கண்டானாயின், அதுவுஞ் சுவையெனவே படும். ஆகவே அஞ்சினானைக் கண்டு நகுதலுங் கருணைசெய்தலுங் கண்டோர்க்குப் பிறப்பதன்றி அச்சம் பிறவாதாகலான் உய்ப்போன்செய்தது காண்போன் உய்த்த அறிவின் பெற்றியாற் செல்லாதாகலின் இருவகை நிலமெனப்படுவன சுவைப்பொருளுஞ் சுவைத்தோனுமென இருநிலத்தும் நிகழுமென்பதே பொருளாதல் வேண்டுமென்பது.

குறிப்பென்பது, கைப்பின் சுவையுணர்வு பிறந்தவழி வெறுப்பு முதலாயின உள்ள நிகழ்ச்சிபோல அஞ்சுதக்கன கண்டவழி அதனை நோக்காது வெறுக்கும் உள்ளநிகழ்ச்சி. விறலென்பன, அவ்வுள்ள நிகழ்ச்சி பிறந்தவழி வேம்புதின்றார்க்குத் தலைநடுங்குவதுபோலத் தாமே தோன்றும் நடுக்க முதலாயின. இவ்வகையால் இந்நான்கினையும் எட்டோடும் உறழவே முப்பத்திரண்டாயின.

இனி, அவை பதினாறு ஆயினவாறு என்னையெனின், வேம்பு முதலாயின பொருளும் அதனோடு நாமுதலாயின பொறியும் வேறுவேறு நின்றவழிச் சுவையென்று சொல்வதே பிறவாமையானும் அவ்விரண்டுங் கூடியவழிச் சுவையென்பது பிறத்தலானும் அவை பதினாறும் எட்டெனப்படும்; இனிக் குறிப்புஞ் சத்துவம் என்பனவும் உள்ள நிகழ்ச்சியும் உடம்பின் வேறுபாடும் என்பராகலின் அவ்வுள்ள நிகழ்ச்சியை வெளிப்படுப்பது

சத்துவமாகலின் அவை பதினாறும் எட்டாயடங்குமாகலின் அவை ஈரெட்டுப் பதினாருகு மென்பது.

மற்றிவை பண்ணைத் தோன்றுவனவாயின் இதுபொருளோத்தினுள் ஆராய்வதென்னை? நாடகவழக்கத்தானே, ஒருவன் செய்ததனை ஒருவன் வழக்கினின்றும் வாங்கிக்கொண்டு பின்னர்ச் செய்கிறன்றதாகலானும் வழக்கெனப்படாதாகலானும் ஈண்டு ஆராய்வது பிறிதெடுத்துரைத்தல் என்னுங் குற்றமாமென்பது கடா, அதுவன்றே இச்சூத்திரம் பிறன்கோள் கூறலென்னும் உத்தி வகையாற் கூறி, அதுதானே மரபாயிற்றென்பது.

விளக்கவுரை

மெய் - உடல். பாடு — நிகழும் தன்மை. உள்ளத்தில் தோன்றும் நிகழ்ச்சிக்கு ஏற்ப உடலின்கண் ஏற்படும் வேறுபாடு மெய்ப்பாடு எனப்படும். இளம்பூரணர் இவ்வாறே கருதுவர். பேராசிரியர், மெய் — பொருள்; பாடு — வெளிப்படுதல் எனவே நகை முதலாகிய பொருண்மை வெளிப்படுதல் மெய்ப்பாடு என்பர்.

மெய்ப்பாட்டியல் — மெய்ப்பாட்டின் இலக்கணம்; ஈண்டு அவ்விலக்கணத்தை உணர்த்தியஇயலுக்கு ஆதல் ஆகுபெயராம். சேனாவரையர் முதலியோர் இவ்வாறு வருவதை இருபெயரொட்டாகு ஆகுபெயர் என்பர்.

ஒழுகலாறுகள் — களவு கற்பு என்னும் அக ஒழுகலாறுகளும் புற ஒழுகலாறுகளுமாம்.

பண்ணை — விளையாட்டு. 'கெடவரல் பண்ணை ஆயிரண்டும் விளையாட்டு' (உரி, 23) என்பர் ஆசிரியரும். உருத்திரம் — வெகுளி. இது ஒழிந்த ஏனைய சுவைகளாவன: நகை, அழுகை, இளிவரல், வியப்பு, அச்சம், வீரம், உவகை, நடுவுநிலை (சமநிலை) என்பன. இவ்வெட்டும் சுவைக்கப்படும் பொருள், அதனை நுகர்ந்த பொறியுணர்வு, அதனால் உள்ளத்து நிகழும் குறிப்பு, அதனால் உடற்கண் ஏற்படும் வேறுபாடு ஆகிய இந்நான்களுடும் உறழ 32 ஆகும்.

கடு — கடுக்காய். துவர்ப்பிற்குரிய பொருள் இது. ஆரியரின் மொழியும் நாடும் வேறாதலின் அவர் தமிழை நன்கு ஓலியார் ஆதலின் அவர் கூறும் தமிழ் நகைச்சுவைக்கு ஏதுவாயிற்று.

செலவு - நடை. ஆசிரியர் செயிற்றியனார் நகைப் பொருட்கு உரிய பொருண்மையை 'உடனிவைதோன்றும் இடமியாதெனினே, மூடவர் செல்லும் செலவின் கண்ணும், மடவோர் சொல்லும் சொல்லின் கண்ணும், கவர்ச்சி பெரிதுற்றுரைப் போர்க்கண்ணும், பிதற்றிக்கூறும் பித்தற்கண்ணும், சுற்றத் தோரை இகழ்ச்சிக் கண்ணும், மற்று மொருவர்கட் பட்டோர்க் கண்ணும், குழவி கூறு மழலைக்கண்ணும், மெலியோன் கூறும் வலியின் கண்ணும் வலியோன் கூறும் மெலிவின் கண்ணும், ஒல்லார் மதிக்கும் வனப்பின் கண்ணும், கல்லார் கூறும் கல்விக் கண்ணும், பெண்பிரிதன்மை யலியின் கண்ணும், ஆண் பிரி பெண்மை பேடிக் கண்ணும், களியின் கண்ணும் காவாலி கண்ணும், தெளிவிலார் ஒழுகும் கடவுளின் கண்ணும், ஆரியர் கூறும் தமிழின்கண்ணும், காரிகையறியாக் காமுகர் கண்ணும், ஊமர் கண்ணும் செவிடர் கண்ணும். ஆன்ற மரபின் இன்னுழி எல்லாம், தோன்றும் என்ப துணிந்திசினோரே' என விளக்குவர். அரிமா — சிங்கம். ஈற்று - ஈன்ற ஆணிமையையுடைய பசு. மதமா — மதம் பொருந்திய யானை. ஏகபாதம் — ஒரு காலுடையராக அருளாளர்கள் கூறுவர்

''உள்ளமிக்கார் குதிரை முகத்தார் ஒருகாலர்கள்
எள்கலில்லா இமையோர்கள் சேருமிடமென்பரால்''

எனவரும் ஞானசம்பந்தர் திருவாக்கும் காண்க. கோண்மா — கொல்லும் தொழிலையுடைய மிருகங்கள். அசுணம - பறவை யினங்களுள் ஒன்று.

தலைப்பெய்த வழியல்லது - சேர்ந்தவிடத்தல்லது.

உய்ப்போன் செய்தது - நகை முதலாகிய பொருளுக்கு ஏதுவான வற்றை நுகர்ந்தவனது மெய்ப்பாடு. காண்போர்க்கு எய்துதல் - அவ்வேறுபாட்டைப் பார்த்தவர்களுக்குமஏற்படுதல், சுவையென்பது வாயால் நுகரப்படும் அறுவகைச் சுவையாம். ஈண்டு நகை முதலாயவற்றிற்கும் சுவையென்றல் ஒப்பினுனாய பொருளாம். ஒப்பினுனாய பொருள் - ஒப்புமைபற்றி ஒன்றற்குரிய பெயரைப் பிறிதொன்றற்கும் கூறுதலாம். 'உய்ப்போன் செய்தது காண்போர்க்கு எய்துதல், மெய்ப்பாடென்ப மெய் யுணர்ந்தோரே' என்பர் செயிற்றியனார். அதனையே ஈண்டுப் பேராசிரியர் மறுத்துள்ளார்.

பிறன்கோட் கூறல் - பிறருடைய கொள்கையைத் தாம் எடுத்துக் கூறுதல். எண்வகைச் சுவைபற்றி நிகழும் முப்பத்தி ரண்டு பொருண்மைகளும் பதினாறாக அடங்கும் என்றல் நாடக நூலார் கொள்கையாம். ஈண்டுத் தொல்காப்பியர் அவர் கொள்கையை எடுத்துக் கூறியிருத்தல் பிறன்கோட் கூறலாம். (1)

பதினாறும் எட்டாகும்

## 250. நாலிரண் டாகும் பாலுமா ருண்டே

இது மெய்ப்பாட்டின் அடக்கங் கூறுகின்றது.

(இ-ள்) முப்பத்திரண்டு மெய்ப்பாடும் பதினாறாதலே யன்றி எட்டாதலும் உண்டு, (எ-று).

அவை வீரம் அச்சம் வியப்பு இழிபு காமம் அவலம் நகை நடுவுநிலை யென்பன. இவற்றின் விகாரமாகிய சத்துவங்கள் எட்டனையும் இவற்றுளடக்கி எட்டாக்கிக் கூறியவாறிது வென்பது.

நாலிரண்டாதலும் உண்டென்றது பாலென்றதனான் எட்டாகலேயன்றி அவை ஒன்பதாதற்குப் பகுதியுமுடைய வென்பது; என்னை?

"உருத்திரந் தன்னோடு ஒன்ப தாகும்"

என்பவாகலின். உம்மை இறந்தது தழீஇயிற்றாதலான் இவையும் பண்ணைத் தோன்றிய எண்ணான்கெனப்பட்டன. அவற்றுப் பகுதியென இதுவும் பிறன்கோட் கூறியவாறாயிற்று.

மற்றிவற்றது பயனென்னையெனின்; பொருளதிகாரத்துக் கூறுகின்ற வழக்கியலே அமையுமென்பது கூறி, அச்சுவைக்கு ஏதுவாய பொருளினை அரங்கினுள் நிறீஇ, அது கண்டு குறிப்புஞ் சத்துவமும் நிகழ்த்துகின்ற கூத்தனையும் அரங்கில் தந்து, பின்னர் அவையரங்கினோர் அவன் செய்கின்ற மெய்ப்பாட்டினை உணர்வாராக வருகின்ற முறைமையெல்லாம் நாடகவழக்கிற்கே உரிய பகுதியெனவும், அப்பகுதியெல்லாம் ஈண்டுணர்த்தல் வேண்டுவதன்றெனவுங் கூறியவாறு. இங்ஙனம் அடங்குமென்பது நாடக நூலுள்ளுஞ் சொல்லுபவோவெனின், சொல்லுபவாகலி னன்றே அதன்வழி நூல்செய்த ஆசிரியர் செயிற்றியனார் சுவையுணர்வும் பொருளும் ஒன்றாக அடக்கிச் சுவையுங் குறிப்

புஞ் சத்துவமுமென மூன்றாக்கி வேறுவே றிலக்கணங் கூறி அவற்றை,

"எண்ணிய மூன்று மொருங்கு பெறுமென
நுண்ணிதி னுணர்ந்தோர் நுவன்றன ரென்ப"

என்றோதினர் ஆயிற்றென்பது

(வி—ரை)

மேல் பதினாறாகக் கூறிய பொருண்மை சுவையென்ற ஒன்றினுள் அடங்க எண்வகையாகக் கூறுதலும் உண்டு என்பது இந்நூற்பாவின் பொருளாம் இதுவும் நாடக நூலார் கருத்தா கலின் பிறன்கோட் கூறலாம்.

அஃதேல், இவ்விலக்கணம் கூத்தினுட் பயன்படல் உண்டா தலின் ஈண்டு வேண்டாவெனின், ஈண்டும் செய்யுள் செய்யுங் கால் சுவைபடச் செய்ய வேண்டுதலின் ஈண்டும் கூறவேண்டும் என்க. 'உய்த்துணர்வின்றித் தலைவரு பொருளின் மெய்ப்பட முடிவது மெய்ப்பாடாகும்' என இவ்வாசிரியர் மெய்ப்பாடும் செய்யுளுறுப்பென ஓதினமை உணர்க என உரைப்பர் இளம் பூரணர். (2)

எண்வகை மெய்ப்பாடு

**251 நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று
அப்பால் [1]எட்டே மெய்ப்பா டென்ப.**

இது, பிறர்வேண்டுமாற்றானன்றி இந்நூலுள் இவ்வாறு வேண்டப்படும் மெய்ப்பாடென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) இச்சொல்லப்பட்ட எட்டும் மெய்ப்பாடென்று சொல்லுவர் புலவர் (எ-று.)

1 நகையென்பது சிரிப்பு; அது முறுவலித்து நகுதலும், அளவே சிரித்தலும், பெருகச்சிரித்தலுமென மூன்றென்ப.

1. எட்டாம் எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

2. அழுகையென்பது அவலம்; அஃது இருவகைப்படும், தானே அவலித்தலும், பிறரவலங்கண்டு அவலித்தலுமென. இவற்றுள் ஒன்று கருணையெனவும் ஒன்று அவலமெனவும் பட்டுச் சுவை ஒன்பதாகலுமுடைய என்பது.

3. இளிவரலென்பது இழிபு.

4. மருட்கையென்பது வியப்பு; அற்புதமெனினும், அமையும்.

5. அச்சமென்பது பயம்.

6. பெருமிதமென்பது வீரம்.

7. வெகுளியென்பது உருத்திரம்.

8. உவகையென்பது காம முதலிய மகிழ்ச்சி. இவை அவ் வெட்டுமாவன. இவற்றைச் சுவையெனவுங் குறிப்பெனவும் வழங்கினும் அமையும்.

மற்று நகை முன்வைத்தது என்னையெனின், 'பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருட்கும்' (249) இவை யென்னும் இயல்பில்லனவல்ல என்றதற்கு விளையாட்டுப் பொருட்டாகிய நகையை முன்வைத்தானென்பது. அதற்கு மறுதலையாகிய அழுகையை அதன்பின் வைத்தான். இளிவரல் அதன்பின் வைத்தான், அழுகையும் இளிவரலோடு இயைபுடைமையின். தான் இளிவந்து பிறிதோர் பொருளை வியக்குமாதலின் இளிவரலின்பின் வியப்புவைத்தான். வியப்புப்பற்றியும் அச்சம்பிறத்தலின் அச்சத்தை அதன்பின் வைத்தான். அச்சத்திற்கு மறுதலையாகிய வீரத்தை அதன்பின் வைத்தான். அவ்வீரத்தின் பயனாகிப் பிறர்க்கு வரும் வெகுளியை அதன் பின்னே வைத்தான். வெகுளிக்கு மறுதலை யாகலானும் எல்லாவற்றினும் ஈண்டு ஓதுதற்குச் சிறந்ததாகலானும் முதற்கண் ஓதிய நகைக்கு இயைபுடைத்தாகாலனும் உவகையை அவ்வீற்றுக் கண் வைத்தானென்பது.

இவ்வெட்டனுள் முதனின்ற நான்கும் முற்கூறுதற்கும் இறுதிநின்ற நான்கும் பிற்கூறுதற்குங் காரணம் வருகின்ற சூத்திரங்களானும் பெறுதும்.

மற்றிவ்வெட்டனோடுஞ் சமநிலைகூட்டி ஒன்பது என்னுமோ நாடகநூலுட்போலவெனின், அதற்கு ஓர் விகாரமின்மையின்

ஈண்டுக் கூறியதிலனென்பது; அதற்கு விகாரமுண்டெனின் முன்னையெட்டனுள்ளுஞ் சார்த்திக்கொள்ளப்படும். அல்லதூஉம் அஃதுலகியல் நீங்கினார் பெற்றியாகலின், ஈண்டு உலக வழக்கினுட் சொல்லியதிலனென்பது. ஒழிந்த எட்டும் உலகி யலாகலிற் கூறினான். 'வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலின் (தொல், சிறப்புப்பாயிரம்) என்று புகுந்தமையினென்பது. அவை எட்டும் ஆமாறு இனிக்கூறுதும்.

(வி—ரை)

தானே அழுதல் அவலமெனப்படும். பிறர் அவலம் கண்டு அவலித்தல் கருணையெனப்படும்.

என்னும் - சிறிதும். இயைபில்லன அல்ல - இயைபுடையன. உலகியல் நீங்கினார்—துறவியர். (3)

நகை

## 252. எள்ள லிளமை பேதைமை மடனென்று உள்ளப்பட்ட நகைநான் கென்ப.

இது, நிறுத்தமுறையானே நகைக்குறிப்பு நான்கென்ப துணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) எள்ளுதலும் இளமையும் பேதைமையும் மடனு மெனக் கருதப்பட்ட நகை நான்கு (எ—று)

இவை நான்கும் பொருளாகிச் சத்துவமுங் குறிப்பும் சுவையுமென்னும் மூன்றற்கும் முதற்கண்ணவாகலான் மூன் றனையும் அடக்கிப் பொருட்பகுதியான் அவற்றைக் கூறு கின்றவாறு இதுவென்பது. இவை நான்கும் ஒன்று இரண் டாகி எட்டாதலும் உடைய.

எள்ளலென்பது தான் பிறரை எள்ளிநகுதலும் பிறரால் எள்ளப்பட்டவழித் தான் நகுதலுமென இரண்டாம். இளமை யென்பது தான் இளமையாற் பிறரை நகுதலும் பிறரிளமை கண்டு தான் நகுதலுமென இரண்டு. பேதைமை என்பது அறிவின்மை. மடமை யென்பது பெரும்பான்மையுங் கொளுத்தக்கொண்டு கொண்டதுவிடாமை. இவையுந் தன்

மடமையான் நகுதலும் பிறன்மடமையான் நகுதலுமென இவ்விரண்டாம்

எள்ளலென்பது இகழ்ச்சி.

"எள்ளி நகினும் வரூஉம்" (கலி-61)

என்பது, தன்கண் நிகழ்ந்த எள்ளல்பொருளாக நகை பிறந்தது.

"நல்லை மன்னென நகூஉப்பெயர்ந் தோளே" (அகம்-248)

என்பது பிறரெள்ளியது பொருளாகத் தன்கண் நகை பிறந்தது; என்னை? தன்மகள் தன்னை மதியாது இகழ்ந்தாளென நக்கவாறு. இது வெகுளிப்பொருளாக நக்கதன்றோ வெனின், அது வீரர்க்கே உரித்தாகல்வேண்டும்; இவள் அவளை வெகுண்டு தண்டஞ் செய்வாளல்லள் அதற்கே உவப்பினல்ல தென்பது. அல்லதூஉம்,

"நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்" (புறம்-72)

என்றாற்போல வீரத்தெழுந்த வெகுளிநகையும் எள்ளல் நகையென்றே அடக்கவேண்டும் ஈண்டென்பது.

"நடுங்குதல் காண்மார் நகைகுறித் தனரே" (கலி-13)

என்புழித் தன் இளமை பொருளாக நகை பிறந்தது.

"திறனல்ல யாம் கழற யாரை நகும் இம்
மகனல்லான் பெற்ற மகன்" (கலி-86)

என்பதும் அது.

அங்ஙனம் மகன் சிரித்தவழித் தாய்க்கு நகை தோன்றிற்றேல் அது பிறரிளமை பொருளாக நகை தோன்றிற்றாம்.

"நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல்" (அகம்-16)

என்பது பிறரிளமை பொருளாக நகை பிறந்தது.

"நகைநீ கேளாய் தோழி" (அகம்-248 )

என்பது தன் பேதைமை பொருளாக நகைபிறந்தது; என்னை? தான் செய்த தவற்றிற்குத் தாய் தன்னை வெகுண்டது தனக்கு நகையாகக் கொண்டமையின்.

"நகையா கின்றே தோழி
மம்மர் நெஞ்சினன் தொழுதுநின் றதுவே" (அகம். 56)

என்பது பிறன் பேதைமை பொருளாக நக்கது.

"நும்மொடு நக்க வால்வெள் ளெயிறே" (குறுந்-'68) என்பது தன் மடத்தான் நகை தோன்றிற்று; என்னை? நீயிர் கூறிய அதனையே மெய்யெனக்கொண்டு மகிழ்ந்து நக்கன மென்றமையின்,

"குறிக்கொண்டு நோக்காமை யல்லா லொருகண்
சிறக்கணித்தாள் போல நகும்" (குறள்–1095)

என்பதும் அது.

"நாம்நகை யுடையம் நெஞ்சே நம்மொடு
தான்வரு மென்ப தடமென் தோளி" (அகம். 121)

எனப் பிறர்மடம் பொருளாக நகை தோன்றிற்று, பிறவும் அன்ன.

இவ்வோதப்பட்டவற்றுக்கெல்லாம் உவகை உரித்து. உள்ளப்பட்ட நகை நான்கு என்றதனுன் உள்ளத்தோடு பிறவாத நகையுமுள, அவை "வறிதகத் தெழுந்த வாயல் முறுவலள்." (அகம். 5) என்ருற்போல வருவனவெனக் கொள்க.

(வி-ரை)

எள்ளல் முதலிய நான்கும் நகைச்சுவை பிறத்தற்குக் காரணமாகும் பொருளாம். இவற்ருல் உள்ளத்துள் ஏற்படும் குறிப்பும் அதனுலாய சுவையும் அதனுலாய மெய்ப்பாடும் தோன்றும். ஆதலின் இம்மூன்றற்கும் முதலனவாக இந்நான் கும் அமையும்.

கொளுத்தக்கொண்டு — அறிவிக்க அறிந்து.

எள்ளிநகினும் வரூஉம்—தலைவன் தாள் குறையுறுகின்ற பொழுது தானிகழ்ந்து சிரிப்பினும் அவன் வருவன் எனத் தலைவி கூறுகின்ருள். ஆதலின் தன்கண் பிறந்த எள்ளல் பொருளாக நகை பிறந்தது என்ருர்.

செவிலி தலைவியின் செயல் கண்டு நீ மிகவும் நல்லை எனக் கூறிச் சிரித்தலின் பிறர் எள்ளியது பொருளாக நகை பிறந்தது என்ருர்.

இவனது நாட்டை உயர்த்திக் கூறுவார் நகுதற்குரியர் எனக் கூறலின் வெகுளி பற்றிய நகையாயிற்று.

நீ மெய்யினடுங்குதல் காண்பதற்காக இவ்வாறு நகை யாடிக் கூறினார். எனத்தோழி தலைவியை ஆற்றுவித்தலின் தலைவி தன் இளமை காரணமாக நகை பிறந்தது.

தன் மகன் நகுதலைக் கண்ட அத்தலைவி தன் இளமை காரணமாக நகுவதாகக் கருதுகின்றாள். நாவொடு நவிலா— நாவொடு படாத

தலைவன் தன்னில்லத்திற்கு வந்து நின்றமையைக் கண்ட செவிலி தலைவி தன்முகத்தை நோக்கி நல்லை எனக் கூறியதைத் தோழி தலைவியிடம் கூறுதலின் தன் பேதைமை பொருளாக நகை பிறந்தது என்றார்.

தலைவன் தொழுது நின்றமைக்குத்தான் நகுதலின் பிறன் பேதைமையாயிற்று.

தலைவன் தன்னை நோக்கியமைக்கு மாறுகத்தானும் நோக்கி தலைவி நகுதலின் தன் மடமை காரணமாக நக்கது என்றார். இந்நகுதல் தலைவன் குறிப்புரை நின்றதாதலின் இங்குக் காட்டு வது பொருத்தமின்றாம்.

தலைவி தன்னுடன் வருதற்கு ஒருப்படுகின்றமையைக் கண்டு தலைவன் கூறலின் இது பிறர் மடம் கண்டு நகையாயிற்று

வாயல் முறுவலள்—உண்மையல்லாத முறுவலித்தலுடைய வள்.

மடம் என்பதற்கும் பேதைமை என்பதற்கும் வேறுபாடு என்னையெனின், மடம் என்பது பொருண்மை யறியாது திரியக் கோடல்; பேதைமையென்பது கேட்டதனை உய்த்துணராது மெய்யாகக் கோடல் என விளக்கங் காண்பர் இளம்பூரணர். (4)

அழுகை

**253** [1]இளிவே இழவே அசைவே வறுமையென
விளிவில் கொள்கை அழுகை நான்கே.

இது, முறையானே அழுகை யென்னுஞ் சுவையினைப் பொருள்பற்றி உணர்த்துதல் நுதலிற்று.

---

1. இழிவே எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

(இ-ள்.) இளிவும் இழத்தலும் அசைதலும் வறுமையுமென இந்நான்கு பொருள்பற்றித் தோன்றும் அவலம் (எ-று)

இளிவென்பது பிறரால் இகழப்பட்டு எளியனாதல். இழவென்பது தந்தையுந்தாயு முதலாகிய சுற்றத்தாரையும் இன்பம் பயக்கும் நுகர்ச்சி முதலாயவற்றையும் இழத்தல். அசைவென்பது பண்டை நிலைமைகெட்டு வேறொருவாறாகி வருந்துதல். வறுமை யென்பது போகந்துய்க்கப்பெறாத பற்றுள்ளம். இவை நான்குந் தன்கண் தோன்றினும் பிறன்கண் தோன்றினும் அவலமாமென்பது. எனவே, இவையும் எட்டாயின.

விளிவில் கொள்கை, கேடில் கொள்கை; அங்ஙனங் கூறிய மிகையானே அழுகைக் கண்ணீர்போல உவகைக் கண்ணீர் வீழ்தலும் உண்டு. அதனையும் அழுகைப்பாற் சார்த்தி உணரப் படும்.

"எழுதெழில் சிதைய அழுதனள் ஏங்கி
அடித்தென வுருத்த தித்திப் பல்லூழ்
நொடித்தெனச் சிவந்த மெல்விரல் திருகுபு
கூர்நுதி மழுங்கிய எயிற்றள்
ஊர்முழுது நுவலுநிற் காணிய சென்மே" (அகம்-176)

என்பது, பரத்தையை நீ யெள்ளினையென்று அழுது வருகின்றா ளென்று தலைமகற்குச் சொல்லியதாகலின் இது தன்கட் டோன்றிய இளிவரல் பொருளாக அவலச்சுவை பிறந்தது. "கயமல ருண்கண்ணாய் காணா யொருவன்" (கலி-47) என்னும் பாட்டினுள் "தானுற்ற நோயுரைக்கல்லான் பெயருமன் பன்னாளும்" எனத் தலைமகன் இளிவந்தொழுகுவது காரணமாகச் "சேயேன்மன் யானுந் துயருழப்பேன்" என்றமையின் இது பிறன்கண் தோன்றிய இளிவரல் பொருளாக அவலச்சுவை பிறந்தது. இது கருணையெனவும்படும்.

"மெழுகும் ஆப்பிகண் கலுழ்நீ ரானே" (புறம்-249)

என்புழிக் கணவனை யிழந்தாள் அவற்குப் பலிக்கொடை கொடுத்தற்கு மெழுகுகின்றாளைக் கண்ணீரே நீராக மெழுகு கின்றாளென்றமையின் இது தன்கட் டோன்றிய இழவுபற்றிப் பிறந்த அவலச் சுவையாயிற்று.

"ஐயோ வெனின்யான் புலியஞ் சுவலே" (புறம்-225)

என்பதும் அது.

"பின்னொடு முடித்த மண்ணா முச்சி"

என்னும் பாட்டினுள்,

"அணங்குறு கற்பொடு மடங்கொளச் சாஅய்
நின்னோய்த் தலையையும் அல்லை தெறுவர
என்னா குவள்கொல் அளியள் தானென
என்னழி பிரங்கு நின்னொடியானும்." (அகம்-73)

என்றவழித் தலைமகன் பிரிவிற்குத் தோழி படர்கூர்ந்தாளெனச் சொல்லினமையின் இது பிறன்கட் டோன்றிய இழவுபற்றி அவலம் பிறந்ததாம்.

"துளியிடை மின்னுப்போல் தோன்றியொருத்தி
ஒளியோ டுருவென்னைக் காட்டி அளியளென்
நெஞ்சாறு கொண்டாள் அதற்கொண்டுந்துஞ்சேன்"
(கலி-139)

எனத் தன்கட் டோன்றிய அசைவுபற்றி அவலம் பிறந்தது.

"இல்வழங்கு மடமயில் பிணிக்குஞ்
சொல்வலை வேட்டுவ னாயினன் முன்னே." (புறம். 252)

என்பது பிறன்கட் டோன்றிய அசைவுபற்றிய அவலம்; என்னை? அள்ளிலைத்தாளி கொய்யா நின்றான் இதுபொழுதெனா அவலித்துச் சொல்லினமையின்,

"இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொ றழூஉந்தன் மகத்துமுகன் நோக்கி
நீரொடு நிறைந்த ஈரிதழ் மழைக்கணென்
மனையோள் எவ்வம் நோக்கி நினைஇ
நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண" (புறம்-164)

என்புழி, முலைப்பசை காணாது அழுகின்றது குழவியென்பது தன்கட் டோன்றிய வறுமைபற்றி அவலம்பிறந்தது. மகமுக னோக்கி அழுகின்றாள் என் மனைவி யென்பது பிறன்கட் டோன்றிய வறுமையவலம்.

"இன்ன விறலு முளகொல் நமக்கென
மூதிற் பெண்டிர் கசிந்தழ நாணிக்
கூற்றுக்கண் ணோடிய வெருவரு பறந்தலை" (புறம்-19)

என்புழி மூதிற்பெண்டிர் இழவுபற்றி அழுதாராயிற் கூற்றுக்

கண்ணேடாதாகலின் அவர் உவந்தனரென்பது பெற்றும்; அதனுனே அஃது உவகைக் கலுழ்ச்சியா மென்பது.

(வி-ரை)

வறுமை என்பதற்குப் பேராசிரியர் தரும் உரை நுண்ணி தாம்.

(நு.வி) அடித்தென வருத்ததித்தி—அழுத்தி விட்டது போல உருவு கொண்ட தேமல். பல்லூழ்—பலமுறை, திருகுபு கூர்நுதி -- (பலமுறை) திருகுதலால் கூரிய நுனி மழுங்கிய.

கண்ணிலிருந்து சொரிகின்ற நீரையே நீராகக் கொண்டு ஆவின் சாணத்தால் மெழுகுவாள் என்பது இதன்பொருளாம்.

ஐயோ என யான் வாய்விட்டு அரற்றின் அவ்வுரை வழி வந்து புலிதாக்குமென்று அஞ்சுவேன் என்பது இதன் பொரு ளாம்.

அணங்குறுகற்பு — தெய்வத்தை ஒத்த கற்பு. சாஅய்— மெலிந்து. நின்நோய் தலையையுமில்லை—நின் வருத்தத்திடத் தாயுமல்லை. என் அழிவு இரங்கும் — என் வருத்தத்திற்காக இரங்கும். தலைமகன் பிரிவினுல் தலைமகள் வருந்துவளெனத் தோழி வருந்தினுள் என்கின்றமையின் பிறன்கட் தோன்றிய இழவு பற்றி அவலமாயிற்று.

துளியிடை — மழையிடத்து. நெஞ்சு ஆறு கொண்டாள் — என் நெஞ்சைத்தான் வரும்வழியாகக் கொண்டாள். தலைவன், தலைவியால் தனக்கேற்பட்ட துஞ்சாமை கூறலின் தன்கண் தோன்றிய அவலமாயிற்று.

சொல்வலை - சொல்லாகிய வலை. முன்வேட்டுவனுயினுன் இது பொழுது அள்ளிலைத்தாளி கொய்யா நின்றுன் எனக்கூறலின் பிறன்கண் தோன்றிய அவலமாயிற்று. அள்ளிலைத்தாளி - செறிந்த இலைகளையுடைய தாளிச் செடி.

இல்லி — துளை. பெருந்தலைச் சாத்தனுர் குமணனிடம் தன் வறுமை நிலை கூறிப் பரிசில் கடாயது.

இன்ன விறலும் — (யானையை வெட்டி வீழ்த்திய வீரராய் எம் தலைவரொடு கிடந்தார் எம் புதல்வர்) இப்படிப்பட்ட

வெற்றியும். மூதில் பெண்டிர்—பழைய மறக்குடியில் வந்த பெண்டிர். கசிந்து அழ - மகிழ்ச்சியால் அழ. மகிழ்ச்சியால் அழுதலின் உவகைக் கலுழ்ச்சியாயிற்று. (5)

இளிவரல்

**254. மூப்பே பிணியே வருத்தம் மென்மையோடு**
**யாப்புற வந்த இளிவரல் நான்கே.**

இது, மூன்றாம் எண்ணு முறைமைக்கண் நின்ற இளிவரல் கூறுகின்றது.

(இ-ள்) மூப்பும் பிணியும் வருத்தமும் மென்மையுமென நான்கு பொருள் பற்றிப் பிறக்கும் இளிவரல் (எ-று).

வருத்தமெனினும் முயற்சியெனினும் ஒக்கும்.

"யாப்புற வந்த" என்பது திட்பமுறவந்த என்றவாறு. அங்ஙனங் கூறிய மிகையானே வீரமுதலாயினபற்றியும் இளிவரல் பிறக்கும் என்றவாறு. இவையும் முன்னையபோலத் தன்கட் டோன்றுவனவும் பிறன்கட் டோன்றுவனவும் பற்றி எட்டாதலுடைய வென்பது கொள்க.

"தொடித்தலை விழுத்தண்டு ஊன்றி நடுக்குற்று
இருமிடை மிடைந்த சிலசொல்
பெருமூ தாளரேம் ஆகிய எமக்கே". (புறம்-243)

என்பது தன்கட் டோன்றிய மூப்புப்பொருளாக இளிவரல் பிறந்தது; என்னை? இளமைக்காலத்துச் செய்தன செய்யமாட்டாது இளிவந்தனம் இக்காலத்து என்றமையின்.

"மாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றியெம்
முதுமை யெள்ளலஃ தமைகுந் தில்ல." (அகம்-6)

என்பதும் அது.

"மூத்துத் தலை யிறைஞ்சிய நின்னோடு யானே
போர்த்தொழில் தொடங்க நாணுவல் அதனன்"

என்பது பிறன்கட் டோன்றிய மூப்புப் பொருளாக இளிவரல் பிறந்தது.

"இமயமுந் துளக்கும் பண்பினை
துணையிலர் அளியர் பெண்டிரிஃ தெவனோ" (குறுந்-158)

என்பது தன்கட் டோன்றிய பிணிபற்றி இளிவரவு பிறந்தது; என்னை? மலையைத்துளச்கும் ஆற்றலையுடையாய்! காமப்பிணி கூர்ந்தோரை அலைப்பது நினக்குத் தகுவதன்றென இளிவந்து வாடைக்குக் கூறினமையின்.

"குணகடற் றிரையது பறைதபு நாரை
திண்தேர்ப் பொறையன் தொண்டி முன்துறை
அயிரை ஆரிரைக்கு அணவந் தாஅங்குச்
சேயள் அரியோள் படர்தி
நோயை நெஞ்சே நோய்ப்பா லோயே" (குறுந்-128)

என்பது நெஞ்சினை வேறு நிறீஇக் கூறினமையிற் பிறன்கண் தோன்றிய பிணியெனப்படும்.

இதனுட் "சேய ளரியோட் படர்தி" என்றமையின் இது பிறன்கட் டோன்றிய வருத்தமும் வந்ததாயிற்று.

"யான்ற னறிவல் தானறி யலனே" (குறு-337)

என்பது தன்கட் டோன்றிய வருத்தம் பற்றி வந்த இளிவரல்; என்னை? அது பின்னின்ற தலைமகன் கூறியதாகலின்.

"ஒன்று, இரப்பான்போ லிளிவந்துஞ் சொல்லும்" (கலி-47)

என்பது பிறன்கட் டோன்றிய வருத்தம்பற்றி வந்தது; என்னை? அவன் இவ்வாறொழுகுதல் நமக்கு இளிவரலாமென்னுங் குறிப்பினற் கூறிக் குறை நயப்பித்தமையின்.

"வலியரென வழிமொழியலன்
மெலியரென மீக்கூறலன்" (புறம்-239)

எனத் தன்கண்ணும் பிறன்கண்ணுந் தோன்றிய மென்மை பற்றி இளிவரல் பிறந்தன; என்னை? மெலியார் இளிவந்தன கூறுவராயினும் வலியார் மீக்கூறுவராயினும் இவன் அவை செய்யானென்றலின்.

"தானல் விலங்கால் தனித்தால் பிறன்வரைத்தால்
யானை யெறிதல் இளிவரவால்—யானை
ஒருகை யுடையது எறிவலோ யானும்
இருகை சுமந்துவாழ் வேன்".

என்பது வீரம்பற்றி இளிவரல் பிறந்தது: இது தன் கண்ணும் பிறன்கண்ணுந் தோன்றுமையின் இலேசினுற் கொண்டா மென்பது.

(வி-ரை)

தொடித்தலை - பூண்கட்டிய தலை. இரும்இடை மிடைந்த சிலசொல் — இருமல் இடை இடையே தோன்றவரும் சில சொற்கள் இளமைக் காலத்துச் சிறுபெண்கள் சூழ நெடுநீர் குட்டத்துத்துடும் எனப் பாய்ந்தது இக்காலத்து செய்ய வியலாமை பற்றித் தன்னை இழித்துக் கூறியதாம்.

மாயப்பொய்மொழி — வஞ்சனையான பொய்மொழி சாயினை — பரத்தையரொடு சார்ந்து. தலைவி தன் முதுமை பற்றி என்ன வேண்டாமெனத் தலைவனிடம் கூறலின் தன்சண் தோன்றிய இழிவாயிற்று.

துளக்கும் — அசைக்கும்

பறைதபு — பறத்தற்குரிய வலிமை கெட்ட. அணவந்தாஅங்கு — விரும்பினுற்போல.

தலைவி வருத்துகின்றமையை யான் அறிவேன் அதனை அவளறிந்திலள் என்றலின் தன்கண் தோன்றிய வருத்தமாயிற்று. வழிமொழியலன் — வழிபாடு கூறியறியான். மீக்கூறலன் — மிகுத்துச் சொல்லியு மறியான்.

தானுல் — தன்னுடைய படைக்கலம் கொண்டோ. பிறன் வரைத்தால் — பிறர்துணை கொண்டோ.

பிணி உடம்பு தூயதன்று என இழித்தலும் ஆம். வருத்தம் — மென்மை; நல்குரவு எனப்பொருள் காண்பர் இளம்பூரணர். (6)

மருட்கை

**255. புதுமை பெருமை சிறுமை ஆக்கமொடு**
**மதிமை சாலா மருட்கை நான்கே.**

இது, வியப்புணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) புதிதாகக் கண்டனவுங், கழியப் பெரியனவாயினவும், இறப்பச் சிறியனவும், ஒன்று ஒன்றாய்த் திரிந்தனவுமென நான்கும்பற்றி வியப்புத் தோன்றும் (எ று.)

'மதிமை சாலா மருட்கை' யென்பது அறிவினை உலக வழக்கினுள் நின்றவாறு நில்லாமல் திரித்து வேறுபடுத்து வருவதென்றவாறு. இவையுமெல்லாம் மேலனபோலத் தன்கட் டோன்றினவும் பிறன்கட் டோன்றினவுமென எட்டாதலுடைய

"மலர்தார் மார்ப னின்றோற் கண்டோர்
பலர்தில் வாழி தோழி யவருள்
ஆரிருட் கங்குல் அணையொடு பொருந்தி
ஓரியா னாகுவ தெவன்கொல்
நீர்வார் கண்ணொடு நெகிழ்தோ ளேனே" (அகம்-82)

என்பது தன்கட் டோன்றிய புதுமைபற்றிய வியப்புப் பிறந்தது; என்னை? தன்கருத்து வெளிப்படாது தன்மெய்க்கட் டோன்றிய புதுமையைத் தலைவி வியந்தாள்போலத் தோழிக்கு அறத்தொடு நின்றமையின்.

"மந்தி நல்லவை மருள்வன நோக்கக்
கழைவளர் அடுக்கத் தியலி யாடுமயில்
விழவுக்கள விறலியில் தோன்றும் நாடன்" (அகம்-82)

என்றவழிப் பண்டு ஒருகாலுங் கண்டறியாதபடி ஆடிற்று மயிலென்றமையிற் பிறபொருட்கண் தோன்றிய புதுமையாயிற்று.

"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரளவு இன்றே சாரல்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே" (குறுந்-3)

என்பது பெருமைவியப்பு; என்னை? கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு பெருந்தேன் இழைத்தாற்போல வழிமுறை முறையாற் பெருகற்பாலதாகிய நட்பு மற்றவனைக் கண்ணுற்ற ஞான்றே நிலத்தினதகலம் போலவும், விசும்பினுயர்ச்சிபோலவும், கடலினாழம்போலவும் ஒருகாலே பெருகிற்றென்றமையின்.

இது தன்கட் டோன்றிய பெருமை வியப்பு. இது தலைமகன் கருத்தினுள் நட்பிற்குக் கொள்ளுங்காற் பிறன்கட் டோன்றிய பெருமை வியப்பாமென்பது கொள்க.

"மைம்மலர் ஓதி மணிநகைப் பேதைதன்
கொம்மை வரிமுலை யேந்தினும்—அம்ம
கடையிற் சிறந்த கருநெடுங்கட் பேதை
இடையிற் சிறியதொன் றில்"

என்பது பிறன்கட் டோன்றிய சிறுமை வியப்பு, தன்கட் டோன்றினவுங் கண்டுகொள்க.

"எருமை யன்ன கருங்கல் விடைதோறு
ஆனின் பரக்கும் யானைய முன்பில்
கானக நாடனை நீயோ பெரும". (புறம்-5)

என்பது நரிவெரூஉத்தலையார் தம்முடம்பு பெற்று வியந்து கூறிய பாட்டாகலின் இது தன்கட் டோன்றிய ஆக்கம் பற்றி வியப்புப் பிறந்ததாயிற்று.

"உறக்குந் துணையதோர் ஆலம்வித் தீண்டி
இறப்ப நிழற்பயந் தாஅங்கு." (நாலடி-28)

என்பது பிறபொருளாக்கம் பற்றிய வியப்பு.

இனி, மதிமைசாலா மருட்கையானே சிறுமைப்பொருள் பெருந்தொழில் செய்தலும் பெருமைப்பொருள் சிறு தொழில் செய்தலும் வியப்பாமெனக் கொள்க. "கிண்கிணி களைந்தகால் ஒண்கழல் தொட்டு" (புறம்-எஎ.) என்னும் பாட்டுச் சிறியோர் பெருந தொழிலைச் செய்தது.

ஒன்று, இரப்பன்போல் இளிவந்துஞ் சொல்லும் உலகம்
புரப்பான் போல்வதோர் மதுகையு முடையன்
வல்லாரை வழிபட் டொன்றறிந் தான்போல்
நல்லார் கட்டோன்றும் அடக்கமு முடையன்
இல்லோர் புன்கண் ஈகையின் தணிக்க
வல்லான் போல்வதோர் வண்மையு முடையன்
அன்னான் ஒருவன் தன் ஆண்டகை விட்டென்னைச்
சொல்லுஞ்சொற் கேட்டீ சுடரிழாய்" (கலி-47)

என்பது பெரியோன் சிறு தொழில் கூறலின் வியப்பாயிற்று.

புதுமையை ஆக்கத்துளடக்கி முதுமை யென்பது பாடமாக வும் உரைப்ப. அன்னதோர் வழக்கின்மையானும், புதுமை ஒன்று ஒன்றுய்த் திரியுமெனப்பட்டு அவ்வாக்கத்துள் அடங்காமை யானும் அஃதமையா தென்பது.

இங்ஙனம் இவை நான்கு சூத்திரப் பொருளும் நானன்கு பதினுருகியும் முப்பத்திரண்டாகியும் விரியுமாகலின் இவற்றை ஓரினமாக்கி முதற்சூத்திரத்து முன் வைத்தானென்பது. இனி வருஞ் சூத்திர நான்கினும் எண்ணப்படும் பொருள் ஒன்று இரண்டாகாமையின் அவை பதினாறேயாமென்பது.

அஃதே யெனின் இத்துணையுங் கூறி வந்த முப்பத்திரண்டனை யும் இனிக் கூறும் பதினாறனையும் நோக்கி முதற் சூத்திரத்துள்,

"பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருளுங்
கண்ணிய புறனே நானான் கென்ப" (தொல், மெய்ப்-1)

என்றுனென்னுமோவெனின், என்னுமன்றே; பதினாறு பொரு ளும் மேற்கூறிய முப்பத்திரண்டுமென்று படாமையினென்பது; என்றூர்க்குத் தன்கட் டோன்றுதல் பிறன்கட் டோன்றுத லெனப் பகுத்துப் பொருளுரையாது மேலனவும் இனி வருகின் றனவும் நானான்கேயாகலாற் பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொரு' (249) ளென்றுனுமெனின், அங்ஙனங் கூறின் அவை "கண்ணிய புறனே நானான் கென்ப" (249) என்றும், நாலிரண்டா கும் பாலுமா ருண்டே' (தொல். மெய்ப் 2) என்றும் மடங்கக் கூறல் வேண்டாவாம்; வேண்டவே, இச்சூத்திரம் எட்டுவகை யாகியே செல்லுமென மறுக்க அல்ல தூஉம் இஃது உலகவழக் காதலிற் பண்ணைத் தோன்றிய பொருள் ஈண்டு ஆராயானென் பது. அன்றியும் இவற்றைப் பண்ணைத் தோன்றிய பொருளெ னின் ஒன்றொன்றுக்கிக் கூறுது கூத்தன் அரங்கினுள் இயற்றும் வகையானே சுவையுங் குறிப்புஞ் சத்துவமுமென வேறு வேறு செய்வான் ஆசிரியனென்பது.

(வி—ரை)

கழிய — மிகவும். இறப்ப - மிகவும்

ஆரிருள் — அரிய இருள். அணை - படுக்கை. தலைவனைக் கண் டோர் பலருள் யான் மட்டும் நீர்வார் கண்ணொடு நெகிழக் காரணமென்ன எனத் தலைவி தன்னை வியந்தாற் போலக் கூறலின் தன்கண் தோன்றிய புதுமை பற்றிய வியப்பாயிற்று.

மருள்வன— மருண்டு. கழை – மூங்கில். விழவுக்கள விறலியின் – விழவுக் களத்தில் நடிக்கின்ற விறலியைப் போல.

கருங்கோல் – கரிய தண்டு. ஓக்கம் – உயர்ச்சி. தலைவி தலைவனொடு உற்ற நட்பை வியத்தலின் தன்கண் தோன்றிய பெருமை பற்றிய வியப்பாயிற்று. தலைவன் தன்னோடு உற்ற நட்பின் பெருமையைத் தலைவி வியந்ததாயின் பிறன்கண் தோன்றிய பெருமை பற்றிய வியப்பாகும்.

மைமலர் – குவளை மலர். கொம்மை - திரண்ட. கடையில் –கடைவிழியினும். இடையினும் சிறிய தொன்று இல் எனத் தலைவியின் இடையைத் தலைவன் வியத்தலின் பிறன்கண் தோன்றிய சிறுமை பற்றிய வியப்பாயிற்று.

கருங்கல் இடைதோறு – கரிய கற்கள் பொருந்திய இடந்தொறும். ஆனின் பறக்கும் யானைய – பெற்றம் போல நிறைந்து கிடக்கும் யானைகளை உடையவாய். முன்பின் – வலிமையுடைய, நரிவெரூஉத் தலையார் சேரமான் ஒள்வாள் கோப்பெருஞ்சேரல் இரும்பொறையைக் கண்டு தம் சாபம் நீங்கித் தமக்கியல்பான உடம்பைப் பெற்று வியந்து கூறியதாகலின் தன்கண் தோன்றிய ஆக்கமாயிற்று.

உறக்கும் துணையதோர் — கிள்ளியெடுக்கும் அளவினையுடையதொரு. ஆலமரத்தின் சிறிய வித்து பல் விழுதுகளை ஈன்று மிகு நிழல் தந்தாற்போல என்றலின் பிறபொருள் பற்றிய ஆக்கமாயிற்று.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் மிகவும் இளமைக் காலத்தேயே தன்காலில் சதங்கை நீக்கி வீரக்கழல் அணிந்து பொருது வென்றனன்.

அன்னன் என்பதால் தலைவனது பெருமையும், 'ஆண்தகை விட்டென்னை சொல்லுஞ்சொல் கேட்டீ'' என்பதால் அவன் செய்ய இருக்கும் சிறுதொழிலும் கூறியதாயிற்று.

முதுமை எனப் பாடம் ஓதுவார் யார் எனத் தெரிந்திலது.

பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருளும் பதினாறாகவும் அடங்கும், எட்டாகவும் அடங்கும். இங்குக் கூறப்படும் முப்பத்தி

ரண்டு பொருளும்அவ்வளவில் குறையாது முப்பத்திரண்டாகவே அமையும். அன்றியும் இப் பொருண்மை உலக வழக்கில் வருவதாம். அங்குக் கூறப்பட்டிருக்கும் பொருண்மை நாடக வியலுக்கு உரியதாய் வரும். எனவே ஈண்டு முப்பத்திரண்டாகக் கூறப்படும் பொருண்மை ஆண்டுக்கூறிய முப்பத்திரண்டு பொருண்மையினும் வேறும்.

'புதுமை ஆவது-யாதொன்றாலும் எவ்விடத்தினும் எக்காலத் தினும் தோன்றாததோர் பொருள் தோன்றியவழி வியத்தல் அது கந்தருவர் அந்தரம் போவது கண்டு வியத்தல் போல்வன.

பெருமை என்பது-பண்டு கண்ட பொருள்கள் போலாத பொருள்கள் அவ்வளவிற் பெருத்தல் கண்டு வியத்தல். அவை மலையும் யானையும் செல்வமும் முன் கண்ட அளவின் மிக்கன கண்டவழி வியப்பு வரும்.

சிறுமை என்பது-மிகவும் நுண்ணியன கண்டு வியத்தல். அது கடுகின்கட் பலதுளை போல்வன' என விளக்கங் காண்பர் இளம் பூரணர். (7)

அச்சம்

**256. அணங்கே விலங்கே கள்வர்தம் இறையெனப்
பிணங்கல் சாலா அச்சம் நான்கே.**

இது, முறையானே அச்சமுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) தெய்வமும் விலங்கும் கள்வரும் தமக்கு இறைவ ராயினருமென நான்கு பகுதியான் அச்சம் பிறக்கும் (எ-று)

அணங்கென்பன பேயும் பூதமும் பாம்பும் ஈறாகிய பதினெண் கணனும் நிரயப்பாலரும் பிறரும் அணங்குதற்றொழிலராகிய சவந்தின் பெண்டிர் முதலாயினரும் உருமிசைத் தொடக்கத் தனவு மெனப்படும். விலங்கென்பன அரிமா முதலாகிய அஞ்சு தக்கன. கள்வரென்பார் தீத்தொழில் புரிவார். இறையெனப் படுவார் தந்தையரும் ஆசிரியரும் அரசரும் முதலாயினர்.

பிணங்கல்சாலா அச்சமென்றதனுன் முன்னையபோல இவை தன்கட் டோன்றலும் பிறன்கட்டோன்றலு மென்னுந்துடுமாற்ற மின்றிப் பிறிது பொருள் பற்றியே வருமென்பது.

உ-ம். "யானை தாக்கினு மரவுமேற் செலினும்
நீனிற விசும்பின் வல்லேறு சிலைப்பினுஞ்
சூன்மகள் மாறா மறம்பூண் வாழ்க்கை"
(பத்துப். பெரும்பாண்-134, 136)

என்பதனுள் அணங்கும் விலங்கும் பொருளாக அச்சம் பிறத்தல் இயல்பென்பது கூறியவாறாயிற்று.

"ஒரூஉநீயெங் கூந்தல் கொள்ளல்யா நின்னை
வெரூஉதுங் காணுங் கடை." (கலி-87)

இது கள்வர் பொருளாக அச்சம் பிறந்தது; என்னை? அவனைக் கள்வர்பாற் சார்த்தி உரைத்தமையின்.

"எருத்துமே னோக்குறின் வாழலே மென்னும்
கருத்திற்கை கூப்பிப் பழகி—யெருத்திறைஞ்சிக்
கால்வண்ண மல்லாற் கடுமான்தேர்க் கோதையை
மேல்வண்ணங் கண்டறியா வேந்து". (இ.வி.ப-124)

இஃது, இறைபொருளாக அச்சம் பிறந்தது.

பிணங்காத அச்சமென்றது 'சாலா அச்ச' மென்ற மிகை யான் இந்நான்குமேயன்றி ஊடன் முதலியனவும் அச்சத்திற்குப் பொருளாமென்று கொள்க.

"செய்நின்று செய்யாத சொல்லிச் சினவனின்
ஆணை கடக்கிற்பார் யார்" (கலி-81)

என்பது, புலவி பொருளாக அச்சம் பிறந்தது.

"அணிகிளர் சாந்தி னம்பட் டிமைப்பக்
கொடுங்குழை மகளிரி னொடுங்கிய விருக்கை"
(அகம்-235)

எனவும்,

"அச்சா றாக வுணரிய வருபவன்
பொய்ச்சூ ளஞ்சிப் புலவே னாகுவல்" (கலி-75)

எனவும் வருவனவும் அவை. பிறவும் அன்ன.

(வி—ரை)

நிரைய பாலர்-காலன் முதலியோர். உரும் இசை—இடியின் ஓசை. அரிமா—சிங்கம்

வல்லேறு—வலிய இடி. சூல் மகள் மாறு—தன் வயிற்றிடத் துற்ற கரு மாறுத. இவற்றுள் இடி அணங்கும் ஏனையவிலங்குமாம்.

ஒரூஉநீ—என்னிடத்தினின்றும் நீங்குவாயாக. வெரூஉதும்——அஞ்சுதும். தலைவனைக் கள்வனாகக் கூறியதாம்.

எருத்து மேல் நோக்குறின்—கழுத்தை எடுத்து மேல் நோக்கின். கோதை—சேரன். சேரனை மேல் நோக்கிப் பார்க்கினும் தனக்கு ஏதம் வருமென அஞ்சித் தலை இறைஞ்சியே காண்பர் என்பதாம்.

நின் ஆணை கடைக்கிற்பார் யார்? எனத் தலைவன் கூறலின் இது புலவி பொருளாக அச்சமாயிற்று.

மகளிரைப் போல தலைவன் ஒடுங்கியிருத்தலின் இதுவும் புலவி பொருளாய அச்சமாயிற்று. அச்சு ஆறுக—அச்சமே வழியாக. உணரிய வருபவன்—ஊடல் உணர்த்த வருபவன். இது தலைவி கூற்றும். (8)

பெருமிதம்

**257 கல்வி தறுகண் [1]இசைமை கொடையெனச்**
**சொல்லப் பட்ட பெருமிதம் நான்கே.**

இஃது ஆறும் எண்ணு முறைமைக்கண் நின்ற வீரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ.-ள்) கல்வியுந் தறுகண்மையும் புகழுங் கொடையு மென்னும் நான்கும் பற்றி வீரம்பிறக்கும் (எ-று).

இச்சூத்திரத்துள் வீரத்தினைப் பெருமிதமென்றெண்ணி னான்; என்னை? எல்லாரொடும் ஒப்பநில்லாது பேரெல்லையாக் நிற்றல் பெருமிதமெனப்படும் என்றற்கென்பது.

கல்வியென்பது தவ முதலாகிய விச்சை. தறுகணென்பது அஞ்சுதக்கன கண்ட இடத்து அஞ்சாமை. இசைமை யென்பது

1. புகழ்மை எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

இன்பமும் பொருளும் இறப்பப் பயப்பினும் பழியொடுவருவன செய்யாமை. கொடை யென்பது உயிரும் உடம்பும் உறுப்பும் முதலாகிய எல்லாப் பொருளுங் கொடுத்தல்.

(உ-ம்). "வல்லார்முன் சொல்வல்லேன் என்னைப் பிறர்முன்னர்க்
கல்லாமை காட்டி யவள்" (கலி-141)

என்பது கல்விபற்றிய பெருமிதம்; என்னை? என்னையுங் கல்லாமை காட்டினளெனத் தன் பெருமிதங் கூறினமையின்.

"அடன்மாமேல் ஆற்றுவேன் என்னை மடன்மாமேன்
மன்றம் படர்வித் தவள்" (கலி-141)

என்பது தறுகண்.

"கழியாக் காதல ராயினுஞ் சான்றோர்
பழியொடு வருஉம் இன்பம் வெஃகார்" (அகம்-112)

என்பது புகழ்.

"வையம், புரவூக்கும் உள்ளத்தேன் என்னை யிரவூக்கும்
இன்னா இடும்பை செய்தாள்" (கலி-141)

என்பது கொடை.

"தன்னகம் புக்க குறுநடைப் புறவின்
தபுதி யஞ்சிச் சீரை புக்க
வரையா ஈகை உரவோன் மருக" (புறம்-43)

என்பதும் அது.

'சொல்லப்பட்ட பெருமித' மென்றதனாற் காமம்பற்றியும் பெருமிதம் பிறக்குமென்று கொள்க.

"பல்லிருங் கூந்தன் மகளிர்
ஒல்லா முயக்கிடைக் குழைகவென் தாரே" (புறம்-73)

என்பது காமம்பற்றிய பெருமிதம். பிறவும் வருவன உளவேற் கொள்க.

இது தன்கட் டோன்றிய பொருள்பற்றி வரும். என்னை? கல்வியுந் தறுகண்மையும் இசைமையும் வேட்கையுங் கொடைத் தொழிலுந் தன் கண்ணவாகலின்.

(வி—ரை)

இறப்பப் பயப்பினும் - மிகுதியாகக் கிடைப்பதாயினும்,

வல்லார்—அறிஞர். வல்லார்முன் சொலல் வல்லேன் எனத் தலைவன் கூறுதலின் கல்வி பற்றிய பெருமிதமாயிற்று.

அடல்மா — போரின்கண் வெற்றி பெறும் குதிரை. ஆற்றுவேன்—போர் செய்வேன். இவ்வாறு கூறலின் தறுகண்மை பற்றியபெருமிதமாயிற்று.

கழியா – நீங்காத பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார். எனவே புகழொடு வரும் இன்பத்தை விரும்புவர் என்பது பெறப்படுதலின் புகழ் பற்றி வந்த பெருமிதமாயிற்று.

புரவு ஊக்கும் – பாதுகாத்தற்கு முயலும். இரவு ஊக்கும்— இரத்தற்கு முயலுமாறு. புரவு ஊக்கும் என்பதால் கொடை பற்றிய பெருமிதமாயிற்று.

தன்னகம் புக்க – தன்னிடத்து வந்த. புறவின் – புறாவின், தபுதி - அழிவு. சீரை புக்க - துலாக்கோல் தட்டில் சென்ற. உரவோன் - சிபி. மருக – மரபில் வந்தவனே. வரையா ஈகை உரவோன் என்றலின் கொடை பற்றிய பெருமிதமாயிற்று.

மகளிர் – பொது மகளிர். ஒல்லா முயக்கு – பொருந்தாத புணர்ச்சி. தார்-மாலை. என் தார் பொதுமகளிர் மார்பில் துவளு வதாகுக என்றது அங்ஙனம் துவளாமை குறித்தது. என்னே? இது வஞ்சினமாதலின் எனவே தன் வாழ்க்கைத் துணையோடு கூடி மகிழும் இன்பமே இன்பம் எனக் கருதுதலின் இது காமம் பற்றிய பெருமிதமாயிற்று.

வேட்கையும் என்பது நூற்பாவில் கூறப்படவில்லை சொல்லப்பட்ட என்றமிகையினுல் உரையாசிரியர் காமம் என்பதைக் கொள்ளுதலின் அவ்வேட்கை காமம் பற்றியதாகக் கொள்ளலாம். அங்ஙனம் கொள்ளினும் அதனை இறுதிக்கண் வைத்தலே தக்கதாம். (9)

வெகுளி

**258. உறுப்பறை குடிகோ ளலைகொலை [1]யென்ற**
**[2]வெறுப்பின் வந்த வெகுளி நான்கே,**

*இஃது ஏழாம் எண்ணு முறைமைக்கண் நின்ற வெகுளி உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்) உறுப்பறையென்பது, கைகுறைத்தலுங் கண் குறைத்தலு முதலாயின. குடிகோளென்பது, தாரமுஞ் சுற்றமுங் குடிப்பிறப்பும் முதலாயவற்றுக்கட் கேடுசூழ்தல். அலையென்பது, கோல்கொண்டலைத்தல் முதலாயின. கொலையென்பது அறிவும் புகழும் முதலாயினவற்றைக் கொன்றுரைத்தல். இவை நான்கும் பொருளாக வெகுளி பிறக்கும் (எ-று.)

வெறுப்பின் என்றதனான் ஊடற்கண் தோன்றும் வெகுளி முதலாயினவுங் கொள்க.

"முறஞ்செவி மறைப்பாய்பு முரண்செய்த புலிசெற்று" (கலி-௨2)

என்பது உறுப்பறையான்வந்த வெகுளி.

"நின்மகன், படையழிந்து மாறின னென்றுபலர் கூற,
மண்டமர்க் குடைந்தன ளாயின் உண்டவென்
முலையறுத் திடுவென் யானெனச் சினைஇ". (புறம்-278)

என்பது குடிகோள்பற்றி வந்தவெகுளி; என்னை? தன்மகன் மறக்குடிக்குக் கேடுசூழ்ந்தானென்று சினங்கொண்டாளாகலின்.

"நெருந லெல்லைநீ யெறிந்தோன் தம்பி
யகற்பெய் குன்றியிற் சுழலுங் கண்ணன்" (புறம்-300)

என்பதும் அது.

"வரிவயம் பொருத வயக்களிறு போல
இன்னும் மாறாது சினனே" (புறம்-100)

என்பதனுள், அலைபற்றிச் சினம்பிறந்தது; என்னை? புலியான் அலைக்கப்பட்ட யானை பொருது போந்தும் அவ்வலைப்புண்டலை

---

1. என்றன எனவும்.
2. வெறுப்ப எனவும் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

நினைந்து சினங்கொள்ளாநின்ற தென்றமையின்.

"உறுதுப்பு அஞ்சாது உடல்சினஞ் செருக்கிச்
சிறுசொல் சொல்லிய சினங்கெழு வேந்தரை"
(புறம்-72)

என்பது கொலை பொருளாக வெகுளிச்சுவை பிறந்தது; என்னை? சிறுசொற் சொல்லுதலென்பது புகழ்கொன்றுரைத்தலாகலின்.

"செய்தவறு இல்வழி யாங்குச் சினவுவாய்" (கலி-87)

என்பது ஊடற்கண் தலைமகள் வெகுட்சி கூறியது. பிறவுமன்ன.

இன்னும் அவ்விலேசானே,

"நெருப்புச் சினந்தணிந்த நிணந்தயங்கு கொழுங்குறை"
(புறம்-125)

என்றாற்போலச் சினமில்லதனை உள்ளது போலக் கூறுவனவுங் கொள்ளாமோவெனின், உணர்வுடையனவற்றுக் கல்லது சுவை தோன்றாமையின் வெகுளியென்று ஈண்டுக் கூறப்படா வென்பது. இது பிறன்கண் தோன்றிய பொருள்பற்றி வரும்.

(வி-ரை)

தாரம்-மனைவி. முறஞ்செவி - முறம் போன்ற செவி. மறைப்பாய்பு-அச்செவிமறைப்பிடமாக வந்துபாய்ந்து. செற்று-சினந்து. எனவே புலி காதின் மறைவாக வந்து பாய்ந்து தன்னுறுப்பிற்கு ஊறு செய்தலின் உறுப்பறை பற்றிய வெகுளியாயிற்று.

படையழிந்து மாறினன் - படைக்குத் தோற்றுப்புறங் கொடுத்தான். உடைந்தனனாயின் - புறக்கிட்டானாயின். புறக்கிடுதல் குடிப் பழியாதலின் குடிகோள் பற்றிய வெகுளியாயிற்று.

நெருநல் எல்லை - நேற்றைய பகலில். அகல் பெய் குன்றியில்-அகலிடத்துப் பெய்த குன்றி மணியைப் போல. இளவவின் சினத்திற்குக் குடிகோள் காரணமாம்.

வரிவயம் - வரிகளையுடைய புலி.

உறுதுப்பு-மிகுந்த வலிமை. உடல்சினம் - மாறுபடும் சினம். செருக்கி - பெருகி. சிறு சொல் - தன்னை இகழும் சொல்.

செய்தவறு இல்வழி - யான் செய்த தவறு இல்லாதவிடத்து. யாங்குச் சினவுவாய் - எவ்வாறு வெகுளுவாய்.

ஊடற்கண்ணும் வெகுளி தோற்றுமால் எனின், அஃது இன்பத்திற்குக் காரணமாதலால் தலைமகள் புருவ நெரிவும் வாய்த்துடிப்பும் கண்டதலைமகற்கு வெகுட்சி பிறவாது உவகை பிறக்கும். தலைமகன் வெகுளுவனாயின் அதன் பாற்படும் என்பர் இளம்பூரணர். எனவே ஊடற்கண் வரும் வெகுளி வெகுளி யன்று என்பது இவர் கருத்தாம்.

நெருப்புச் சினந்தணிந்த - எரியாது பூத்துக் கிடக்கும் நெருப்புப் போன்ற (இறைச்சி). நெருப்பு உணர்வற்றதாதலின் அதற்கு வெகுளி வருமாறு இல்லை. எனவே இது வெகுளிச் சுவையாகா என்பது கருத்து.

'உறுப்பறையாவது — உறுப்புக்களாயவற்றை அறுத்தல்
குடிகோளாவது — கீழ்வாழ்வாரை நலிதல்
அலை என்பது — வைதலும் புடைத்தலும்
கொலை என்பது — கொல்லுதற் கொருப்படுதல்' என
விளக்கம் காண்பர் இளம்பூரணர். (10)

உவகை

259. செல்வம் புலனே புணர்வு [1]விளையாட்டென்று
அல்லல் நீத்த உவகை நான்கே.

இஃது ஈற்றுக்கண்ணின்ற உவகை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) செல்வமென்பது, நுகர்ச்சி. புலனென்பது, கல்விப் பயனாகிய அறிவுடைமை. புணர்வென்பது காமப்புணர்ச்சி முதலாயின. விளையாட்டென்பது, யாறுங் குளனுங் காவுமாடிப் பதியிகந்து வருதல்' (191) முதலாயின. இவை நான்கும் பொருளாக உவகைச்சுவை தோன்றும் (எ-று)

உவகையெனினும் மகிழ்ச்சியெனினும் ஒக்கும்.

"உரனுடை யுள்ளத்தை செய்பொருண் முற்றிய
வளமையா னாகும் பொருளிது வென்பாய்" (கலி-12)

1. விளையாட்டென எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

என்புழி வளமையானுகும் மனமகிழ்ச்சி இதுவெனக் கூறினமை யின் இது செல்வம் பொருளாகப் பிறந்த உவகையாம்.

"நன்கலம் பெற்ற வுவகையர்" என்பதும் அது.

"பெண்டிர் நலம்வௌவித் தண்சாரல் தாதுண்ணும்
வண்டின் துறப்பான் மலை" (கலி-40)

என்பது அறிவுபொருளாக உவகை பிறந்தது; என்னை? முகைப் பதம்பார்க்கும் வண்டுபோலத் தலைவியரை நகைப்பதம்பார்க் கும் அறிவுடைமை காமத்திற்கு ஏதுவாமாகலின்.

"இகலில ரெஃகுடையார் தம்முட் குழீஇ
நகலி னினிதாயிற் காண்பாம்" (நாலடி-137)

என்பதும் அது. "இலமல ரன்ன வஞ்செந் நாவின்" என்னும் மணிமிடைபவளத்துள்,

"தொடிக்கண் வடுக்கொள முயங்கினள்
வடிப்புறு நரம்பில் தீவிய மொழிந்தே" (அகம்-142)

என்பது புணர்ச்சிபற்றிய உவகை; என்னை? அவள் இவ்வாறு முயங்கினமையான், "உவவினி வாழியென் னெஞ்சே" (அகம்-142) என்றமையின்.

"துயிலின்றி யாநீந்தத் தொழுவை அம் புனலாடி
மயிலியலார் மருவுண்டு மறைந்தமைகுவான்மன்னே"
(கலி-30)

என்புழி ஆருடி விளையாடி மயிலியலார் மருவுண்டு மறைந்தமைகு வான்மன் என்றமையின் இது விளையாட்டுப் பொருளாக உவகை பிறந்தது.

'அல்லல் நீத்த வுவகை' யென்றதனாற் பிறர் துன்பங்கண்டு வரும் உவகையும் உவகையெனப்படா தென்பது.

இதுவுந் தன்கட் டோன்றிய பொருள்பற்றி வருமென்றார்க்குப் பிறன்கட் டோன்றிய இன்பம் பற்றியும் உவகை பிறக்கும், அஃதெப்பாற் படுமெனின், அதுவும் அல்லல் நீத்த வுவகை யென்றதனான் உவகை யெனப்படும்.

இனித் தன்கட் டோன்றிய பெருமிதமும் உவகையும் முற் கூறுது பிறன்கட் டோன்றிய அச்சம் முற்கூறி இதனை ஈற்றுக்

கண் வைத்தமையான் எடுத்தோதிய நான்கும் போலாது, இது பிறன்கட் டோன்றிய இன்பம் பொருளாகவும் வருமென்பது கொள்க.

(வீ-ரை)

செய்பொருள் முற்றிய வளமையானும் பொருளிது என் பாய்-ஈட்டும் பொருளை, ஈட்டிய செல்வத்தால் உண்டாகும் பொருள் தான் இன்பம் என்று கூறுவாய். இவ்வாறு கூறலின் இது செல்வம் பற்றிய உவகையாம்.

நன்கலம் - நல்ல அணிகலன்கள். இதனால் பெற்ற உவகை எனவே இதுவும் செல்வம் பற்றிய உவகையாயிற்று.

தாது உண்ணும் வண்டின் - தாதை உண்ட வண்டு அப் பூவைத் தொடக்குமாறு போல. முகைப்பதம் – மலரும் பருவம். நகைப்பதம் – தன்னொடு நகையாடி இன்பம் உறும் பருவம்.

எஃகுடையார் – கூரிய அறிவுடையார். இத்தகையா ரொடு கூடி இன்ப முறுதலைவிடத் தேவருலகம் இனிதாயின் காண்பாம் என்றலின் அறிவு பொருளாக வந்த உவகை யாயிற்று.

வடிப்புறு நரம்பின் - வடித்த நரம்பையுடைய யாழைப் போல. தீவிய – இனிய

யாம் நீந்த – யாமமாகிய கடலை நீந்த.

புலன் - கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம் புலன்களால் நுகரும் நுகர்ச்சி என உரை காண்பர் இளம் பூரணர். இவ்வாறு அவர் கூறுதற்குச் செயிற்றியமே காரண மாகும். எனினும் இதற்குப் பேராசிரியர் கூறும் உரையே பொருத்தமுடைத்தாம்.

'தாமின்புறுவது உலகின்புறக்கண்டு காமுறுவர் கற்றறிந் தார்' எனக் கல்வியறிவான் வரும் இன்பத்தைச் சிறப்பாகத் திருவள்ளுவனார் எடுத்துக் கூறியிருப்பதும் காண்க. (11)

வரைந்தெய்தும் கூட்டத்திற்கு நிமித்தமாகும் மெய்ப்பாடுகள்

**271. முட்டுவயிற் கழறல் முனிவுமெய்ந் நிறுத்தல்**
**அச்சத்தின் அகறல் அவன்புணர்வு மறுத்தல்**
**தூதுமுனி வின்மை துஞ்சிச் சேர்தல்**
**காதல் கைம்மிகல் கட்டுரை யின்மையென்று**
**ஆயிரு நான்கே அழிவில் கூட்டம்.**

இது, வரைந்தெய்துங் கூட்டத்திற்கு ஏதுவாகிய மெய்ப்பாடு இவை எட்டுமென்ப துணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) முட்டுவயிற் கழறல்—தலைக்கூட்டத்திற்கு முட்டுப்பா டாகியவழிக் கழறியுரைத்தலும்: அது,

"நொச்சி வேலித் தித்தன் உறுறந்தைக்
கவ்முதிர் புறங்காட் டன்ன
பன்முட் டின்றால் தோழிநங் களவே" (அகம்-122)

என்பது; இது, தலைமகன் கேட்பக் கழறியுரைத்தது.

முனிவு மெய்ந்நிறுத்தல் — தலைமகளுள்ளத்து வெறுப்பு வெளிப்பட நிற்கும் நிலைமையும்:
அஃது,

"இன்னுயிர் கழிவ தாயினும் நின்மகள்
ஆய்மலர் உண்கண் பசலை
காம நோயெனச் செப்பா தீமே" (அகம்-52)

என்புழி, வாழ்க்கை முனிந்து தலைமகள் சொல்லியது.

அச்சத்தினகறல்—தலைமகன்கண் வரும் ஏதமஞ்சி அவனை நீங்குங் குறிப்பும்:

"மன்று பாடவிந்து ......மயங்கி
இன்ன மாகவும் நன்னர் நெஞ்சம்
என்னொடும் நின்னொடுஞ் சூழாது கைம்மிக்கு
இறும்புபட்டு இருளிய விட்டருஞ் சிலம்பிற்
குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடிக்
கான நாடன் வரூஉம் யானைக்
கயிற்றுப் புறத்தன்ன கன்மிசைச் சிறுநெறி
மாரி வானந் தலைஇ நீர்வார்பு

இட்டருங் கண்ண படுகுழி இயவின்
இருளிடை மிதிப்புழி நோக்கியவர்
தளரடி தாங்கிய சென்றது இன்றே" (அகம்-128)

என்னும் பாட்டினை முழுதுங் கொள்க; அதன் கருத்தாவது நாம் அவர் இருளிடை வருதல் ஏதமஞ்சி அகன்று அவலித்திருப்பவும் என்னையும் நின்னையுங் கேளாது என்னெஞ்சு போவானேன் என்றவாறாயிற்று.

அவன் புணர்வுமறுத்தல்—இரவுக்குறியும் பகற்குறியும் விலக்குதற்கெழுந்த உள்ள நிகழ்ச்சியும்:

அது, தமரையஞ்சி மறுத்தமையானும், இது வரைவுகடாவுதற்குக் கருத்தாகலானுந் திளைப்புவினை மறுத்தலோடு (265) இது வேற்றுமையுடைத்து.

"நல்வரை நாட நீவரின்
மெல்லிய லோருந் தான்வா ழலளே" (அகம்-12)

என்பது, தலைமகள் குறிப்பினைத் தோழி கூறியதாகலான் அஃது அவன் புணர்வு மறுத்தலெனப்படும். இஃது 'ஒன்றித் தோன்றுந் தோழி மேன' (தொல். அகத்-39) என்னும் இலக்கணத்தால் தோழி குறிப்பாயினுந் தலைமகள் குறிப்பனவே படுமென்பது கொள்க.

தூது முனிவின்மை—புள்ளும் மேகமும் போல்வன கண்டு சொல்லுமின் அவர்க்கென்று தூது இரந்து பன்முறையானுஞ் சொல்லுதலும்: அவை,

"கானலுங் கழறாது கழியுங் கூறாது
தேனிமிர் நறுமலர்ப் புன்னையும் மொழியாது
ஒருநின் னல்லது பிறிதியாதும் இலனே
இருங்கழி மலர்ந்த கண்போல் நெய்தல்
கமழிதழ் நாற்றம் அமிழ்தென நசைஇத்
தண்டாது ஊதிய வண்டினங் களிசிறந்து
பறைஇய தளருந் துறைவனை நீயே
சொல்ல வேண்டுமால் அலவ" (அகம்-170)

என்புழிக், கூறப்பட்டனவெல்லாந் தூதாகலின், தூது விடுதலை வெறாத தன்மை கூறியதாம் இப்பாட்டென்பது.

"புல்வீ ழிற்றிக் கல்லிவர் வெள்வேர்
வரையிழி யருவியில் தோன்று நாடன்
தீதில் நெஞ்சத்துக் கிளவி நம்வயின்
வந்தன்று வாழி தோழி நாமும்
நெய்பெய் தீயின் எதிர்கொண்டு
தான்மணந்து அனையமென விடுகந் தூதே"

(குறுந் 106)

என்பதோவெனின், அது கற்பிற்கல்லது ஏலாது என்னை? களவினுள் நெய்பெய் தீயின்வந்து எதிர்கொளலாகாமையின்.

துஞ்சிச்சேர்தல் — மனையகத்துப் பொய்த்துயிலோடு மடிந்து வைகுதலும்:

துஞ்சுதலெனினும் மடிதலெனினும் ஒக்கும். வேண்டியவாறு கூட்டம் நிகழப் பெறுமையின் தலைமகனொடு புலந்தாள்போல மடிந்தொன்றுமாதலின் அதனைத் துஞ்சிச்சேர்தல் என்றானென் பது; எங்ஙனமோவெனின்,

" ... ... ...
என்மலைந் தனன்கொல் தானே தன்மலை
ஆர நாறு மார்பினன்
மாரி யானையின் வந்து நின்றனனே" (குறுந்-161)

என்புழி, என்னகாரியம் மேற்கொண்டு வந்தானென்றமையின் இது துஞ்சிச்சேர்தலாயிற்று. அல்லாக்கால் அங்ஙனஞ்சொல்லு தல் அன்பழிவு எனப்படும்.

"ஆமிழி யணிவரை" என்னுங் குறிஞ்சிக்கலியினுட்,

"பின்னீதல் வேண்டுநீ பிரிந்தோள் நட் பெனநீவிப்
பூங்கண் படுதலும் அஞ்சுவல் தாங்கிய
அருந்துய ரவலந் தூக்கின்
மருங்கறி வாரா மலையினும் பெரிதே" (கலி-48)

என்னுஞ் சுரிதகமும் அது.

காதல் கைம்மிகல் — காமம் கையிகந்தவழி நிகழும் உள்ள நிகழ்ச்சியும்; அது,

"உள்ளின் உள்ளம் வேமே உள்ளாது
இருப்பினெம் அளவைத் தன்றே வருந்தி

வான்றோய் வற்றே காமஞ்
சான்றோ ரல்லர்யா மரீஇ யோரே'' (குறுந்-102)

என வரும்.

கட்டுரையின்மை — உரைமறுத்திருத்தலும்;

அதனானே அதற்குத் தோழிகண்ணாயினுந் தலைமகன் கண்ணாயினும் உரைமுறை நிகழ்வதல்லது தலைமகள் உரையா ளென்பது பெற்றாம். அது,

''யான்தன் அறிவல் தானறி யலளே
யாங்கா குவள்கொல் தானே
பெருமுது செல்வர் ஒருமட மகளே'' (குறுந்- 337)

என்பது தலைமகள் கட்டுரையாதிருத்தலின் தலைமகன் தமரி னெய்தல் வேண்டினமையிற் கட்டுரையின்மையின் வரைவு கடாதலாயிற்றென்பது. ஒழிந்தனவும் அவ்வாறே வரைவு கடாதற்கு ஏற்றவாறு உரையிற்கொள்க.

என்று ஆயிரு நான்கே அழிவில்கூட்டம் — என்றெண்ணப் பட்ட மெய்ப்பாடெட்டும் பின் அழியாத கூட்டத்திற்கு ஏது வாம் என்றவாறு. அஃதாவது வரைந்தெய்துங் கூட்டமென உணர்க.

(வி-ரை)

வரைந்தெய்தும் கூட்டம்-திருமணம் செய்து கொண்டு பின்னர்க்கூடும் கூட்டம்.

நொச்சி வேலி-நொச்சியை வேலியாக உடைய. பல்முட்டின்று-பலதடைகளையுடையது. தடைகள்-தாய் துஞ்சாமை முதலியன.

காமநோய்-காமத்தால் வந்த நோய். சொல்லாதீமே-சொல்லாதீர். தலைமகன் கண் வரும் ஏதம்-தலைமகன் வரும் வழியிடத்து உளவாகும் தீங்கு.

கைம்மிக-கடந்து. இறும்புபட்டு-சிறுமலைகள் பொருந்திய. இட்டு அரும்-நுணுகியதும் வருதற்கு அரிதாயதும். நீர்வார்-நீர் நிரம்பிய, படுவுழி-யானையானது படும்குழி. இயவின்-வழியில், மெல்லியள்-தலைவி. ஒரும்-அசைநிலை. பறவைகிளரும்-வண்டினம் சிறகை உயர்த்திப் பறக்கும். அலவ-நண்டே.

புல் வீழ் இற்றி-புல்லிய விழுதையுடைய இற்றி மரம். தாம் மணந்தனையம் - (தலைவன்) மணந்த காலத்தை ஒத்த அன்பையுடையேம்.

மாரி யானையின் – மழையில் நனைந்த யானையைப்போல. உள்ளின்-தலைவனை நினைப்பின்.

யான்தன் அறிகுவன்-யான் அவனை வருத்தும் தன்மையன் என்பதை அறிவேன். தான் அறியலள்-அவ்வாறு அவள் என்னை வருத்துகின்றாளென்பதை அவள் அறியவில்லை.

மேற்கூறப்பட்ட மெய்ப்பாடுகளெல்லாம் மனனழிவு நிகழ்ந்தவழி நிகழ்வன என்றும், இவை மனனழியாத வழி நிகழ்வன என்றும், இவை நடுவணைந்திணைக்குரிய என்றும் கூறுவர் இளம்பூரணர். அழிவில் கூட்டம்-மனன் அழியாதவழி நிகழும் கூட்டம் என்பதிவர் கருத்து. (23)

வரைந்தெய்தியபின் தலைமகள் மனத்து நிகழும் மெய்ப்பாடுகள்

**272.** **தெய்வ மஞ்சல் புரையறந் தெளிதல்**
**இல்லது காய்தல் உள்ளது உவர்த்தல்**
**புணர்ந்துழி யுண்மை பொழுது [1]மறுப் பாக்கம்**
**அருள்மிக வுடைமை [2]அன்புதொக நிற்றல்**
**பிரிவாற் றாமை மறைந்தவை உரைத்தல்**
**புறஞ்சொல் மாணாக் கிளவியொடு தொகைஇச்**
**சிறந்த பத்துஞ் செப்பிய பொருளே.**

இஃது, அழிவில்கூட்டம் நிகழ்ந்த பின்னர் வருதற்குரிய மெய்ப்பாடு இவையென்கின்றது.

(இ-ள்.) இவ்வெண்ணப்பட்ட பதினொன்றும் மேற்கூறிய அழிவில் கூட்டமெனப்படும் (எ-று.)

---

1. மறுப்பாதல் எனவும்.

2. அன்புமிக நிற்றல்எனம்வு பாடங்கொள்வர் இளம்பூரணர்.

செப்பிய பொருளென்பது அழிவில் கூட்டமன்றே, அதற்கு முற்படும் மெய்ப்பாட்டினையும் அழிவில் கூட்டமென்றது போல அதற்குப் பிற்படும் மெய்ப்பாட்டினையும் அழிவில் கூட்டமென்பான் மேற்கூறிய அழிவில்கூட்டமே இவையுமெனக் கூறிய வாறு. எனவே, வரைந்தெய்திய பின்னர்த் தலைமகள் மனத்து நிகழ்வன இவையென்பது கூறினானும்.

தெய்வமஞ்சலென்பது, தலைமகற்குத் தொழுகுலமாகிய தெய்வமும் அவற்கு ஆசிரியராகிய தாபதரும் இன்னாரென்பது அவனான் உணர்த்தப்பட்டு உணர்ந்த தலைமகள் அத்தெய்வத்தினை யஞ்சி ஒழுகுமொழுக்கம் அவள்கட் டோன்றும்; அங்ஙனம் பிறந்த உள்ளநிகழ்ச்சியைத் தெய்வமஞ்சலென்று னென்பது. மற்றுத் தனக்குத் தெய்வந் தன் கணவனாதலான் அத்தெய்வத்தினைத் தலைமகளஞ்சுதல் எற்றுக்கெனின், அவனின் தான் வேறல்லளாக மந்திரவிதியிற் கூட்டினமையின் அவனான் அஞ்சப் படுந் தெய்வந் தனக்கும் அஞ்சப்படுமென்பது. அல்லதூஉந் தலைவற்கு ஏதம் வருமெனவும் அஞ்சுவளென்பது.

> ' சினைவாடச் சிறக்கும் நின் சினந்தணிந்து ஈகெனக்
> கனைகதிர்க் கனலியைக் காமுறல் இயைவதோ''
> (கலி–16)

என்பது, தெய்வத்திறம் நோக்கித் தெருமந்ததாம்; என்னை? *அவற்கிலவெனவும் அன்னவெனவுந் தாம் வேண்டிய குறை முடியாது பிரிந்தார்மாட்டு ஏதஞ்செய்யுங்கொல் என்றஞ்சி உரைத்தவாறு.

> ''அச்சா றுக வுணரிய வருபவன்
> பொய்ச்சூ ளஞ்சிப் புலவேன் ஆகுவல்'' (கலி–75)

என்பதுவும் அது. இது ''ஐயர் பாங்கினு மமரர்ச் சுட்டியுஞ் செய்பெருஞ் சிறப்பொடு சேர்தற்கண்''(தொல்-கற்-5) தலைமகள் கருத்தின்கண் நிகழுங் குறிப்பென்பது.

புரையறந் தெளிதலென்பது, தனக்கொத்த இல்லறம் இன்னதென்று தலைமகள் மனத்துப் படுதல். அது,

> ''விரியுளைக் கலிமான் தேரொடும் வந்த
> விருந்தெதிர் கேடலின் மறப்ப லென்றும்'' (கலி–75

---

* இச்சொற்றொடர்ப் பிழைபடயுள்ளது.

எனவரும்; இஃது அவனோடு சொல்லாடாது ஊடியிருப்பேனு யின், விருந்துகொண்டு புகுதரும்; அதனால் ஊடலைமறப்பே னென்றமையிற் புரையறந் தெளிதலாயிற்று.

இல்லது காய்தலென்பது, கனவின்கட்போலாது தலை மகற்கு இல்லாததனை உண்டாக்கிக்கொண்டு காய்தல். அது,

"நற்றூர் அகலத்துக் கோர்சார் மேவிய
நெட்டிருங் கூந்தற் கடவுள ரெல்லார்க்கும்
முட்டுப்பாடு ஆகலும் உண்டு" (கலி-93)

எனவரும்; இது கடவுளரையே கண்டு தங்கினுனாயினும் நெட்டி ருங்கூந்தற் கடவுளரையே கண்டாயென்று இல்லது சொல்லிக் காயுமாகலின் அப்பெயர்த்தாயிற்று.

உள்ளதுவர்த்தலென்பது, தலைமகனுற் பெற்ற தலையளி உள்ளதேயாயினும், அதனை உண்மையென்றே தெளியாது அருவருத்துநிற்கும் உள்ள நிகழ்ச்சி; அது, "கடல்கண் டன்ன கண்ணகன் பரப்பின்" என்னும் பாட்டினுள்,

"வேப்புநனை யன்ன நெடுங்கண் ணீர்ஞெண்டு
இரைதேர் வெண்குருகு அஞ்சி அயலது
ஒலித்த பகன்றை யிருஞ்சேற்று அள்ளல்
திதலையின் வரிப்ப வோடி விரைந்துதன்
ஈர்மலி மண்ணளைச் செறியும் ஊர" (அகம்-176)

என்புழித், தலைமகன் வாயில்வேண்டச் சென்றுனைப் பிறர் கூறும் பழிக்கு வந்தாயென்றமையின் இஃது உள்ள துவர்த்த லாயிற்று.

"பட்டுழி யறியாது பாகனைத் தேரோடும்
விட்டவள் வரனுேக்கி விருந்தேற்றுக் கொளநின்றாய்"
(கலி-69)

என்பதுவும் அது.

புணர்ந்துழியுண்மையென்பது, முற்கூறிய இல்லது காய்தலும் உள்ளதுவர்த்தலுமாகிய விகாரமின்றிப் புணர்ச்சிக் காலத்துச் செய்வனசென்ற உள்ளநிகழ்ச்சி; அது,

"குளிரும் பருவத்தே யாயினுந் தென்றல்
வளியெறியின் மெய்யிற் கினிதாம்—ஒளியிழாய்
ஊடி யிருப்பினும் மூரவு நறுமேனி
கூடல் இனிதா மெனக்கு" (ஐந்திணை ஐம்-30)

என்பது; என்னை? புணர்ந்துழியுண்மை கூறினாள் விகாரமின்றி யாதலின்.

பொழுதுமறுப்பாக்கமென்பது, களவின்கட் பகற்குறியும் இரவுக்குறியுமென வரையறுத்தாற்போல்வதோர் வரையறையின்மையின் அப்பொழுதினை மறுத்தலாகிய ஆக்கமென்றவாறு; எனவே, களவுக்காலத்துப் பொழுது வரைந்து பட்ட இடர்ப் பாட்டினீங்கிய மனமகிழ்ச்சி ஆக்கமெனப்படும்; அது,

"அயிரை பரந்த அந்தண் பழனத்து
ஏந்தெழின் மலர தூம்புடைத் திரள்கால்
ஆம்பல் குறுநர் நீர்வேட் டாங்குஇவள்
இடைமுலைக் கிடந்து நடுங்க லானீர்
தொழுது காண் பிறையிற் றோன்றி யாம்நுமக்கு
அரியே மாகிய காலைப்
பெரிய நோன்றனிர் நோகோ யானே" (குறுந்-178)

என்பதனுள், தொழுது காண்பிறையில் தோன்றின மென்பது களவுக்காலத்து இடையீடு பெருகிற்றெனக் கூறி அங்ஙனம் வரைந்த பொழுதினை மறுத்தகாலத்து நடுங்கலானீ ரென்றமையின் இஃது அப்பொருட்டாயிற்று.

அருள்மிகவுடைமை யென்பது, களவுக்காலத்துப் போலத் துன்பமிகுதலின்றி அருள்மிகத் தோன்றிய நெஞ்சினளாதல்; அது,

"நின்ற சொல்லர் நீடுதோன் றினியர்
என்றும் என்தோள் பிரிபு அறியலரே (நற்றிணை-1)

என வரும்.

அன்புதொக நிற்றலென்பது, களவுக்காலத்து விரிந்த அன்பெல்லாம் இல்லறத்தின்மேற் பெருகிய விருப்பினானே ஒருங்குதொக நிற்றல்;

"எம்போற், புல்லுளைக் குடுமிப் புதல்வற் பயந்து
நெல்லுடை நெடுநகர் நின்னின் றுறைய
என்ன கடத்தளோ மற்றே" (அகம்-176)

என்புழிப் புதல்வற்பயந்து நின்னின்று உறையுங்கடத்தினம் யாமென்றமையின் இஃது அன்புதொக நிற்றலாயிற்று.

பிரிவாற்றாமை யென்பது, களவிற் பிரிவாற்றுதல் வேண்டுமாறுபோலக் கற்பினுட் பிரிவாற்றுதல் வேண்டப் படாமை: என்னை? புறத்தார்க்குப் புலனாகாமை மறைத்தல் கற்பிற்கு வேண்டுவதன்றாகலி னென்பது.

"இடனின்றி இரந்தோர்க்கொன்று ஈயாமை இளிவெனக்
கடனிறந்து செயல்சூழ்ந்த பொருள்பொரு ளாகுமோ
வடமீன்போல் தொழுதேத்த வயங்கிய கற்பினாள்
தடமென்றோள் பிரியாமை பொருளாயி னல்லதை"
(கலி-2)

என்புழி இனைய கற்பினாளைப் பிரியாமை பொருளாயினன்றி நும்மால் தரப்படும் பொருள் பொருளாகுமோ என்றதன் கருத்தாவது: பிரிவாற்றாமையின் இவள் இறந்துபடுவள், பின்னை அப்பொருள் கொண்டு ஆற்றும் இல்லறம் யாண்டையதெனத் தலைமகள் பிரிவாற்றாமை கூறியவாறாயிற்று.

மறைந்தவை உரைத்தலென்பது, களவுக்காலத்து நிகழ்ந்த னவற்றைக் கற்புக்காலத்துக்கூறுதல்; அவை "களவினுள் நிகழ்ந்த அருமையைப் புலம்பி அலமர லுள்ளமோ டளவிய விடத்தும்" (தொல். கற்-5) என்புழித் தோன்றிய மனக்குறிப்பு; அது,

"முயங்கல் விடாஅ லிவையென மயங்கி
யான்நோம் என்னவும் ஒல்லார் தாம்மற்று
இவைபா ராட்டிய பருவமு முளவே யினியே,
புதல்வற் றடுத்த பாலொடு தடைஇத்
திதலை யணிந்த தேங்கொண் மென்முலை
நறுஞ்சாந் தணிந்த கேழ்கிள ரகலம்
வீங்க முயங்கல் யாம்வேண் டினமே
தீம்பால் படுதல் தாமஞ் சினரே" (அகம்-26)

என்பது. முன்னிலைப்புறமொழியாகலான் மறைந்த ஒழுக்கத்துக் கண் நிகழ்ந்த பொருளைக் கற்பினுள் உரைத்தவாறாயிற்று.

புறஞ்சொன் மாணுக்கிளவியென்பது, "தலைமகற்கு வந்த புறஞ்சொல்லின் பொல்லாங்கு குறித்து எழுந்த கிளவி. அவற்கு வரும் பழிகாத்தலுந் தனக்கு அறமாதலின் அதுவுங் கற்பின் கண்ணே நிகழுமென்பது; அது,

"களிறுகவர் கம்பலை போல
அலரா கின்றது பலர்வாய்ப் பட்டே" (அகம்-96)

என்றாற் போல்வன.

கிளவியொடு தொகைஇ யென்பது, இதனோடுந் தொகுத்தென்றவாறு. சிறந்த பத்தும் என்பது, விதந்தோதிய பத்தும். செப்பிய பொருள் என்பது, அழிவில் கூட்டமெனச் செப்பிய கற்பின்கண்வரும் மெய்ப்பாடெனப்படும் இவையும் என்பது.

மற்றுப் பதினொன்றனையெண்ணிச் சிறந்த பத்து இவை யென்றது என்னையெனின், அதனை,

"ஒன்பதுங் குழவியோ டிளமைப் பெயரே"
(தொல். பொருள்-556)

என்ற மரபியற் சூத்திரம்போல மொழிமாற்றியுரைக்கப்படும். அங்ஙனஞ் சிறந்த பத்தும் புறஞ்சொன் மாணுக் கிளவியொடு தொகைஇ யெனக் கூட்டியுரைக்க. சிறந்த பத்தென்றதனான் இவையன்றிக் கற்பினுள் வரும் மெய்ப்பாடு பிறவுமுளவேற் கொள்க.

(வி-ரை)

தாபதர்-தவவொழுக்கம் உடையோர்; அவ்வக்குலத்திற்கும் குருவாக உள்ளவர். மந்திரவிதியில்-திருமணம் நிகழ்த்தும் பொழுது இருவரையும் கூட்டுவிக்கும் மந்திரங்களின் ஆணையால்.

சினைவாட-மரங்களின் இலைகள் வாடும்படியாக, கனைகதிர்க் கனலி-செறிந்த கதிரையுடைய ஞாயிறு.

அவர்க்கு இல-தலைமகன் மாட்டு எவ்விதக் குற்றமுமில்லை. என்னையெனத் தொடங்கும் சொற்றொடர் பிழைபட உள்ளது. தாம்வேண்டிய குறை முடியாது பிரிந்தார்மாட்டு - தாம் வேண்டிய குறை முடியாமையால் பிரிந்தாரிடத்து.

அச்சு ஆறுக உணரிய-தான் கூறிய சூள் பொய்த்தமைக்கு அஞ்சும் அச்சமே தனக்கு ஊடல் உணர்த்துதற்குரிய வழியாக.

பொய்ச்சூள் அஞ்சி-மீண்டும் அவன் பொய்யான சூளுரைத்தற்கு அஞ்சி.

விரியுளைக் கலிமான் - விரிந்த தலையாட்டத்தையுடைய மனச்செருக்குற்ற குதிரை.

நற்றார் அகலம்—நல்ல மாலையணிந்த மார்பு. ஓர்சார் மேவிய-ஒரு சார்பாகப் பொருந்திய. கூந்தற் கடவுளர்-பரத்தையர்.

வேப்புநனை—வேம்பின் அரும்பு. சேற்று அள்ளல்—சேறுகிய அள்ளல். வரிப்ப-வரிபொருந்த. நண்டு குருகிற்கு அஞ்சித்தன் அளைபுகுதல் போலத் தலைவனும் பிறர் கூறும் பழிக்கு அஞ்சித் தன்மனைக்கு வந்தான் எனக் கருதுதலின் உள்ளது உவர்த்த லாயிற்று.

பட்டுழி அறியாது-பரத்தையரிடத்து அகப்பட்டமையால் அவர் நெஞ்சு வலித்தென்று அறியாது. அவள்வரல் நோக்கி-அப் பரத்தைநின்னை விருந்தாக எதிர் கொள்ள வருதலை நோக்கி.

ஏந்துஎழில்-தாங்குகின்ற அழகு. தூம்புடைத் திரள்கால்-உள்துளை யமைந்த திரண்டகால். தொழுது காண் பிறையின்-தொழுதுகாணும் மூன்றாம் பிறையைப் போல. நோன்றனிர்—பொறுத்தீர்.

புல்உளைக்குடுமி-புல்லிய உளை போன்ற மயிர். என்ன கடத்தலோ-என்ன கடமையை உடையளோ.

இடனின்றி - வாழ்க்கைக்கு வேண்டும் பொருளின்றி. வயங்கிய - விளங்கிய.

முயங்கல் விடாஅல்-முயங்கலை ஒழுக. மயங்கி-தாம்மயங்கி. இவை பாராட்டிய பருவம் களவுக் காலமாம்.

களிறுகவர் கம்பலை போல-யானையைப் பிடித்த காலத்து எழும் பேரொலிபோல.

இளம்பூரணர் மறந்தவை உரைத்தல் புறஞ்சொல் மாணாக்கிளவியொடு தொகைஇ-மறைத்த ஒழுக்கத்தைக் கூறிய புறஞ்சொல்லாகிய அலர் மாட்சிமைப் படாத கிளவியொடு கூட என உரைகண்டு இந்நூற்பாவில் உள்ள பத்தென்னும்

தொகைக்குப் பொருள் காண்பர். எனவே ஊரார் கூறும் அலர் தன் கற்பு ஒழுக்கத்திற்கு மாட்சிமைப்படாதவாறு செய்வது தலைவியின் மாண்பாகும் என்பது கருத்தாயிற்று. (24)

ஒப்பினது பகுதியில் வரும் மெய்ப்பாடுகள்

**273. பிறப்பே குடிமை ஆண்மை யாண்டோடு**
**உருவு நிறுத்த காம வாயில்**
**நிறையே அருளே உணர்வொடு திருவென**
**முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே.**

இதுவும் அம்மெய்ப்பாட்டுப் பகுதியே கூறுகின்றது; மேற் களவியலுள்,

"ஒத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப" (தொல்.பொருள்-93) என்றான், அவ்வொப்பினது பகுதி இத்துணைக் குறிப்பு உடைத் தென்பது உணர்த்தினமையின்.

(இ-ள்) ஒத்த பிறப்பும், ஒத்த ஒழுக்கமும், ஒத்த ஆண்மையும், ஒத்த பிராயமும், ஒத்த உருவும், ஒத்த அன்பும், ஒத்த நிறையும், ஒத்த அருளும், ஒத்த அறிவும், ஒத்த செல்வமு மெனப் பத்து வகைய தலைமகளொப்பினது பகுதி (எ-று).

இவை தலைமகற்கு மெய்ப்பாடெனப்படாவோவெனின் படுமாயினும் அஃது ஒப்பினது வகையென்றதனானே தலை மகட்கே உரிமை கொளப்படும். குடிமையொடு பிறப்பிடை வேற்றுமை என்னையெனின், பிறப்பென்பது குடிப்பிறத்தல்: அதற்குத்தக்க ஒழுக்கங் குடிமை எனப்படும்; குடிப்பிறந்தாரது தன்மையைக் குடிமையென்றாரென்பது; அதனை ஊராண்மை யெனவுஞ் சொல்லுப. ஆண்மை புருடர்க்காம் அஃது ஆள்வினை யெனப்படும். இது தலைமகட்கு ஒப்பதன்றாலெனின், குடியாண்-மை யென்புழி ஆண்மை யென்பது இருபாற்கும் ஒக்குமாதலின் அமையுமென்பது. யாண்டென்பது ஒத்தவாறென்னையெனின், பன்னீர் யாண்டும் பதினாறியாண்டுமே பெண்மையும் ஆண்மை யும் பிறக்கும் பருவமென்பது ஒத்தினுள் ஒப்பமுடிந்தமையின் அதுவும் ஒப்பெனவே படும். உருவு நிறுத்த காமவாயி லென்பது பெண்மை வடிவும் ஆண்மை வடிவும் பிறழ்ச்சியின்றி அமைந்த வழி அவற்றுமேல் நிகழும் இன்பத்திற்கு வாயிலாகிய அன் பென்றவாறு.

இங்ஙனம் ஓதிய வகையான் இவை ஒன்பதாகலிற் பத்தா மாறு என்னையெனின், காமவாயிலெனப்பட்ட இயற்கை யன்பு வடிவுபற்றி யல்லது தோன்றாமையானுங், குணம்பற்றித் தோன்றுவன செயற்கை யன்பாகலானும் உருவினை யன்பிற்கு அடையாகக் கூறினா ராயினும் உருவு சிறப்புடைமையின் அதனை நாம் பகுத்தெண்ணிக் கொண்டாமென்பது. என்னை?

"வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோடு
ஐந்துடன் மாண்டது அமைச்சு" (குறள்-632)

என்புழிக் கற்றறிதலென்பதனை இரண்டாக்கி ஐந்தென்ப வாகலின்.

அஃதேல், உருவென்பது குறிப்பின்றாகலின் மெய்ப்பாடாமாறு என்னையெனின், அவ்வுருப்பற்றி மனத்தின்கட் பிறப்பதோர் தருக்குண்டன்றே அதனான் அது மெய்ப்பாடெனப்படும். நிறை யென்பது மறைபிறரறியாமை (கலி. 133) நெஞ்சினை நிறுத்தல். அருளென்பது எல்லாவுயிர்க்கும் இடுக்கண் செய்யாத அரு ளுடையராயிருத்தல். அதுவுங் காமத்திற்கு இன்றியமை யாததோர் குறிப்பு. உணர்வென்பது அறிவுடைமை: அஃதாவது உலகியலாற் செய்யத்தகுவது அறிதல். திருவென்பது, பொருளுடைமையும் பொருள் கொணர்ந்து துய்த்தலுமின்றி எஞ்ஞான்றுந் திருத் தகவிற்றாகியதோர் உள்ள நிகழ்ச்சி. அது வினையுள்ளுடைமையெனவும் படும். இவையெல்லாம் இருவர்க்குந் தம்மின் ஒக்கும் பகுதியெனவும் அவை பற்றி மெய்ப்பாடு பிறக்குமெனவுங் கூறியவாறு.

'வகை' யென்றதனான் ஆண்மைவகை பெண்மைவகை யெனவுங், குடிமைவகை யென்பது இருவர்க்கும் இளமைப் பருவத்தே தங்கிய ஒழுக்கமெனவும், பிறப்பினது வகை அந்த ணர்க்கு நான்கும் அரசர்க்கு மூன்றும் வணிகர்க்கு இரண்டும் வேளாளர்க்கு ஒன்றும் பிறப்புவகை யெனப்படுமெனவுங் கூறுக. இனி, 'ஏவன்மரபின் ஏனோர் (தொல்.பொருள்-24) பாங்கினும்' 'அடியோர் பாங்கினும் வினைவல பாங்கினும்'(தொல். பொருள். 23) தம்மின் ஒத்த பிறப்புக்காரணமாக உள்ளத்து வருங் காமக்குறிப்பு முதலாயினவுங் கொள்க. இவ்வெண்ணப்பட்டன ஒத்துவரினன்றி அறிவுடையார்கட் காமக் குறிப்பு நிகழா மையின் இவற்றையும் ஈண்டு மெய்ப்பாடென்று ஓதினானென்பது.

அடியோர்பாங்கினும் வினைவலபாங்கினும் வரும் இக்குறிப்பு முதலாயவற்றை இலேசினுற் கொண்டான்; அவை பிறழ்ந்து வருமாகலி னென்பது.

எ—டு. "அவனுந்தான்,
ஏனல் இதணத்து அகிற்புகை யுண்டு இயங்கும்
வானூர் மதியம் வரைசேரி னவ்வரைத்
தேனி னிறாலென வேணி யிழைத்திருக்குங்
கானக நாடன் மகன்" (கலி-39)

என்பது பிறப்பொப்புமை.

"உள்ளினென் அல்லனோ யானே யுள்ளிய
வினைமுடித் தன்ன இனியோள்
மனைமாண் சுடரொடு படர்பொழு தெனவே" (நற்-3)

என்பது தலைமகன் தனது இல்லறத்தைத் தலைமகள்மேல் வைத்துச் சொல்லினமையிற் குடிமையாயிற்று.

"கேள்கே டூன்றவுங் கிளைஞர் ஆரவுங்
கேளல் கேளிர் கெழீஇயின ரொழுகவும்
ஆள்வினைக்கு எதிரிய வூக்கமொடு புகல்சிறந்து"
(அகம்-93)

என்புழி, இன்னகாரணத்திற் பிரிந்துபோந்து வினைமுடித்தன மாயினும் அவனை "மயங்குகஞ் செல்மோ" என்றமையின் தன் ஆள்வினைக்குத் தக்க பெண்மையான் அவள் ஆற்றி யிருந்தா ளென்பதூஉங் கருதிய கருத்தினுற் காமக்குறிப்புப் பிறந்தமையின், அஃது ஆண்மையாயிற்று.

"என்றோள் எழுதிய தொய்யிலும் யாழநின்
மைந்துடை மார்பிற் சுணங்கு நினைத்துக்காண்"
(கலி-18)

என்பது யாண்டு.

"முல்லை முகையு முருந்துநிரைத் தன்ன
பல்லும் பணைத்தோளும் பேரமர் உண்கண்ணும்
நல்லேன்யா னென்று நலத்தகை நம்பிய
சொல்லாட்டி நின்னோடு சொல்லாற்ற கிற்பார்யார்"
(கலி-108)

என்பது உருபு.

''நின்மக ளுண்கண் பன்மா ணோக்கிச்
சென்றோன் மன்றஅக் குன்றுகிழ வோனே
பகல்மா யந்திப் படுசுடர் அமையத்து
அவன்மறை தேஎம் நோக்கி மற்றிவன்
மகனே தோழி யென்றனள்'' (அகம்-48)

என்பது உருவுநிறுத்த காமவாயில்.

''கண்ணியன் வில்லன் வரும்மன்னை நோக்குபு
முன்னத்திற் காட்டுத லல்லது தானுற்ற
நோயுரைக் கல்லான் பெயருமற் பன்னாளும்
பாயல் பெறேஎன் படர்கூர்ந்து'' (கலி-37)

என்புழி முன்னத்திற் காட்டுதலல்லது தானுரையானென்பது தலைமகனிறையுடைமை கூறியவாறு.

''அவன்வயிற்
சேயேன் மன் யானுந் துயருழப்பேன்'' (கலி-37)

எனத்தன்னிறையுடைமை காரணத்தாற் காமக்குறிப்பு நிகழ்ந்த வாறு.

''பெண்ணன்று உரைத்தல் நமக்காயின்'' (கலி-37)

என்பதும் அது. இது, தோழி கூற்றன்றோவெனின், அதுவுந் தலைமகள் குறிப்பெனவே படுமென்பது முன்னர்க் கூறினு மென்பது.

''தாதுண் பறவை பேதுறல் அஞ்சி
மணிநா ஆர்த்த மாண்வினைத் தேரன்'' (அகம்-4)

என்பது அருள்பற்றிப் பிறந்த காமக்குறிப்பு.

''அணங்குடை நெடுவரை யுச்சியின் இழிதரும்''(அகம்-22)
என்னும் பாட்டினுள்,

''தன்னிசை யுள்ளத்து நந்நசை வாய்ப்ப''

என்பது இருவருணர்வும் ஒத்தவாறு; தலைமகள் குறிப்பு உணர்ந்து வந்தனனென்றமையின். இது 'செல்வம் புலன்' (தொல், பொருள்-259) என்புழிப் புலனெனப்படாது காமத் திற்கே உரித்தாகிய உணர்வாகி வேறு கூறப்பட்டது.

"நெய்தல் நெறிக்கவும் வல்லன் நெடுமென்றோட்
பெய்கரும் பீர்க்கவும் வல்லன் இளமுலைமேல்
தொய்யில் எழுதவும் வல்லன்தன் கையிற்
சிலைவல்லான் போலுஞ் செறிவினு னல்ல
பலவல்லன் றோளாள் பவன்" (கலி-143)

என்பது திருவினாற் காமக்குறிப்புப் பிறந்தவாறு. என்னை? இனையன வல்லனாதல் செல்வக்குடிப்பிறந்தவரை அறிவிக்குமாகலின் அது காமக்குறிப்பினை நிகழ்த்துமென்பது. இது தலைமகட்கும் ஒக்கும்.

"உழுந்தினுந் துவ்வாக் குறுவட்டா நின்னின்
இழிந்ததோ கூனின் பிறப்பு" (கலி-94)

என்பதும் பிறப்புவகையின்பாற்படும். பிறவும் இவ்வாறே கொள்க.

(வி-ரை)

குடிமைக்கும் பிறப்பிற்கும் உரிய வேற்றுமை அறிந்து இன்புறத் தக்கதாகும். ஒழுக்கமுடைமை குடிமை என்பர் திருவள்ளுவரும். தன் குடியை ஆளும் தன்மை பெண்பாலார்க்கும் வேண்டுதலின் ஆண்மை இருபாற்கும் ஒத்ததாயிற்று. உரு-வடிவழகு. நிறுத்தகாமவாயில்-நிலைநிறுத்தப்பட்ட இன்பத்திற்கு வாயிலாகிய அன்பு. வன்கண் குடிகாத்தல் எனத் தொடங்கும் குறட்பாவில் உள்ள ஐந்தென்னும் தொகைக்குக் குடிகாத்தல் என்பதைப் பிரித்தேனும், கற்றறிதலைப் பிரித்தேனும் அமைத்துக் கொள்ளும் கருத்து உண்டு. அவற்றுள் பேராசிரியருக்குக் கற்றறிதலைப் பிரித்து ஐந்தென்னும் தொகை கொள்ளுதல் கருத்தாகின்றது. திருவள்ளுவனாரும் கல்வி அறிவுடைமை என ஈரதிகாரங்களில் அவற்றைப் பிரித்து விளக்குகின்றாராதலின் பேராசிரியர் கருத்து மிகப் பொருத்தமுடையதாம். பரிமேலழகர் இதற்கு மாறாக உரைத்திருப்பது சிறிதும் பொருத்த மின்றாம். வினையுளுடைமை-பொருளின்றி வறிதாய தீவினைக் காலத்தும் பொருளுடையார் போலிருத்தல்.

அந்தணர்க்குரிய பிறப்பு வகை, நான்கு வருணத்துப்பெண்பாலாரையும் மணத்தலால் அவர்க்கு உளவாகும் மக்கட்பேறும். ஆதலின் இவர் பிறப்பு வகை நான்காயிற்று.

இவ்வாறே ஏனைய வருணத்தவரும் தத்தம் வருணத்துப்பெண் பாலாருடன் தம்மின் இழிந்தவரெனக் கருதும் பெண்பாலாரை மணத்தலின் அவர்க்கு உளவாகும் மக்கட்பேறு பற்றி மூன்றாகவும், இரண்டாகவும் ஒன்றாகவும் கருதப்படுவதாயிற்று. இவ்வொழுக்கம் தமிழினத்திற்கு உடன் பாடன்றாதலின் இப் பிறப்பு வகைகள் கொள்ளத் தக்கன வல்ல.

ஏனல் இதணம்-தினைப்புனம். அகில்புகை உண்டியங்கும்-அகில்புகையால் உண்ணப்பட்டு ஒளி மயங்கி. அகில் புகையால் உண்ணப்பட்ட மதியம் தேனிறால் எனத் தோன்றும்.

மனைமாண் சுடரொடு-மனையினிடத்து மாட்சிமைப்பட ஏற்றும் விளக்கொடு. படர் பொழுது-வருந்தும் பொழுது; மாலை.

ஊன்றவும்-பாது காக்கவும். கேளல் கேளிர்-சுற்றத்தார் அல்லாத சுற்றம் - நண்பர்கள். கெழீஇயினர் ஒழுகவும்-அன்பு செய்து ஒழுகவும். ஆள் வினைக்கு எதிரிய உள்ளம்-முயற்சிக்கு எதிர்ப்பட்ட ஒழுக்கம்.

என்தோள்-தலைவியின் தோள். தலைவியின் தோளைத் தோழி என்தோள் என்றாள். தொய்யில் எழுதப்பட்ட தோள், மைந்துடை மார்பு என்பன பருவம் குறித்தன.

முருந்து-பீலியின் முருந்து. நல்லேன் யான் என்று நலத் தகை நம்பிய சொல்லாட்டி-நல்லேன் என்று நின்னுடைய தகுதியைப் பிறர்விரும்புதலின்றி, நீ தானே விரும்பியிருக் கின்ற சொல்லையுடையவளே!. நம்பிய-விரும்பிய; நம்பும் மேவும் நசையாகும்மே என்பது தொல்காப்பியம்.

பகல் மாய் அன்றி-பகல் நீங்கும் அந்திப்பொழுது. முன்னத்தில் காட்டுதலல்லது – (தானுற்ற நோயைக்) குறிப் பால் யானுணரக் காட்டுவளல்லது. பாயல் பெறேன்-துயில் பெறேன். சேயேன்-உறவில்லாதேன். தலைவனிடத்து உறவில் லாத தானும் துயருழந்தேன் என்றமையின் தன் நிறை வுடைமை கூறியவாறாயிற்று. தோழி கூற்றாயினும் தலைமகள் குறிப்பையே கொண்டு கூறுதலின் தலைவியின் கருத்தாயிற்று. இது மேலதற்கும் ஒக்கும்.

பேதுறல்-வருந்துதற்கு.

பெய்கரும்பு-காமன் சிலையாகிய எழுது கரும்பு, சிலை வல்லான் காமன். நல்ல பல வல்லன்-வேட்கை நிகழ்த்திக் கூடுங் காலத்து ஆண்டு நிகழ்த்தும் நல்ல தொழில்கள் பலவற்றையும் வல்லன்.

உழுந்தினும் துவ்வா-உழுத்தம் பனியாரத்தைக் காட்டிலும் சிறிதாயிருக்கின்ற. (25)

காமக்குறிப் பாகாத மெய்ப்பாடுகள்

274. நிம்பிரி கொடுமை வியப்பொடு புறமொழி
வன்சொற் பொச்சாப்பு மடிமையொடு குடிமை
இன்புறல் ஏழைமை மறப்போ டொப்புமை
என்றிவை யின்மை யென்மனார் புலவர்.

இது, காமக்குறிப்பாகாதன கூறுகின்றது.

(இ-ள்.) நிம்பிரி—பொறாமை தோன்றுங் குறிப்பும்; அவை இந்நாட் சிறிதுபொறாத்தாயென்றாற் போல்வன; கொடுமை—கேடுசூழ நினையுந் தீவினையுள்ளமும்; வியப்பு—தலைமகள்பால் தெய்வத்தன்மை கண்டான்போல் வியந்தொழுகுதலும்; இனிக் குணத்தின்மேற்கொண்டு தன்னை வியத்தலெனினும் அமையும். புறமொழி—புறங் கூற்றும்; வன்சொல்—கண்ணோட்டமின்றிச் சொல்லுஞ் சொற்களும்; பொச்சாப்பு—கடைப்பிடியின்றி ஞெகிழ்ந்திருத்தலும்; மடிமை—சோம்புள்ளமும்; குடிமை—இவள் இழிந்தபிறப்பினளெனத் தன்னை நன்கு மதித்தொழுகுதலும்; இன்புறல்—ஒருவரொருவரில் தாமே இன்புறுகின்றாராக நினைத்தலும்; ஏழைமை—நுழைந்தவுணர்வினரன்றி வரும் வெண்மையும்; மறப்பு—மறவியும்; ஒப்புமை—இன்னாளையொக்கும் இவளென்று அன்புசெய்தலும்; என்று இவை இன்மை என்மனார் புலவர்—இவையெல்லாம் இன்றிவருந் தலைமகன்கண் நிகழும் மெய்ப்பாடென்று சொல்லுவர் புலவர் (எ-று)

எனவே, அவைதம்மை வரையறுத்துக்கூறாது அவற்றுக்கு ஆகாதன வரையறுத்துக் கூறினானென்பது. தலைமகட்குரிய

மெய்ப்பாடாயின வரையறுத்துக் கூறினமையின் அவற்றுக்கு ஆகாதன கூறல்வேண்டுவதன்றென்பது.

ஆகாதவற்றுக்கு உதாரணங் காட்டலாவதில்லை.

(வி- ரை)

கடைப் பிடியின்றி-உறுதியின்றி. தலைமக்கட்கு ஆகாத குணம் இவை என்பர் இளம்பூரணர். நச்சினார்க்கினியர் தலைமகனுக்கு ஆகாத குணம் இவை யென்பர். எனினும் இன்புறல் என்பதற்குக் கூறியிருக்கும் விளக்கம் இருவருக்குமாக உள்ளது. எனவே தலைமக்கட்கு ஆகாத குணம் இவையென்றலே பொருத்தமாம்.

கொடுமை என்பது—அறனிழியப் பிறரைச் சூழும் சூழ்ச்சி குடிமையின்புறல் என்பது—தன்குலத்தினானுந் தன்குடிப் பிறப்பினானுந் தம்மை மதித்து இன்புறல்.

மறப்பு என்பது—யாதொன்றாயினுங் கற்றதனையுங் கேட்டதனையும் பயின்றதனையும் மறத்தல். ஒடு எண்ணின் கண் வந்தது.

ஒப்புமை என்பது—ஆண்பாலாயினும் பெண்பாலாயினும் தான் காதலிக்கப்பட்டாரைப் போல்வாரைக் கண்டவழி அவரைப் போல்வர் என ஆண்டு நிகழும் உள்ள நிகழ்ச்சி. அது உலகின் கண் கீழ்மக்கள் மாட்டும் கண்ணிலோர் மாட்டும் நிகழ்தலின் அது தலைமக்கட்காதென விலக்கப்பட்டது. என விளக்கங்காண்பர் இளம்பூரணர். (26)

மெய்ப்பாடுகளை அறியும் திறம்

275. கண்ணினுஞ் செவியினுந் திண்ணிதி னுணரும்
உணர்வுடை மாந்தர்க் கல்லது தெரியின்
நன்னயப் பொருள்கோ ளெண்ணருங்
குரைத்தே.

இது, மேற்கூறிய மெய்ப்பாட்டிற்கெல்லாம் புறனடை

"எள்ள விளமை பேதைமை மடனென்
றுள்ளப் பட்ட நகைநான்கு" (தொல்.பொருள்-252)

என்புழி, நகைக்கேதுவாகிய பொருள் கூறியதல்லது அப்பொருள் பற்றிப் பிறந்த நகையுணர்வு புலப்படுமாறு இன்னவாறென்றிலன், இனி 'உடைமையின்புறல்'' (தொல். பொருள்-260) என்றற்றொடக்கத்தளவினும் அவ்வாறு எண்ணியதல்லது அவை உணருமாற்றுக்குக் கருவி கூறியதிலன். அங்ஙனமே பிறவுங் கூறியதிலனாகலான் அதனை ஒருவாற்றாற் கூறுகின்றான்.

(இ-ள்) கண்ணானுஞ் செவியானும் யாப்புற அறியும் அறிவுடையார்க்கல்லது மெய்ப்பாட்டுப்பொருள் கோடல் ஆராய்தற்கு அருமையுடைத்து (எ-று).

மற்று மனத்துநிகழ்ந்த மெய்ப்பாட்டினைக் கண்ணானுஞ் செவியாலும் உணர்தலென்பது என்னையெனின், மெய்ப்பாடு பிறந்த வழி உள்ளம்பற்றி முகம் வேறுபடுதலும் உரை வேறுபடுதலுமுடைமையின் அவை கண்ணானுஞ் செவியானுமுணர்ந்து கோடல் அவ்வத் துறைபோயினரது ஆற்றலென்பது கருத்து.

''இரண்டறி கள்விநங் காத லோளே
முரண்கொடுப்பிற் செவ்வேன் மலையன்
முள்ளூர்க் கானம் நாற வந்து
நள்ளென் கங்குல் நம்மோ ரன்னள்
கூந்தல் வேய்ந்த விரவுமல ருதிர்த்துச்
சாந்துளர் நறுங்கதுப் பெண்ணெய் நீவி
அமரா முகத்த ளாகித்
தமரோ ரன்னள் வைகறை யானே'' (குறுந் 312)

என்பதனுள் அமராமுகத்தளாகுதலுந் தமரோரன்னளாகுதலுந் தலைமகற்குப் புலனாகலின் அவை கண்ணுணர்வெனப்படும்.

''ஒழிகோ யானென வழிதகக் கூறி'' (அகம்-110) என்புழித் தலைமகன்மனத்து நிகழ்ந்த அழிவெல்லாம் ஒழிகோ யானென்ற உரையானே உணர்ந்தமையின் அது செவியுணர்வெனப்படும். இங்ஙனம் உணர்தலும் உணர்வுடையார்க்கன்றிப் பெரிதும் அரிதென்பான் 'எண்ணருங்குரைத்' தென்றானென்பது.

(வி-ரை)

இரண்டறிகள்வி-நம்மோடு ஒத்தலும் தன் தமரொடும் ஒத்தலும் ஆகிய இருவேறு ஒழுகலாற்றை அறிந்த கள்ளத் தன்மையுடையவன். துப்பு - வலிமை. (27)

மெய்ப்பாட்டியற்குப் பேராசியருரை முற்றிற்று.

—o—

# உவம இயல்

## பொருளமைப்பு

ஒரு பொருளை அறியாத ஒருவனுக்கு அதனை அறிவிக்கும் பொழுது அதனோடு ஒத்த வேறொரு பொருளைக் காட்டி இது போலும் அது எனக் கூறின் அப் பொருளின் தன்மை விளங்கி விடும். அவ்வாறு விளக்குதற்குக் காட்டப்பட்ட பொருளே உவமையாகும். எனவே உவமை என்பது பொருளை விளக்குதற்குரிய கருவி எனலாம். அவ்வாறன்றி ஒரு பொருளைப் புனைந்துரைத்தற்காகவும் உவமை வருதல் உண்டு. அதற்குக் காரணம் அப்பொருளின் அழகினை மேம்படுத்துவதற்கு ஆம். இவ்வாறன்றி உவமையை அணி எனக் கூறல் அமையாது என்பர் பேராசிரியர். ஆனால் பிற்காலத்தார் உவமையை அணி என்றும், அதனின்றும் விரிந்தனவே பிற அணிகள் என்றும் கூறுவர்.

''உவமையென்னும் தவலருங் கூத்தி
பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து
காப்பிய அரங்கினுள் கவினுறத் தோன்றி
யாப்பறி புலவர் இதயம்
நீப்பறு மகிழ்ச்சி பூப்ப நடிக்கும்மே.''

என்பதை எடுத்துக் காட்டுவர் அவர்.

அணியிலக்கணம் ஒன்றே இல்லையென்றும், அப்பெயரே பொருத்தமற்றது என்றும் பேராசிரியர் கூறுவர். அவர் கூறுவதாவது: 1. சாத்தனையும் சாத்தனால் அணியப்பட்ட முடியையும் வேறு காண்கின்றோம். அதுபோல உவமை முதலாயின அணி என்பவாயின் அவ்வணிகளையும் அவ்வணி பெறும் செய்யுட்களையும் வேறு பிரித்துக்காட்டல் வேண்டும். அவ்வாறு காணுதற்கின்மையின் அணி என்ற பெயரே பொருத்த மற்றதாகும்.

2. அணி இலக்கணத்தில் பிறழ்ந்துழியும் வல்லார் செயின் அணி என்பர். அணி இலக்கணத்தில் பிறழா வழியும் அல்லார் செய்யின் அணி அன்றென்பர்.

3. பொருளதிகாரத்தின் பொருட் பகுதி எல்லாம் அணியேயாம். அங்ஙனமாகவும் இவற்றையெல்லாம் தொகுத்து அணி எனக் கூறாது தாம் கூறும் சிலவற்றையே அணி என்றல் குன்றக் கூறலாம்.

4. இரண்டு பொருள்களை எண்ணி அவற்றை வினைப் படுக்குங்கால் ஒருங்கு என்பதோர் சொற்பெய்தலையும் அணி என்பர். அவ்வாறாயின் ஒரு பொருள் மேல் அடுக்கி வந்த மூன்று தாழிசைகள் முடியும் வழியும் 'எனவாங்கு' என்னும் சொல் வரக்காண்கின்றோம். அவ்வகையில் இதனையும் அணி எனல் வேண்டும். அவ்வாறின்மையின் அது பொருந்துவதன்றாம்.

இவ்வியலின்கண் ஆசிரியர் ஏனை உவமமே கூறத் தொடங்கி அவற்றை விரித்துரைத்து இடையில் இயைபு பட்டமையின் உள்ளுறை உவமத்தை விளக்கிப் பின்னும் தாம் எடுத்துக் கொண்ட ஏனை உவமத்தின் இலக்கணத்தையே கூறி முடிப்பர். எனினும் இக்கட்டுரையின்கண் ஏனை உவமத்தின் இலக்கணத்தை முற்பட ஒருங்கு தொகுத்தும், உள்ளுறை உவமத்தின் இலக்கணத்தைப் பிற்படத் தொகுத்தும் விளக்கப் பட்டுள்ளது. உள்ளுறை உவமம் பெரிதும் அகப்பொருள் பற்றியே வருதலின் அதனை அகத்திணையியலிலுள்ளும் ஆசிரியர் கூறினர். எனினும் இவ்வியல் உவமையியல் ஆதலின் அதன் இலக்கணத்தை ஈண்டு விரித்துரைத்துள்ளார்.

ஏனையுவமம் :

உவமை வினை, பயன், மெய், உரு என நான்கும் பற்றி வரும். வினை உவமம்: இது தொழில் பற்றி உவமிக்கப்படுவது (எ-டு) புலியன்ன மறவன்; பயன் உவமம்: இது பயன் பற்றி உவமிக்கப்படுவது (எ-டு) மாரியன்ன வண்கை தேர் வேளாயைக் காணிய சென்மே; மெய்யுவமம்: இது வடிவு பற்றி உவமிக்கப் படுவது (எ-டு) துடியிடை; உருஉவமம்: இது நிறம்பற்றி உவமிக்கப் படுவது (எ-டு) பொன் மேனி.

ஒரு பொருளொடு ஒரு பொருள் உவமிக்குங்கால் மேற் கூறிய நான்கினுள் ஒன்றேயன்றி இரண்டு மூன்றுமாக விரவி வருதலும் உளவாம், பெர்ருளிலும் (உவமேயத்தினும்) உவமை உயர்ந்து வருதல் வேண்டும். மேற்கூறியவாறு உவமிக்குங்கால்

அவை ஐவகைப் பொருளை அடியாகக் கொண்டு பிறக்கும். அவை சிறப்பு, நலன், காதல், வலி, கீழ்ப்பட்ட பொருள் என்பனவாம்.

1. சிறப்பு—உலகத்துள் இயல்பு வகையானன்றி விகாரத்தால் வரும் சிறப்பு. (எ-டு) "முரசு முழங்கு தானை மூவரும் கூடி அரசவை இருந்த தோற்றம் போலப் பாடல் பற்றிய பயனுடை யெழாஅல்"

2. நலன்: அழகு (எ-டு) 'ஓவத்தன்ன இடனுடை வரைப்பின்'

3. காதல்: அந்நலனும் வலியும் இவ்வலியும் உண்டாக்சி உரைப்பது (எ-டு) 'பாவையன்ன பலராய் மாண்கவின்'.

4. வலி: தன் தன்மையால் உள்ளதோர் வலி (எ-டு) "அரிமா வன்ன வணங்குடைத்துப்பின்.

5. கிழக்கிடு பொருள்: தாழ்வாகக் கருதப்படும் பொருள். எ-டு) அரவு நுங்கு மதியின் நுதல் கரப்ப"

முதற்பொருளும் சினைப் பொருளும் பற்றி உவமை வருங்கால் முதலொடு முதலும் சினையொடு சினையும் முதலொடு சினையும் சினையொடு முதலுமாக வேண்டியவாறு உவமம் செய்யலாம். ஆயினும் அவை மரபு பிறழாது செய்யப் பட்டனவாதல் வேண்டும்.

உவமைக்கும் உவமிக்கப்படும் பொருளுக்கும் இடையே உள்ள பொதுத் தன்மை சுட்டிக் கூறப்படின் அது சுட்டிக் கூறிய உவமையாம். அப்பொதுத் தன்மை சுட்டிக் கூறப்படா தாயின் சுட்டிக் கூறா உவமையாம். பவளம் போல் செந்துவர் வாய்; பவள வாய் என்பன அவற்றுக்குரிய எடுத்துக் காட்டாம்.

ஒரு பொருளோடு ஒரு பொருளுக்கு உவமை கூறுங்கால் அவற்றிடையே உள்ள ஒப்புமை ஒத்ததே என உலகத்தார் மகிழ்ந்து ஏற்றுக்கொள்ளுதல் வேண்டும். அத்தகைய உவமை களே சிறந்தனவாம். மிகவும் உயர்த்தியும் மிகவும் தாழ்த்தியும் உவமிக்கப்படும் உவமைகளும் உள. அவை கேட்டார்க்கு இக்காரணத்தால் தான் இவ்வாறு உவமிக்கப்பட்டுள்ளன எனத் தெரியுமாற்றான் அமைதல் வேண்டும். மேற்கூறியவாறு வினை

பயன், மெய், உரு எனும் நான்கும் பற்றி உவமிக்கும் பொழுது அவ்வவற்றிற்குரிய உருபுகள் பின் வருமாறு அமைதல் வேண்டும். வினை உவமம் பற்றி வரும் உருபுகள்; அன்ன, ஆங்க, மான, இறப்ப, என்ன, உறழ, தகைய, நோக்கு.

பயன் பற்றி வரும் உருபுகள்: எள்ள, இழைய, புல்ல, பொருவ கள்ள, மதிப்ப, வெல்ல, வீழ, மெய்பற்றி வரும் உருபுகள்:

கடுப்ப, ஏய்ப்ப, மருள, புரைய, ஒட்ட, ஒடுங்க, ஓட, நிகர்ப்ப, .

நிறம் பற்றி வரும் உருபுகள் :

போல, மருப்ப ஒப்ப, காய்த்த, நேர வியப்ப நளிய, நடந்த.

வினை பற்றி வரும் உருபுகலில் அன்ன என்பது ஏனைய பயன் மெய் நிறம் பற்றியும் வரும். இவ்வாறு இவ்வுருபுகள் அவ்வப் பொருள் பற்றியே வருவதற்குக் காரணம் தொல்லாசிரியர்கள் இவற்றை இவ்வகையில் ஏற்று வழங்கி வந்தமையே ஆகும். எனினும், இம்மரபு பிற்காலத்துப்போற்றி வளர்க்கப் பெறவில்லை. இவ்வுருபுகளுள் நலிய, நந்த என்பன பேராசிரியர் காலத்திலேயே வழக்கு வீழ்ந்தன. இக்காலத்தே மேலும் பல வழக்கு வீழ்ந்தனவாய் உள்ளன. வினை, பயன், மெய், உரு, எனும் நான்கும் பற்றி உவமிக்குங்கால் மேற்கூறிய உருபுகள் இடையே விரிந்து வருதலும் உண்டு, மறைந்து வருதலும் உண்டு, முன்னையதை உவமை விரி என்றும், பின்னையதை உவமைத் தொகை என்றும் கூறுவர். பெருமையும் சிறுமையும் காரணமாக உயர்த்தியும் தாழ்த்தியும் உவமிக்கப் படும் உவமங்கள் எண்வகை மெய்ப்பாடுகளும் தோன்ற வருதலும் உண்டு. ஒரு பொருளுக்குக் காட்டும் உவமையைக் கொண்டே அப்பொருளின் (உவமேயத்தின்) திறன் அனைத்தையும் அறிஞர்கள் உணர்த்திவிடுவர். நுண்மாண் நுழைபுலம் மிக்கார் அவர் கருதியவாறே உணரவும் செய்வர். அவ்வாறு அவர்கள் உணர்தற்குக் கருவியாக வழக்கியல் மரபு அமையும். உவமை அடைமொழியுடன்வரின் பொருளும் அடை மொழியோடு வருதல் வேண்டும். ஒரோவழி மாறி வருதலும் உண்டு.

ஒரு பொருளோடு ஒரு பொருளை ஒத்தது எனக் கூறாது ஒவ்வாது எனக் கூறினும் அதுவும் உவமையாம். உவமையைப் புனைந்து கூறாது பட்டாங்குக் கூறுதலும் உண்டு. உவமையையும் பொருளையும் வேறு நிறுத்தி இது போலும் இது என்னாது இவ்விரண்டையும் ஐயுறச் சொல்லுதலும், உவமையைப் பொருளாக்கியும் பொருளினை உவமையாக்கியும் உரைப்பதும் உண்டு. அவ்வாறு பொருளினை உவமமாக்கி உவமையை உவமிக்கப்படும் பொருளாக்கினும் அப்பொருளும் உவமம் போல் உயர்ந்திருத்தல் வேண்டும். ஒரு பொருளுக்கு ஒரு பொருளை உவமையாக்குவதன்றி அதனைப் பிறிதொன்றனுக்கு உவமையாக்கியும் மீண்டும் அதனை வேறொன்றனுக்கு உவமையாக்கியும் வரும் அடுக்கிய உவமம் சிறப்புடையதாகா. உவமையையும் பொருளையும் நிரல்பட நிறுத்தி உவமிப்பதும் உண்டு. மேற்கூறியவாறன்றி வேறு பட வரும் உவமங்கள் பலவும் உள. அவற்றையும் ஏற்குமிடன் அறிந்து ஏற்றுக் கொள்க.

உள்ளுறை உவமம்:

உவமை என்றும் உவமிக்கப்படும் பொருள் என்றும் பிரித்துக் கூறாது உவமையையிலேயே உவமிக்கப்படும் பொருளும், அமைத்துக்கூறுவது உள்ளுறை உவமம் ஆகும். இவ்வாறு கூறுதற்கும் கேட்டற்கும் நுண்ணுணர்வு இன்றியமையாததாகும். உள்ளுறை உவமம் ஐந்து வகைப்படும். அவை: வினை, பயன், மெய், நிறம், பிறப்பு என்பனவாம்.

உள்ளுறை யுவமம் கூறுதற்குரியாரும் அவர் கூறும் மரபும்:

தலைவி: தலைவி உள்ளுறை உவமம் கூறுவதாகச் செய்யுள் செய்யின் அவள் அறியும் கருப்பொருள் தன்னைச் சூழ்ந்துள்ள பொருள்களை மட்டுமேயாதல் வேண்டும். காரணம் அவள் அறியும் பயிற்சியுடைமை பற்றியாம். அவ்வாறு கூறுங்காலும் மருதம் நெய்தல் ஆகிய ஈரிடம் பற்றியே உள்ளுறை உவமம் கூறப்பெறும்.

தோழி: இவள் தான் வதியும் நிலத்து உள்ளன வெல்லாம் அறியும் பயிற்சியுடையவள். ஆதலின் அவளிருக்கும் நிலத்தின்கண் உள்ள பொருள்கள் அனைத்தின் கண்ணும் வைத்து உள்ளுறை உவமம் கூறப்படும். அன்றியும் தோழியும் செவிலியும் காலத்

திற்கும் இடத்திற்கும் பொருந்துமாற்றனும் உள்ளுறை உவமம் கூறுதற்குரியர்.

தலைவன்: தலைவன் உள்ளுறை உவமம் கூறுவதாகச் செய்யுள் செய்யின் அவனது அறிவுடைமை தோன்றச் செய்யப்பெறும். அவன் தானிருக்கும் நிலம்மட்டுமன்றி அதனை அடுத்திருக்கும் நிலங்களைப் பற்றியும் நன்கு அறியும் அறிவுடையனுதலின் அவ்வனைத்து நிலங்களிலுமுள்ள கருப்பொருள் பற்றியும் உள்ளுறை உவமம் கூறப்பெறும். பாங்கன், பாணன் முதலாயினுர்க்கும் இவ்வாறே உள்ளுறை உவமம் கூறப்பெறும். இவ்வுள்ளுறை உவமத்தின்கண் இன்பமும் துன்பமும் பயப்பக் கூறல் மரபாம்.

உள்ளுறை உவமம் கூறப் பெறுதார்:

நற்றாயும், ஆயத்தாரும், தந்தையும் தன்னையரும் உள்ளுறை உவமம் கூறப் பெறுர்.

—o—

# ஏழாவது

# உவமவியல்

உவமையின் பொதுவிலக்கணம்

**276. வினைபயன் மெய்யுரு என்ற நான்கே**
**வகைபெற வந்த வுவமத் தோற்றம்.**

இவ்வோத்து என்ன பெயர்த்தோவெனின், உவமவியல் என்னும் பெயர்த்து. உவமம் என்பது ஒரு பொருளோடு ஒரு பொருளினை ஒப்புமை கூறுதல். இதனானே இவ்வோத்து நுதலியதூஉம் உவமப்பொருளே கூறுதலாயிற்று. மற்று அகம்புறம் என்பனவற்றுள், இஃது என்ன பொருள் எனப் படுமோவெனின், அவ்விரண்டுமெனப்படும்: மெய்ப்பாடுபோல என்பது. என்னை?

"உவமப் பொருளின் உற்றது உணருந்
தெளிமருங் குளவே திறத்திய லான"
(தொல். பொருள்-295)

என மேல்வருகின்றதாகலின்.

மற்று இவ்விருதிணைப் பொருளும் உவமம்பற்றி வழக்கினுள் அறியப்படுதலானும், உவமம்பற்றியும் பொருள் கூறுகின்று னென்பது. மேல் அகத்திணையியலுள் (49) உவமத்தினை இரண் டாக்கி ஓதினன்; உள்ளுறையுவமம் ஏனையுவமமென. அவ்விரண் டினையும் ஈண்டு விரித்துக் கூறுகின்றவாறு. அவற்றுள், ஈண்டு ஏனையுவமத்தினை முற்கூறினன், அஃது அகத்திணைக்கே சிறந்த தின்றாயினும் [1]யாப்புடைமை நோக்கி; உலகவழக்கினுஞ் செய்யுள் வழக்கினும் வருமாகலானுமென்பது.

அஃதேல் உள்ளுரையுவமஞ் செய்யுட்கே உரிமையின் அதனைச் செய்யுளியலுட் கூறுகவெனின், உவமப்பகுதியாதல் ஒப்புமை நோக்கி ஓரினப்பொருளாக்கி ஈண்டுக் கூறினு னுயினும் வருகின்ற செய்யுளியற்கும் இயையுமாறறான் அதனை ஈற்றுக்கண் வைத்தான், அது செய்யுட்குரித்தென்னுங் கருத்தா

---

1. பரப்புடைமை என்பதும் பாடம்.

னென்பது. எனவே, எழுத்திலுஞ் சொல்லினும் போலச் செய்யுட்குரியன செய்யுட்கென்றே ஓதலும் ஒருவகையாற் பெற்றும்.

மற்றுப் 'பாடல் சான்ற புலனெறி வழக்கம்' (53) அல்லாத வழக்கு ஆராயப் பயந்ததென்னையெனின், அப் புலனெறி வழக்கிற்கு உறுப்பாகிய வழக்கினை ஆராய்தலும் அதற்கு உபகாரமுடைத்து ஆதலானென்றவாறு.

மற்றிது மேல் எவ்வோத்தினெடு இயைபுடைத்தோவெனின் மேற்பொருள் புலப்பாடு கூறிய மெய்ப்பாட்டியலோடு இயைபுடைத்து; என்னை? உவமத்தானும் பொருள் புலப் பாடே கூறுகின்றுகலின். எங்ஙனமோவெனின், 'ஆபோலும் ஆமா' என்றக்கால் ஆமா கண்டறியாதான் காட்டுட் சென்றவழி அதனைக் கண்டால் ஆபோலும் என்னும் உவமை யேபற்றி ஆமா இதுவென்று அறியுமாகலா னென்பது.

இவ்வோத்தின் தலைச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், உவமத்திற்கெல்லாம் பொதுவிலக்கணங் கூறி அவற்றது பெயரும் முறையுந் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று

(இ-ள்.) தொழிலும், பயனும், வடிவும், வண்ணமும் என்னும் நான்கெனப்படுங் கூறுபட வரும் உவமத்தோற்றம் (எ-று).

'உவமம்' என்பதனை வினைமுதலாகிய நான்கினெடுங் கூட்டி வினையுவமம், பயனுவமம், மெய்யுவமம், உருவுவமமெனப் பெயர் கூறப்படும்.

வினையாற் பயப்பது பயனுதலின் பயத்திற்கு முன்வினை கூறப்பட்டது; அதுபோலப் பிழம்பினுல் தோன்றும் நிறத்தினை அதற்குப்பின் வைத்தான்; பயனும் பொருளாக நோக்கி மெய் யினையும் அதனுடன் வைத்தானென்பது. மற்று மெய்யெனப் படுவது பொருளாதலின், அதன் புடைபெயர்ச்சியாகிய வினை பிற்கூறுக வெனின், வினையுவமந் தன்னுருபு தொக்கு நில்லாது விரிந்தே நிற்றற் சிறப்புடையனவும் உளவாக நோக்கி அது முற் கூறினுனென்பது. அது 'புலிமறவன்' எனத் தொகாது 'புலி யன்ன மறவன்' என விரிந்தே நிற்றலும், 'புலிப்பாய்த்துள்'

எனத் தொக்கு வருதலும் உடைத்தென்பது. தொகை நான் கென எண்ணிக் கொடுத்தான்.

வரலாறு: 'புலியன்ன மறவ' னென்பது 'வினையுவமம்'; அது பாயுமாறே பாய்வனென்னுந் தொழில்பற்றி ஒப்பித்தமையின் அற்றன்றித் தோலும் வாலும் காலும் முதலாகிய வடிவும் ஏனை வண்ணமும் பயனும் ஒவ்வாவென்பது. ஒழிந்தவற்றிற்கும் இஃதொக்கும்.

"மாரி யன்ன வண்கைத்
தேர்வே ளாயைக் காணிய சென்மே" (புறம்-133)

என்பது 'பயனுவமம்': என்னை? மாரியான் விளைக்கப்படும் பொருளும் வண்கையாற் பெறும் பொருளும் ஒக்குமென்றவாறு.

'துடியிடை' யென்பது மெய்யுவமம்': அல்குலும் ஆகமும் அகன்றுகாட்ட அஃகித்தோன்றும் மருங்குலால் துடி அதனோடு ஒத்தது.

'பொன்மேனி' யென்பது 'உருவுவமம்;' பொன்னின்கண்ணும் மேனியின் கண்ணுங் கிடந்த நிறமே ஒத்தன, பிற ஒத்தில வென்பது. இந்நான்கு பற்றி உவமந் தோன்றுமென்பது கருத்து. 'உவமத்தோற்றம்' என்பது மூன்றாவதன் தொகை; உவமத்தாற் பொருள் தோன்றுந் தோற்றமென்றவாறு.

மற்று 'அடைசினைமுதல்' (தொல்-சொல்-கிளவி-26) என்றாற்போல அடையெனவே இந்நாற்பகுதியும் அடங்கக் கூறிப் பண்புத்தொகை யென்புழி வண்ணம் வடிவு முதலாயின அடங்கியவாறுபோலப் பண்பென்று அடக்குதல் செய்யாது ஈண்டு நான்கெனப் பகுத்தது என்னையெனின், இது பொரு ளாராய்ச்சியாகலாற் கட்புலனும் பண்பும் உற்றுணரும் பண்பும் வேறாக நோக்கி வடிவினையும் உருவினையும் வேறுபடுத்தான்; என்னை? வடிவுபற்றிய பண்பினை இரவின்கண் உற்றுணரப் படும்; வண்ணமாயின் அவ்வாறு உற்றுணரப்படாதென்பது. அல்லாக்காற் பகற்குறிக்கட் கூறப்படும் வண்ணம் முதலாயின வும் இரவுக்குறிக்கண் எய்துவான் செல்லும் வடிவும் பண்பும் ஒன்றாகக் கூறினானென்பது. அல்லதூஉம், உணர்த்துகின்ற தினைப்பொருளினை எளிதிற் புலப்படுத்தலுபகாரம் நோக்கியும் அவ்வாறு பகுத்தானென்பது.

"களிற்றிரை தெரீஇய பார்வ லொதுக்கின்
ஒளித்தியங்கு மரபின் வயப்புலி போல" (அகம்-22)

என்புழிப் பார்வலொதுக்கமாகிய வினை பண்பெனப்படாது; என்னை? பண்பென்பது குறிப்பின்றி நிகழுங் குணமாகலி னென்பது. அடையெனினும் அதுவேயெனக் கூறி மறுக்க. எனவே, பார்வ லொதுக்கமெனப்பட்ட வினைப்பகுதியாற் பிழை யாமற் கோடற்குப் பார்வலொதுங்கி நின்றானென்பதும், பிறர்க் கஞ்சிப் பார்வலொதுங்குகின்றானல்ல னென்பதுஞ் சொல்லி யவன் தலைமைக்கேற்ற உவமையாதலின்' அது பொருட் டோற்றமாயிற்று.

"மாரி யன்ன வண்கை' (புறம்- 1‿3)

என்பதூஉம் பண்பாயின், அதன் நிறத்து மேற்கொண்டு வண்மையுங் கரிதெனல் வேண்டுமாகலின் அது பண்பென அடங்காது.

"அணைத்தோள்" (கலி- 87) என்பதும் அது.

"உருவுகிளர் ஏரோவினைப் பொலிந்த பாவை
யியல்கற் றன்ன வொதுக்கினள்" (அகம்-142)

என்றக்கால், வடிவுபற்றி உவமங்கொள்ளவே, உயிரில்லாதாள் போல, அச்சமின்றி, இரவிடை வந்தாளென்னும் பொருள் தோன்றும். வடிவு பண்பெனப்படாது; [1]பண்பு இழிபாகலின்.

"மாரிப் பீரத் தலர்சில கொண்டே" (குறுந்-98)

காட்டி,

"இன்னள் ஆயினள் நன்னுதல்" (குறுந்-98)

என்றவழிக், குறித்த பருவங் கழிந்ததென்னும் பொருண்மை விளங்கிற்று. இது உருவுமம்.

இவ்வாறு பொருளுணர்த்துதற் பகுதி நோக்கி உவமப் பகுதியென்றான் என்பது. என்றாற்கு, இந்நான்கு பகுதியே யன்றி அளவுஞ் சுவையுந் தண்மையும் வெம்மையும் நன்மையுந் தீமையுஞ் சிறுமையும் பெருமையும்முதலாயின பற்றியும் உவமப் பகுதிகூறுரோவெனின், அவையெல்லாம் இந்நான்கனுள் அடங்குமென்றற்கும் அந்நான்கும் இன்னபொருட்பகுதி உடைய

1. பண்பியாகலின் என்றிருப்பதே அமையும்.

வென்றற்குமன்றே அவற்றை 'வகைபெற வந்த' என்பானுயிற்றென்பது.

"பறைக்குர லெழிலி;' (அகம்-73)

என்றக்காற் பறையும் எழிலியும் ஒலித்தல் வினைபற்றி உவமை கொள்வான் ஒன்றற்குக் குரல் கூறி ஒன்றனை வாளாது கூறினு னுயினும் வினையுவமத்தின் வகையெனப்படும்.

கடைக்கண்ணுற் கொல்வான் போல்நோக்கி" (கலி-51)

என்பதூஉம் அதன் வகை.

'வந்த' என்றதனுன் இல்லாத வினை வருவித்துஞ் சொல்லப் படும். அவை,

"விசும்புரி வதுபோல்" (அகம்-24)

எனவும்,

"மணிவாழ் பாவை நடைகற் றன்ன" (நற்-184)

எனவும்,

"வான்றோய் வன்ன குடிமையும்" (பாயிரம்)

எனவும் வரும்.

இவை, உவமையும் பொருளும் ஆகிய வினைபற்றி வந்தில வாகலின் அதன் வகையெனப்பட்டன. 'அன்ன, 'ஆங்க' என் பன இடைச்சொல்லாகலின் வினைப்பின்னும் வந்தன. "நடை கற்றன்ன" என்புழிக் கற்று என்னும் வினையெச்சந் தன்னெச்ச வினை இகந்ததாயினும் அஃது உவமப்பகுதியாகலான் அங்ஙனம் வருதலும் வகையென்றதனுனே கொள்ளப்படும்.

"கொன்றன்ன வின்னு செயினும்" (குறள்-109)

என்பதும் அது.

"இணரெரி தோப்வன்ன இன்னு செயினும்" (குறள்-308) என்பது வினைப்பெயர்பற்றி உவமஞ் சென்றது.

'பொன்மரம் போலக் கொடுக்கு' மென்பது பயவுவமத்தின் பகுதியாய் அடங்கும்; [1]என்னே? மழைத்தொழிலாகிய பெயலாற் பயந்த விளையுளுடன் இடையிட்டுப்போய் உவமங்கொள்ளாது

1. இப்பகுதி ஈண்டைக்கு இயல்பில்லாதுள்ளது.

கொடைப்பொருள் இரண்டும் ஒத்தமையின் மெய்யுவமம் எனப் படாது, கொள்வார்க்குப் பயம் ஒத்தலாற் பயவுமத்தின் வகை யாயிற்று நிலம்போலுங் கொடை என்பதும் அது.

"தெம்முனை யிடத்துச் சேயகொல்"

என்னும் எல்லைப்பொருண்மை மெய்யுவமத்திற்கு வகையெனப் படும், அஃது அன்னவாகலினென்பது. இடைக்கிடந்த நிலம் இரண்டினையும் வடிவுபற்றி உவமஞ்செய்தானென்பது.

மற்றுச் சேய்மை அணுமை குணமாம் பிறவெனின், அற்றன்று துடியிடை என்றவழி அதன் இடைநுணுக்கமுங் குணனாகும், அவ்வாறு கொள்வார்க்கு என்பது; எனவே நிறப்பண்பு அல்லன வெல்லாம் மெய்யுவமத்தின் வகையெனப்படுவனவாயின. குணமாதலொப்புமையான் அவை நிறப்பண்பிற்கு இனமெனவும் படும். அவ்வாறு திரிபுடைமையின் அவற்றை விதந்தோதாது வகை யென்றதனாற் கொண்டானென்பது.

"தளிர்சிவந் தாங்குச் சிவந்தமேனி"

யென்பது உருவுவமத்தின் வகையெனப்படும்; என்னை? உவமத் தாற் கொள்ளப்பட்டுப் பொருள் நிறமாயினும் அதனை வினை விரித்தாங்கு விரித்தமையின் அவ்வேறுபாடு நோக்கி வகை யெனப்பட்டது. பிறவும் அவ்வாறே கொள்க. இப்பகுதி யுடைமை நோக்கி 'வகைபெற வந்த' என்றானென்பது.

(வி-ரை)

யாப்புடைமை நோக்கி-இயைபுடைமை நோக்கி. உள்ளுறை உவமம் அகத்திற்கும் செய்யுள் வழக்கிற்கும், ஏனையுவமம் அகத்திற்கும் புறத்திற்கும் வரும். உலக வழக்கு செய்யுள் வழக்காகிய இருவழக்குகளுக்கும் வரும்.

எழுத்ததிகாரத்தும் சொல்லதிகாரத்தும் செய்யுட்குரியன வற்றை ஆங்காங்கெல்லாம் தொகுத்துக்கூறி வந்துள்ளார் ஆசிரியர். அவ்வாறே செய்யுட்குரிய உள்ளுறை உவமத்தைச் செய்யுளியனுக்கு முற்பட வைத்தமையால் இதுவும் ஒருவகையில் தொகுத்துக்கூறியதேயாகும்.

ஆமா — காட்டுப்பசு,

வினை — தொழில்

பிழம்பு— வடிவு

மாரி — மேகம்

வண்கை— தொடைத்தன்மையுடைய கை.

கட்புலனும் பண்பு - உரு (நிறம்). உற்றுணரும் பண்பு- தொட்டுப் பார்த்து உணரும் குணமுடையது.

வடிவு:

இந்நூற்பாவில் வினை பயன் மெய் உரு எனப் பகுத்துக் கூறாது அடையென்றே கூறியிருக்கலாம். அல்லது வண்ணம், வடிவு ஆகிய இரண்டையும் பண்பென அடக்கியது போல மெய் உரு என்பனவற்றையும் பண்பென ஒன்றாக அடக்கிக் கூறியிருக்கலாம். அவ்வாறன்றிப் பகுத்துக் கூறியதேன்? எனத் தாமே வினா எழுப்பிக்கொண்டு அதற்கு விடைகூறுகின்றார். பேராசிரியர். மெய் (வடிவு) கண்ணால் காண்டற்கே உரியது. உருவினைப் பகலிலேயே அறியமுடியும். வடிவை இரவிலும் அறிய முடியும். இத்தகைய வேறுபாடு உடைமையின் மெய்யையும் உருவையும் வேறாகக் கூறினார். அன்றியும் உவமையின் வகையை எளிதில் விளங்குதற்காக இவ்வாறு விரித்துக் கூறினார் எனினும் அமையும். தண்டியாசிரியர் மெய், உருவை வேறாகக் கூறாது பண்பில் அடக்குவர். இக் கருத்தினை விளக்கும் பகுதியில் சொற்சிதைவு உளது.

களிற்றிரை தெரீஇய - களிறாகிய இரையைத் தேடும்படி பார்வல் ஒதுக்கின் - பார்வைக்கு ஒதுங்குதலோடு. வயப்புலி- வலியபுலி.

வினை மனத்தால் நினைத்துச் செய்யப்படுவது. பண்பு அவ்வாறன்று. ஆதலின் வினையைப் பண்பென்றல் கூடாதாம். அடை - அடைமொழி. ஒன்றற்கு வரும் அடைமொழி மனத்தால் நினைத்துச் செய்யப்படும் வினையைப் பற்றியதுமாகலாம்; அவ்வாறன்றிப் பண்பு பற்றியதுமாகலாம் ஆதலின் அடையெனக் கூறாது வினை பண்பு என விதந்து கூறினார்.

அணைத்தோள் - அணை போன்ற தோள்.

உருவுகிளர் - வடிவுவிளங்குகின்ற. ஓவினை - ஓவியர் தொழில்.

இயல் கற்றன்ன – நடையைப் பயின்றாற்போல.

மாரிப்பீரத்து அலர் – மழைக்காலத்து மலர்கின்ற பீர்க்கு மலர்.

இன்னல் ஆயினள் - இப்பூவின் நிறத்தையொத்தாள்: பசலை நிறம் பெற்றாள் என்பது கருத்து.

பறைக்குரல் ஏழிலி – பறை போன்ற குரலை உடைய மேகம். எச்ச வினை – தனக்குரிய முடிக்குஞ்சொல். நடை கற்றல் பாவை என்னும் வினையெச்சத்திற்குரிய சினை ஈண்டு இல்லை யென்பதாம். கொன்றன்ன என்றவிடத்தும் கொன்றற்குரிய முடிக்குஞ் சொல் இல்லையாம். தோய்வு என்பது – தோய்த லென்னும் தொழிற் பெயர். பொன்மரம் - கற்பக மரம். தெம்முனையிடத்தில் - போர் செய்யும் இடத்தைப் போல. இடைக்கிடந்த நிலம் – இடைவெளி இரண்டு என்றது பகை வரது முனையிடம், தலைவன் சென்ற பிரிவிடம் ஆகிய இரண்டு மாம்.

இதனால் (உவமையால்) பயன் என்னை மதிப்பதோவெனின், புலன் அல்லாதன புலனாதலும் அலங்காரமாகிக் கேட்டார்க் கின்பம் பயத்தலும், ஆப்போலும் ஆமா என உணர்த்திய வழி அதனைக் காட்டகத்துக் கண்டான், முன் கேட்ட ஒப்புமை பற்றி இஃது ஆமாவென்று அறியும் ' தாமரை போல் வாண் முகத்துத் தையலீர்'' என்ற வழி அலங்காரமாகிக் கேட்டார்க்கு இன்பம் பயக்கும் அஃதாவது மேற் சொல்லப்பட்ட எழுதிணை யினும் யாதனுள் அடங்கும் எனின், அவையெல்லாவற்றிற்கும் பொதுவாகிப் பெரும் பான்மையும் அகப்பொருள் பற்றி வரும். மேற்குறிப்பு பற்றி வரும் மெய்ப்பாடு கூறினார்: இது பண்பும் தொழிலும் பற்றி வருதலின் அதன்பின் கூறப்பட்டது என விளக்கம் காண்பர் இளம்பூரணர். (1)

வினை முதலியன விரவி வருதல்

## 277. விரவியும் வருஉ மரபின வென்ப.

இஃது எய்தியது இகந்துபடாமற் காத்தது; நான்கென மேல் (276) தொகை கொடுத்தமையின் அவை வேறு வருத லெய்தியதனை அல்வாறேயன்றி விரவியும் வரும் என்றமையின்.

(இ-ள்) அந்நான்கும் ஒரு பொருளோடு ஒரு பொருள் உவமஞ்செய்யும் வழி ஒன்றேயன்றி இரண்டும் மூன்றும் விரவி யும் வரும் அதன் மரபு (எ-று)

"செவ்வா னன்ன மேனி" (அகம். கடவுள் வாழ்த்து) என வண்ணம் ஒன்றுமே பற்றி உவமஞ்சென்றது.

"அவ்வான்,
இலங்குபிறை யன்ன விலகுவால் வையெயிற்று"
(அகம்-கடவுள் வாழ்த்து)

என்றவழி, வண்ணத்தோடு வடிவுபற்றி உவமஞ் சென்றது.

"காயா மென்சினை தோய நீடிப்
பல்துடுப் பெடுத்த அலங்குகுலைக் காந்தள்
அணிமலர் நறுந்தா தூதுந் தும்பி
கையாடு வட்டில் தோன்றும்
மையாடு சென்னிய மலைகிழ வோனே" (அகம்-108)

என்புழி, ஆடுதற் றொழில்பற்றியும் வடிவுபற்றியும் வண்ணம் பற்றியும் வந்தது. பிறவுமன்ன.

'மரபின'வென்றதனான் அவை அவ்வாறு விராய்வருதலும் மரபே; வேறு வேறு வருதலே மரபெனப்படாதெனக் கொள்க.

(வி-ரை)

விலங்குவால் - விளங்குகின்ற. வெண்மையான பிறைக்கும் பல்லிற்கும் உள்ள ஒற்றுமை வளைவாகிய வடிவும் வெண்மை யாகிய நிறனும் பற்றியதாம்.

பல்துடுப்பெடுத்த - பல துடுப்பினை (நெய்த்துடிப்பு) யொத்த. அலங்குலை - விளங்குகின்ற குலை. கையாடுவட்டில்- கையினலெறிந்து விளையாடும் வட்டைப் போல. மையாடு- மேகம்படிந்துள்ள. வண்டு தாதுண்ணச் சூழ்தல்போல மகளிரும் விளையாடுதல் பற்றி வட்டைக்கொண்டனர். காந்தளின் மீதுள்ள வண்டு மகளிர் கையிடத்துள்ள வட்டைப் போன்றது. (2)

உவமையின் உயர்ச்சி கூறல்

**278. உயர்ந்ததன் மேற்றே யுள்ளுங் காலை.**

இஃது, எய்தாதது எய்துவித்தது.

(இ-ள்) உவமையெனப்பட்டது உயர்ந்த பொருளாகல் வேண்டும் (எ-று).

எனவே, உவமிக்கப்படும் பொருள் இழிந்துவரல் வேண்டு மென்பது.

'அரிமா வன்ன வணங்குடைத் துப்பின்''

எனவும், (பத்து-பட்டின-398)

''மாரி யம்பின் மழைத்தோற் சோழர்'' (அகம்-326)

எனவும்,

''கடல்கண் டன்ன கண்ணகன் பரப்பின்'' (அகம்-176)

எனவும்,

''பொன்மேனி''

எனவும் வரும்.

இவற்றுள் உவமையுயர்ச்சியானே உவமிக்கப்படும் பொருட் குச் சிறப்பெய்துவித்தவாறு கண்டுகொள்க.

'உள்ளுங்காலை' என்றதனான் முன்னத்தினுணருங் கிளவி (தொல்-சொல்-459) யான் உவமங்கோடலும், இழிந்தபொருள் உவமிப்பினும் உயர்ந்த குறிப்புப்படச் செயல்வேண்டுமெனவுங் கொள்க. அவை: 'என்யானை' 'என்பாவை' என்றவழி அவை போலும் என்னுங் குறிப்புடையான், பொருள் கூறிற்றிலனாயி னும், அவன் குறிப்பினான் அவை வினையுவமையெனவும் மெய் யுவமை யெனவும் படும். இவற்றுக்கு நிலைக்களங்காதலும் நலனும் வலியுமென்பது சொல்லுதும்; அவை பற்றாது சொல்லுதல் குற்றமாகலின்.

''அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் னெஞ்சு'' (குறள்-1081)

என்பது ஐயுற்று முன்னத்தான் உவமஞ்செய்தது. தாமரை யன்று முகமேயெனத் துணிந்தவழியும், மழையன்று வண்டிருத்

தலிற் குழலேயெனப் பொருட்குக் காரணங்கொடுத்த வழியும், மதியங்கொல்லோ மறுவில்லை யென்று உவமைக் குறைபாடு கூறுதலும்,

"நுதலு முகனுந் தோளுங் கண்ணும்
இயலுஞ் சொல்லு நோக்குபு நினைஇ
ஐதேய்ந் தன்று பிறையு மன்று
மைதீர்ந் தன்று மதியு மன்று
வேயமன் றன்று மலையு மன்று
பூவமன் றன்று சுனையு மன்று
மெல்ல வியலு மயிலு மன்று
சொல்லத் தளருங் கிளியு மன்று" (கலி- 55)

என்பனவுமெல்லாம் அவை. இவற்றுள் மலையுஞ் சுனையும் உவமையின்மையின் அவற்றைப் பிறையோடும் மதியோடும் உடன்வைத்து உவமைபோலக் கூறி எதிர்மறுத்தது என்னை யெனின், அவையாமாறு 'முதலுஞ் சினையும்' என்புழிச் (தொல். பொருள்- 281) சொல்லுதும்.

'என்ற வியப்ப என்றவை யெனுஅ' (தொல்-பொருள்-286) என மேல்வருஞ் சூத்திரத்துள் என்றவென்பதோர் உவம வுருபு கூறினமையின், "வாயென்ற பவளம்" எனவும். "வாய் பவளமாக" எனவும், "வாய்பவளம்" எனவும் வருவனவும் அக்குறிப்புவமையின் பகுதியெனவே படும்.

இவற்றை வேறு வேறு பெயர்கொடுத்து விரித்துக்கூறுது 'முன்னத்தினுணர்' வனவே இவையெல்லா மென்னுந் துணையே இலேசினாற் கூறி ஒழிந்ததென்னையின், இவற்றாற் செய்யுள் செய்வார் செய்யும் பொருட்படைப்பகுதி எண்ணிறந்தன வாகலின், அப்பகுதியெல்லாங் கூறுது பொதுவகையான் வரை யறைப்படும் இலக்கணமே கூறி யொழிந்தானென்பது.

வாயென்ற பவள மெனவும்" "வாய்பவள மாகவெனவும்" "வாய்பவளமெனவும்" வந்த குறிப்புவமைகளை இக்காலத்தார் உருவகமென்றே வழங்குப.

இனி, 'வாய்பவளம் (யா-வி-ப-362) எனவும், 'கண் குருவிளை' (யா-வி-ப-394) யெனவும் பெயர்ப்பயனிலை வரின்

அவற்றை ஒற்றுமைகாட்டி உருவகம் [1]என்றுராகலின் அதுவும் உவமை யெனவே படுமென்பது.

(வி-ரை)

உவமிக்கப் படும் பொருளினும் உவமை அயர்ந்து விளங்க வேண்டும் என்பது இந்நூற்பாவின் கருத்தாம். "தீதிலா வட மீனின் திறம் இவள் திறம் என்றும்" என இளங்கோவடிகள் கூறியது இது பற்றியேயாம். வலிமையுடைய பலவற்றினும் அரிமா அயர்ந்ததாகலின் அதனை உவமையாகக் காட்டினர். மேலனவற்றிற்கும் இவ்வாறே கொள்க.

அரிமா - சிங்கம். துப்பு - வலிமை. இது வினையுவமமாம். மாரியம்பின் - மழைபோல் சொரிகின்ற அம்பு. பயிரை வளர்த்தலாகிய பயன் மழைக்குளதாதல் போலப் பகைவரையழித்தலாகிய பயன் அம்பிற்குளதாதல் பற்றி இது பயனுவமை எனப்பட்டது.

கடல் கண்டன்ன - கடலைப் பார்த்தாலொத்த. கண்ணகல்- இடமகன்ற. இது வடிவுவமையாகும்.

முன்னத்தால் - குறிப்பால்.

தாமரையன்று முகமே எனக் கூறுவதைத் தண்டியாசிரியர் உண்மையுவமையென்பர். மழையன்று குழலே எனப் பொருட்குக் காரணம் கொடுத்துக் கூறுவதைத் தண்டியாசிரியர் தேற்ற உவமையென்பர். மதியங்கொல்லோ மறுவில்லை என்பதைத் தண்டியாசிரியர் விலக்குவமை யென்பர்.

நுதலையும் முகத்தையும் தோள்களையும் கண்களையும் சாயலையும் சொல்லையும் நோக்கி (உவமை கூற நுதல் வியப்புடைத்தாய்த் தேய்ந்தது.; ஆயினும் பிறையுமன்று. முகம் மறுவற்றது; ஆயினும் மதியமுமன்று. தோள் மூங்கிலின் தன்மை நெருங்கிற்று.; ஆயினும் அது பிறக்கும் மலையிடமுமன்று. கண் பூவின் தன்மை நெருங்கிற்று: ஆயினும் அது பிறக்கும் சுனையிடமுமன்று. சாயலிருந்தபடி மெத்தென நடக்கும்; ஆயினும் மயிலுமன்று. சொல்லுச் சொல்லத் தளரும்.; ஆயினும் கிளியுமன்று என்பது கலித்தொகைப் (55) பாடற்பகுதியின் பொருளாகும்.

---

1. என்றுராயினும் என்றிருப்பின் நன்று.

இக்காலத்தார் - அணியிலக்கண ஆசிரியர்கள், வாய், கண் என்பனவற்றிற்கு முறையே பவளம் கருவிளை என்பன பயனிலை யாம். ஆதலின் அவற்றை உவமை என்றனர். (3)

உவமையின் நிலைக்களம்

**279. சிறப்பே நலனே காதல் வலியோடு
அந்நாற் பண்பு நிலைக்கள மென்ப.**

இதுவும், எய்தாதது எய்துவித்தது.

(இ-ள்) வினை பயன் மெய் உரு என்பனபற்றி உவமை கூறுங்கால் இவை நான்கும் இடனாகப் பிறக்கும் உவமை (எ-று)

'நிலைக்கள' மென்பது அவை அவ்வாறு உவமை செய்தற்கு முதலாகிய நிலைக்களமென்றவாறு.

''முரசுமுழங்கு தானை மூவருங் கூடி
யரசவை யிருந்த தோற்றம் போலப்
பாடல் பற்றிய பயனுடை யெழாஅற்
கோடியர் தலைவ கொண்ட தறிந''

(பத்து–பொருந-54-57)

என்பது, சிறப்பினாற் பெற்ற உவமமாகலிற் சிறப்பு நிலைக்களனாகப் பிறந்தது.

''ஓவத் தன்ன விடனுடை வரைப்பின்'' புறம்-251)

என்புழி அந்நகரினது செயற்கைநலந் தோன்றக் கூறினமையின் அதற்கு நிலைக்களன் நலனாயிற்று,

''பாவை யன்ன பலராய் மாண்கவின்'' (அகம்-98)

என்புழி மகள்கட் காதல் காரணமாக உவமை பிறந்தது. 'என் யானை' யென்பதும் அது.

''அரிமா அன்ன அணங்குடைத் துப்பின்''

(பத்துப்-பட்டின-298)

என ஒருவன் வலிகாரணமாக உவமம்பிறந்தமையின் அதற்கு நிலைக்களம் அவன் வலியாயிற்று.

இவ்வாறு கூறவே, உயர்ந்த பொருளின் இழிந்ததெனப் பட்ட பொருள் யாதேனும் இயைபில்லதொன்று கூறலாகா தெனவும், உவமையொடு முழுதும் ஒவ்வாமைமாத்திரையாகி அதனோடொக்கும் பொருண்மை உவமிக்கப்படும் பொருட் கண்ணும் உளவாகல் வேண்டுமெனவுங் கூறி, அவைதாமும் பிறர் கொடுப்பப் பெறுவனவும், ஒரு பொருட்கண் தோன்றிய நன்மைபற்றியவும்; காதன் மிகுதியால் உளவாகக்கொண்டு உரைப்பனவும், தன்றன்மையால் உளவாயின வலிபற்றினவுமென நான்காமென்றவாறு: இவற்றுக்கெல்லாம் வினை பயன் மெய் உரு என்னும் நான்குந் தலைப்பெய்யுமென்பது.

சிறப்பென்பது உலகத்துள் இயல்புவகையானன்றி விகார வகையாற் பெறுஞ் சிறப்பு. நலனென்றது அழகு. காத லென்பது அந்நலனும் வலியும் இல்வழியும் உண்டாக்கி யுரைப்பது: வலியென்பது தன்றன்மையானே உள்ளதொரு வலியெனக் கொள்க. இவற்றை நிலைக்களமெனவே இவை பற்றாது உவமம் பிறவாதென்பதாம்.

தன்மேல் வருகின்ற பகைவனைப் பகைவன் புலிபோலு மென்று அவன் வீரக்குறிப்பு அறியாமற் கூறுங் குறிப்பு இன்மையின் அவ்வுவமைக்குத் தோற்றம் ஆண்டில்லை; தன் வினை யுவம மாகலின திரியாதாயினு மென்பது.

(வி-ரை)

மூவர் - சேர சோழ பாண்டியர். பயனுடை எழாஅல் - பயனுடை யாழைக்கொண்ட. கோடியர்-கூத்தர். கொண்டதறிந - மனத்துக் கொண்டவற்றைக் குறிப்பால் அறிபவனே. மூவரால் அரசவை சிறப்புற்றது போல யாழ் முதலிய துணைக் கருவி களால் பாடலும் சிறப்புற்றது. ஆதலின் இது சிறப்புவமை யாயிற்று.

ஓவத்தன்ன - ஓவியம் போன்ற. இடனுடைவரைப்பு - அழகிய இடமுடைய நகரின்கண். ஓவியம் அழகு தருதல் போல அந்நகரின் கண் உள்ள இல்லங்கள் அழகு தருதலின் நலம் பற்றிய உவமையாயிற்று.

பாவையையொத்த பலர் ஆய்ந்து செய்த மாட்சிமைப் பட்ட அழகு என்றவிடத்துத் தலைவியைப் பாவையென்றலின்

காதல் காரணமாக உவமை பிறந்தது. மகனை என் யானை என்றலும் அவ்வாறேயாம்.

முழுதும் ஒவ்வாமை மாத்திரையாகிய - முழுதும் ஒவ்வாத தன்மையுடையதாகி. எனவே ஒரு பொருளை உவமிக்குங்கால் அவ்விரண்டும் முழுமையான ஒப்புமையுடையதென்று கருதலாகாது. எடுத்துக்காட்டாக "அரிமா அன்ன அணங்குடைத்துப் பின்" என்றவிடத்துச் சிங்கத்திற்கும் கரிகால் பெருவளத்தானுக்கும் உள்ள ஒப்புமை வலிமை பற்றியது ஒன்றே அன்றிப் பிறவாற்றான் அன்று. எனவே இவ்விரண்டிற்கும் உள்ள ஒப்புமை, அவ்விரண்டிற்கும் உள்ள பொதுத் தன்மையாகிய வலிமை பற்றியேயாம் என்பது கருத்து.

இந்நூற்பாவின் இறுதியில் உள்ள பகுதி நூற்பாவின் உரையை அடுத்தும் ஈற்றயலிலுள்ள பகுதி அதனையடுத்தும், எடுத்துக்காட்டுக்கள் இவ்விரு பகுதியை அடுத்தும் இருத்தல் பொருத்தமுடையதாம்.

தன்மேல் வருகின்ற எனத் தொடங்கும் இந்நூற்பாவின் இறுதிப்பகுதி இயைபின்றி உள்ளது. பாடஞ் சொல்லுங்கால் இடையில் மாணாக்கன் ஒருவன் வினவியமைக்கு விடை இறுந்ததாகக் கொள்ளின் உமைவுடைத்தாம். பகைவனைப் புலி போலும் என்றது வினையுவமாம். எனினும் பகைவனது திறமைக்கு முன் அவ்வாறு கூறப்பட்டிருப்பின் அது வழுவாம். அவன் திறமையறிந்த பின் கூறியிருப்பின் அது வலிமை நிலைக்களமாகக் கூறப்பட்டது எனக் கூறற்கியலும். (4)

இதுவும் அது

## 280. [1]கிழக்கிடு பொருளோ டைந்து மாகும்.

இது, மேற்கூறிய நிலைக்களத்திற்கு ஒரு புறனடை.

(இ-ள்) அந்நிலைக்களம் நான்குமேயன்றிக் கிழக்கிடு பொருளோடு ஐந்தெனவும் படும் (எ-று).

கிழக்கிடுபொருளென்பது கீழ்ப்படுக்கப்படும் பொருள்; "கிளைஇய குரலே கிழக்குவீழ்ந் தனவே" (குறுந்-337)

---

1. கிழக்கிடும் எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

என்புழிக் கீழ்வீழ்ந்தன என்பதனைக் கிழக்குவீழ்ந்தன என்ப வாகலின். ஒரு பொருளின் இழிபு கூறுவான் உவமத்தான் இழிபு தோற்றுவித்தலின் அதுவும் நிலைக்களமா மென்றவாறு. அவை,

"உள்ளூது ஆவியிற் பைப்பய நுணுகி" (அகம்-71)

எனவும்,

"அரவுநுங்கு மதியின் நுதலொளி கரப்ப" (அகம்-313)

எனவும் வரும்.

இவை பொருளன்றி உவமையுங் கிழக்கிடப்பட்டன வாலெனின், அங்ஙனமாயினும் அவை பொருளோடு சார்த்தி நோக்க உயர்ந்தன வெனப்படும்.

(வி-ரை)

கிளைஇய குரலே - (தலையில்) கிளைத்த மெல்லிய மயிர். கிழக்கு வீழ்ந்தன - கீழ் வீழ்ந்தன (இவ்வாறு கூறியது பருவம் குறிக்கவேவாம்). கிழக்கு என்பதற்கு ஈண்டுக்கீழ் எனப் பொருள் கொண்டாற்போல, நூற்பாவிலும் கிழக்கிடுபொருள் என்ப தற்குக் கீழ்மையான பொருள்: அதாவது தாழ்ந்த பொருள் எனப் பொருள் கூறப்பட்டது.

உள்ளூது ஆவியின் - கண்ணாடியின் கண் வாயினால் ஊதிய ஆவியைப் போல. பைப்பயநுணுகி - மெல்ல மெல்லச் சுருங் கிற்று. தலைவன் பொருள்வயிற் பிரிந்தவிடத்து ஆற்றாளாய தலைவி தன் வலிமை மெல்ல மெல்ல குறைதற்குப் பெருகிப் பின் சுருங்கும் உள்ளூது ஆவி உவமையாயிற்று.

அரவு நுங்கு மதியின் - பாம்பு விழுங்கிய திங்களைப் போல. பிரிவிடை வேறுபட்ட தலைவியின் நுதல் ஒளியிழந் தமைக்கு உவமையாயிற்று.

இங்குக்காட்டப்பட்ட இரு பொருள்களும் தாழ்ந்த பொருளேயாயினும் பொருளை (உபமேயத்தை) நோக்க உயர்ந்தனவேயாம். பொருளினும் உவமை உயர்ந்ததன்றேல் 'உயர்ந்தன் மேற்றே உள்ளுங்காலை 'யென்பதோடு மாறுபடும்.(5)

உவமை, முதல் சினை பற்றி வருமாறு

**281. முதலுஞ் சினையுமென் றாயிரு [1]பொருட்கும்**
**நுதலிய மரபி னுரியவை யுரிய.**

இது, மேற் கூறிவருகின்ற உவமை முதல் சினைபற்றி வருங்கால் இன்னவாறாக வென்கின்றது.

(இ-ள்) முதற்பொருளுஞ் சினைப்பொருளும் என்னும் அவ்விரண்டு பொருட்குங் குறித்த வகையான் மரபு படவரின் உரியவை உரியவாம் (எ-று)

இதன் கருத்து, முதலொடு முதலும், சினையொடு சினையும், முதலொடு சினையும், சினையொடு முதலுவேண்டியவாற்றான் உவமஞ்செய்தற்கு உரியவெனவும், அங்ஙனஞ் செய்யுங்கால் மரபு பிறழாமைச் செய்யப்படுமெனவுங் கூறியவாறு :

"வரைபுரையு மழகளிற் றின்மிசை" (புறம்-38)

என்பது, முதற்கு முதலே வந்து உவமையாயிற்று.

"தாமரை புரையுங் காமர் சேவடி"
(குறுந்-கடவுள்வாழ்த்து)

என்பது, சினைக்குச் சினையே வந்து உவமையாயிற்று.

"நெருப்பி னன்ன சிறுகட் பன்றி" (அகம்-84)

என்பது, முதல் உவமமாகப் பொருள் சினையாகி வந்தது.

"அடைமரை யாயிதழ்ப் போதுபோற் கொண்ட
குடைநிழற் றோன் றுநின் செம்மலைக் காணூஉ"
(கலி-84)

என்பது, சினையுவமமாக உவமிக்கப்படும் பொருண் முதலாயிற்று.

'நுதலிய மர' பென்றதனால்,
"விசும்பி னன்ன சூழ்ச்சி" (புறம்-2)

என்றக்கால், விசும்பென்பது முதலாதல் கருதியுணர்தல் வேண் டும், முதற்சினைப்பகுதி அதற்கு இன்மையினென்பது.

---

1. பொருட்கு எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

இனி,

"வேயமன் றன்று மலையு மன்று" (கலி-55)

என்ற வழியும் மலைநோக்காது மலையுள் வேயெழும் இடங் கருதி அவ்விடமன்று என்றவாறெனக் கொள்க.

"பூவமன் றன்று சுனையு மன்று" (கலி-55)

என்பதற்கும் ஒக்கும்.

உரிய என்னாது 'உரியவை' என்றதனால் திணையும் பாலும் மயங்கிவரும் உவமையுங் கொள்ளப்படும். அவை,

"மாரி யானையின் வந்துநின் றனனே" (குறுந்-161

என்பது, திணைமயங்கிற்று.

"கூவற், குராலான் படுதுய ரிரவிற் கண்ட
உயர்திணை ஊமன் போலத்
துயர்பொறுக் கல்லேன் றோழி நோய்க்கே"
(குறுந்-224)

என்பது, உயர்திணைப்பால் மயங்கிற்று.

"கடம்பமர் நெடுவே ளன்ன மீளி
யுடம்பிடித் தடக்கை யோடா வம்பலர்"
(பத்துப்-பெரும்பாண் 75)

என்பது, ஒருமை பன்மை மயங்கிற்று.

"இலங்குபிறை யன்ன விலங்குவால் வையெயிற்று"
(அகம்-கடவுள் வாழ்த்து)

என்பது, அஃறிணைப்பால் மயங்கிற்று. பிறவுமன்ன,

இக்கருத்து அறியார் இவற்றையுஞ்

"செப்பினும் வினாவினுஞ் சினைமுதல் கிளவிக்கு"
(தொல்-சொல்-கிளவு-16)

என்புழி இலேசுகொண்டு உரைப்ப.

(வி-ரை)

புரையும்-ஒக்கும், மலையை மழகளிற்றொடு உவமித்தலின் முதற்கு முதலே வந்தது.

தாமரை-இது மலரைக் குறித்தலின் சினையாயிற்று. நெருப்பைக் கண்ணொடு உவமித்தலின் முதலும் சினையுமாக வந்தது.

அடைமரை - தாமரையின் இலை. தாமரையின் இலையின் கீழ் மறைந்து நிற்கும் தாமரை மலரைப்போல் குடையின் நிழலின் தோன்றும் புதல்வன் என்றமையின் முதற்பொருளுக்குச் சினையுவமையாயிற்று.

விசும்பின் அன்னசூழ்ச்சி — விண்ணை யொத்த அகன்ற சூழ்ச்சி. தோளுக்கு மூங்கில் உவமையேயன்றி அது உளவாகும் மலை உவமையன்று என்பது கருத்து. மழையில் நனைந்த யானை போல் தலைவன் வந்து நின்றான் எனவே உயர்திணைக்கு அஃறிணை உவமையாயிற்று.

கூவல் குரால் ஆன் — கிணற்றின்கண் வீழ்ந்த கபிலைப்பசு. உயர்திணை ஊமன் - உயர்திணை ஆண்பாலெனப்படுதற்குரிய ஊமையன். ஊமையன் இரவில் பசு படும் துயரைப் பிறர்க்கு வாயின்மையாலும் இரவாதலின் சைகையினாலும் அறிவிக்க இயலாது வருந்துவது போல, தலைவி, தன்பொருட்டுத் தோழி படும் வருத்தத்தைத் தான் பொறுக்கலாற்றாது வருந்துகிறாள் என்றமையின் பெண்பாலுக்கு ஆண்பால் உவமையாகி மயங்கிற்று.

கடம்பு அமர் நெடுவேள் - கடம்ப மரத்து அமர்ந்திருக்கும் முருகப்பெருமான். மீளி-கூற்றுவன். உடம்பிடி—வேல். முருகப் பெருமானை ஒத்த வம்பலர் (பகைவர்) என்றமையின் ஒருமை பன்மை மயங்கிற்று, பிறையன்ன பற்கள் என்பதால் அஃறிணையில் ஒருமை பன்மை மயங்கிற்று. (6)

சுட்டிக்கூறா உவமை

**282. சுட்டிக் கூறா வுவம மாயிற்**
**பொருளெதிர் புணர்த்துப் [1]புணர்ந்தன கொளலே.**

இஃது, எய்தாதது எய்துவித்தது.

(இ-ள்.) உவமத்திற்கும் பொருட்கும் பொதுவாகிய ஒப்புமைக்குணம் நான்கினையும் விதந்து சொல்லி உரையாதவழி அவ்விரண்டினையும் எதிர்பெய்து கூட்டி ஆண்டுப் பொருந்திய

1. புணர்த்தன எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

தொன்று பொருந்தியதுபற்றி வினை பயன் மெய் யுருவென்னும் நான்கினுள் இன்னதென்று சொல்லப்படும் (எ-று).

'பவளம்போற் செந்துவர்வா' யென்பது சுட்டிக் கூறிய வுவமம்; என்னை? இரண்டிற்கும் பொதுவாகிய செம்மைக் குணத்தினைச் சொல்லியே உவமஞ் சொல்லினமையின். அது பவளவாயென்கின்றவழிச் சுட்டிக்கூறா வுவமமாம். ஆண்டுப் பவளத்தினையும் வாயினையுங் கூட்டிப்பார்த்துச் செம்மைக் குணம்பற்றி உவமஞ் செய்ததென்று அறியப்படும்; அல்லாக்கால், வல்லென்ற கல்லிற்கும், மெல்லென்ற இதழிற்கும் உள்ள தோர் ஒப்புமை ஆண்டில்லையென்பது; பிறவும் அன்ன.

(வி-ரை)

ஒப்புமைக்குணம் நான்கு-வினை, பயன், மெய், உரு என்பன. சுட்டிக்கூறா உவமையைத் தாண்டியாசிரியர் தொகை உவமை என்பர். உவமைக்கும் பொருளுக்கும் உள்ள பொதுத்தன்மை தொகுவதைத் தொகை உவமைஎன்பர் சிலர். சிலர் அதனோடு உருபு தொகுவதையும் தொகை உவமை என்பர். இளம்பூரணர் உவமையும் பொருளும் கூறி அவற் றிடையே உவமையுருபு புணராமையைச் சுட்டிக் கூறா உவமை என்பர். இதனை அணியிலக்கண ஆசிரியர் எடுத்துக்காட்டு வுவமை என்பர். (7)

உவமையும் பொருளும் ஒத்துவருதல்

### 283. [1]உவமையும் பொருளும் ஒத்தல் வேண்டும்.

இதுவும் அது.

(இ-ள்.) உவமானமும் பொருளுந் தம்மின் ஒத்தனவென்று உலகத்தார் மகிழ்ச்சி செய்தல் வேண்டும் (எ-று)

"மயிற்றேரைகைபோலுங் கூந்தல்"

என்பதன்றிக்,

"காக்கைச் சிறகன்ன கருமயிர்"

என்று சொல்லின், அஃதொத்ததெனப் படாது என்றவாறு.

---

1. உவமமும் எனப் பாடங் கொள்வர் இளம்பூரணர்.

"புலிபோலப் பாய்ந்தான்"

என்பதன்றிப் பிழையாமற் பாயும் என்பதேபற்றிப்

'பூசைபோலப் பாய்ந்தான்"

எனின், அதுவும் ஒப்பென்று கொள்ளாது உலகமென்றவாறு. ஈண்டு ஒத்தவென்பதனை,

"ஒத்த தறிவான்" (குறள்-214)

என்பதுபோலக் கொள்க.

(வி-ரை.)

ஒரு பொருட்டு உவமை கூறுங்கால் வேண்டியவாறு உவமை கோடல் மரபுஅன்று. பொருட்கு வரும் உவமையைக் கேட்பார் மனமகிழ்ந்து ஏற்றுக் கோடல் வேண்டும். என்பது இந் நூற்பாவின் கருத்தாகும்.

கருமை பற்றிக் கூந்தற்குக் காக்கைச்சிறகும் ஒப்புமை கூறற்கு உரியதாயினும் மரபும் அழகும் இன்மையின் மயில் தோகையே உவமை கூற வேண்டும். என்பதாம். இவ்வாறே பாய்தற்கும் புலியைக்கூறுதலே மரபும் அழகுமாம். ஒத்தல் வேண்டும் - உலகத்தார் ஒப்புக்கொள்ளுதற்குரியதாதல் வேண்டும்.

இளம்பூரணர் இரட்டைக்கிளவியாயினும், நிரனிறுத் தமைத்த நிரனிறைச் சுண்ணமாய் வரினும், மிக்கும்குறைந்தும் வருவதன்றி உவமை அடையடுத்துவரினும், ஒன்று பலவுமாகி வரினும் வருமொழியும்அவ்வாறே வருதல் வேண்டும். அவ்வழி வாராது மிக்கும் குறைந்தும் வருவது குற்றமாம் என இதற்கு விளக்கம் காண்பர். (8)

பொருளை உவமையாக்கிக் கூறல்

**284. பொருளே யுவமஞ் செய்தனர் மொழியினும்**
**மருளறு சிறப்பின ஃ துவம மாகும்.**

இது, மேற்கூறியவாறன்றி வருவதோர் உவமை விகற்பங் கூறுகின்றது.

(இ-ள்) "உயர்ந்ததன் மேற்றே யுள்ளுங் காலை" (தொல். பொருள் 278) என்புழி உவமம் உயர்ந்துவரல் வேண்டுமென்றான் இனிப் பொருளினை உவமமாக்கி உவமையை உவமிக்கப் படும் பொருளாக்கி மயங்கக்கூறுங் காலும் அஃது உவமம்போல உயர்ந்ததாக்கி வைக்கப்படும் என்றவாறு.

"வருமுலை யன்ன வண்முகை யுடைந்து
திருமுக மவிழ்ந்த தெய்வத் தாமரை"
(பத்துப்-சிறுபாண்-72-73)

என்றவழி, வருமுலையுந் திருமுகமும் ஈண்டு உவமையாகி முகையும் பூவும் பொருளாயின; ஆண்டு முலையும் முகமும் உயர்ந்தவாகச் செய்தமையின் அவையே உவமமாயின.

இவை உவமைத்தொகையாங்கால் முலைக்கோங்கம் முகத்தாமரை எனப்படும். இவற்றை வேறு உருவகமென்றும் பிறர் மயங்குப.

சிறப்பென்றதனான் ஒப்புமை மாத்திரையன்றித் தான் புனைந்துரைக்கக் கருதிய முலையினையும் முகத்தினையும் உயர்ந்த பொருளாகிய உவமத்தினும் உயர்ந்தவாகச் சிறப்பித்துரைத்தானென்பது.

'மருளறு சிறப்பின்' என்றதனான் அங்ஙனஞ் சிறப்பிக்குங்கால் மயக்கந்தீரச் சிறப்பித்தல் வேண்டும். அன்றேல் உலகினுள் உயர்ந்ததென்று ஒப்ப முடித்த பொருளினையுஞ் சிறப்பித்தற்கு உவமஞ் செய்பவோ வெனிற், செய்யாரென்பது; என்னை? முகமொக்குந் தாமரை என்றால் முகத்திற்குந் தாமரைக்குஞ் சிறப்புடைமை மயங்கி வாராது,பின்னும் முகத்திற்கே சிறப்பா மென்பது கருத்து.

அஃதெனப்பட்டது பொருளாகலான் 'உயர்ந்ததன் மேற்று' (278) என்னும் விதி அப் பொருட்கு எய்துவிக்க.

(வி-ரை)

பொருள்- வடநூலார் இதனை உவமேயம் என்பர். இவ்வாறு வரும் உவமையைத் தண்டியாசிரியர் இதர விதர உவமை என்பர். உவமையின் வகையாக வருவதை உவமையின் பாற்படுத்தவேண்டுமேயன்றி அதனை உருவகம் எனப்பிறிதொரு அணியாக்குதல் வேண்டுவதன்று என்பது பேராசிரியர் கருத்து.

(9)

உயர்வும், இழிவும் பற்றி உவமை வருமாறு

**285. பெருமையுஞ் சிறுமையுஞ் சிறப்பிற் றீராக்**
**குறிப்பின் வருஉ நெறிப்பா டுடைய.**

இஃது, உவமத்திற்கு ஆவதோர் இலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) இறப்ப உயர்வும் - இறப்ப இழிவும் உவமிக்குங் கால் இன்னுவாகச் செய்யாது சிறப்புடைமையில் தீராவாகிக் கோட்டார் மனகொள்ளுமாற்ருன் வருதலே வழக்கு வலியாக வுடைய (எ-று)

''அவாப்போல் அகன்ற அல்குன்மேற் சான்றோர்
உசாஅப்போ லுண்டே நுசுப்பு''

என்றவழி, உலகத்தார் அவாப்போலப் பெரிதாகிய அல்குலெனக் கழிபெரும் பரப்பிற்ருகக் கூறினும் அது சிறப்பில் தீராக் குறிப்பிற்ருதல் வழக்குண்டாகலின் உடம்படப்படும் என்றவாறு.

''மாக்கடல் நடுவண் எண்ணாட் பக்கத்துப்
*பசுவெண் திங்க டோன்றி யாங்குக்
கதுப்பயல் விளங்குஞ் சிறுநுதல்'' (குறு'ந்-129)

என்றவழிக், கடல்போன்றது கூந்தலெனவுங், கடனடு எழுந்த எண்ணாட் பக்கத்து மதிபோன்றது நுதலெனவுங் கூறினன். அதனற் கடல்போலும் மயிரென்றதும் பல காவதப் பரப் புடைய மதிபோன்றது நுதலென்றதுங் கழியப் பெரியவாயினும் அது வழக்காதலிற் சிறப்பிற் றீராது மனங்கொள வந்ததெனவே படும்.

''சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள்''

என்பதும் அது. (பத்துப்-திருமுரு-43)

''சான்ரோர் உசாஅப்போ லுண்டே நுசுப்பு''

என்றவழியும், நுண்ணுணர்வின் ஆராய்ச்சி ஒருவர்க்கும் புலனுகாததனை ஒக்கும் இடையென்றமையின் அதுவுங் கழியச் சிறிதாக உவமித்தார்.

''யானை யனையவர் நண்பொரீஇ நாயனையார்
கேண்மை கெழீஇக் கொளல்வேண்டும்'' (நாலடி-213)

என்பதும் அது. இவையுஞ் சிறுமையுஞ் சிறப்பிற் றீராக் குறிப்பின் வந்த வழக்காதல் அமைந்தனவென்பது பிறவுமன்ன.

இவ்வாறன்றி மேருமால்வரை காம்பொத்து விண்முகடு குடையொத்து விண்மீன்கணம் முத்துப்போன்றன வென வடிவு பற்றி உவமங்கூறுதல் தமிழ்[1] வழக்காகின்ற தென்பது.

இனி,

"வள்ளத்தின் நீர் கொண்டு உமிழ்ந்த முலைச்சாந்து மறுகிற்
பரந்து அள்ளல் யானை யெல்லா மடிவழுக் கினவே"

என்பதோ வெனின், அவ்வாற்றானும் இன்பங் கொள்வார்க்கு அவையும் இழுக்கில என்பது.

"சோறுவாக்கிய கொழுங்கஞ்சி
யாறுபோலப் பரந்தொழுகி" (பத்துப்-பட்டினப்-44-45)

என்பதோ வெனின், யாறென்ற துணையானே பேர்யாறெனக் கொண்டு உலகிறந்தனவாகாமைக்கன்றே,

"ஏறுபொரச் சேறாகித்
தேரோடத் துகள்கெழுமி" (பத்துப்-பட்டினப்-46-47)

என்பதாயிற்றென்பது.

(வி- ரை)

ஒரு பொருட்கு உவமை கூறுங்கால் அதனை மிகவும் உயர்த்தோ அன்றி மிகவும் தாழ்த்தோ கூறினும் கேட்போர் அவற்றை ஏற்குமாறு கோடல் வேண்டும். எனவே அவ்வாறு கூறப்படுதல் சான்றோர் தம் மரபிற்கு ஒத்திருத்தல் வேண்டும். எல்பதாம்.

எண்ணாள் பக்கத்து - எட்டாம் நாளிடத்துப்பிறை. நிலத்தினும் சந்திரமண்டலம் பாதியளவுடையது என்பர் ஆதலின் அதனை பலகாவதற் பரப்புடையதென்றார்.

மூசா—மொய்க்காத. முருகன் விரும்பும் காந்தளாதலின் வண்டு மொய்க்காதாயிற்று.

---

1. தமிழ் வழக்காகின்றதன்று என்றிருப்பின் பொருத்தம் போலும்.

உசா – ஆராய்ச்சி.

மேரு மால் வரை காம்பொத்து என்றாற் போல உவமம் கூறுதல். புறப்பொருள் வெண்பாமாலையுள்ளும் காணப்படுகின்றது.

வேயுள் விசும்பு விளங்கு கதிர்வட்டம்
தாய புகழான் தனிக்குடைக்குத் – தோயம்
எதிர்வழங்கு கொண்மூ இடைபோழ்ந்த சுற்றுக்
கதிர்வழங்கு மாமலை காம்பு (பு.வெ.மா.வாகை-28)

வள்ளத்தில் – சிறு கிண்ணத்தில். உமிழ்ந்த – கழுவிய. அள்ளல்-சேறு.

வாக்கிய – வடித்தொழுக்கிய. ஏறு – ஆன் ஏறுகள். (10)

உவம உருபுகள்

286, அவைதாம்,
அன்ன ஏய்ப்ப உறழ ஒப்ப
என்ன மான வென்றவை யெனாஅ
ஒன்ற வொடுங்க வொட்ட வாங்க
வென்ற வியப்ப என்றவை யெனாஅ
வெள்ள விழைய விறப்ப நிகர்ப்பக்
கள்ளக் கடுப்ப ஆங்கவை யெனாஅக்
காய்ப்ப மதிப்பத் தகைய மருள
மாற்ற மறுப்ப வாங்கவை யெனாஅப்
புல்லப் பொருவப் பொறப்ப் போல
வெல்ல வீழ வாங்கவை யெனாஅ
நாட நளிய நடுங்க நந்த
வோடப் புரைய வென்றவை யெனாஅ
[1]ஆறாறு அவையு மன்ன பிறவுங்
கூறுங் காலைப் பல்குறிப் பினவே.

இஃது, உவமத்தினையும் பொருளினையும் ஒப்பிக்குங்கால் இடைவருஞ் சொல் இனைத்தென்கின்றது. 'அவைதா' மென்பது, வினை பயன் மெய் யுரு வென்னு நான்குவமையு மென்றவாறு.

1. ஆறாறு உவமையும் அன்னவை பிறவும் எனப் பாடங் கொள்வர் இளம்பூரணர்.

(இ-ள்.) இவை எண்ணப்பட்ட முப்பத்தாறு சொல்லும் இவையே போல்வன பிறவும் வழக்கிடத்துஞ் செய்யுளிடத்தும் வேறுபடு குறிப்பினவாகி வரும் (எ-று.)

'ஆறாறவையு' மென்பது அவை முப்பத்தாறு மென்றவாறு. 'பல்குறிப்பின' வென்பது, அவை இடைச் சொல்லாகித் தொகுத்து வருவனவுந் தொகாதே நிற்பனவும் வினைச் சொல்லாகி வேறுபட நிற்பனவு மெனப் பலவா மென்றவாறு.

இவ்வோதிய வாய்பாடெல்லாம் நான்கு உவமத்திற்கும் பொது வென்பது ஈண்டுக் கூறி, இனி அவை சிறப்புவகையான் உரியவாறிது வென்பது மேற் கூறுகின்றான்.

'பிறவும்' என்பதனான் எடுத்தோதினவேயன்றி, நேர நோக்க துணைப்ப மலைய ஆர அமர அனைய ஏர ஏர்ப்ப செத்து அற்று கெழுவ என்றற்றொடக்கத்தன பலவும், ஐந்தாம் வேற்றுமைப் பொருள்பற்றி வருவனவும், எனவென் எச்சங்கள் பற்றி வருவனவும் பிறவுமெல்லாங் கொள்க. ஈண்டு எடுத்தோதியவற்றுள் வரையறை வகையவென மேற் கூறப்படுவன பொதுவகையான் வருமாற்றுக்கும் உதாரணம் அவற்றை உரிமை வகையான் உதாரணங் காட்டும்வழிக் காட்டுதும்.

ஆண்டு எடுத்தோதாதன ஆறெனப்படும். அவை, ஒன்ற என்ற மாற்ற பொற்ப நாட நடுங்க என்பன. அஃதேல் ஆண்டு வரையறை கூறப்பட்டன எண்ணான்கு முப்பத்திரண்டாயின வாறென்னை? முப்பதேயாகல் வேண்டுமால் அவையெனின், அவற்றோடு புறனடையாற் கொண்டவற்றுள்ளும் நேர நோக்க என்னும் இரண்டு கூட்டி ஓதினான் ஆண்டென்பது.

அது பொதுவகையான் வருமாறு:

> "வேலொன்று கண்ணார்மேல் வேட்கைநோய் தீராமோ
> கோலொன்று கண்ணொன்று கொண்டு"

என்பது வினையுவமம்.

> "மழையொன்று வண்தடக்கை வள்ளியோற் பாடி"

என்பது பயனுவமம்.

"வேயொன்று தோளொருபால் வெற்பொன்று தோளொரு பால்' என்பது மெய்யுவமம்.

"குன்றியுங் கோபமு மொன்றிய வுடுக்கை"

என்பது உருவுவமம்.

ஒழிந்தனவும் இவ்வாறே நான்கு பகுதியும்பற்றி வருமாறு கண்டுகொள்க.

"வாயென்ற பவளம்" என்றது பண்புவமைபற்றி வந்தது இது "வாயாகிய பவளம்" என்று ஆக்கச் சொல்லானும் வரும்

"மணிநிற மாற்றிய மாமேனி"

என்பது உருவுமம்.

"மதியம் பொற்ப மலர்ந்த வாண்முகம்"

என்பது மெய்யுவமம்.

"வேயொடு நாடிய தோள்"

என்பது நாடவென்பது வந்த மெய்யுவமம்.

"படங்கெழு நாக நடுங்கு மல்குல்"

என்புழி, நடுங்கவென்பது மெய்யுவமம்பற்றி வந்தவாறு.

இவ்வோதிய வாய்பாட்டோடு பொருந்த வருஞ் சொல்லெல்லாம் பல் குறிப்பின வென்பதனுற் கொள்ளப்படும். இப்பகுதி யெல்லாம் புறனடையாற் கொள்வனவற்றிற்கும் ஒக்கும். இச்சொற் பரப்பெல்லாம் நோக்கி, "உவமச் சொல்லே வரம்பிகந் தனவே" என்று ஓதி உரைப்ப; அவை அவ்வச் சொல்லுள் அடங்கு மாற்றான் வரம்பிகந்தனவாகா வென்பது.

இனிப் 'பிறவு' மென்றதனுன் ஓதப்பட்டன வறுமாறு:

"துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று" (குறள்-22)

என்பதனுள், துணைப்பவென்பதூஉம் அற்றென்பதூஉம் வந்தன.

"குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின்" (குறள்-965)

என்று அனையவென்பது வந்தது. பிறவுமன்ன

"கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்" (குறுந்-9)

என, இன் வேற்றுமையும் உவமவுருபோடு வந்தது.

"குளித்துப் பொருகயலிற் கண்பனி மல்க"

என்பது, உவமவுருபின்றி இன்னுருபு தன்பொருட்கண்ணும் வந்தது.

"தூதுணம் புறவெனத் துதைந்தநின் னெழினலம்"
(கலி- 56)

என்பது எனவெனெச்சத்தால் உவமம் வந்தது. பிறவுமன்ன.

இவை எல்லாம் வரைவின்றி நான்குவமமும்பற்றி வருமாறு கண்டுகொள்க. ஐந்தாம் வேற்றுமைப் பொருள் வந்த உவமங்களும் பிறவும் உவமத்தொகை யெனப்படா, தொகைப் படாமையினென்பது. அங்ஙனந் தொகைப்பட்ட வழியும் மற்று மேலுரிமை கூறுகின்றதாமென்பது,

"மதியொத்தது மாசற்ற திருமுகம்"

என்றவழி, உவமமாயினும் உவமத்தொகை யெனப்படாது தொகைப்பாடின்மையினென்பது.

(வி- ரை)

தொகுத்து வருவன - உருபுகள் மறைந்து வருவன. தொகாதே நிற்பன - உருபுகள் விரிந்து நிற்பன.

ஈண்டுக் கூறப்படும் உருபுகள் வினை பயன் மெய் உரு ஆகிய நான்கிற்குமாக வரையறுக்கப்பெறுகின்றன. அவ்வவ்விடத்தும் சிறப்பு வகையான் உதாரணம் காட்டுகின்ற பொழுது அது பொது வகையான் வருவனவற்றிற்கும் உதாரணம் காட்டப் படும்.

இங்குக் கூறப்பட்டிருக்கும் முப்பத்தாறு உருபுகளுள் ஆறு உருபுகள் பின் வகைப்படுத்திக்காட்டும் பொழுது கூறப்பட வில்லை. எனவே முப்பது உருபுகளே வகைப்படுத்த வேண்டும். ஆயினும் வகைச்சூத்திரத்து முப்பத்திரண்டு உருபுகள் வகைப் படுத்தப்பட்டிருப்பதற்குக் காரணம் இங்கு மிகையினால் கூறிய உருபுகள் இரண்டைக் கூட்டியேயாம்.

வேலொன்று கண்ணார் - வேலையொத்த கண்களையுடைய மகளிர். கோல் ஒன்று கண் - அம்பு போன்ற கண். வேலும் அம்பும் பகை விளைப்பது போலப் பெண்களின் கண்ணும் நோய்

செய்வது பற்றி இது வினையுவமையாயிற்று. ஒன்று நோய் நோக்கும் பிறிதொன்று நோய் தீர்க்கும் மருந்தாகவும் அமைதல் காண்க.

மழையென்று - மழைபோன்ற. வேயென்று - மூங்கில் போன்ற.

குன்றி - குன்றி மணி, கோபம் - இந்திர கோபப்பூச்சி. என்ற, மாற்ற, பொற்ப, நாடிய, நடுங்க, என்பன, போல என்னும் பொருள் படுவன. தன்பொருட்கண் - ஒப்புப் பொருளின்கண்.

தூது - கல். புறவென - புறாப்போல. தொகைப்பாடு - தொகைப்படுதல். அதாவது உருபுகள் தொக்குவருதல். (11)

வினையுவமைக்கண் வரும் உருபுகள்

**287. அன்ன வாங்க[1] மான விறப்ப**
**வென்ன வுறழத் தகைய நோக்கொடு**
**கண்ணிய வெட்டும் வினைப்பா லுவமம்.**

இது மேற்பொதுவகையாற் கூறியவாறன்றி வினையுவமைக் சிறந்து வருவன இவையென வரைந்து கூறுகின்றது.

(இ-ள்) இவ்வெட்டும் வினையுவமம், (எ-று)

"எரியகைந் தன்ன தாமரைப் பழனத்து" (அகம்-106)

எனவும்,

"கயநா டியானையின் முகனமர்ந் தாங்கு" (அகம்-16)

எனவும்,

"கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்" (குறுந்-9)

எனவும்,

"புலி விறப்ப வொலிதோற்றலின்"

எனவும்,

---

1. வாங்கு எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

"புலியென்னக் கலிசிறந் துராஅய்"

எனவும்,

"மின்னுற ழிமைப்பிற் சென்னிப் பொற்ப"

(பத்துப். திரு- 85)

எனவும்,

"பொருகளிற்று எருத்திற் புலித்தகைப் பாய்த்துள்"

எனவும்,

"மானேக்கு நோக்கு மடநடை ஆயத்தார்"

எனவும் வரும்.

இனிக்,

"கார்மழை முழக்கிசை கடுக்கும்" (அகம்-14)

எனவும்,

"யாழ்கெழு மணிமிடற்று அந்தணன்"

(அகம்-கடவுள் வாழ்த்து)

எனவும்,

"ஒளித்தியங்கு மரபின் வயப்புலி போல (அகம்–22)

எனவும்,

"ஒழுகை நோன்பக டொப்பக் குழீஇ" (அகம்-30)

எனவுங்,

"குறுந்தொடி யேய்க்கு மெலிந்துவீங்கு திவவின்"

(பத்துப்-பெரும்பாண்-13)

எனவும், பிறவாய்பாட்டாற் சிறுபான்மை வரும் வினையுவமம் பொதுவிதியாற் கொள்ளப்படும்; பிறவுமன்ன.

(வி–ரை)

எரியகைந்தன்ன – நெருப்புச் செறிந்தாற் போன்ற.

கயம்நாடு யானையின் - குளத்தை நாடிச்சென்று முழுகிய யானை போல

புலிவிறப்ப - புலி போல.

கலி சிறந்து உராய் - ஒளி சிறந்து உலாவி

மின்னுறழ் இமைப்பில் - மின்னலொடு மாறுபடுகின்ற விளக்கத்தோடு.

பொற்ப - பொலிவு பெற.

பொருகளிற்று எருத்தின் - போர் செய்கின்ற யானையது கழுத்தின்.

யாழ்கெழு மணிமிடற்று அந்தணன் - யாழின் தன்மையை ஒத்த அழகிய குரலினையுடைய அந்தணன்.

ஒழுகைநோன் பகடு - வண்டியில் பூட்டிய வலிய எருமைக் கிடாக்கள்.

குறுந்தொடி எய்க்கும் வீங்கு திவவின் - குறுகிய வளையல்களை யொக்கும் நெகிழ வேண்டிய இடத்து நெகிழ்ந்து இறுக வேண்டிய இடத்து இருகிய நரம்பு. (12)

அன்ன என்பது பிற உவமைக்கண்ணும் வருமாறு

**288. அன்னவென் கிளவி பிறவொடுஞ் சிவணும்.**

இஃது, எய்தியது இகந்துபடாமற் காத்தது.

(இ-ள்.) வினைக்கே உரிமை யெய்தியதாகக் கூறிய அன்ன. வென்பது நான்குவமைக்கும் உரிமையொக்க வரும் (எ-று) அவை:

"மாரி யன்ன வண்கை" (புறம்- 133)

எனவும்,

"இலங்கு பிறையன்ன விலங்குவால் வையெயிற்று"
(அகம்-கடவுள் வாழ்த்து)

எனவும்,

"செவ்வா னன்ன மேனி" (அகம்-கடவுள் வாழ்த்து)

எனவும் ஒழிந்த மூன்றற்கும் பெருவரவினுன் வந்தவாறு வழக்கு நோக்கி உணர்க.

(வி-ரை)

ஒழிந்த மூன்றற்கும் - பயன் மெய் உரு என்ற மூன்றற்கும். பெருவரவினுன் - பெரு வழக்காக.

பயனிலைக்கண் வரும் உருபுகள்

**289. என்ன விழைய புல்லப் பொருவக்**
**கள்ள மதிப்ப வெல்ல வீழ**
**என்றுங் கெட்டே பயனிலை யுவமம்.**

இது, முறையானே பயனிலையுவமைக்குச் சிறந்த வாய்பாடு இவையென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) இவை எட்டும் பயனிலையுவமம் (எ-று.)

"எழிலி வான மெள்ளினன் தரூஉங்
கவிகை வண்கைக் கடுமான் தோன்றல்"

எனவும்,

"மழைவிழை தடக்கை வயவாள் எவ்வி

எனவும்,

"புத்தே ளுலகிற் பொன்மரம் புல்ல"

எனவும்,

"விண்பொருபுகழ் விறல்வஞ்சி" (புறம்-11)

எனவும்,

"கார்கள்ள வுற்ற பேரிசை யுதவி"

எனவும்,

"இருநிதி மதிக்கும் பெருவள் ளீகை"

எனவும்,

"வீங்குசுரை நல்லான் வென்ற வீகை"

எனவும்,

"விரிபுனற் பேர்யாறு வீழ யாவதும்
வரையாது சுரக்கு முரைசால் தோன்றல்"

எனவும் இவை ஓதிய முறையானே 'பயனுவமைபற்றி வந்தன.

இவை எட்டும் 'பெருவரவின' வெனவே சிறுவரவினுள்,

"அழல்போல் வெங்கதிர் பைதறத் தெறுதலின்"(அகம்-1)

எனவும்,

"மகன்ரு யாதல் புரைவதா லெனவே" (அகம்-16)

எனவும்,

"ஊறுநீ ரமிழ்தேய்க்கு மெயிற்ருய்" (கலி-20)

எனவும்,

"பல்லோர் உவந்த வுவகை யெல்லா
மென்னுட் பெய்தந் தற்றே"

எனவும்,

"யாழ்கொண்ட இமிழிசை இயன்மாலை அலைத்தரூஉம்"

எனவும், (கலி-29)

"உருமெனச் சிலைக்கு மூக்கமொடு" (அகம்-61)

எனவும்,

"யாழ்செத், திருங்கல் விடரளை யசுண மோர்க்கும்"

எனவும், (அகம்-88)

"செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை"

எனவும், (பத்துப். திரு-5)

"விண்ணதிர் இமிழிசை கடுப்பப் பண்ணமைத்து"
(பத்துப்-மலைபடு-2)

எனவும் வரும்; பிறவுமன்ன.

மேலைச்சூத்திரத்திற் சொல்லியவாறே இதற்கும் வேண்டுவன உரைத்துக்கொள்க.

(வி-ரை)

எழிலி வானம் - மேகமாகிய வானம். எள்ளினேன்- இகழ்ந்தவனுய். கவிகை-கொடுத்ததற்குக் கவிந்தகை. கடுமான்- விரைந்து செல்லும் குதிரை, எள்ளினன் – ஒத்தவனுய் என உரை காண்டல் பொருந்துவதாகும்.

விழை முதலாகிய உருபுகள் போல என்னும் பொருள்பட வந்தன.

பொன்மரம் – கற்பகம்

கார்கள்ள உற்ற பேரிசை - மேகத்தை ஒக்குமாறு பொருந்திய பெரிய இசை.

இருநிதி மதிக்கும் - குபேரனை ஒக்கும்.
யாழ்கொண்ட - யாழோசையை ஒத்த,
உரும் எனச்சிலைக்கும் - இடிபோல ஒலிக்கும்.
யாழ்செத்து - யாழென்று கருதி, . (14)

மெய்யுவமத்தின் கண் வரும் உருபுகள்

**290. கடுப்ப ஏய்ப்ப மருளப் புரைய**
**வொட்ட வொடுங்க வோட[1] நிகர்ப்பவென்**
**றப்பா லெட்டே மெய்ப்பா லுவமம்.**

இது, முறையானே மெய்யுவமத்திற்குரிய வாய்பாடு கூறுகின்றது.

(இ-ள்) இவ்வெட்டும் மெய்யுவமம் (எ-று).

"நீர்வார் நிகர்மலர் கடுப்ப" (அகம்-11)

எனவும்,

மோட்டிரும் பாறை ஈட்டுவட் டேய்ப்ப" (அகம்-25)

எனவும்,

"வேய்மருள் பணைத்தோள் வில்லிழை நெகிழ' (ஐங்குறு-318)

எனவும்,

"உரல்புரை பாவடி" (கலி-21)

எனவும்,

"முத்துடை வான்கோ டொட்டிய முலைமிசை"

எனவும்,

"பாம்புரு வொடுங்க வாங்கிய நுசுப்பின்"

எனவும்,

"செந்தீ யோட்டிய வெஞ்சுடர்ப் பரிதி"

எனவும்,

கண்ணொடு நிகர்க்குங் கழிப்பூங் குவளை"

1. வோட்ட எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

எனவும் இவை ஓதிய முறையானே மெய்யுவமத்துக்கண் வந்தவாறு.

இவற்றை உரிமைகூறிப் பெருவரவினவெனவே, ஒழிந்தன வுஞ் சிறுபான்மை வருமென்பதூஉம் அவை பொதுச் சூத்திரத் தான் அடங்குமென்பதூஉங் கொள்க. அவை:

"கடல் போல் தோன்றல காடிறந் தோரே" (அகம்-1)

எனவும்,

"அஞ்சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றி" (அகம்-11)

எனவும்,

"புலிசெத்து வெரீஇய புகர்முக வேழம்" (அகம்-12)

எனவும்,

சேயித ழனைய வாகி" (அகம்-19)

எனவும்,

"மாணெழில் வேய்வென்ற தோளாய்நீ வரிற்றுங்கும்" (கலி-20)

எனவும்,

"கண்போன் மலர்ந்த சுனையும்"

எனவும்,

"நறுமுல்லை நேர்முகை யொப்ப நிரைத்த" (கலி-22)

எனவும்,

"முழவுறழ் தடக்கையின் இயல வேந்தி" (பத்துப்-திரு-215)

எனவும் வரும்.

இவை புறனடையாற் கொண்டனவும் எடுத்தோதியனவும் பொதுவிதியான் வந்தவாறு.

(வி-ரை)

மோட்டிரும்பாறை - உயர்ந்த பெரியபாறை. ஈட்டு வட்டு - குவிந்தவட்டு. பாவடி - பரந்த அடி. முத்துடை வான்கோடு - முத்தினையுடைய வெள்ளிய யானைத்தந்தம். வாங்கிய நுசுப்பு - வளைந்த இடை. அஞ்சுடர் நெடுங்கொடி - அழகிய விளக்கின் வரிசை. (15)

உருவுவமத்தின்கண் வரும் உருபுகள்

**291. போல மறுப்ப வொப்பக் காய்த்த
நேர வியப்ப நளிய நந்தவென்று
ஒத்துவரு கிளவி யுருவி னுவமம்.**

இது, நான்காம் எண்ணுமுறைமைக்கண் நின்ற உருவுவமத்திற்குரிய வாய்பாடு கூறுகின்றது.

(இ-ள்) இவ்வெட்டும் உருவுவமம் (எ-று).

அவை,

"தன்சொல் லுணர்ந்தோர் மேனி
பொன்போற் செய்யு மூர்கிழ வோனே" (ஐங்குறு-41)

எனவும்,

"மணிநிற மறுத்த மலர்ப்பூங் காயா"

எனவும்,

"ஒண்செங் காந்த வொக்கு நின்னிறம்"

எனவும்,

"வெயிலொளி காய்த்த விளங்குமணி யழுத்தின"

எனவும்,

"கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்"
(அகம்-கடவுள் வாழ்த்து

எனவும்,

"தண்டளிர் வியப்பத் தகைபெறு மேனி"

எனவும் வரும்.

நளிய நந்த என்பன இக்காலத்து அரியபோலும்; அவை வந்தவழிக் கண்டுகொள்க.

இனி, இவைபோல உரியவன்றி உருவுவமத்தின்கண்ணும் பொதுச்சூத்திரத்தான் வருமெனப்பட்ட வாய்பாடு சிறுவரவின வருமாறு:

"துளிதலைத் தலைஇய மழையேர் ஐம்பால்" (அகம்-8)

எனவும்,

"நெருப்பெனச் சிவந்த உருப்பவிர் மண்டிலம்" (அகம்-31)

எனவும்,

"செயலையந் தளிரேய்க்கும் எழினலம் அந்நலம் (கலி-15)

எனவும்,

"ஆயிதழ் புரையு மலிர்கொ ளீரிமை" (அகம்- 19)

எனவும்,

"பான்மருள் மருப்பி னுரல்புரை பாவடி" (கலி-21)

எனவும்,

"எரியுரு வுறழ இலவம் மலர" (கலி-33)

எனவும்,

"பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு"

எனவும், (பத்துப் - திருமுரு-2)

"பொன்னுரை கடுக்குந் திதலையர்" (பத்துப்- திருமுரு-145)

எனவும்,

"தீயி னன்ன வொண்செங் காந்தள்
தூவற் கலித்த புதுமுகை யூன்செத்து"
(பத்துப்- மலைபடு 145-146)

எனவும் வரும். பிறவுமன்ன.

(வி-ரை)

தன் சொல் - தலைவனின் சொல். மணி நிறம் மறுத்த- நீல மணியின் நிறத்தை யொத்த. ஐம்பால் - கூந்தல். உருப்பவிர் மண்டிலம் - வெப்பம் விளங்கும் ஞாயிற்று மண்டிலம். செயலைந்தளிர் - அசோகின் தளிர். ருயிதழ் - குவளை. பால் மருள் மருப்பு- பாலும் வெண்மையால் மயங்கும் மருப்பு, எரியுறு - நெருப்பின் நிறம். தூவல் கலித்த - மழையால் செழித்து வளர்ந்த. ஊன் செத்து - ஊனென்று கருதி. (16)

உவமஉருபுகளுக்குப் புறனடை

## 292. தத்த மரபில் தோன்றுமன் பொருளே.

இது, நான்கு உவமைக்கும் ஒரோவொன்று எட்டாகக் கூறிய வாய்பாட் டிற்கெல்லாம் புறனடை.

(இ-ள்) இன்னதற்கு இன்ன வாய்பாடு உரியவென்றற்குக் காரணம் என்னையென்றார்க்கு, அவை தத்தம் வரலாற்றுமுறைமையானே அவ்வப் பொருடோன்ற நிற்கும் (எ-று)

'புலிபாய்ந்தாங்குப் பாய்ந்தா'னென வினையுவமத்திற்கு வந்த ஆங்கென் கிளவி 'தளிராங்குச் சிவந்தமேனி'யெனிற் பொருந்தாது.

இனி, எள்ளவென்பது பயனுவமைக்கு ஏற்குமென்றான், அது 'புலியெள்ளும் பாய்த்துள்' எனலாகாது; என்னை? புலிக்கு வலி கூறினன்றி அதனொடு உவமிக்கப்பட்ட சாத்தற்குப் புகழாகாது ஆகலானென்பது. ஒருவனை வென்றி கூறுங்கால் அவனோடு ஒப்பிக்கின்ற புலியேற்றினை அவனைக்கண்டு எதிர் நிற்கலாற்றாது புறங்கொடுத்ததெனலும், நடுங்கிற்றெனலும், கண்சிம்புளித்ததெனலும், அவற்குப் புகழாமென்பதே கருதிக் கூறின் கூறின உவமை வெளிப்பாடுமின்றி அதற்கது புகழுமாகாதென்பது கருத்து. இனி, மழையினைக் கொடைக்கு இழித்துச் சொல்லவும் பெறுபவன்றே, அவ்வாறு சொல்லினும் அதனை அவனின் இழித்து நோக்காது உலகமாதலின்.

விழைய வீழ புல்ல மதிப்ப வெல்ல என்பனவும் உவமைதான் பொருளை யொத்தற் கவாவினவென்று பொருள் தோன்ற நிற்குமென்றவாறு. கள்ளவென்பதூஉம் அதன் குணம் அதன் கண் இல்லாமற் கதுவிற்றென்னும் பொருட்டு, பொருவுவென்பதூஉம் மழையினையும் ஒருவனையும் உறழுந்துணைச் சிறந்தானெனச் சொல்லுதல். இவ்வாற்றான் இவை உரிமை கூறப்பட்டன.

இனி, மெய்யுவமத்திற்கு உரியவெனப்பட்டனவும் அவ்வாறே ஒரு காரணமுடைய போலும். கடுப்ப என்றக்கால் வினைக்கும் பயத்திற்கும் ஏலாது; என்னை? கடுத்தலென்பது ஐயுறுதல். புலியோடு மறவனை ஐயுறவேண்டுவதோர் காரணமின்மையானும், மழையின் விளைத்த பயத்தோடு உவமித்தலின் மழையோடு ஒருவனை ஐயஞ்செய்தல் வேண்டுவதின்மையானும், வடிவுகண்டவழி ஐயம் பிறக்குமாகலானும், உருவென்பது குணமாகலாற் பொருள்வேற்றுமை அறிந்தவழி ஐயஞ்செல்லாதாகலானும், மெய்க்குரிமை கூறினனென்பது. ஏய்த்தலென்

பதூஉம் பொருந்துதலாகலின் வடிவிற்கேற்கும். மருள புரைய ஒட்ட ஒடுங்க என்பனவுங் கடுத்தல்போலும் பொருண்மைய; என்னை? மருட்சியும் புரையுணர்வுங் கவர்த்தலைக் காட்டுதலாலும், ஒட்ட ஒடுங்க என்பனவும் இரண்டனை ஒன்றென்னும் பொருண்மையவாகலானுமென்பது, நிகர்த்தலும் அவ்வினப் பொருளென்பதனைக் காட்டுதலின் வடிவிற்கேற்றது. ஓட வென்பதும் ஓடுதற்றொழில் வடிவிற் கல்லதின்மையின் அவ் வடிவிற்கேற்றது. [1]பண்பாயிற் பண்பு நிறப்பண்பு ஒடிற்றென லாகாமையின்.

இனி, உருவுவம லாய்பாட்டிற்குங் காரணங் கூறுங்காற் போலுமென்பது இடைச்சொல்லாகலானும், மரீஇவந்த வினைப் பாற் பட்டதாகலானும், அதற்குக் காரணங் கூறப்படா தென்பது, அஃதேல், அதனை இவ்வெட்டற்கும் முன்பு கூறிய தென்னை, பொருளுடையவற்றைப் பிற்கூறி யெனின், அதுவும் அன்ன வென்பதுபோல மற்றை மூன்று உவமத்தும் பயின்று வருமென்பது எய்துவித்தற்கென்பது. மறுப்ப ஒப்ப என்பன முதலாயினவும் ஒரு காரணமுடையவென்பது ஆசிரியன் பெரு வரவினவாக உரிமைப்படுத்துக் கூறினமையின் அறிந்தாம். அல்லதூஉம் 'மரபிற் றோன்றும்' எனறதனான் இவையெல்லாம் மரபுபற்றி அறியல் வேண்டும் எனவே, தலைச்சங்கத்தார் முதலாயினோர் செய்யுட்களுள் அவ்வாறு பயின்று வருமென்பது அறிந்தா மன்றே, இவ்வாறு சூத்திரஞ் செய்தலாலென்பது.

(வி-ரை)

வரலாற்று முறைமையால் - மரபு வழியால். எனவே மேற் கூறப்பட்ட உருபுகள் நால்வகை உவமத்திற்கும் பாகுபாடு செய்திருப்பதற்குக்காரணம் மரபு வழியேயன்றிப் பிறிதில்லை என்பது கருத்து. ஆங்கு என்பது வினைவுவமத்திற்கு வருதல் போல உருவமத்திற்கு வருதல் சிறப்புடைத்தன்று, புலி எள்ளும் பாய்த்துள் - புலியை இகழும் பாய்ச்சல் எனப் பொருள்படுதலின் புலியை இகழ்ந்து கூறப்பட்டதாம். ஒருவனோடு உவமிக்கும் புலியை இகழின் அதுஅவர்க்கும் இகழ்ச்சியாமாதலின் இவ்வாறு கருதலாகாதென்றார். எனவே பொருளினும் உவமை இழிந்து

---

1. இத்தொடர் சிதைந்துள்ளது.

வரல் தவறென்பதாம். எள்ளும் என்பது போலும் என்ற பொருளில் வருதலின் இவ்வாறு பொருந்துமோ என ஆராயத் தக்கது. கண்சிம்புளித்தல் – கண் சுருங்குதல். கடுத்தல் – ஐயுறு தல்; 'கடுக்கும் என் நெஞ்சம்' (சிலம்பு), 'கடுத்தபின் தேற்று தல் யார்க்கும் அரிது' (குறள்) என்ற விடத்தும் இப்பொருள் படுதல் காண்க. விளைத்த பயர் – விளைந்த பயன்.

மரீஇ வந்த-மருவி வந்த; தொன்று தொட்டு வந்த.

ஆசிரியர் தொல்காப்பியர் உவம உருபுகளை வகைப்படுத்தி யிருப்பதன் காரணம் அவர்தம் கால எல்லை வரை இருந்த இலக்கியங்கள் பற்றியேயாம். அக்கால எல்லைக்கண் இருந்த இலக்கியங்கள் பலவும் அழிந்தவாகலானும், பிற்கால இலக்கியங்கள் அம்மரபினைப் போற்றி வாராமையானும் தொல்காப்பியர் கூறிய அவ்வரையறைக்குக் காரணம் இன்று அறிய இயலாதாகின்றது. அவ்வாறாகவும் பேராசிரியர் காரணம் கூற முயன்றிருப்பது ஓராற்றாண் பாராட்டுதற்குரியதேயாம். ஆயினும் அவ்வுருபுகளும் அவ் வகையில் அடங்குதற்கும் வேறு வகையான் அடங்காமைக் கும் காரணம் கூறியிருப்பது முழுமையாக ஏற்றற்குரியதன்று. காரணம் உருபுகள் பலவற்றையும் உவம உருபாகக்கொள்ளாது வேறு பொருள் படுவதாகக் கூறி அமைவு காணுகின்ற மையின். (17)

நால்வகை உவமம் எட்டாகும்

## 293. நாலிரண் டாகும் பாலுமா ருண்டே.

இதுவும் மேலனவற்றையே பகுக்கின்றது.

(இ–ள்.) வினை பயன் மெய் உரு என்னப்பட்ட நான்கும் எட்டாம் பகுதியும் உண்டு. (எ–று.)

அவை: உவமத்தொகை நான்கும் உவமவிரி நான்குமென எட்டாதலும் உடையவென்றவாறு. அவை புலியன்ன பாய்த் துள் 'புலிப்பாய்த்துள்' எனவும், மழையன்ன வண்கை 'மழை வண்கை' எனவும், வேயன்னதோள் 'வேய்த்தோள்' எனவும்; பவளத்தன்னவாய் 'பவளவாய்' எனவுந் தொகைவிரிபற்றி நான்கும் எட்டாயினவாறு.

சொல்லோத்தினுள் இவ்வாய்பாடு விரிந்து வருமாறு கூறுது ஆண்டுத் தொகையாராய்ச்சிப் பட்ட மாத்திரையானே கூறினன். அவ்வுவமத்தான் ஈண்டுக் கூறப்படுதல் பொருளினவாகலானும், இடைச்சொல்லேயன்றிப் பொருள் பயப்பனவும் அவ்வுருபாக லானும், அதன் விரிவினை ஈண்டுப் பெயர்தந்து கூறி அதன் விரிவினை ஈண்டுப் பெயர்தந்து கூறி அதன் தொகையொடு படுப்ப இத்துணைப் பகுதியவாம் அந்நால்வகையுவமமும் என்றானென்பது.

இதுவுமொரு கருத்து: முன்னர் எவ்வெட்டாகக் கூறியவை ஒவ்வொன்றும் இரண்டு கூறுகி எட்டாம் பகுதியுடைய என்றவாறு. யாங்ஙனமெனின் அன்ன என்னுஞ் சொன்முத லாகிய எட்டனுள் அன்ன ஆங்க மான என்ன எனப்பட்ட நான்கும் வேறொரு பொருளை உணர்த்தாமையின் ஓரினமாகி ஒன்றாகவும், விறப்ப உறழ தகைய நோக்க என்னும் நான்கும் ஒரு பொருளுடைமையின் ஓரினமாகவும், இவ்வாறே இன நோக்குதற் குறிப்பினவாயிற்று; இவ்வாற்றான் இரண்டெனவும் படும் எட்டுமென்றவாறு. இதனது பயன் இவ்விரண்டு கூற்றான் அடக்கப்படும் வினையுவமச்சொல் எட்டும் (287) என்றவாறு.

விறத்தல், இனமாகச் செறியுமென்னும் பொருட்டு. உறழ்ச் சியுந் தன் இனமாகக்கொண்டுமாறுதற் பொருட்டேயாம். தகுதி அதுவெனப்படுவது என்னும் பொருண்மைத்தாகலின் அவற்றோ டொக்கும். நோக்கென்பதூஉம் அவ்வாறே இனமாக்கி நோக்கு தற்பொருட்டு. இவ்வாற்றான் இரண்டெனவும் படும் எட்டு மென்றவாறு.

இதனது பயன் :—ஓதிய வாய்பாடு எண்ணான்கற்கும் இன்ன வாய்பாடும். இன்ன வாய்பாடும் ஒரு பொருளவென்று அறிதலுந், தத்தம் மரபிற் பொருள்தோன்ற வருமென்பதும், இடைச்சொல்லென்றலும், ஒப்பில் வழியாற் பொருள் செய்யி னும் இடைச்சொல்லாகா, தெரிநிலைவினை உருபாயினும் என்ப தறிவித்தலு மெனக்கொள்க. மேல் வருகின்றனவற்றிற்கும் இஃதொக்குமென்பது.

இனிப், பயவுவமை வாய்பாடு எட்டனுள்ளும் எள்ள பொருவ கள்ள வெல்ல என்னும் நான்கும் உவமத்தினை யிழித்தற் பொரு ளவாகி ஒன்று யடங்கும். என்னை? மழையைப் பொரீஇச் சொல்

லுதலும் அதனது தன்மைக்குணங் கள்ளப் படுதலும் அதனை வெல்கையும் என்னுதலும் போல்வன இழிவினையே காட்டுதலின். இனி விழைய புல்ல மதிப்ப வீழ என்னும் நான்கும் உவமிக்கப் படும் பொருளினை உயர்த்தாமையானும் உவமத்தினை இழித்துக் கூறுமையானும் அவை நான்கும் ஒரு பொருளெனப்பட்டன. இவ்வாற்றாற் பயவுவமை யெட்டும் (289) இரண்டாயின வென்பது.

மெய்யுவமை இரண்டாங்கால்—ஐயப்பொருட்கண் நான்குந் துணிபொருட்கண் நான்குமென இரண்டாம். கடுப்ப மருள புரைய ஓட என்னும் நான்கும் ஐயப்பொருளவாகி ஒன்றும். ஓடவென்பது உவமத்தின் கண்ணும் பொருளின் கண்ணும் உணர்வு கவர்ந்தோடிற்றென்னும் பொருள் தோன்றச் சொல்லி னும் அதுவும் ஐயமெனப்பட்டது போலும். இனி ஏய்ப்ப ஒட்ட ஒடுங்க நிகர்ப்ப என்னும் நான்கும் ஐயமின்றி உவமையும் பொருளும் ஒன்றென உணர்வுதோன்றும் வாய்பாடாகலின் இவை நான்கும் ஒன்றெனப்பட்டு இவையெட்டும் (290) இரண் டாயின.

இனி, உருவின் (291) கண்ணும் போல ஒப்ப நேர நளிய என்னும் நான்கும் மறுதலையின்றிச் சேர்ந்தனவென்று கோடற்கு வாய்பாடாகி வருதலின் அவை ஒன்றெனப்பட்டன. 'நளியென் கிளவி செறிவு மாகும்' (தொல்-சொல். உரி-17) என்றதனால், அதனொடு சேர்ந்ததென்னும் பொருட்டேயாயிற்று. இனி மறுப்ப காய்த்த வியப்ப நந்த என்னும் நான்கும் உவமையோடு மறுதலை தோன்றி நிற்கும் பொருளவாகலின் நான்கும் ஒன்றெனப்பட்டு இவையெட்டும் இரண்டாயின. நந்துதலென்பது கேடு. வியத்த லென்பது உவமையான் வியக்கத்தக்கது பொருளெனவே அதன் சண் அக்குணமின்றென மறுத்தவாறும். காய்த்தலென்பதூஉம் உவமையைக் காய்ப்பித்தலாகலின் அதுவும் மறுத்தலென்பதன் பொருளெனப்பட்டது.

இவ்வாறு இவையெல்லாந் தொகுப்ப எட்டாதலும் உண் டென்பது இதன் கருத்து.

இவற்றுட் பலவற்றையுஞ் செயவெனெச்ச வாய்பாட்டால் ஓதியது என்னையெனின் அஃது, (665) உடம்பொடு புணர்த்த லென்பதனான் இடைச்சொல்லும் உரிச்சொல்லும் வினைச்சொற்போல

நிற்குமெனவும் அதனானே பெயரெச்சமும் வினையெச்சமும் முற்றுமாகி நிற்குமெனவும் அவையுந் தெரிநிலைவினையுவமை யாய் வருமெனவும் அறிவித்தற்கென்க. இவற்றை இவ்வாறு எட்டாகச் சொல்லுதல் பெரிதும் நுண்ணுணர்விற்றென வுணர்க.

(வி-ரை)

நான்கு - வினை, பயன், மெய், உரு என்ற நான்கு, இரண் டாகும்- ஒவ்வொன்றும் தொகை விரியென இரண்டாகும். பாலு மாருண்டே -பகுதியும் உண்டு. சொல்லோத்து - சொல்லதிகாரத்து. எச்சவியலுள் அறுவகைத்தொகை கூறுங் கால் உவமத்தொகையும் கூறப்பட்டது. எனினும் அவ்வுவமத் தால் பொருள் புலப்படுமாறு ஈண்டுக் கூறுகின்றாராதலின் அதனை விரிவாக மீண்டும் இங்குக் கூறுகின்றார். இரண்டாவது உரையாகக் கூறப்பட்டிருக்கும் கருத்து அத்துணைச் சிறப்புடைத் தன்று. அன்ன, ஆங்க, மான, என்ன என்பன வேறொரு பொருளை உணர்த்தா என்றார். புலியன்ன மறவன் என்ற இடத்து அன்ன என்னும் உருபால் மறவன் வேறு, புலி வேறு என்பது அன்று; மறவன் புலியே என்னும் கருத்தாகின்றது என்பது இவர் கருத்தாகும். புலிவிறப்ப ஒலி - புலியை ஒத்த ஒலி. எனவே ஒலி யால் புலியின் இனமாகக் கருதலின் விறுத்தல் இனமாகச் செறியும் பொருட்டென்றார். பொரிசி - ஒப்புமைப்படுத்தி. 'பல்குறிப்பின' என்றதனான் இச்சொற்கள் பெயரெச்ச நீர்மை வாய் வருவனவும், முற்று நீர்மையாய் வருவனவும், இடைச் சொல் நீர்மையாய் வருவனவும் எனக் கொள்க. 'புலிபோன்ற சாத்தன் ''புலிபோலுஞ்சாத்தன் 'என்பன பெயரெச்சம். 'புலி போன்று வந்தான்' 'புலிபோலப்பாய்ந்தான் 'என்பன வினையெச்சம். 'புலிபோலும்' 'புலி போன்றனன்' என்பன முற்று.

இந்நூற்பாவிற்கு இளம்பூரணர் வேறு உரை கூறுவர். அது வருமாறு: மேற்சொல்லப்பட்ட உவமை நான்கு வகையாதலே யன்றி எட்டாம் பக்கமும் உண்டு என்றவாறு.

அவையாவன வினையும் வினைக்குறிப்புமென இருவகையாம். பயன் என்பது நன்மை பயத்தலும் தீமை பயத்தலும் என இரு வகையாம். மெய் என்பது வடிவும் அளவும் என இருவகையாம். உருவென்பது, நிறமுங் குணமுமென இருவகையாம். இவ்வகை யினுலெட்டாயின. (18)

பெருமையும் சிறுமையும் பற்றி உவமை வருமாறு கூறல்

**294. பெருமையுஞ் சிறுமையு மெய்ப்பா டெட்டன்**
**வழிமருங் கறியத் தோன்று மென்ப.**

இது மேற்கூறிய உவமை இன்னுமொருவாற்றான் எட்டெனப்படு மென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) பெருமைபற்றியுஞ் சிறுமைபற்றியும் ஒப்புமை கொள்ளப்படும். உவமை மேற்கூறிய மெய்ப்பாடெட்டன்வழித் தோன்றுமென்று சொல்லுவர் புலவர் (எ-று.)

மெய்ப்பாடு எட்டென்பன:

'நகையே அழுகை இளிவரன் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி யுவகை'
(தொல்-பொருள்-21)

என மெய்ப்பாட்டியலுள் மேற்கூறப்பட்டன.

"களவுடம் படுநரிற் கவிழ்ந்துநிலங் கிளையா" (அகம்-16)

என்பது நகையுவமம்: என்னை? தலைமகனைக் கண்டறியாதாள் போலக் கரந்தொழுகுகின்ற பரத்தை அவனோடு ஒப்புமை கண்டு தனிநின்று விளையாடும் புதல்வனைக் கொண்டு மகிழ்கின்றாளை, வாயிற்கதவம் மறைந்து நின்ற தலைமகள் நீயும் அம்மகவிற்குத் தாயேகாண் என்றவழிக், களவுகண்ட பொருளோடு கையகப்பட்ட கள்வர்போலச் செய்வதறியாது தடுமாறி முகம் வேறுபட்ட நிலைமையை உவமித்துச் சிரித்தமையின் நகையுவமமாயிற்று.

"கலங்கவிழ்ந்த நாய்கன்போற் களைதுணை பிறிதின்றிப்
புலம்புமென் னிலைகண்டும் போகலனே யென்றியால்"
(யா. வி. ப-318)

என்பது, அவலவுவமை; கலங்கவிழ்ந்த நீகாமன் போலப் புலம்பினளென்றமையின் அப்பெயர்த்தாயிற்று.

"பெருஞ்செல்வ ரில்லத்து நல்கூர்ந்தார் போல
வருஞ்செல்லும் பேருமென் னெஞ்சு" (முத்தொள்-88)

என்பது, இளிவரலுமவம்; என்னை? தலைமகன்மாட்டு இன்ப விளையாட்டெய்துவார் பலரையுங் கண்டு நெஞ்சு தீரப்

புன்கணெய்தித் தனிநின்று புகப்பெறுது இளிவந்தமையின் அப் பெயர்த்தாயிற்று.

"ஈரத்து ளின்னவை தோன்றின் நிழழ்கயத்து
நீருட் குவளைவெந் தற்று" (கலி-41)

என்பது மருட்கை யுவமம்; என்னை? நிழற்கயத்தின் குவளை வேவன வின்மையின் இஃது அற்புதமாயிற்று.

"சாந்தகத் துண்டென்று செப்புத் திறந்தொருவன்
பாம்பகத்துக் கண்ட துடைத்து" (நாலடி-126)

என்பது அச்சமாகலின் அச்சவுவமை.

"மல்லரை மறஞ்சாய்த்த மால்போல்தன் கிளைநாப்பண்
கல்லுயர் நனஞ்சாரற் கலந்தியலு நாடகேள்" (கலி-52)

என்பது பெருமிதவுவமை.

"கூற்றுவெகுண் டன்ன முன்பொடு
மாற்றிரு வேந்தர் மண்ணேக் கினையே" (புறம்-42)

என்பது வெகுளியுவமம்.

"பாடிச் சென்ற பரிசிலர் போல
வுவவினி வாழி தோழி" (அகம்-65)

என்பது உவகையுவமை. பிறவுமன்ன.

இவற்றான் எண்வகை மெய்ப்பாடும்பற்றி உவமை எட்டெ னெப்படுமென்று அறிந்து கூறினன்.

"பெருமையுஞ் சிறுமையுஞ் சிறப்பிற் றீரா" (பொருள்-285) என்புழிப், பெற்றுமகலின் மெய்ப்பாடெட்டன் வழிதோன்று மென்னுது 'மருங்கறிய' வென்றதனுற் பெருமையுஞ் சிறுமையும் பற்றி வருதல் வழிமருங்கெனவும் அவைபற்றுது மெய்ப்பாடு எட்டும்பற்றி வாளாதே உவமை வருதல் செவ்வி தெனவுங் கொள்ளப்படும்.

"நீருட் குவளைவெந் தற்று" (கலி-41) என்பது, பெருமை பற்றியது. என்னை? உலகநடை யிறந்ததோர் உவமை கூறி அதனேடு தலைமகன் ஈரத்தினை ஒப்பித்தமையின்.

"களவுடம் படுநரிற் கவிழ்ந்துநிலங் கிளையா" (அகம்-16) என்பது, தனக்கு நிகரா காமல் இழித்துரைத்தமையிற் சிறுமை பற்றி வந்ததாம்.

உவமையும் மெய்ப்பாடும் பொருள்களை அறிவிப்பனவாகி அவை வேறுவேறு பொருள் அறிவித்தலின் ஒத்து வேறுபாடு உடையன வாயினுஞ் சிறுபான்மை மயங்கியும் வருமென்றற்கு இது கூறவேண்டியதென்பது.

(வி-ரை)

களவு உடம்படுநரின்-தாம் செய்த களவினைத்தாமே உடன்படுவாரைப்போல.

நாய்கண்போல்-மீகாமனைப்போல.

நெஞ்சுதீரப்புண்கண் எய்தி-நெஞ்சு முழுமையாகத் துன்பமுற.

ஈரத்துள் இன்னவை தோன்றின்-நின் அருளினிடத்தே இத்தன்மையவாகிய கொடியவை தோன்றின். கொடியவை-பிரிந்த தலைவன் வாராமை.

சாந்து அகத்து உண்டென்று-சந்தனம் உள்ளிடத்தே இருக்குமென்று கருதி.

மால்-திருமால்-மல்லரின் வீரத்தை வீழ்த்திய திருமாலைப் போல் தலைவன் தம் சுற்றத்தாரிடத்துப் பெருமிதத்தோடு விளங்குகின்றான் என்றலின் பெருமிதமாயிற்று.

முன்பொடு-வலிமையொடு.

உவவ இனி-இப்பொழுது உவப்பாயாக.

ஒத்து வேறுபாடு-மெய்ப்பாட்டியல் உவம இயல் என்னும் வேறுபாடுடையவாகி. மெய்ப்பாடும் உவமையும் வேறு வேறு இயல்களில் கூறப்பட்டிருப்பினும் அவை இரண்டும் மயங்கி வருதலும் உளவாதலின் ஈண்டுக் கூறினர் என்பது.

மெய்ப்பாடு தோன்றாத வழி இவ்வாறு பெருமையும் சிறுமையும் பற்றி உவமை கொள்ளுதல் பயனின்றாம் என்பர் இளம்பூரணர். (19)

உவமையால் பொருட்கு ஏற்றன அறியுமாறு

**295. உவமப் பொருளி னுற்ற துணருந்**
**தெளிமருங் குளவே திறத்திய லான.**

இஃது, எய்தாததெய்துவித்தல் நுதலிற்று; உவமையோடு பொருள் ஒவ்வாதனவும் ஒப்புமை சார்த்திக் கொள்ளுமாறு உணர்த்தினமையின்.

(இ-ள்.) உவமப்பொருளின் — உவமையெனப்பட்ட பொருளான்; இன் உருபு ஆன் உருபின்கண் வந்தது; உற்ற துணருந் தெளிமருங்குள — உவமிக்கவரும் பொருட் குற்றதெல்லாம் அறிந்து துணியும் பகுதியுமுள; திறத்தியலான — அங்ஙனந் துணியப்படும் பொருட்டிறம் பலவாகிவரும் இலக்கண வகையான் (எ.று)

அப்பகுதி பலவும் உற்றுணராமற் சொல்லியவழியும், அஃது உணரவருமென்பது கருத்து. 'திறத்தியலான' எனப்பட்ட பகுதியாவன; மேற்கூறப்பட்ட மெய்ப்பாடெட்டும் பற்றி உவமங்கொள்ளுங்கால், உற்றதுணருந் தெளிமருங்கென உவமானவடைக்கு உவமேயவடை குறைந்து வருவனவும் யாதும் அடையின்றி வருவனவுமென்று இவ்விரண்டும் உற்றுணராமற் சொல்லியவழி, அவற்றுக்கும் உவமைப்பொருளே தெளிமருங்காமெனவும் வாளாதே உவமஞ்செய்து உற்றுணர்த்தாத வழியும் அதுவே தெளிமருங்காமெனவும் இன்ஞேரன்ன கொள்க.

உதாரணம்:

"களவுடம் படுநரிற் கவிழ்ந்துநிலங் கிளேயா" (அகம்-16)

என்றவழிக், கண்டோர்க்கெல்லாம் பெருநகையாகக் களவுண்டாகப்படுநரிற் கவிழ்ந்து நிலங்கிளேயாவென உற்றதுணரக் கூறியது இலஞயினுங் கையொடுபட்ட களவுடையார் போல நின்ருளென்னும் உவமப்பொருளானே எள்ளுதற்பொருள் தோன்றி நகை புலப்படுவதாயிற்று.

"சாறுதலேக் கொண்டெனப் பெண்ணீற் றுற்றென
பட்ட மாரி ஞான்ற ஞாயிற்றுக்
கட்டில் நிணக்கு இழிசினன் கையதும்
போழ்தூண் டூசியின் விரைந்தன்று மாதோ
ஊர்கொள் வந்த பொருநனொடு
ஆர்புனே தெரியல் நெடுந்தகை போரே" (புறம்.-82)

என்னும் பாட்டினுள் உவமப்பொருளாகிய "போழ் தூண்டூசிக் குப்" பல அடைகூறி அதனேடு உவமிக்கப்படும் போர்த்தொழிலினே யாதுமோர் அடையின்றி வாளாது கூறிஞயினும் உவமப் பொருளானே போர்த்தொழிற் குற்றதும் உணரக்கூறிஞும். என்னே? உண்டாட்டுங் கொடையும் உரனெடு நோக்கி மறுத்

தலும் முதலாகிய உள்ளக்கருத்தினால் ஒரு கணத்துள்ளே பல வேந்தரை ஒருங்கு வேறற்கு விரைகின்றது போர்த்தொழி லென்பது தெளியப்பட்டமையின்.

"உழுத நோன்பக டழிதின் றாங்கு
நல்லமிழ் தாகநீ நயந்துண்ணு நறவே (புறம்-125)

எனவும்,

"மருந்துகொள் மரத்தின் வாள்வடு மயங்கி" (புறம்-180)

என்றாற்போல்வனவும் அவை.

இனி, வாளாதே உவமஞ்செய்து உற்றதுணர்த்தாத வழித் தெளியுமாறு:

"உருவுகண்டு எள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்கு
அச்சாணி யன்னா ருடைத்து" (குறள்-667)

என்பதனுள்; அவன் செய்கைவன்மை கூறாராயினும் அச்சாணி யென்று உவமப்பொருள் தானே அச்செய்கைவன்மை கூறிற்று.

"வேனிற் புனலன்ன நுந்தையை நோவார் யார்" (கலி-84)

என்பதும் அது. ஒழிந்தனவு மன்ன.

இனி, உவமத்தின் உற்றுதுணர்கவென்றது பொரு ளென்றதனாற் பொருட்கு அடுத்த அடையும் உவமவடைக்கு உற்றது உணரப்படாதன களையப்படுமென்பது. அது,

"பாசடை நிவந்த கணைக்கா னெய்தல்
இனமீ னிருங்கழி யோத மல்குதொறுங்
கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்" (குறுந்-9)

என்றவழிப் பாசடை நிவந்த கணைக்காலென நெய்தலாகிய பொருட்கு வந்த அடையிரண்டுங் கண்ணெனப்பட்ட உவமத் திற்கேற்ப வாராமையான் அவை தெளிமருங்கிலவென்று களைந்து கொள்க. ஒழிந்தனவு மன்ன.

மற்றுப்,

"புறமதி யன்ன திருமுக மிறைஞ்சி"

என்றவழி, அகத்துத் தோன்றும் மறுப்போலப் புறத்துமறு மதிக்கில்லையென்பதூஉம் புறமதிபோலக் கறைதீர்ந்த முகமென் பதூஉம் உவமப் பொருளின் உற்றதுணருந் தெளிமருங் கென் றதனாற் கோடுமோவெனின், அங்ஙனங் கொள்ளாமைக்கன்றே வருகின்ற சூத்திரமென்பது.

(வி-ரை)

சாறுதலைக்கொண்டெனை- விழாக்காலம் நெருங்கியதாக; பெண் ஈற்று உற்றனை - தன் மனைவி கரு ஈன்றனளாக; பட்ட மாறி ஞான்ற ஞாயிற்று-பெய்கின்ற மழையையுடைய ஞாயிறு வீழ்ந்த பொழுதின்கண்.

கட்டில் நிணைக்கும்-கட்டிலைப்பிணிக்கும்; போழ்துண்டு ஊசியின்-வாரைச் செலுத்தும் ஊசியினும்; ஆர்புனை தெரியல்-ஆத்தி மலரால் தொடுக்கப்பெற்ற மாலையையுடைய போரவைக் கோப்பெருநற்கிள்ளி. இழிசினன் கை-இழிந்தவனது கை. ஊசியை விரைந்து செலுத்தித் தைத்தற்கு நான்கு அடைமொழிகள் (காரணங்கள்) உள்ளன. 1. ஊரில் விழாத் தொடங்குதல் 2. மனைவி கருவுயிர்த்தல் 3. மழைபெய்தல் 4. பொழுது மறைதல். இவ்வாறு உவமைக்கு உளவாதல் போல பெருநற்கிள்ளி தன் பகைவனோடு விரைந்து போர் செய்தற்கு உரிய அடைமொழிகள் இல எனினும் உவமையால் அவற்றை உய்த்துணர வேண்டும் என்பது இந்நூற்பாவின் கருத்தாம். அவ்வாறு உய்த்துணர்ந்து பேராசிரியர் மூன்று காரணம் கூறுகின்றார். அவை உண்டாட்டு, கொடை, உரனொடு நோக்கி மறுத்தல் என்பனவாம். உரனொடு நோக்கி மறுத்தல்-தன் ஆற்றல் மிகுதியால் வந்த பொருநனிடம் எதிர் மொழி கொடுத்தல்.

அழிதின்றுங்கு-வைக்கோலைத் தின்றாற்போல. வலியபகடு தான் உழுது விளைத்த நெல்லை உண்ணாது வைக்கோலை உண்ணுதல் போலத்தேர்வன் மலையனாகிய நீயும் நின் முயற்சியால் உளவாகிய பொருள்களை உண்ணாது வெறும் கள்ளை உண்கின்றாய்! அது உனக்கு அமிழ்தாகுக என்பது இப்புறப்பாடற் பகுதியின் (125)கருத்தாகும். இதன் கண்ணும் பகட்டிற்குரிய அடைமொழியால் தேவர்வன் மலையனுக்கு உற்றபொருள் உய்த்துணர வேண்டியதாயிற்று,

மருந்தாகித்தப்பா மரத்தைப்போல வாள் வடுவிரவி நிற்கும். ஈர்ந்தூர் கிழான் தோயமாறன் என்பது இப் புறப்பாடற்பகுதியின் பொருளாகும் (170). இங்கும் மரத்திற்குற்ற அடைமொழியால் அவ்வரசனின் வாள்வடுவிற்குக்காரணம் பெறப் பட்டது. மருந்தாதல் தன்மையால் அவ்வரசனின் உடலும் வடுப்பட்டதும்.

அச்சாணி- உருள் கழலாது கடைக்கண் செருகப்பட்டிருப்பது. அது சிறிதாயினும் பெரும் பளுவைக் கொண்டு நிற்கும் வண்டியைக் கொண்டுய்க்குமாறு போல, உருவால் சிறிய வராயினும் அரிய செயல்களைச்செய்யும் ஆற்றலுடையார் பலருளர் என இதனால் அறியப்படும்.

வேனிற்காலத்து நீர்நிலை பலரும் ஆடற்கு இடம் கொடுப் பது போல நின் தந்தையும் பல மகளிரும் புணர்ந்து விளையா டற்கு இடமானவன் என்பது இக்கலித்தொகை பாடற் பகுதி யின் (86) கருத்தாகும். இதுவும் உவமையால் பொருட்குற்ற பண்பு உய்த்துணரப்படுவதாயிற்று.

உவம அடையால் பொருட்கு (உவமேயத்திற்கு) உற்றது உய்த்துணரப்படுவது போல பொருளடையாலும் உவமைக்கு உற்றதை உய்த்துணரலாம் எனினும் அவ்வாறு வருதல் தெளி மருங்கில என்று கூறுகிறார் பேராசிரியர். பாசடை-பசிய இலை. ஓதம்-கடல்நீர். கடல்நீர் அலையால் மிகுந்தொறும் நெய்தற்பூ அதகைத்துத் தோன்றுதல் நீரில் மூழ்கி இருக்கும் பெண் களின் கண்களை ஒக்கும் என்பது கருத்தாகும்.

ஐயுற்றுக் கூறும் உவமையானும் பொருட் தெளிவு உள வாகும் என இந்நூற்பாவிற்கு உரை காண்பார் இளம்பூரணர். (20)

உவமப் பொருள் மரபுவழி அறியப்படுமாறு

**296. உவமப் பொருளை யுணருங் காலை**
**மரீஇய மரபின் வழக்கொடு[1] படுமே**

இது, மேலதற்கொரு புறனடை, மேல் உவமப்பொருளானே உற்றுணரச் செயல் வேண்டுமென்றான் இனி அங்ஙனம் உணரு மாறு இது கூறினுதலின்.

(இ-ள்) உவமப்பொருளான் உற்றதுணருங்காலை மரீஇ வந்த வழக்கொடுபடுத்து அறியப்படும் (எ-று).

அது வருமாறு :

"களவுடம் படுநரிற் கவிழ்ந்து நிலங் கிளையா" (அகம்-16)

1. வருமே எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

என்பது களவுடம்படுநர்க்குள்ள வேறுபாடு உலகத்து அடிப்பட வந்த வழக்காதலான் அஃது ஏதுவாக அதனையும் அறிந்து கொள்ளப்படுமென்றவாறு. எனவே, உலகத்து வழக்கினுள் அடிப்படத்தோன்றும் உவமையாயிற்றாயினும் உவமப்பொருள் புலப்பாடு செய்யாது,

"புறமதி போலு முகம்"

என்றதுபோல்வது வென்பது இதன் கருத்து.

(வி-ரை)

மேல் உவமையால் பொருட் குற்றதை உணரலாம் என்றார். இந்நூற்பாவில் அவ்வுவமை தானும் உற்றது உணர்த்தும் திறனைக்கூறுகின்றார். உவமை என்றது தொன்று தொட்டுக் கூறப்படுவதேயாயினும் பலரும் அறிந்ததாகவும் இருப்பின் அவ் வேதுவாக அதன் திறயனைத்தும் உணரலாம். இன்றேல் உவமையின் திறமும் விளங்காது எனப் பேராசிரியர் விளக்குகின்றார். தங்களைத்தாமே உடம்பட்டு நிற்பாரின் நாணமும் சிறுமையும் அனைவரும் அறிந்ததொன்று. ஆதலின் அவ்வுவமையின் திறத்னையும் அதனால் பொருட் குற்றதையும் நன்கறியலாம். அதைப்போன்று முகத்திற்கு மதியையன்றிப் புறமதியை உவமை கூறுவாரின்மையின் புறமதி போலும் என்பதால் உவமையின் திறனோ அதனால் பொருட் குற்ற திறனோ விளங்குமாறு இல்லை.

உவமப்பொருளை உவமிக்கப்படும் பொருளாகக் கூறுங்கால் மரபு வழியாகக் கூறப்படுவனவற்றையே கூறவேண்டும் என இந்நூற் பாவிற்குப் பொருள் காண்பர் இளம்பூரணர். கயற்கண் எனக்கூறுவதன்றி கயல்சிலை எனக்கூறலாகாது என்பது இவர் கருத்தாகும். (21)

பொருள் அடையொடு வருமாறு

## 297. [1]இரட்டைக் கிளவி யிரட்டை வழித்தே.

இஃது, எய்தாததெய்துவித்தது; அடையொடு வந்த பொருளோடு புணர்க்குமாறு கூறினமையின்.

---

1. இரட்டைக் கிளவியும் என்பது இளம்பூரணர் பாடம்.

(இ-ள்) இரட்டைக்கிளவி—அடையும் அடையடுத்த பொருளுமென இரண்டாகச் சொல்லப்படுங் கிளவி; இரட்டை வழித்தே—அடையும் அடையடுத்தபொருளுமென இரண்டாக்கி நிறுத்தப்படும் உவமையின் வழித்து (எ-று).

"பொன்காண் கட்டளை கடுப்பத் தன்ன
பைம்பூண் சுண்ணம் புடைத்த மார்பின்"
(பத்துப், பெரும்பாண்-220)

என வரும்.

தம் பைம்பூண் புடைத்த செஞ்சுவட்டினையும் மார்பினையும் பொன்னுரையோடுங் கல்லோடும் உவமித்தமையின் இரட்டைக் கிளவி இரட்டை வழித்தாயிற்று. இரட்டைக் கிளவியெனப் பொருளினை முற்கூறியதனான் இரண்டு பொருளினை ஒன்றாகக் கூட்டி உவமிக்கக் கருதினான் உவமையினையும் இரண்டு ஒன்றாக்கியே உவமிக்குமென்பது கருத்து. உம்மையான் ஒற்றைக்கிளவியும் இரட்டை வழித்தாகி வருவனகொள்க. அது,

"கருங்கால் வேங்கை வீயுகு துறுக
லிரும்புலிக் குருளையில் தோன்றுங் காட்டிடை" (குறுந்-47)

என வரும். இரும்புலிக்குருளை யொன்றனையே துறுகல்லோடும் வேங்கைவீயோடும் ஒப்பித்தமையின் இப்பெயர்த்தாயிற்று.

(வி-ரை)

பொன்னை உரைக்கும்உரை கல்லையொப்பத் தனது பசிய அணிகள் புடைத்ததால் உண்டான செஞ்சுவட்டை உடைய மார்பு (பெரும்பாண்-22.) என்பது இதன் பொருளாகும். பொன்னுரை-பொன் வண்ணம். பொன் வண்ணமும் அதனை யுடைய கல்லும் செஞ்சுவட்டினையும் அதனையுடைய மார்பினை யும் ஒத்தது என்றலின் இரட்டைக்கிளவி இரட்டைவழித்தா யிற்று. வேங்கைவீ-வேங்கை மலர். துறுகல்-பெரிய பாறை; புலிக்குருளை-புலிக்குட்டி. வேங்கை மலர் பரப்பப்பட்ட பெரியபாறை புலிக்குட்டி போறலின் ஒற்றைக்கிளவி இரட்டை வழித்தாயிற்று.

இரட்டைக்கிளவியாவது உவமை இரண்டு சொல்லோடு அடுத்து வருவதனோடு உவமிக்கப்படும் பொருளும் இரண்டு

பொருளாகி வருதல் வேண்டும் என உரை காண்பர் இளம்பூரணர்.

அவ்வழி இரண்டு சொல்லும் ஒரு சொன்னீர்மைப்பட்டு வருதல் வேண்டுமென்றுகொள்க.

"விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்" (குறள்-210)

இதனை வேறுபாடு அறிக என்பது அவர் தரும் விளக்கமாகும். (22)

உள்ளுறை உவமம்

**298. பிறிதொடு படாது பிறப்பொடு நோக்கி**
**[1]முன்னை மரபிற் கூறுங் காலைத்**
**துணிவொடு வருஉந் துணிவினோர் கொளினே.**

இது, மேலெல்லாம் ஏனையுவமங் கூறி உள்ளுறையுவமம் உணர்த்துதல் நுதலிற்று. மேல் 'இசைதிரிந்திசைக்கு' (195) மெனப்பட்டவற்றின் பகுதியாயினும் இதனை ஆண்டுக் (196) கூறாது ஈண்டுக் கூறினான் உள்ளுறையுவமமாகலானும் இவ் வோத்து உவமவியலாகலானுமென்பது.

(இ-ள்) பிறிதொடு படாது—உவமையொடு உவமிக்கப் படும் பொருள் பிறிதொன்று தாராது; பிறப்பொடு நோக்கி— உவமநிலங்களுட் பிறந்த பிறவிகளோடு சார்த்தி நோக்கி; முன்னை மரபிற் கூறுங்காலை — கருத்தினான் இதற்கு இஃது உவமையென்று சொன்ன மரபினாற் கூறுங்காலை; துணிவொடு வருஉம் துணிவினோர் கொளினே—இன்ன பொருட்கு இஃது உவமமாயிற்றென்பது துணிந்து கொள்ளத் தோன்றும், அவ்வாறு துணிந்துகொள்ளும் உணர்வுடையோர் கொள்ளின் (எ-று)

எனவே, அஃது எல்லார்க்கும் புலனன்று நல்லுணர் வுடையோர்க்கே புலனென்பதூஉம் அவர் கொள்ளச் செய்ய வேண்டுமென்பதூஉங் கூறியவாறு. இதனானே செய்யுளுட்

1. முன்னம் எனப் பாடங் கொள்வர் இளம்பூரணர்.

பயின்று வருமென்பது கூறினனும். அவற்றிற்கு உதாரணம் மேற்காட்டுதும்.

மற்றிதனை உவமையென்ற தென்னை? உவமையும் உவமிக்கப்படும் பொருளுமாக நிறீஇக் கூறுனயினெனின் அங்ஙனங் கூறுனயினும் உவமம்போன்று பொருள் கொள்ளப் படுதலின் அதனை உவமையென்றுன். அஃது ஒப்பினுகிய பெயரென்பது; என்னை? இவற்றை உவமப்போலி யென்று கூறு மாகலின்

(வி–ரை)

இசை - சொல். திரிந்திசைப்பின் – சொல் அல்லது சொற் றொடர்; வெளிப்படையாக ஒரு பொருளைக் குறிப்பதன்றிக் குறிப்பாகவும் ஒரு பொருளை உட்கொணடிருக்குமாயின். இசை திரிந்திசைப்பினும் என்னும் நூற்பாவின் பகுதியில் உள்ளுறை யும் அடங்கும் என்பது இவர் கருத்து.

உவமநிலம் - வினை, பயன், மெய், உரு, பிறப்பு, என்பன. பிறந்த பிறவிகளோடு சார்த்தி – பிறந்த உள்ளுறைப் பொரு ளோடு உவமையையும் சார்த்தி. இது உவமை இது பொருள் என ஏனையுவமத்தில் விளங்க அறிவது போல உள்ளுறை யுவமத்தில் அறிய இயலாது. உவமையைக்கொண்டு உய்த் துரைத்தக்கதாய் அப்பொருள் அமையும். ஒப்பினுன் ஆகிய பெயர் - உவமையும் பொருளையும் வேறுக நிறுத்தி அறியப் படும் வகை உவமை என்றுற்போல இதனையும் அத்தகைய ஒப்புமை பற்றி உவமை என்றூர் என்பது

மேலைச்சூத்திரத்தளவும் பிறிது பொருளொடு உவமை கூறிப் போந்தார்: இனிப்பொருள் தன்னேடே யுவமை கூறுகின்றுர் எனக்கொள்க.

'நிலவு காண்பது போல அணிமதி ஏர்தர' (கலி-111)

என்றவழிக் காணப்பிறிதாகிய பொருளொடு உவமை கூறுமை யிற் பிறிதொடு படாதாயிற்று. மதியினது எழுச்சியை நோக்கு தலிற் பிறப்பொடு நோக்கிற்று. அவ்விடத்திற்கேற்பக் கூறுதலின் முன்னமாயிற்று. அம்மதியினது தோற்றம் இத்தன்மைத்தெனத் துணிதலின் அதன்கண் உவமைச்சொல் வந்தது.

(எ-டு)

"வள்ளிதழ் கூம்பிய மணி மருளிருங்கழிப்
புள்ளி புக்கதுபோலும் பரப்புநீர்த் தண்சேர்ப்ப"
(கலித்-112)

என்பதும் அது என்பது இந்நூற்பாவிற்கு இளம்பூரணர் தரும் உரையாகும். எனவே ஏனையுவமத்தின் விகற்பமே இந்நூற்பாவிலும் கூறப்படுகின்றது என்பது இவர் கருத்தாகின்றது. (23)

அதன் வகை

**299. உவமப் போலி யைந்தென மொழிப.**

இது மேற்கூறிய உள்ளுறையுவமை ஐவகைப்படுமென்கின்றது.

(இ-ள்) உள்ளுறையுவமை ஐந்துவகையெனக் கூறுவர் புலவர் (எ-று).

அவையைந்துமாமாறு முன்னர்ச் (300) சொல்லுதும். இதனது பயம் ஏனையுவமத்துக்கு நிலைக்களம் (289) (290) ஐந்து. ஓதினான், அவ்வாறே இதற்கு நிலைக்களம் ஓதாது அவை, போறலின் அவையே நிலைக்களமாமென்றலும், ஏனையுவமத்துள் ஒரு சாதியோடு ஒரு சாதியினை உவமித்தல் வழக்கன்றாயினும் உள்ளுறையுவமத்திற்கு அமையுமென்றலுமென்பது.

(வி-ரை)

ஏனையுவமத்திற்கு நிலைக்களம், சிறப்பு, நலன், காதல், வலி, இழிபொருள் என ஐந்துமாம் என மேல் 289, 290, ஆவது நூற்பாக்களில் கூறினார் ஆசிரியர். அதுபோன்று உள்ளுறை உவமத்திற்கும் நிலைக்களம் இவையென ஓதாராயினும் அவையே இதற்கும் நிலைக்களம் என உணரவும் ஏனையுவமத்தில் உவமையும் பொருளும் ஓரினமாதல் வேண்டும் என்னும் வரையறையுளது போல உள்ளுறையுவமைக்கு அவ்வரையறை இல்லை என்பது உணரவும் இந்நூற்பா கூறப்பட்டுள்ளது.

இளம்பூரணர் இந்நூற்பாவிற்குக் கொள்ளும் உரை வேறும். அவ்வுரை வருமாறு:—

உவமையைப் போன்று வருவன ஐந்தென்றும் சொல்லுவர். அவையாவன:- இதற்குவமையில்லை எனவும், இதற்கிது தானே யுவமை எனவும், பல பொருளினுமுளதாகிய வுறுப்புக்களைத் தெரிந்தெடுத்துக் கொண்டு சேர்த்தின் இதற்குவமையாம் எனவும். பல பொருளினுமுளதாகிய கவின் ஓரிடத்து வரின் இதற்குவமையாம் எனவும் கூடாப் பொருளொடு உவமித்து வருவனவும் ஆம். (24)

ஐவகை உள்ளுறை உவமம்

**300.** **தவலருஞ் சிறப்பினத் தன்மை நாடின்**
**வினையினும் பயத்தினு முறுப்பினு முருவினும்**
**பிறப்பினும் வருஉந் [1]திறத்திய லென்ப**

இது, மேற்கூறிய ஐந்தும் இவையென்கின்றது.

(இ-ள்) வினை பயன் மெய் உருவென்ற நான்கினும் பிறப்பினும் வரும் மேற்கூறிய ஐந்தும் (எ-று)

உறுப்பென்றது மெய்யினை; உடம்பினை உறுப்பென்பவாகலானும் மெய்யுவமமெல்லாம் உறுப்பினையேபற்றி வருதல் பெரும்பான்மைய வாகலானும் அவ்வாறு கூறினனென்பது. 'தவலருஞ் சிறப்பினத் தன்மை நாடின்' என்றதனான் ஏனை யுவமத்திலும் உள்ளுறை யுவமமே செய்யுட்கும் பொருளிலக்கணத்திற்குஞ் சிறந்த தென்பது. அவை வருமாறு:

"கரும்புநடு பாத்திக் கலித்த தாமரை
சுரும்புபசி களையும் பெரும்புன லூர
புதல்வ னீன்றவெம் முயங்கல்
அதுவே தெய்யநின் மார்புசிதைப் பதுவே"–(ஐங்குறு-65)

என்பது வினையுவமப்போலி; என்னை? தாமரையினை விளைப்பதற்கன்றிக் கரும்பு நடுதற்குச் செய்த பாத்தியுள் தானே விளைந்த தாமரை சுரும்பின் பசி தீர்க்கு மூரனென்றாள். இதன் கருத்து காதற் பரத்தையர்க்கும் இற்பரத்தையர்க்கும் என்றமைக்கப்பட்ட கோயிலுள் யாமுமுளமாகி இல்லறம் பூண்டு விருந்தோம்புகின்றனம் அதுபோல வென்பதாகலான் உவமைக்குப்

1. திறத்த எனப்பாடங்கொள்வர் இளம்பூரணர்.

பிறிதொரு பொருள் எதிர்ந்து உவமஞ் செய்யாது ஆண்டுப் பிறந்தனவற்றோடு நோக்கிக் கருத்தினுற் கொள்ளவைத்தலின் இஃது உள்ளுறை யுவமமாயிற்று. அவற்றுள்ளும் இது சுரும்பு பசிகளையுந் தொழிலோடு விருந்தோம்புதற்றொழில் உவமங் கொள்ள நின்றமையின் விளையுவமப் போலியாயிற்று. இங்ஙனங் கூறவே இதனை இப்பொருண்மைத் தென்பதெல்லாம் உணருமாறென்னை யெனின் முன்னர்த், "துணிவொடு வருஉந் துணிவினோர் கொளினே" (தொல் - பொருள் - 298) எனல் வேண்டியது இதன் அருமை நோக்கியன்றே யென்பது. அல்லாக் கால் 'கரும்புநடு பாத்திக் கலித்த தாமரை, சுரும்புபசி களையும் பெரும்புன லூர' என்பது பயமில கூறலாமென்பது.

"கரைசேர் வேழங் கரும்பிற் பூக்குந்
துறைகே ழூரன் கொடுமை நாணி
நல்ல னென்றும் யாமே
அல்ல னென்னும்என் தடமென் தோளே"

என்பது பயவுவமப்போலி! இதனுள் தலைமகன் கொடுமை கூறியதல்லது அக்கொடுமைக்கு ஏதுவாகியதொன்று விளங்கக் கூறியதிலளாயினும இழிந்த வேழம் உயர்ந்த கரும்பிற் பூக்கு மெனவே [1]அவற்றிற்கு இழிபுயர்வாமென்பது ஒன்றில்லை; எல் லாரும் இன்பங் கோடற்குரியர் தலைமகற் கென்றமையின் யாமும் பரத்தையரும் 'அவற்கு ஒத்தன மென்றமையின் அவை கூறினு ளென்பது.

"நீருறை கோழி நீலச் சேவல்
கூருகிர்ப் பேடை வயாஅ மூர
புளிங்காய் வேட்கைத் தன்றுநின்
மலர்ந்த மார்பிவள் வயாஅ நோய்க்கே" (ஐங்குறு-51)

என்பதும் அது. நீருறை கோழி நீலச் சேவலை அதன் கூருகிர்ப்பெடை நினைந்து கடுஞ்சூலான்வந்த வயாத் தீர்தற் பயத்தவாகும், அதுபோல நின்மார்பு நினைந்து தன் வயவுநோய் தீரும் இவளுமென்றவாறு. புளிங்காய் வேட்கைத் தென்பது நின் மார்புதான் இவளை நயவாதாயினும் இவள்தானே நின்மார்பை நயந்து பயம்பெற்றுள்போலச் சுவைகொண்டு

1. அவற்கும் (தலைவனுக்கும்)என்றிருப்பின் பொருத்தமாகும்

சிறிது வேட்கை தணிதற் பயத்தளாகும்; புளியங்காய் நினைய வாய்நீர் ஊறுமாறு போல என்பது.

"ஒன்றே னல்லென் ஒன்றுவென் குன்றத்துப்
பொருகளிறு மிதித்த நெறிதாள் வேங்கை
குறவர் மகளிர் கூந்தற் பெய்ம்மார்
நின்றுகொய மலரு நாடனொடு
ஒன்றேன் தோழி யொன்றி னானே" (குறுந்-208)

என்பது மெய்யுவமப்போலி; என்னை; மிதியுண்டு வீழ்ந்த வேங்கை குறையுயிரோடு மலர்ந்தாற்போல யானும் உளேனு யினேனென்றமையின்.

"வண்ண ஒண்டழை நுடங்க வாலிழை
ஒண்ணுத லரிவை பண்ணை பாய்ந்தெனக்
கண்ணறுங் குவளை நாறித்
தண்ணென் றிசினே பெருந்துறைப் புனலே
(ஐங்குறு-73)

இஃது, உருவுவமப்போலி. நீ புனலாடிய ஞான்று பரத்தை பாய்ந்தாடிய புனலெல்லாந் தண்ணென்றதெனக்கூறிய வழி, அத்தடம்போல இவள் உறக்கலங்கித் தெளிந்து தண்ணென்றுளென்பது கருதியுணரப்பட்டது; அவளொடு புனல் பாய்ந்தாடிய இன்பச் சிறப்புக் கேட்டு நிலையாற்றாளென்பது கருத்து. இது நிறமன்றாலெனின் நிறமும் பண்பாகலின் அந் நிறத்தோடு நிறமல்லாத பண்புங் கொள்ளப்படுமென்பது 'வகை பெறவந்த உவமத்தோற்றம்' (தொல். பொருள்-276) என்புழிக் கூறினானென்பது.

"பொய்கைப் பள்ளிப் புலவுநாறு நீர்நாய்
வாளை நாளிரை பெறூஉ மூர
எந்நலந் தொலைவ தாயினுந்
துன்னலம் பெருமபிறர்த் தோய்ந்த மார்பே"
(ஐங்குறு-63)

என்பது, பிறப்புவமப்போலி. நல்ல குலத்திற் பிறந்தும் இழிந் தாரைத் தோய்ந்தமையான் அவர் நாற்றமே நாறியது, அவ ரையே பாதுகாவாய், மேற்குலத்துப் பிறந்த எம்மைத் தீண்ட லென்பாள் அஃதெல்லாம் விளங்கக் கூறாது பொய்கைப் பள்ளிப் பிறந்த நீர்நாய் முன்னாள் தின்ற வாளைமீன் புலவு நாற்றத்

தோடு பின்னும் அதனையே வேண்டும் ஊரன் என்றமையின் பரத்தையர் பிறப்பின் இழிந்தமையுந் தலைவி பிறப்பு உயர்ந் தமையுங் கூறி அவன் பிறப்பின் உயர்வுங் கூறினமையின் இது பிறப்புவமப்போலியாயிற்று.

இவையெல்லாங் கருதிக் கூறிற் செய்யுட்குச் சிறப்பா மெனவும், வாளாது நீர்நாய் வாளை பெறூஉ மூரனென்றதனுன் ஒரு பயமின்றெனவுங் கொள்க.

'பிறப்பொடு வரூஉந் திறத்த' என்றது தலைமகனல் இவ்வாறு திறப்பாடு வேறுமுளவென்பதூஉங் கொள்க அவை,

"தன்பார்ப்புத் தின்னும் அன்பின் முதலையொடு
வெண்பூம் பொய்கைத்து அவனூ ரென்ப,
அதனல் தன்சொ லுணர்ந்தோர் மேனி
பொன்போற் செய்யு மூர்கிழ வோன" (ஐங்குறு-41)

என்றவழித், தன் பார்ப்புத் தின்னும் அன்பில் முதலை யென்பது இன்னுந் தலைமகனது கொடுமைக்கு உவமையாயிற்று வெண் பூம் பொய்கைத்து அவனூரென்பது தலைமகள் பசப்புநிறம் பற்றி உவமையாயிற்று. ஆதலான் வினையுவமமும் உருவுவமமும் ஒரு செய்யுளுள்ளே தொடர்ந்து ஒருங்குவருதலும் உடையவென் பது. இன்னும் 'திறத்தியல்' என்றதனனே இத்தன்மைத்தாகிய ஊரனையானெனச் சொல்லுதலுந், தலைவனூரின்கணுள்ளன சொல்லத் தலைவிக்கேற்ற உவமை தோன்றச் செய்தலுமென உவமங் கூறிய வழி உள்ளுறையுவமங் கோடலும், பிறவாறு வருவனவுளவாயினும் எல்லாங் கொள்க.

"தேர்வண் கோமான் தேனூ ரன்னவிவள்"
(ஐங்குறு-55)

என்பது அவனூரனையாளென வந்தது.

"வெண்பூம் பொய்கைத்து அவனூர்" (ஐங்குறு-41) எனத் தலைவனூரின் உள்ளதொன்றனல் தலைவிக்குவமையே பிறப்பித்த வாறுயிற்று. அல்லாக்கால், அதனற் பயமின்றென்பது.

(வி-ரை)

கலித்த—முளைத்த; சுரும்பு-வண்டு; எம் முயங்கல்—எம்மை முயங்கற்க. முயங்கின் நின் மார்பின் அழகு கெடும் என்ப தாம்.

கரும்பிற்பூக்கும்-கரும்பைப்போலப் பூக்கும். கூர்நுகிர்-கூரிய நகம். வயாஅம்-கருப்பத்தால் உண்டான வேட்கை. அவன் வயவு நோய்க்கு நின் மார்பு புளியங்காய் போன்றது என்பது கருத்து.

நெறிதாள்-நெறிந்த அடியை உடைய. பெய்ம்மார்-அணிந்து கொள்ளும் பொருட்டு. ஒன்றினனே-வேற்றுவரைவு நேரும் என்ற ஒரு காரணத்தால்.

நுடங்க-ஆசைய; வாள் இழை-சிறந்த அணிகலன்; பண்ணை பாய்ந்தன-விளையாட்டாகப்பாய்ந்தாளாக; கள்நுறுங் குவளை-தேனைப்பொருந்திய மணங்கமழும் குவளை.

நாள்இரை-விடியற்காலத்தே இரையாகப் பெறுகின்ற.

தன்பார்ப்பு-தனது குட்டி

'மேற்சொல்லப்பட்ட ஐந்தும் உரைத்த வாய்பாட்டாற் கூறும் வழிச் சொல்லப்பட்ட ஐந்தினும் ஏதுவாகச் சொல்லிப் பின்னர்க் கூற வேண்டுமென' உரை காண்பர் இளம்பூரணர்.

நினக்குவமையில்லை என்னும் வழிச் செயலானுதல், பயனானுதல், உறுப்பானுதல், உருவானுதல், பிறப்பானுதல், ஒப்பாரில்லையெனல் வேண்டுமென்பது கருத்து என மேலும் விளக்கம் காண்பர் அவர். (25)

தலைவியும் தோழியும் உள்ளுறை கூறுமாறு

**301. [1]கிழவி சொல்லி னவளறி கிளவி
தோழிக் காயின் நிலம்பெயர்ந் துரையாது.**

இது, மேற்கூறிய உள்ளுறையுவமைக் காவதோர் இலக்கணம்.

(இ-ள்) ஐந்து வகைப்பட்ட உவமப்போலியும் பிறிதொடு படாது பிறப்பு நோக்கி உணரக் கூறியவழி அக்கூற்றுத் தலைமகட்குந் தோழிக்கும் உரித்தாங்கால், தலைவிக்காயின் அவளறியுங் கருப்பொருளானே செய்யல் வேண்டும்; தோழிக்காயின்

---

1. இந்நூற்பாவின் ஒவ்வொரு அடியையும் ஒவ்வொரு நூற்பாவாகக் கொள்வர் இளம்பூரணர்.

அந்நிலத்துள்ளன வெல்லாஞ் சொல்லவும் பெறும்; பிறநிலத் துள்ளன அறிந்து சொல்லினளாகச் செய்யுள் செய்யப்பெறூர் (எ-று.)

இதனது பயம் தலைமகள் இந்நிலத்துள்ளன வெல்லாம் அறியுந் துணைப் பயிற்சியில ளெனவும் அவளாயத்தாராயின் அந்நிலத்துள்ளன அறியச் சிதைந்த தின்றெனவும் கூறியவாறு.

"ஒன்றே னல்லெ னொன்றுவென்" (குறுந்-208)

என்னும் பாட்டினுட், பொருகளிறு மிதித்த நெறிதாள் வேங்கை மரம் படப்பையிலுள்ள தாகலானுந் தன்னுற் பூக்கொய்யப்படு மாதலானும் அஃது அவளறிகிளவி யெனப்பட்டது.

"தன்பார்ப்புத் தின்னு மன்பின் முதலை" (ஐங்குறு-41)

என்பது தோழி கூற்று. என்னை? அவற்றின் செய்கையெல்லாம் அறியாளன்றே தலைமகள் பெரும் பேதையாதலினென்பது. அதிகாரத்தானின்ற உள்ளுறையுவமை யென்பதனை அவளறி கிளவி யென்றதற்குப் பெயர்ப்பயனிலையாகவும் நிலம்பெயர்ந் துரையாதென்னும் முற்றுவினைக்குப் பெயராகவும் வேறு வேறு சொல்லிக்கொள்க.

(வி-ரை)

அறியச்சிதைந்தது இன்று-அறியக் குற்றமுடைத்தன்று. படப்பை-தோட்டம்.

அதிகாரத்தால் நின்ற-மேல் தொட்டும் கூறப்பட்டு வந்த; பெயராகவும்-எழுவாயாகவும். (26)

தலைவனும், பாங்கன் முதலாயினுரும் உள்ளுறை கூறுமாறு

**302. [1]கிழவோற் காயி னுரனொடு கிளக்கும்**
**ஏனோர்க் கெல்லாம் இடம்வரை வின்றே.**

(இ-ள்.) கிழவோன் சொல்லும் உள்ளுறையுவமந் தன் னுரனுடைமை தோன்றச் சொல்லப்படும். ஏனோரெனப்பட்ட பாங்கனும் பாணனு முதலாயினோர் சொல்லுங்காலை வகையானே

1. இந்நூற்பாவின் ஒவ்வொரு அடியையும் ஒவ்வொரு நூற்பா வாகக் கொள்வர் இளம்பூரணர்.

தாந்தாம் அறிந்த கிளவி யானும் நிலம்பெயர்ந்துரையாத பொருளானும் மேற்கூறிய இடம் வரையப்படாது; என்நிலத் துள்ள பொருளானும் உள்ளுறையுவமை சொல்லப் பெறுப (எ-று.)

"கருங்கோட் டெருமைச் செங்கண் புனிற்றுக்
காதற் குழவிக்கு ஊறுமுலை மடுக்கும்
நுந்தை நும்மூர் வருதும்
ஒண்டொடி மடந்தை நின்னையாம் பெறினே"
(ஐங்குறு-92)

என்றவழித், தாய்போன்று நும்மைத் தலையளிப்பலெனத் தலைமகன் தலைமை தோன்ற உரவொடு கிளந்தவாறு காண்க. ஒழிந்தோராயின் வரையறையின்மையிற் காட்டாமாயினும். அவை வந்துழிக் (கலி-69) காண்க.

(வி-ரை)

புனிற்று—ஈன்ற அணிமையையுடைய பசு. (27

இன்பமும் துன்பமும் பற்றியும் உவமை வருமாறு

303. இனிதுறு கிளவியுந் துனியுறு கிளவியும்
உவம மருங்கில் தோன்று மென்ப.

இதுவும் அது.

இதுவும் மேலதற்கே யாவதோர் வேறுபாடுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) மேற் கூறப்பட்ட உள்ளுறையுவமம் இன்ப துன்பங்கள் தோன்றச் சொல்லவும்படும் (எ-று.)

"கழனி மாஅத்து விளைந்துகு தீம்பழம்
பழன வாளை கதூஉம் ஊரன்" (குறுந்-8)

என்பது, பலவகை யின்பமும் வருந்தாது பெறுவரென்பதற்கு உவமையாகி வருதலின் இனிதுறு கிளவி யெனப்பட்டது.

"தாய்சாப் பிறக்கும் புள்ளிக் கள்வனொடு
பிள்ளை தின்னு முதலைத்து" (ஐங்குறு-24)

என்பது, தலைமகன் கொடுமை கூறினமையின் துனியுறு கிளவி யாயிற்று.

இவ்விரு பகுதியும்படச் செய்யப்படும் மேற்கூறிய உள்ளுறையுவமமென்பது இதன் கருத்து.

"மருங்கு" என்னும் மிகையானே ஏனையுவமத்தின்கண்ணும் இப்பகுதி கொள்ளப்படும்; அவை,

"மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே (குறுந்-71)

என்பது இனிதுறு கிளவி.

"கராத்தின் வெய்யவெந் தோள்" (ஐந்திணையம்பது-24)

என்பது, துனியுறு கிளவி.

(வி-ரை)

கழனிமா அத்து-வயலில் உள்ள மாமரத்தினது.

புள்ளிக் கள்வன்-புள்ளிகளையுடைய நண்டு. நண்டும் முதலையும் அன்பின்றித் தம் சுற்றத்திற்கே கொடுமை செய்தல் போலத் தலைமகனும் தம் சுற்றத்திற்குத் (தலைவிக்கு) கேடு சூழ்கின்றான் என்றமையின் துனியுறு கிளவியாயிற்று.

தலைவி அமிழ்தமெனின் அமிழ்தமேயாகின்றாள், ஐம்புல இன்பங்களையும் ஆரத்துயத்தற்குரிய செல்வமெனின் செல்வமேயாகின்றாள் எனத்தலைவன் தலைவியைப் பிரிதலருமை காட்டிச் செலவழுங்குகின்றானாதலின் இது இனிதுறுகிளவியாயிற்று.

கராம்-முதலை. (28)

தலைவி உள்ளுறை கூறும் நிலம்

## 304. கிழவோட் [1]குவம மீரிடத் துரித்தே.

இஃது, அவ்வுள்ளுறையுவமையை வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) தலைமகள் இரண்டிடத்தல்லது உள்ளுறையுவமை சொல்லப்பெறாள் (எ-று).

இரண்டிடமென்பன: மருதமும் நெய்தலும், அந்நிலத்துப் பிறந்த பொருள் பற்றியல்லது உள்ளுறையுவமஞ் சொல்லுதல்

1. உவமை எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

கிழத்திக்குரித்தன்றென்பது கருத்து. இவ்விடத்து உரிமையுடைத்தெனவே குறிஞ்சிக்கண் அத்துணையுரித்தன்று என்றவாறு.

"தாமரை வண்டூது பனிமலர் ஆரூர
யாரை யோநிற் புலக்கேம்" (அகம்-46)

என்றவழி வண்டூது பனிமலரெனப் பிறர்க்குரிய மகளிரெனவும் அவரை நயப்பாயெனவும் உள்ளுறையுவமம் மருதத்துக்கண் வந்தது.

"அன்னை வாழிவேண் டன்னை கழிய
முண்டக மலருந் தண்கடற் சேர்ப்பன்
என்தோள் துறந்தன னாயின்
என்னுங் கொல்லவன் நயந்தோள் தோளே"
(ஐங்குறு-108)

என்பது நெய்தல். இதனுட் 'கழியமுண்டக மலரும்' என முள்ளுடையதனைப் பூமலருமென்று உள்ளுறுத்ததனான் இருவர் காமத்துறைக்கண்ணும் ஒருதலை இன்னா ஒருதலை இனிதென்றானென்பது. 'என்தோள் துறந்தனன்' என்பது, முள்ளுடைமையோடொக்க, 'என்னுங் கொல்லவ னயந்தோள் தோள்' என்றவழி அவன் அன்பில்திரியாமை கூறினமையின் முண்டக மலர்ச்சியோ டொப்பிக்கப்படும். பிறவும் அன்ன.

"குன்றக் குறவன் புல்வேய் குரம்பை
மன்று டிளமழை மறைக்கு நாடன்
புரையோன் வாழி தோழி விரைபெயல்
அரும்பனி யளைஇய கூதிர்ப்
பெருந்தண் வாடையின் முந்துவந் தனனே"
(ஐங்குறு-252)

என்னுங் குறிஞ்சிப்பாட்டினுள் வறுமை கூர்ந்த புல்வேய் குரம்பையை மழை புறமறைத்தாற்போல வாடை செய்யும் நோய் தீர்க்க வந்தானென்று உள்ளுறையுவமஞ் செய்தவாறு கண்டுகொள்க.

இனிக், 'கிழவோட் குவமம் பிரிவிடத்துரித்து' என்பது பாடமாக உரைப்பாருமுளர். யாதானுமொரு நிலத்தாயினும் பிரிந்திருந்தவிடத்து உள்ளுறையுவமங் கூறப்பெறுங் கிழத்தியென்பது இதன் கருத்து. பெருந்தண்வாடையின் முந்து

வந்தோனென்பது பிரிவன்ருகலின் ஈரிடமென்றலே வலி தென்பது.

(வி-ரை)

கழிய-கழியிடத்துள்ள; என்னுங்கொல் அவன் நயந்த தோளே-அவன் விரும்பிய தோள் வேறு யாதாம். முண்டகம்-முள்ளால் துன்பமும் மலரால் இன்பமும் தருதல் போலத் தலைவியும் தளந்த வழித்துன்பமும் மணந்த வழி இன்பமும் தருகின்ருள் என்பதாம். இருவர்-தலைவன் தலைவியாகிய இருவர்.

குரம்பை மன்று-குடிலாகிய மன்று. ஆடுஇளமழை-அசைகின்ற இளையமேகங்கள். புரையோன்-உயர்வுடையோன். அரும்பனி-அரிய நீர்த்துளிகள்.

குறிஞ்சிப்பாட்டு என்றது குறிஞ்சித்திணைக்குரிய பாட்டு என்பதாம்.

பிறர் கருத்தாகக் கூறும் பாடமும் உரையும் யாருடையது எனத் தெரிந்திலது. (29

தலைமகன் உள்ளுறை கூற நிலவரையறை இல்லை.

## 305. கிழவோற் காயி னிடம்வரை வின்றே.

மேல் 'உரனொடு கிளக்கும்' (தொல்-பொருள்-302) என்றதல்லது இன்னவழிச் சொல்லப்பெறுந் தலைமகனென்றிலன். அதனன் அவற்கு எல்லா நிலனும் உரியவாமென்கின்ருனென்பது.

(இ-ள்.) தலைமகற்கு இடவரையறை இல்லை (எ-று).

வரையறையில்லவற்றுக்கு வரையறை கூருமே முடியாவோவெனின், அங்ஙனமாயினுங் கிழத்திக்குந் தோழிக்கும் இடம் வரையறுத்ததனைக் கண்ட மாணுக்கன் இவ்வாறே தலைமகற்கும் இடம் வரையறை யுண்டுகொலென்று கருதிற் சுருதற்கவென்றற்கு இது கூறினனென்பது.

தோழியும் செவிலியும் உள்ளுறை கூறுமாறு

**306. தோழியுஞ் செவிலியும் பொருந்துவழி நோக்கிக் கூறுதற் குரியர் கொள்வழி யான.**

இது, தோழியுஞ் செவிலியும் உள்ளுறையுவமங் கூறுமிட முணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) காலத்திற்கும் இடத்திற்கும் பொருந்துமாற்றான் உள்ளுறையுவமங் கூறற்குரியர் தோழியுஞ் செவிலியும் (எ-று.)

காலமுமிடனும் பொருந்துதலென்பது வெளிப்படக் கிளவாது முன்னத்தான் மறைத்துச் சொல்லவேண்டிய வழி அவ்வாறு சொல்லுவர் அவரு மென்றவாறு. இங்ஙனங் கூறவே,

"ஏனோர்க் கெல்லா மிடம்வரை வின்று" (302)

என்றவழி, எல்லாரும் உள்ளுறையுவமஞ் சொல்லற்குரிய ரென்பது பட்டது. அதனை நற்றாயும் ஆயத்தாருந் தந்தையுந் தன்னையரும் உள்ளுறையுவமை கூறாரெனவுந், தோழி கூறின் நிலம் பெயர்ந்துறையாத பொருளான் ஒருவழிக் கூறு மெனவும் செவிலிக்காயின் இடம்வரையின் றெனப்பட்டவகை யாற் பொருந்தும்வழிக் கூறுதற்குரியளெனவுங் கூறினான் இச் சூத்திரத்தானென்பது.

'கொள்வழி' யென்றதனால் தோழிக்குப் போல நிலம் பெயர்ந்துரையாத பொருளான் உள்ளுறையுவமங் கூறுதலே செவிலிக்கு முரித்தென்பது கொள்க.

மற்று இவையெல்லாம் அகப்பொருட்கேயுரியவாக விதந்தோதிய தென்னை? புறப்பொருட்கு வாராதனபோல எனின், ஆண்டு வருதல் அரிதாகலின் இவ்வாறு அகத்திற்கே கூறினானென்பது.

"வன்புலக் கேளிர்க்கு வருவிருந் தயரும்
மென்புல வைப்பி னன்னாட்டுப் பொருந" (புறம்-52)

என்றக்காற் பகைவேந்தரை வென்றிகொள்ளுங்கால் அவர் தாமே தத்தம் பொருள் பிறர்க்களிப்பாரென்னும் பொருள் தோன்றினுந் தோன்றுமென்பதல்லது ஒருதலையாக உள்ளுறை யுவமங் கோடல் வேண்டுவதன்று; என்னை?

"தர்ப்சாப் பிறக்கும் புள்ளிக் கள்வனொடு
பிள்ளை தின்னு முதலைத்து அவனூர்" (ஐங்குறு-24)

என்றாற்போலக் கூறாது அந்நாட்டுக் கருங்களமர் முதலாயினார் வருந்தாமற் பெறும் பொருள் பிறநாட்டார்க்கு விருந்துசெய்யத் தகுமென்று அந்நாட்டினது வளமை கூறினமையினென்பது. தோழி பொருந்தியவழிக் கூறுமாறு முன் காட்டப்பட்டன. செவிலி பொருந்துவழிக் கூறுவனவுங் கண்டுகொள்க. இலக்கண முண்மையின் அவையும் உளவென்பது கருத்து.

(வி- ரை)

முன்னத்தால்-குறிப்பால்

மென்புல வைப்பு-மென்புலத்தின்கண் உள்ள ஊர்கள். வன்புலம் மென்புலம் என்பன வலிமையுடையோரையும் மெலி யுடையோரையும் குறிப்பதாகக் காண்கின்றார். (31)

வேறுபடவரும் உவமை

307. வேறுபட வந்த [1]வுவமத் தோற்றங்
கூறிய மருங்கிற் கொள்வழிக் கொளாஅல்.

இது, மேலெல்லாம் இருவகையுவமமுங் கூறி இன்னும் ஏனையுவமப் பகுதியில் கூறுவான் எய்தாததெய்துவித்தது.

(இ-ள்.) வேறுபட வந்த உவமத்தோற்றம்—வேறுபாடு தோன்ற வந்த உவமைச்சாதி; தோற்றமெனினும் பிறப்பெனி னுஞ் சாதியெனினும் ஒக்கும்; கூறிய மருங்கிற் கொள்வழிக் கொளாஅல்—அங்ஙனம் வேறுபட வந்தனவாயினும் மேற்கூறிய பகுதியானே கொள்ளுமிடனறிந்து கொளுத்துக (எ-று.)

கொளுவுதலென்பது 'கொளாஅல்' என்பதாயிற்று.

வேறுபடவருதலென்பது உவமைக்கும் பொருட்கும் ஒப்புமை மாறுபடக் கூறுதலும், ஒப்புமைகூறாது பெயர்போல் வனவற்று மாத்திரையானே மறுத்துக் கூறுதலும், ஒப்புமை

1. உவமைத் தோற்றம் எனப்பாடங்கொள்வர் இளம்பூரணர்.

மறுத்துப் பொருளை நாட்டிக் கூறுதலும், ஒப்புமை மறுத்த வழிப் பிறிதோருவமை நாட்டுதலும், உவமையும் பொருளும் முற்கூறி நிறீஇப் பின்னர் மற்றைய ஒவ்வாவென்றலும், உவமைக்கு இருகுணங்கொடுத்துப் பொருளினை வாளாது கூறுங்கால் உவமையினை இரண்டாக்கி ஒன்றற்குக் கூறிய அடை ஒன்றற்குக் கூறாது கூறுதலுப், ஒப்புமை குறைவுபட உவமித்து மற்றொரு குணங்கொடுத்து நிரப்புதலும், ஒவ்வாக்கருத்தினான் ஒப்புமை கோடலும், உவமத்திற்கன்றி உவமத்திற்கு ஏதுவாகிய பொருட்குச் சில அடைகூறி அவ் அடையானே உவமிக்கப் படும் பொருளினைச் சிறப்பித்தலும், உவமானத்தினை உவமேயமாக்கியும் அது விலக்கியுங் கூறுதலும், இரண்டு பொருளானே வெவ்வேறு கூறியவழி ஒன்று ஒன்றற்கு உவமையென்பது கொள்ளவைத்தலும், இன்னோரன்ன வெல்லாம் வேறுபடவந்த உவமத்தோற்றம்' எனப்படும்.

இவற்றைக் 'கூறிய மருங்கிற் கொளுத்துதல்' என்பது, முற்கூறிய ஏனையுவமத்தின்பாலும் பிற்கூறிய உள்ளுறையுவமத்தின்பாலும் படுத்து உணரப்படுமென்பது. ஏனையுவமத்தின்பாற்படுத்தலென்பது, வினை பயன் மெய் உரு என்ற நான்கும்பற்றி (276) வருதலும் அவற்றுக்கு ஓதிய ஐவகை நிலைக்களனும்பற்றி (279-280) வருதலுமெனக் கொள்க. உள்ளுறையுவமத்தின் பாற்படுத்தலென்பது, இவ்வேனையுவமம்போல, உவமையும் பொருளுமாகி வேறு வேறு விளங்க வாராது குறிப்பினாற் கொள்ளவருதலின் இக்கருத்தினானே இதனை ஈண்டு வைப்பானாயிற்று.

வரலாறு:

"வையங் காவலர் வழிமொழிந் தொழுகப்
போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறாஅது
இடஞ்சிறி தென்னும் ஊக்கந் துரப்ப
ஒடுங்கா வுள்ளத் தோம்பா வீகைக்
கடந்தடு தானைச் சேர லாதனை
யாங்கன மொத்தியோ வீங்குசெலல் மண்டிலம்
பொழுதென வரைதி புறங்கொடுத் திறத்தி
மாறி வருதி மலைமறைந் தொளித்தி

அகலிரு விசும்பி னாலும்
[1]பகல்விளங் கலையாற் பல்கதிர் விரித்தே" (புறம்-8)

[2]என்னும் பாட்டினுள் "கடந்தடு தானைச் சேரலாதனை" என்னுந் துணை உவமத்திற்கு வந்த அடையினைப் பொருட்கு மறுத்துக் கொள்ள வைத்தானென்பது. இனிப் "பொழுதென வரைதி" என்பது தொடங்கிப் பாட்டுமுடியுங்காறும் பொருட்குரிய அடையினை உவமத்திற்கு மறுத்துக் கொள்ளவைத்தானென்பது, என்னை? வெஞ்சுடர்வழித் தோன்றிய அரசனைத் தண்சுடரோடு பழிப்பான் 'பொருளே உவமஞ்' செய்தானென்பது.

'பொருளே உவமஞ் செய்தனர் மொழியினு' (284) மென்றதனாற் பொருளினை உவமையாகக் கூறுது உள்ளுறை யுவமம் போலக் கொள்ள வைத்துப் பின்னர் உவமத்திற்கு அடையாயவற்றுள்,

"வையங் காவலர் வழிமொழிந் தொழுக"

என்றான்.

வழி மொழிதலென்பது: வேற்றரசர்க்குத் தம்தன்மையென வேறின்றித் தன்னகப்படுத்தல். ஆகலான் தத்தம் ஒளியொடு படுத்து ஒழிந்த கோளுஞ் செல்லத் தானுஞ் செல்லும் மதியமென்று எதிர்மறுத்துக் குற்றங்கூறிக் குறிப்புப் பட வைத்தானென்பது.

"போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறாஅது"

எனவே, [3]இன்பநுகர்வு முற்றுச்சிறப்பில்லாக் கட்டுரை யெய்தானெனவும் அவனோடு உவமிக்கின்ற மதியமாயின் இருபத்தெழுவர் மகளிரொடு போகந்துய்த்துச் சிறப்பில்லாத கட்டுரை புனையுமென்றும் எதிர்மறுத்துக் கொள்ளவைத்தான். சிறப்பின்மை

1. புறநானூற்றுரையாசிரியர் 'பகல் விளங்குதியால்' என்று பாடங் கொண்டு வீங்கு செலன் மண்டிலத்தை ஞாயிற்று மண்டிலமெனக் கொள்வர்.
2. முன்னைய பதிப்புக்களில் இப்பாராவின் கருத்தே மீண்டும் எழுதப்பட்டுள்ளது. அது வேண்டுவதன்று எனக்கருதி இப் பதிப்பில் அப்பாரா விடப்பட்டது.
3. இன்பநுகர்வுஉற்று என்றிருப்பதே நன்று.

யென்பது, எல்லார்க்கும் ஒத்தவாற்றான் அறஞ்செய்யாது உரோகிணிமேற் கழிபெருங் காதலனெனப்படுதல் போல்வன.

"இடஞ்சிறி தென்னு மூக்கந் துரப்ப"

எனவே, எஞ்ஞான்றுந் தன்னெல்லைக்கண்ணே வரும் மதி மண்டிலமென்று எதிர்மறுத்துக் கொள்ளப்படும். "ஒடுங்காவுள் ளம்" எனவே, அம்மதியம் தேய்ந்தொடுங்குமென்பது கொள் ளப்படும். "ஓம்பா வீகை" எனவே நாடோறும் ஒரோவொரு கலையாகப் பல்லுயிர்க்கும் இன்பம் பயங்குமாற்றால் தருவதல் லாது தானுடையதெல்லாம் ஒருகாலே கொடாத மதியமெனப் படும். "கடந்தடு தானை" எனவே, மதிக்குத் தானையாகிய தாரகை யெல்லாம் பகைக்கதிராகிய பரிதி மண்டிலத்துக்குத் தோற்குமென்றானும். இவ்வாற்றான் உவமான அடையெல்லாம் எதிர்மறுத்துக்கொள்ளப்பட்டன.

இனிப் பொருட்குரிய அடையும் அவ்வாறே எதிர்மறுத் துக் கொள்ளப்படு மென்றவாறு. "வீங்குசெலன் மண்டில" மெனவே, கடையாயினார் கதியிற் செல்லு மதியமென்று பாட் டுடைத் தலைவன் தலையாயினார் கதியிற் செல்லுமென்றான். "பொழுதென வரைதி' யெனவே, நாடோறும் நாழிகை வேறு பட்டு எறித்தி என்றதனான் அவன் பொழுது செய்யானெனவும், "புறங்கொடுத் திறத்தி' யெனவே. தோற்றோர் போன்று ஒளி மழுங்கிச் செறிகின்றாயெனவும்' விளங்கித் தோன்றவென் பதனால் தொடர்கின்ற சுடர்போல விளங்கிப் பிறர் தோற் றோடக்காயும் இவனெனவும், "மாறி வருதி" யெனவே, திங்க டோறும் மாறிப் பிறத்தி யென்பதனான் இவன் நிலைபெற்றா னெனவும், "மலைமறைந் தொளித்தி" யெனவே மலைசார்ந்த வழித் தோன்றா யென்பதனான் இவன் தன்னாட்டு மலைமீக் கூறு மெனவும், "அகலிரு விசும்பி னானு" மெனவே இவன் இவ்வுல கத்து நிலைபேறுடையனெனவும், "பகல்விளங்காய்' எனவே இவன் இருபொழுதும் விளங்குமெனவுங் கொள்ளப்படும். முற்பகுதியும் பிற்பகுதியும் வேறுபடுதலின் வேறுபடவந்ததா யிற்று: மற்றையவும் அன்ன.

இக்கூறிய அடை யெல்லாம், வினை பயன் மெய்உருவெனக் கூறிய மருங்கிற் கொளுவுக. இனிக் காட்டுவனவற்றிற்கும் இஃதொக்கும்.

"கண்ணன் அவனிவன் மாறன் கமழ்துழாய்க்
கண்ணி யவற்கு இவற்கு வேம்புதார்—வண்ணமும்
மாய னவனிவன் சேயன் மரபொன்றே
ஆய னவனிவன் கோ"

என்பது, பெயருந்தாரு முதலாயினபற்றி மாயனோடு உவமங் கருதி மறுத்துரைத்தவாறு பெயரென்பது பொருளுணர்த்து தலின் அதனை வடிவின்பாற் படுத்துணர்க.

"அடிநோக்கின் ஆழ்கடல் வண்ணன்தன் மேனிப்
படிநோக்கிற் பைங்கொன்றைத் தாரோன்-முடிநேக்கி
தேர்வளவனுதல் தெளிந்தேன்தன் சென்னிமேல்
ஆரலங்கல் தோன்றியது கண்டு"

என்பதனுள், ஆழ்கடல் வண்ணனையுங் கொன்றைத்தாரோனை யும் உவமை கூறியவற்றை மறுத்துத் தேர்வளவனெனத் தெளிந்தே னெனப் பொருளையே நாடுதலின் அஃது, உவமம் வேறுபட வந்ததாயிற்று.

"இந்திரன் என்னின் இரண்டேகண் ணேறூர்ந்த
அந்தரத்தா னென்னிற் பிறையில்லை—யந்தரத்துக்
கோழியா னென்னின் முகமொன்றே கோதையை
ஆழியா னென்றுணரற் பாற்று"

என்பதுனுள் இந்திரனையும், இறையோனையும், முருகனையும், ஒப்புமறுத்து நெடியோனை உவமங்கூறலின் ஒப்புமை மறுத்துப் பிறிது நாட்டியது.

"சுற்றுவிற் காமனுஞ் சோழர் பெருமகனுங்
கொற்றப்போர்க் கிள்ளியுங் கேழொவ்வார் பொற்றொடீஇ
ஆழி யுடையான் மகன்மாயன் சேயனே
கோழி யுடையான் மகன்"

என்பதனால், உவமையும் பொருளும் முன் ஒருங்குநிறீஇப் பின்னர் ஒவ்வாமை கூறுதலின் இதுவும் பின்னும் வேறுபட வந்ததாயிற்று.

"புனல்நாடர் கோமானும் பூந்துழாய் மாலும்
வினைவகையான் வேறு படுவர் — புனனுடன்
ஏற்றெறிந்து மாற்றலர்பா லெய்தியபார் மாயவன்
ஏற்றிரந்து கொண்டமையா னின்று"

என்பதும் அது.

"ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலின்
நீர்த்துறை படியும் பெருங்களிறு போல
இனியை பெரும எமக்கே" (புறம்-94)

என்னும் பாட்டினுள் உவமையாகிய பொருளினை யானையுங் கடாமுமென இரண்டாக்கி யானைக்கே ஊர்க்குறுமாக்கள் வெண்கோடுகழாலின் நீர்த்துறைபடியுமென்னும் அடைகூறி ஊர்க்குறுமாக்கள் போல்வாரைத் துன்னருங் கடாஅத்திற்குச் சொல்லாமையின் இதுவும் வேறுபட வந்த உவமத்தோற்ற மெனப்பட்டது.

"முதிர்கோங்கின் முகையென முகஞ்செய்த
குரும்பையெனப்
பெயறுளி முகிழெனப் பெருத்தநின் னிளமுலை" (கலி-56)

என்றவழி, முதிர்கோங்கின் முகையும் முற்றிய குரும்பையும் பெரியவாகலின் அவைபோலப் பெருத்த நின் இளமுலை யென்றல் ஒத்தது, பெயறுளிமுகுளஞ் சிறிதாகவும் அவற்றோடு இதனை உடன்கூறி இப்பெயறுளி முகுளத்திற்கில்லாத பெருமைக் குணம் பொருட்குப் பின்னர் விதந்து கூறுதலின் அதுவும் வேறு படவந்த உவமையாயிற்று.

"மக்களே போல்வர் கயவர் அவரன்ன
வொப்பாரி யாங்கண்ட தில் (குறள்-1071)

என்பது ஒவ்வாப்பொருளை ஒப்புமைகொண்டது. என்னை? மக்களைக் கயவர் ஒவ்வாரென்னுங் கருத்தினான் மக்கள் போல்வர் கயவரென்றமையின் அதுவும் வேறுபட வந்த உவமையாயிற்று

"நெடுந்தோட் டிரும்பனை நீர் நீழல் புரையக்
குறும்பல முரிந்த குன்றுசேர் சிறுநெறி"

என்பதனுள், உவமையாகிய நிழல் பொருட்கெய்தியது உவம வினையன்றே, அதற்கு நெடுந்தோடும் பெருமையும் அடையக்கா

கூறினான்; கூறவே, பனைநிழலோடொக்கும் குன்றஞ்சேர் சிறுநெறி முடிந்தவழிச் சென்றுபுகும் ஊர்க்குவமை நெடுந்தோடென்று கொள்ள வைத்தமையின் அதுவும் வேறுபடவந்த உவமையாயிற்று.

"மண்படுதோட் கிள்ளி மதவேழம் மாற்றரசர்
வெண்குடையைத் தேய்த்த வெகுளியால்-விண்படர்ந்து
பாயுங்கொ லென்று பனிமதியுந் தன்னுருவந்
தேயுந் தெளிவிசும்பி னின்று"

என்பதனுள், உவமானத்தினை உவமேயமாக்கி அதனையே விலக்கினார். என்னை? வெண்குடையென்று யானை குத்துமென்று மதியினைக் குடையுடனுப்பிப்பான் மதியினைக் குடையாகவே கூறித் தேயுந்தெளிவிசும்பினின்று என்பதனாற் குடையோடு உவமை கூறியதை விலக்கினமையின் அதுவும் வேறுபடவந்த உவமத்தோற்றமாயிற்று.

"அகர முதல வெழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு"

என்றவழி இரண்டு பொருள் வேறுவேறு கூறியதன்றி, அகர முதல எழுத்தெல்லாம் அதுபோல என்றானும், ஆதிபகவன் முதற்று உலகம் அதுபோல என்றானும் ஒன்றாகத் துணியுமாற்றான் உவமையும் பொருளுங் கூறாமையின் அதுவும் வேறுபட வந்த உவமமாயிற்று; பிறவும் அன்ன. இவை ஏனையுமவத்திற்கெல்லாம் பொதுவிலக்கணம்.

(வி—ரை)

போகம் வேண்டி-இன்பத்தைவிரும்பி. பொதுச்சொல் பொறா அது-இந்நிலவுலக பிற அரசர்க்கும் பொது என்பதைப் பொறாது. இடம் சிறிது தான் அரசு செய்யும் நாடு மிகச் சிறியது. வீங்குசெலல் மண்டிலம்-தடைப்பட்டுச் செல்லும் மதிமண்டிலமே!. பொழுதென வரைதி-இராப்பொழுதை நினக்கென வரைந்துகொள்கின்றாய்-புறங்கொடுத்து-ஞாயிற்றுக்குப் புறங்கொடுத்து. மாறி வருதி-திங்கள் தோறும் வளர்ந்தும் தேய்ந்தும் தோன்றுவாய். மலை மறைந்து ஒளித்தி-மலையைச் சார்ந்த விடத்து அதன் கண் மறைந்து ஒளிப்பாய். பகல் விளங்கலை-பகற்பொழுதில் விளங்கித் தோன்றாய்.

இப்பாடலில் அரசனை உவமையாகவும், மதியத்தைப் பொருளாகவும் கொண்டு கூறுகின்றார். எனினும் பொருளாகிய மதியத்தை நேரிடையாக உவமையாகக் கூறாது உள்ளுறை உவமம் போலக் கொள்ள வைத்துள்ளார். வழிமொழிதல்-வழிபாடு சொல்லுதல்.

இன்ப நுகர்வுற்று-மகளிரொடு இன்பந்துய்த்தலிலேயே அழுந்தி. சிறப்பில்லாக்கட்டுரை-புகழொடு படாத சொற்களை. அறஞ்செய்யாது-அறத்தொடுபட்டு இன்பம் நுகராது.

சேரலாதன் தான் காக்கும் நாடு சிறிதென அதனை மேலும் பெருக்க முற்பட, மதியமோ தனக்குரிய எல்லைக்கண் தான் வருதலையே விரும்புவதாய் உள்ளது என அதற்குக் குற்றம் கூறப்படுகின்றது.

நாழிகை வேறுபட்டு எறித்தி-தேய்ந்தும் வளர்ந்தும் வருதலால் இரவு முழுதும் ஒப்ப ஒளி செய்யாது மாறிமாறி ஒளி செய்கின்றாய்.

மலை மீக்கூறும்-மலையிலுள்ளார் அனைவராலும் புகழப்படுபவன். கண்ணனவன் எனத்தொடங்கும் பாடல் வேற்றுமையணியின் பாற்படும்.

படி நோக்கின்-ஒப்புமை கருதின். ஆரலங்கல்-ஆத்திமாலை. இப்பாடல் தெரிதருதேற்ற உவமயணியின் பாற்படும்.

ஏறுஊர்ந்த-ஆனேற்றின் மீது இவர்ந்து வரும். அந்தரத்தான்-விண்ணின் கண்ணுள்ள சிவபெருமான். கோழியான்-முருகன், ஆழியான்-திருமால்.

கேழ் ஒவ்வார்-நிறத்தால் ஒவ்வார்; ஆழியுடையான் மகன்-திருமாலின் மகனாகிய காமன். மாயன்-கருநிறமுடையவன். கோழியுடையான்-உறையூரை உடைய சோழன். சேயன்-செந்நிறத்தன், இப்பாடல் வேற்றுமையணியின் பாற்படும்.

வினை வகையால்-தாம் செய்யும் தொழில் திறத்தால். ஏற்றெறிந்து – எதிர்த்துக்கொண்டு, ஏற்று இரந்து-கையேற்று இரந்து, மாவலியினிடத்துத் திருமால் இரந்து பெற்றமையின் இவ்வாறு கூறினர். இதுவும் வேற்றுமையணியின்பாற்படும்.

ஊரின்கண்ணுள்ள சிறுபிள்ளைகள் தன்கோட்டைக்கழுவுதல் காரணமாக நீரையுடைய துறைக்கட் படியும் பெரியகளிறு அவர்க்கு எவ்வாறு இனிதாம் அவ்வாறு பெரும நீ எங்களுக் கினியை, மற்று அதனுடைய மதம்பட்ட நிலைமை (அவர்போல் வார்க்கு) எவ்வாறு இன்னாதாம் 'அதுபோல பெரும நீ நின் பகைவர்க்கு இன்னாய் என்பது இப்பாடற்பகுதியின் கருத்தாகும்.

முகம் செய்த-அடிவரைந்து தோன்றின, குரும்பை-தென் னங்குரும்பை, பெயல்துளி முகில்-மழைத்துளியில் உண்டான குமிழி. இது சிறிதாதலின் இதனை அடுத்துள்ள சொல்லால் பெருத்த என்றார். பின்னர்விதந்து கூறப்பட்ட சொல் பெருத்த என்பதாகும்.

குறும்பல முறிந்த-குறிய பலவாகி முறிவு பட்ட. இதனைச் சிறுநெறி என்பதோடு கூட்டுக. உவம வினை என்பதை வினையுவ மம் என்பதாகக்கொள்க. பனைமரத்தின் நிழல் முடிந்தவிடத்து அதனது நெடிய மட்டையின் நிழல் தோன்றும். அதுபோல குன்றின்கண் செல்லும் சிறிய வழி முடிந்துவிடத்து ஊர் தோன்றும் எனப்பொருத்திக் கொள்க.

மண்படுதோள்-நிலவுலகைச் சுமக்கின்ற தோள். யானை மாற்றரசனின் குடையைத் தேய்த்த வெகுளியால் தன்னையும் தேய்க்கு மென்று கருதி மதிதேயும் என்பது கருத்து. இவ்வாறு கூறுதல் தற்குறிப்பேற்றம் எனலாம். எனினும் பேராசிரியர் இதனை விலக்குவமையாகக் கூறுகின்றார்.

அகரமுதல என்னும் குறளைப் பிற்காலத்தார் எடுத்துக் காட்டுவமை என்பார். (32)

ஒக்குமென்றது, ஒவ்வாதென்றலும் மரபென்றல்,

## 308. ஒரீஇக் கூறலு மரீஇய பண்பே.

இதுவும், ஏனையுவமத்திற்காவதோர் இலக்கணமுணர்த்து தல் நுதலிற்று.

(இ-ள்.) ஒரீஇக்கூறலும்—ஒக்குமெனக் கூறாது ஒவ்வா தெனக் கூறுதலும், உம்மை இறந்தது தழீஇயிற்று; மரீஇய பண்பு – அதுவும் உவமையாதற்கு அடிப்படவந்த வழக்கு (எ-று).

உதாரணம்:

"யாங்ஙன மொத்தியோ வீங்குசெலன் மண்டிலம்"

(புறம்-8)

எனவும்,

"மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேற்

காதலை வாழி மதி" (குறள்-1118)

எனவும் வரும்.

"நின்னோ ரனையை நீ"

என்பதும் அது.

இவற்றுள், யாங்ஙனம் ஒத்தியோவென்பது ஒவ்வாயென்னும் பொருட்டு. காதலை வாழிமதி யென்றவழியும் யான் காதலியாமையால் மதியமே அவள் வாண்முக மொவ்வாயென்றலின் ஒரீஇக் கூறிற்று. இதுவும் மரீஇய பண்பாகலானும் உள்ளுறையுவமம் போலக் குறிப்பினான் உவமங்கோட லொப்புமையானும் ஈண்டு வைத்தானென்பது.

பண்பென்றதனான் அதுவும் இலக்கணத்தோடொக்கும் என்றவாறு. இவற்றையும் வேறுபடவந்த உவமமென்றுமோவெனின், உவமையும் அவ்வழி மாறுபட வருமாறு உவமத்துக் கூறினான். உவமையின்மை கூறுதலும் உவமையெனப்படுமென்றற்கு இது கூறினானென்பது. இவற்றுள்ளும் வேறுபட வந்த இலக்கணம் மேலைச்சூத்திரத்துள் அடங்கும்.

(வி—ரை)

அடிப்பட வந்த - மரபுவழிவந்த.

நின்னோரனையநீ-நின்போல்வாரை ஒப்பாய் நீ. இவ்வாறு கூறவே நின்போல்வரில்லை என்பது கருத்தாயிற்று.

உவமையின் வேறுபட வருவனவெல்லாம் வேறுபட வந்த உவமையென்றார். இப்பொருட்கு இது உவமையாகாது எனக் கூறுவதையும் உவமையாகக் கருதுக என்பது கருத்து. (33)

உள்ளது உள்ளபடியேயும் உவமம் கூறப்படுமெனல்

**309. உவமத் தன்மையும் உரித்தென மொழிப
பயனிலை புரிந்த வழக்கத் தான.**

இஃது, எய்தாதது எய்துவித்தது; மேல் ஏனையுவமங் கூறுங்கால் [1]உவமிக்கப்படும் பொருட்குப் பெருமையுஞ் சிறுமை யுஞ் சிறப்பக் கூறல்வேண்டுமென்முன், அவ்வாறன்றியும் உவமங் கொள்ளப்படுமென்றமையின்.

(இ-ள்.) உவமத்தன்மையும் உரித்தென மொழிப— விகாரவகையாற் பெருமையுஞ் சிறுமையும் ஒருபொருட்குக் கூருது பட்டாங்கு உவமங்கூறுதலும் உரித்தென்று சொல்லு வர் ஆசிரியர்; பயனிலை புரிந்த வழக்கத்தான—அதனனும் ஒரு பயன் தோன்றச் சொல்லுதனெறிப் பாட்டின்கண் (எ-று).

அது,

"பாரி பாரி யென்றுபல வேத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்" (புறம்-107)

என்னும் பாட்டினுள் உலகளித்தற்குப் மாரியும் உண்டென மாரியை உவமித்துச சிறப்பித்துக்கூறுவான், மாரியைச் சிறப் பித்துப் பாட்டுடைத் தலைவனுகியபாரியை உயர்த்துக்கூருதான் போல இயல்பினுன் உவமை கூறினும்; இது மாரிக்கும் பாரிக்கும் ஒரிழிவில்லையென்னுந் தன்மைப்படக் கூறவே அவ னுயர்வு கூறுதலிற் பயனிலைபுரிந்த வழக்கெனப் படுமென்பது.

"கொல்வினைப் பொலிந்த கூர்ங்குறும் புழுகின்
வில்லோர் தூணி வீங்கப் பெய்த
அப்புநுனை ஏய்ப்ப அரும்பிய இருப்பைச்
செப்படர் அன்ன செங்குழை யகந்தோறு
இழுதி னன்ன தீம்புழல் துய்வாய்
உழுதுகாண் துளைய வாகி ஆர்கழல்
பாலி வானிற் காலொடு பாறித்

---

1. உவமைக்கு என்றிருப்பின் பொருத்தம்.

துப்பி னன்ன செங்கோட்டு இயவின்
நெய்த்தோர் மீமிசை நிணத்திற் பரிக்கும் (அகம்-9)

என்பதும்,

"நீளரை யிலவத் தலங்குசினை பயந்த
பூளையம் பசுங்காய் புடைவிரிந் தன்ன
வரிப்புற அணிலொடு கருப்பை யாடாது
யாற்றறல் புரையும் வெரிநுடைக் கொழுமடல்
வேல்தலை யன்ன வைந்நுதி நெடுந்தகர்
ஈத்திலை வேய்ந்த வெய்ப்புறக் குரம்பை"
(பத்து-பெரும்பாண்-83-8)

என்றாற்போல்வனவும் அது.

"கொல்வினைப் பொலிந்த" (அகம்-9)

என்பதனுள் இந்நிலத்தின் மக்கள் அம்பினை உவமையாக்கி ஆண்டையவாகிய இருப்பையின் பூங்கொத்தை உவமிக்கப்படும் பொருளாக்கியும் உவம நிலத்திற்கேற்ற வெண்ணெய்த்திரளொடு கழன்ற பூவினை உவமஞ்செய்தும் அந்நிலத்தியல்பு கூறினமையின் அது பயனிலைபுரிந்த வழக்கெனப்பட்டது. பிறவும் அன்ன.

'உவமைத்தன்மையும்' என்ற உம்மையான் உவமத்தன்மையேயன்றி வாளாது தன்மை கூறுதலும் அந்நிலத்திற்கே பயனிலை யெனப்படுவனவுங் கொள்க; அவை,

"மான்றோற் பள்ளி மகவொடு முடங்கி
யீன்பிணை வொழியப் போகி நோன்காழ்
இரும்புதலை யாத்த திருந்துகணை விழுக்கோல்
உளிவாய்ச் சுரையின் மிளிர மிண்டி
இருநிலக் கரம்பைப் படுநீ றாடி
நுண்புல் லடக்கிய வெண்பல் லெயிற்றியர்
பார்வை யாத்த பறைதாள் விளவின்
நீழன் முன்றி னிலவுரற் பெய்து
குறுங்கா ழுலக்கை யோச்சி"
(பத்து. பெரும்பாண். 89-97)

என்றவழி உவமஞ்செய்யாது அந்நிலத்தியல்பு கூறப்பட்டதாயினும் உவமத்தாற் பொருட்பெற்றி தோன்றச் செய்தாற்

போல அந்நிலத்திற்குப் பயம்பாடு வெளிப்படச் செய்யாமை யின் உவமவிலக்கணத்துள் இதனையும் இலேசினுற் கொண்டா மென்பது. அற்றன்று,

"மரபே தானும்" (தொல்-செய்-80)

என்புழி நாற்சொல்லியலெனச் சொற்றன்மையுங் கூறப்பட்ட மையின் உவமையாராய்ச்சியுள் அது கூறுனென்பது. உம்மை இறந்தது தழீஇயிற்று; என்னை? உயர்ந்ததன் மேற்றன்றி உயர்பிழிபுடைத்தல்லாத தன்மையுவமையுங் கொள்க வென் றமையின்.

(வி-ரை)

உவமையை விகாரப்படுத்திக் கூறுதலேயன்றி அதனை உள்ள வாறு கூறி உவமித்தலும் பொருத்தமாம் என்பது இந்நூற்பா வின் கருத்தாகும். கூன்குறும் புழுகின்-கூரியகுறிய புழுகென. பெரிய அம்பின் தலையில் செறிக்கும் குப்பியைப் புழுகு என்பர்.

அப்புநுனை-அம்பின் நுனி. செப்படர் - செப்புத்தகடு: இழுதின் அன்ன - வெண்ணெத்திரளையொத்த; தீம்புழல் துய்வாய்-இனிய துளையுள்ள பூக்கள் உழுதுகாண் துளையவாகி- காம்பினைநீக்கிக் காணத் தக்க துளையினை உடையவாய். ஆலி வானில்-வானின்று விழும் பனிக்கட்டி போல. செங்கோட்டு இயவு-சிவந்த மேடாகிய விழிகளில். நெய்த்தோர் - குருதி.

நீள்அரை - நீண்டதாளினையுடைய; அலங்குசினை -அசை கின்ற கொம்பு பூளை-பஞ்சு; கருப்பை - எலி; வெரின் - முதுகு; நெடுந்தேரட்டு ஈந்து-நெடிய மேட்டு நிலத்தில் உள்ள ஈந்து ஈன்பிணவு - பிள்ளையைப் பெற்ற எயிற்றி. நோன்காழ்- வலிமையுடைய வயிரம். உளிவாய்ச்சுரையின் - உளிபோன்ற வாளினையுடைய கடப்பாறையினல்; மிளிரமிண்டி -கீழ்மேலாகக் குத்த. பார்வை - பார்வைமான்; பறைதாள் - தேய்ந்த அடியினையுடைய,

'உவமிக்கப்படும் பொருளோடு உவமை தோன்ற வருதலே யன்றி யுவமையது தன்மை கூறலு முவமையாதற்குரித்து பயனில பொருந்திய வழக்கின்கண் என்றவாறு; எனவே இவ்வாறு வருவது பயனில யுவமைக்கண் என்று கொள்க.

"பாரி பாரியென்று பல ஏத்தி
ஒருவர் புகழ்வர் செந்நாப்புலவர்
பாரி ஒருவனும் அல்லன்
மாரியு மூண்டீண்டுலகு புரப்பதுவே" (புறம்-107)

இது மாரி போலும் பாரியது கொடை என்றது இவ்வாறு கூறும் பொருண்மையும் உவமமாம்' என விளக்கம் காண்பர் இளம்பூரணர். (34)

உவமையும் பொருளும் தடுமாறி வருதல்

## 310 தடுமா றுவமம் கடிவரை யின்றே.

இதுவும், உவமத்திற்கேயாவதோர் இலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) தடுமாறுவமம்—உவமையும் பொருளும் வேறு நிற்றி இதுபோலும் இதுவென்றது அவ்விரண்டினையும் உவமையுறச் சொல்லுந் தடுமாறுவமம்; இனி அவ்வாறன்றி உவமையைப் பொருளாக்கியும் பொருளை உவமை யாக்கியுந் தடுமாறச் சொல்லுதலுந் தடுமாறுவமமெனப்படும; கடிவரை இன்று-அவ்விரண்டும் உவமமென்று சொல்லற் பாட்டிற் கடியப்படா (எ-று).

"அரிமலர் ஆய்ந்தக ணம்மா கடைசி
திருமுகமுந் திங்களுஞ் செத்துத்—தெருமந்து
வையத்தும் வானத்துஞ் செல்லாது அணங்காகி
ஐயத்து நின்றது அரா" (பொய்கையார்)

என்பதனுள், உவமையினையும் பொருளினையும் வேறு வேறு துணியாது ஐயுற்று வையத்தும் வானத்துஞ் செல்லாது அரா வென்றமையின் இது தடுமாறுவமமாயிற்று.

"தளிபெற்று வைகிய தண்கனை நீலம்
அளிபெற்றூர் கண்போன் மலரு—மளிபெற்ற

---

1. தடுமாறு வரலும் எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர். இதனையும் அடுத்த நூற்பாவையும் ஒன்றாக இணைத்து ஒரே நூற்பாவாகக்கொள்வர் அவர்.

நல்லார் திருமுகத் தோற்றத் தளிபெற்ற
கல்லாரம் போன்மலருங் கண்"

என்புழி, நீலத்தோடு கண்ணினையும் கண்ணினோடு நிலத்தினை யும் ஒன்றற்கொன்று உவமையாக்கியும் பொருளாக்கியும் ஒருங்கே தடுமாறக் கூறினமையின் இதுவுந் தடுமாறுவமமெனப் பட்டது. பிறவும் அன்ன.

(வி-ரை)

அரிமலர் - வரிபொருந்திய மலர். ஆய்ந்த கண் - நுணுகிய கண்; அம்மா - அழகிய மாமை நிறத்தையுடைய; கடைசி- நெய்தல் நிலத்துப்பெண்; செத்து-ஒன்றுகக்கருதி; அரா-இராகு என்னும் பாம்பு; திங்களைப்பாம்பு கொண்டற்று என்பதால் திங்களைப்பாம்பு பிணிக்கும் என்பது வழிவழியாக நம்பி வந்த மரபாம். பெண்ணின் முகம் திங்களையொத்திருத்தலின் எது திங்கள் எது முகமெனத் தெளியாமையின் அப்பாம்பு ஐயப் பட்டது. இவ்வாறு வருவதை ஐயவுவமை என்பர்.

தளிபெற்று - நீர்த்துளி பெற்று; அளி பெற்றுள் - கணவ ஞல் தண்ணளி செய்யப்பெற்ற மகளிர்; திருமுகத்தோற்றத்து- திருமுகத்தின் பொலிவை. கல்லாரம்-நீலமலர்; இவ்வாறு கூறு வதைத் தண்டியாசிரியர் இதரவிதரவுவமை என்பர்.

இளம்பூரணர் ஐயவுவமையாக வருவதை மட்டும் இந்நூற் பாவிற் கொள்வர். (35)

உவமைக்கு உவவை கூறல் சிறப்பன்று

## 311. அடுக்கிய தோற்றம் விடுத்தல் பண்பே.

இஃது, எய்தியது மறுத்தது; என்னை? வேறு ஒரு பொரு ளோடு ஒரு பொருளை உவமித்து நிறீஇ அப்பொருளோடு பிறி தொரு பொருளை யுவமித்தலும் உவமையென்று கொள்ளுவா ருயினும் அது கொள்ளப்படாது, பொருள் விளங்காமையி னெனக் கூறி விலக்கியமையின்.

(இ-ள்) அடுக்கிய தோற்றம்—உவமையும் பொருளும் நிறுத்தி அடுக்கிய தோற்றம்; விடுத்தல் பண்பு—சிறப்பினவாகக் கொள்ளப்படா (எ-று).

"மதியத் தன்ன வாண்முகம் போலும்
பொதியவிழ் தாமரைப் புதுப்பூம் பொய்கை"

என்றக்கால் மதியத்தன்ன வாண்முகத்தினைத் தாமரை யென்றமையின் அவை ஒன்று ஒன்றனோடு பொருந்தாவென்பது கருத்து.

"இலங்குவளை யன்ன நலங்கே ழாம்பற்
போதி னன்ன தாதவிழ் கைதை"

என்றக்கால், ஒன்று ஒன்றனோடு ஒருவண்ணத்ததாய் உவமைக்கேற்பினும் ஒன்றற்கொன்று உவமையாய் நின்றது. நின்றுற மற்றும் அதனோடு உவமங் கொள்ளப்படாது, இது வரையறையுடைமையின் விலக்கப்பட்டது. மற்று,

"ஈர்ந்து நிலந்தோயு மிரும்பிடித் தடக்கையிற்
சேர்ந்துடன் செறிந்த குறங்கிற் குறங்கென
மால்வரை யொழுகிய வாழை வாழைப்
பூவெனப் பொலிந்த வோதி யோதி
நளிச்சினை வேங்கை நாண்மலர் நச்சி"

(பத்துப்-சிறுபாண்-19-23)

என்பதூஉம் அடுக்கியதோற்ற மெனப்படாதோவெனின், படாதன்றே; யானைக்கைபோலுங் குறங்கு; குறங்குபோலும் வாழையென அடுக்கிச்சொல்லாது குறங்கினையுடையாள் என்று துணித்துக் கூறிய பின்னர்க் குறங்கென மால்வரை ஒழுகிய வாழையென்றுதலினென்பது.

'தோற்ற'மென்றதனான் உவமையும் பொருளுமாக நீஇ உவமவுருபு தோன்றக் கூறுங்கால் அடுக்கப்படுவதென்பது.

(வி-ரை)

உவமையும் பொருளுமாகக்கூறி அதனுடன் நிறுத்திவிடுதலே மரபாம். அன்றி அவ்வாறு கூறப்பட்ட பொருளைத் தொடர்ந்து பின்னும் உவமை கூறல் தவறும்.

ஈர்ந்து - இழுக்கப்பட்டு. தடக்கையின் - துதிக்கையையொப்ப; குறங்கின்-தொடையை உடையவள். ஓதி - கூந்தல்; இங்குக் குறங்கு வாழை ஓதி எஙபன அவ்வப் பொருளோடு அற்று முடிதலின் அடுக்கிய தோற்றம் ஆகா. இதனைத்தண்டியலங்கார உரையாசிரியர் சந்தான உவமையென்பர். (3

உவமையை நிரலே நிறுத்திக் கூறுமாறு

**312. நிரனிறுத் தமைத்தல் நிரனிறை சுண்ணம்**
**[1]வரை நிலை வைத்த மூன்றலங் கடையே.**

இதுவும் எய்தாதன வரையறையுடைமையிற் கூறியவற்றோடு இனமாகலின் உவமத்திற்காவதொன் றுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) நிரனிறுத்து அமைத்தல் நிரனிறை—உவமையும் நிரலே நிறுத்துப் பொருளினையும் நிரலே நிறுத்து ஒப்புமை கூறின் அது நிரனிறையெனப்படும்; சுண்ணம் வரை நிலை வைத்த மூன்றலங்கடையே—சுண்ணத்தினை வரைந்த நிலைமையான் வந்த சுண்ணமும் அடிமறியும் மொழிமாற்று மென்னும் மூன்றுமல்லாத இடத்து (எ-று)

சுண்ணத்தினை வரைந்த நிலைமையான் வந்தனவெனவே சுண்ணந்தவிர மூன்றுளவோவெனின் அதனை ஒருவரை விலக்க மூவரும் வந்திலரென்றாற்போலக் கொள்க. உதாரணம்:

"கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி
மதியவள முத்த முகம்வாய் முறுவல்
பிடிபிணை மஞ்ஞை நடை நோக்குச் சாயல்
வடிவினளே வஞ்சி மகள்"

எனவரும்.

நிரனிறுத்தலென்னாது 'அமைத்தல்'லென்றதனான் நிரனிறையன்றி அமைத்துக் கொள்வதும் உண்டு; அது,

"களிறுங் கந்தும் போல நளிகடற்
கூம்புங் கலனுந் தோன்றுந்
தோன்றன் மறந்தோர் துறைகெழு நாட்டே"

என வரும்; பிறவும் அன்ன.

என்றார்க்கு, 'நிரனிறுத் தமைத்தல் நிரனிறை ஏனை, வரைநிலை வைத்த மூன்றலங் கடையே' என்னாது சுண்ணத்தினை

1. வரன் முறை வந்த எனப்பாடங் கொள்வர் இளம்பூரணர்.

வரைந்தோதியது என்னையெனின், அவை மூன்றுஞ் சுண்ணம் போலச் சுண்ணஞ் செய்யப்படுதலின் அவ்வாற்றாற் சிதர்ந்து கிடப்ப உவமையுங் கூறின் அது பொருள் விளங்காதென்பது அறிவித்தற்கென்பது. என்னை? அடிமறியுள் ஓரடியுள் உவமங் கூறி ஓரடியுட் பொருள்வைத்தால் இனிது பொருள்கொள்ளாது அடிமறிக்குங் காலைப் பிறிதுபிறிதாக லுடைத்து. இனி ஓரடியுள் உவமங்கூறிப் பின்னர் எத்துணையுஞ் சென்று பொருள்கூறி மொழி மாற்றிக்கொள்ள வைப்பின் அதுவும் உவமத்தாற் பொருள் தோன்றாது. சுண்ணத்திற்கும் அஃதொக்கும்.

இனி, இவ்வோத்தினிற் கூறுகின்ற உவமங்களுட் சிலவற் றையுஞ் சொல்லதிகாரத்தினுள்ளுஞ் செய்யுளியலுள்ளுஞ் சொல் லுகின்ற சில பொருள்களையும் வாங்கிக்கொண்டு மற்றவை செய் யுட்கண்ணே அணியாமென இக்காலத்தாசிரியர் நூல் செய்தாரு முளர். அவை ஒரு தலையாகச் செய்யுட்கு அணியென்று இலக் கணங் கூறப்படா. என்னை? வல்லார் செய்யின் அணியாகி யும் அல்லார் செய்யின் அணியன்றாகியும் வரும், தாங்காட்டிய இலக்கணத்திற் சிதையா வழியுமென்பது. என்னை?

"நாயகர்க்கு நாய்கள்போல் நட்பிற் பிறழாது
கூஉய்க் குழாஅ முடன்கொட்கு—மாய்படை
பன்றி யனையர் பகைவேந்த ராங்கவர்
சென்றெவன் செய்வர் செரு"

என்றவழி, நாய்போலும் நட்புடையர் படையாளரென்பது வினையுவமம்; பன்றியனையர் பகைவேந்தரென்பது நாய்க்குப் பகையாகிய பன்றிபோலவென்பது. வேற்றுவேந்தர் பகைவ ராதலால் அவ்வுவமை விலக்கரிது. அன்றாமாயினும் அஃதணி யெனப்படாது. உவமைதான் உயர்ந்ததின்மையின். அது குற்ற மன்றேவெனின்,

"பேரு ரட்டகள்ளிற்கு
ஓரில் கோயில் தேருமா ஷின்னே" (புறம்-300)

என்பது, குற்றமன்றாகலின் அதுவுங் குற்றமன்றெனப்படும். இனிப் [1]பொன்மாலையும் பூமாலையும்போலப் பொலிவு செய்தலின்

---

1. இனிப் பூமாலையும் பொன்மாலை போல என்றிருப்பின் அமையும்.

இதுவுங் குற்றமாகாது மேலதே குற்றமென்பது. அற்றன்று, இன்னசொல்லும் இன்னபொருளுமுடையன பொன்மாலையெனவும் பூமாலையெனவும் வரையறுத்துக் கூறலன்மையின் அதனானும் அதனைக் குற்றமென்று இலக்கணத்தார் கூறின் நிரம்பாது. அல்லதூஉம் பொருளதிகாரத்துட் பொருட்பகுதிகளெல்லாஞ் செய்யுட்கு அணியாகலான் அவை பாடலுட் பயின்றவை யெனப்பட்டன. என்றதனான், அவையெல்லாந் தொகுத்து அணியெனக் கூறாது வேறு சிலவற்றை வரைந்து அணியெனக் கூறுதல் பயமில் கூற்றாமென்பது.

இனி, இரண்டு பொருளெண்ணியவற்றை வினையப்படுக்குங் கால் ஒருங்கென்பதொரு சொற்பெய்தல் செய்யுட்கு அணியென்ப. பிறவும் இன்னோரன்ன பலவுஞ், செய்யுட் கணியாமென்பது அவர் கருத்து. ஒருங்கே யென்பதேயன்றி மூன்று தாழிசையுண் மூன்று பொருள் கூறி 'எனவாங்கு' என்பதொரு சொல்லான் முடிந்தவழியும் 'எனவாங்கு' என்பதொரு மொழியும் ஓரலங்கார மெனல் வேண்டுமாகலான் அவ்வாறு வரையறுத்துக் கூறலமையாதென்பது. பிறவும் அன்ன.

இனி, அவற்றைப் பொருளுறுப்பென்பதல்லது அணியென்பவாயிற் சாத்தனையுஞ் சாத்தனலணியப்பட்ட முடியுந் தொடியும் முதலாயவற்றையும் வேறு கண்டாற்போல அவ்வணியுஞ் செய்யுளின் வேறாகல் வேண்டுமென்பது.

இனிச், செய்யுட்கணி செய்யும் பொருட்படை எல்லாங் கூறாது சிலவே கூறி ஒழியின் அது குன்றக்கூறலா (663) மென்பது. அவை யாவையெனின்,

"அகனமர் கேள்வன் அகற்சி தீர்த்தற்கு
மகனொடு புகுந்த மகவுநிலை யெனாஅ
மறுங்குங் காலை மறுத்துரை மொழியாது
குறிப்புவேறு கொளீஇய குறிப்புநிலை யெனாஅப்
புலவிக் கண்ணும் போக்கின் கண்ணு
மழுதலு [1]மழாஅதலு முயங்கலு மென்றாங்
கிருவகைப் பட்ட மங்கல மெனாஅப்

1. அழாஅது முயங்கலும் என்றிருப்பின் பொருத்த முடைத்து.

புலம்புறு காலை யறிவொடு படாது
புலம்புகொள வந்த செய்வினை யெனாஅ
வின்னோ ரன்ன பல்பொருட் பகுதி
நன்னெறிப் புலவர் நாட்டல்வகை யுடைய''

என்றொரு சூத்திரஞ் செய்யின் அவையும் அலங்காரமெனப் படுமென்பது. அவற்றுக்கு உதாரணம்:

''ஆகத் தொடுக்கிய புதல்வன் புன்றலைத்
தூநீர் பயந்த துணையமை பிணையல்'' (அகம்-5)

என்பது மகவுநிலை.

''ஓவச் செய்தியி னொன்றுநினைந் தொற்றி'' (அகம்-5)

என்பது, குறிப்புநிலை; என்னை? தலைமகன் போக்கினை உவக்குங் குறிப்பல்லாத குறிப்பாகலின் அஃதணியெனப்படும்.

''தும்முச் செறுப்ப அழுதாள்'' (குறள்-1318)

என்பது புலவியுளழுத மங்கலம்:

''பாவை மாய்த்த பனிநீர் நோக்கமொடு

* * * * *

மோயின ளுயிர்த்த காலை'' (அகம்-5)

என்பது, போக்கின் கண் அழாத மங்கல நிலை;

''விளிநிலை கேளாள் தமியள் மென்மெல
நலமிகு சேவடி நிலம்வடுக் கொளாஅக்
குறுக வந்து தன் கூரெயிறு தோன்ற'' (அகம்-5)

என்பது, அறிவொடு படாது புலம்பு கொளவந்த செய்வினை; என்னை? கேளாது கேட்டாள்போல வந்தமையின். இன்னோரன்னவும் அலங்காரமெனப்படுமென்று சூத்திரஞ் செய்துகொள்ளல் வேண்டுஞ் செய்யுட்கு அணி வேறு கூறினென்பது.

இனி, 'இங்ஙனங் கூறினவெல்லாங் குற்றமென்று கொள்ளப் படா; என்னை? [1]வேறு காரணமுணரப்பெறாது பிறழ்ந்து இடையறவுபட்ட காலை இடர்ப்பட்டுச் செய்தனவாதலான் அவையும் அவ்வாற்றானமையு மென்பது.

---

1. பொருளதிகார முறை பெறாது என்பதும் பாடம்.

இனி 'ஆனந்தவுவமை' யென்பன சில குற்றம் அகத்திய ஞர் செய்தாரெனக் கூறுபவாகலின் அவையிற்றை எவ்வாறு கோடுமெனின், அவைகள் தாம் அகத்துள்ளும் பிறசான்றோர் செய்யுளுள்ளும் வருதலிற் குற்றமாகா; அகத்தியனாற் செய யப்பட்ட மூன்று தமிழினும் அடங்காமை வேறு ஆனந்த வோத்தென்பது ஒன்று செய்தாராயின் அகத்தியமுந் தொல் காப்பியமும் நூலாக வந்த சான்றோர் செய்யுட் குற்றம் வேறு படா வென்பது.

அஃதேற் செய்யுட்கு இவை யணியென்பதூஉம் இவை குற்றமென்பதூஉம் மூன்றதிகாரத்துள்ளும் இவ்வாசிரியர்யாண் டுங் கூருரோவெனின், செய்யுளியலில் முப்பத்துநான் குறுப்புக் கூறி அவற்றதியைபு நல்லிசைப் புலவர் செய்யுளுறுப் பெனவும் அவை தொடர்ந்த தொடர்நிலை எண்வகையாற்றெடர்நிலைச் செய்யுட்கு வனப்பெனவும் பகுத்தோதிய இலக்கணத்திற் பிறழ்ந்தவை எல்லாங் குற்றமென்பதூஉம் கொள்ள வைத்தா னென்பது.

(வி - ரை)

வரைந்த நிலையில் - நீக்கிய நிலைமையால். ஒருவரை விலக்க மூவரும் வந்திலர் என்றவிடத்து அம்மூவருள் ஒருவர் அடங்கு தல் போல ஈண்டு சுண்ணத்தை நீக்கிய நிலைமையான் மூன்று என்று குறிக்கப்பட்டவிடத்தும் அம்மூன்றனுள் சுண்ணம் அடங் கும் என்பதாம்.

கொடி முதலிய மூன்றனேடும் நுசுப்பு முதலாகிய மூன்றை யும், மதி முதலாகிய மூன்றெடும் முகம் முதலாகிய மூன்றை யும், பிடி முதலாகிய மூன்றெடும் நடை முதலாகிய மூன்றை யும் நிரல்பட இயைத்துப் பொருள்காண்க.

களிறு போன்று கலமும் (மரக்கலம்), கந்துபோன்று கூம்பும் தோன்றும் என இயைக்க. இதனை எதிர்நிரல் நிறை என்பர்.

சுண்ணம் - பொடி. பொடி ஓரிடத்தன்றி பலவிடத்தும் சிதறுமாப்போல உவமையும் பொருளும் ஓரிடத்தன்றி உவமை ஒரு மருங்கும் அதற்கேற்ற பொருள் பிறிதொரு மருங்குமாகச் சிதறிக்கிடக்கும் என்பதாம். அடிமறியும் என்பது-எவ்வடியை முதலீருகக்கொள்ளினும் அமைவதாதலின் அதன் கண்ணும் நிரல் நிறுத்து உவமை கொள்ளலாகாது. மொழி மாற்றிலும்

பொருள் தொடர்பின்றிச் சொற்கள் சிதறிக் கிடக்குமாதலின் அதன் கண்ணும் நிரல் நிறுத்துக்கொள்ளலாகாது.

இவ்வோத்தினுள் கூறுகின்ற உவமங்களுள் சிலவற்றை என்றது 307, 308, 310, 312 ஆகிய நூற்பாக்களில் கூறியவற்றையேயாம். சொல்லதிகாரத்தில் கூறுவன சில என்றது குறிப்பாகப் பொருள் தருவனவற்றையும் பண்புத்தொகை, உவமத்தொகை, பொருள்கோள் முதலியவற்றையுமாம். செய்யுளியலில் கூறுவன சில என்றது தொடைகளுள் சிலவற்றையும், தொகைகளுள் சில வற்றையும், உள்ளுறை, இறைச்சி, மெய்ப்பாடு முதலியவற்றையுமாம்.

தலைவர்க்குரிய படையாட்கள் நாய்கள் போல் நட்பில் பிழையாதவர் அப்படைவீரர்கள் குழுவினராகவும் ஒரு தலைவன் வழி ஏவல் செய்யும் தகையராகவும் விளங்குவர். அவர்தம் பகைவரோ பன்றியைப்போல் மிகவும் இழிந்தவர். அத்தகையோர் எவ்வாறு பொருவர் என்பது இப்பாடற்கருத்தாம். நாய்போல் நட்புடையர் என்பழி உவமை இழிந்ததாயினும் நன்றியறிதற்கு அதனினூங்கு சிறந்ததின்மையின் அது ஏற்புடைத்தாயிற்று. பன்றியனைய பகைவர் என்பழி உவமை இழிந்ததாயினும் பகைவராதலின் அது ஏற்புடைத்தாயிற்று எனினும் உயர்ந்ததன் மேற்றே உள்ளுங்காலை என்னும் நூற்பாவை வைத்து நோக்கின் இவ்வாறு கூறுதல் பொருத்தமின்றாம்.

அட்ட கள்ளிற்கு – அடப்பட்ட கள்ளையுகுத்தற்கு, ஓர்இல்– ஓர்வீட்டில் கோயில் – கள் முகக்கும் பாத்திரத்தை தேருமால் நின்னே — தேடுவது போல நுன்னைத்தேடுகின்றேன். ஒரு வீரனைக் கள் முகக்கும் பாத்திரத்தோடு உவமித்தலின் இதுவும் குற்றமன்றோ எனின் ஆகாது. பொன்னாலாகிய மாலையும் மாலையே; பூவாலாகிய மாலையும் மாலையே! பூமாலை பொன்மாலைபோல மிகவுயர்ந்தது அன்றாயினும் அதுவும் ஒராற்றான் சிறப்பிற்குரியது. அதைப்போன்றே கள் முகக்கும் பாத்திரம் சிறந்த உவமையன்றாயினும் பூமாலை போல அதுவும் ஒராற்றான் சிறப்புடையதே என்பதாம். ஆயினும் இத்தகைய சொல்லும் பொருளும் உடையன பூமாலை போன்றது எனவும் இத்தகையசொல்லும் பொருளும் உடையன பொன்மாலை போன்றது எனவும், வரையறுத்து யாரும்

கூறுமையின் உயர்ந்ததன் மேற்றே உள்ளுங்காலை என்பதை நோக்க இதுவும் குற்றமுடைத்தேயாம். எனினும் சான்றோர் செய்யுளாதலின் அவ்வாறு கூறலமையதாம். இக்கருத்தமைதிக் கேற்ப உரையில் சூத்திரத்தின் உரையில்லை. ஏடு கிடைப்பின் உண்மை தெளிய இடனுண்டு. இதுவும் குற்றமாகாது. – கோயிலை உவமை காட்டுதல் குற்றமாகாது; மேலதே குற்றம். – பன்றியனையர் பகைவர் என்பது குற்ற முடைத்து; கூறலன்மையின் — கூற இயலாமையின்; பொருட் பகுதிகள் — முதல், கரு, உரி முதலியனவும் அகப்புற ஒழுக்கங்களும்.

பொருட்படை — பொருட்தொகுதி

இங்ஙனன் கூறினவெல்லாம் குற்றமென்று கொள்ளப்படா என்றது பிறர் கூறும் அணியெல்லாம் ஒத்துக்கொள்ளின் இதுவும் ஒத்துக்கொள்ள வேண்டும் என்பதாம்.

ஆனந்த உவமை முதலாகச் சில குற்றங்களின் இயல்பை அகத்தியனார் செய்தார் எனக்கூறுபவர் யாப்பருங்கலவிருத்தியு டையாரும் ஆளவந்தபிள்ளை ஆசிரியரும் ஆவர்.

எண் வகையால் தொடர்நிலைச்செய்யுட்கு வனப்பு என ஓதியவை அம்மை முதலிய எட்டுமாம். (37)

உவம இயல் முற்றிற்று.

# செய்யுளியல்

## பொருளமைப்பு

எழுத்ததிகாரத்தும், சொல்லதிகாரத்தும் வழக்கிற்கும் செய்யுட்கும் வேண்டுவனவற்றை விரவிக் கூறினர். அடுத்துப் பொருளதிகாரத்தில் அகத்திணை இயல் முதல் உவமஇயல் வரை பெரும்பான்மை வழக்கிற்கும், சிறுபான்மை செய்யுட்கும் உரியன வற்றைக் கூறி இவ்வியற்கண் செய்யுட்கே உரியனவற்றைக் கூறுகின்றார். செய்யுட்கே உரியவற்றை இவ்வியல் கூறுதலின் செய்யுளியல் எனப் பெயர் பெற்றது.

### செய்யுளுக்குரிய உறுப்புக்கள்:

மாத்திரை, எழுத்து, அசை, சீர், அடி, யாப்பு, மரபு, தூக்கு, தொடை, நோக்கு, பா, அளவு, திணை, கைகோள், கூற்று, கேட்போர், களன், காலம், பயன், மெய்ப்பாடு, எச்சம், முன்னம், பொருள், துறை, மாட்டு, வண்ணம், அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என்னும் முப்பத்து நான்கும் செய்யுளுக்குரிய உறுப்புகளாம்.

1. மாத்திரை:- செய்யுளை முழுமையாகப் படிக்கும் பொழுது அதன்கண் விரவிக் கிடக்கும் ஓசை பாவாம். இதன் கண் உள்ள எழுத்தின் அளவு மேல் எழுத்ததிகாரத்துக் கூறப் பட்டவாறு கடைப்பிடித்தல் வேண்டும்.

2. எழுத்தியல்:- மேல் எழுத்ததிகாரத்தில் முப்பத்து மூன்று எனக்கூறிய எழுத்துக்களைச் செய்யுட்கேற்பப் பதினைந்தாக இயற்றிக் கொள்வதாம். அவையாவன: குறில், நெடில், உயிர், மெய், வல்லினம், மெல்லினம், இடையினம், குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம், உயிர்மெய், உயிரளபெடை, ஐகாரப் போலி, ஔகாரப்போலி, ஒற்றளபெடை என்பன.

3. அசைவகை: நேரசை, நிரையசை என இருவகைப் படும். குற்றெழுத்து அல்லது நெட்டெழுத்து தனித்தோ அன்றி ஒற்றடுத்தோ வரின் நேரசையாம். குறிலிணை அல்லது குறில் நெடில் ஆகிய இவை தனித்தோ அன்றி ஒற்றடுத்தோ வரின் நிரையசையாம்.

நேர்பு அசை:- மேற்கூறிய நேரசையோடு குற்றுகரமோ, அன்றி முற்றுகரமோ இயைந்துவரின் நேர்பசை எனப்படும்.

நிரைபசை:- மேற்கூறிய நிரையசையோடு குற்றுகரமோ, அன்றி முற்றுகரமோ இணைந்து வரின் நிரைபசை எனப்படும். மேற்கூறிய இருவகை உகரமும் நிரையசையின்பின் வந்த வழி நிரைபசையாகும். மேற்கூறிய நான்கசைகளில் நேரும் நிரையும் இயற்கை வகையில் நின்றாங்கு நின்று இயைவன ஆதலின் இயலசையாம். ஏனை இரு அசைகளும் இயலசை செய்யும் தொழிற்கு உரிய வாகலின் உரியசையாம். தனிக் குறில் விட்டிசைத்து வரின் அல்லது நேரசையாகாது. குற்றியலுகரம் ஒற்றெழுத்தே போல அலகு பெறுதாம். முற்றியலுகரம் குற்றியலுகரம் ஆகிய இருவகை உகரங்களையும் நேர்பும். நிரைபுமாகக் கொள்வது. மொழிச் சிதைவின்றித் தனிச் சொல்லாக வரும் பொழுதேயாம். அவ்விரு உகரங்களும் வருமொழிப் புணர்ச்சியான் ஒற்றொடு தோன்றியிருக்கவும் பெறும். அது பொழுதும் நேர்பும் நிரைபுமாகக் கொள்ளப் படும்.

மேற்கூறிய அசையையும் சீரையும் இசையொடு பொருத்தி வேறுபடுத்தி உணர்தல் வேண்டும். இவ்வாறு இசையொடு சேர்த்து அசையினை வேறுபடுத்திக் கோடலைப் பிற்காலத்தார் வகையுளி என்ப.

4. சீர்:- அசைபல தொடரின் சீராகும். இது ஓரசைச்சீர் ஈரசைச்சீர். மூவசைச்சீர் என மூவகைப்படும்.

ஓரசைச்சீர்:- ஒரு பாவின் இறுதிக்கண் வரும் அசையும் சீராகும். அவை நாள், மலர், காசு, பிறப்பு என நான்காம்.

ஈரசைச்சீர்:- இவை 16 வகைப்படும்.

இயற்சீர் பத்து.

நேர் நேர், நிரைநேர், நிரை நிரை, நேர்நிரை, நேர்புநேர். நிரைபு நேர். நேர் நேர்பு, நிரைநேர்பு, நிரைநிரைபு; நேர்நிரைபு

ஆசிரிய உரிச்சீர் ஆறு:

நேர்பு நேர்பு, நேர்புநிரைபு, நிரைபு நேர்பு, நிரைபு நிரைபு, நேர்பு நிரை, நிரைபுநிரை.

உயிரளபெடையும், ஒற்றளபெடையும் சீர்நிலை பெறுத லின்றி அசைநிலையாதலும் உண்டு.

இயலசையின் இறுதிக்கண் நேர்வரின், அவை வெண்பா உரிச்சீராம். அவையாவன, நேர் நேர் நேர். நிரை நேர் நேர், நேர் நிரை நேர், நிரை நிரைநேர் என்பன.

மூவசைச்சீர் 64 களுள் மேற்கூறிய நான்கும் நீங்க எஞ்சிய 60 சீர்களும் வஞ்சி உரிச்சீராகும். இவ்வறுபது சீர்களும், ஆசிரியம், வெண்பா, கலிப்பா ஆகிய மூன்று பாவினுள்ளும் வாரா. ஆனால் ஆசிரிய உரிச்சீரும் வெண்பா உரிச்சீரும் இவ் வஞ்சிப்பாவினுள் வரும்

வெண்பா உரிச்சீரும் ஆசிரிய உரிச்சீரும் கட்டளையடி ஆசிரி யப்பாவில் வாரா. வெண்பா உரிச்சீரும் ஆசிரிய உரிச்சீரும் கலிப்பாவில் வரப்பெறும்.

தேமா, புளிமா, என்னும் இருசீரும் கலிப்பாவிலும் வஞ்சிப் பாவிலும் வாரா. அங்ஙனம் கொள்ளப்படும் ஓரசைச் சீர்களை இயற்சீர்களைப் போலத் தளைகொள்ள வேண்டும். (அதாவது) நேரசையை மாவாகவும் நிரையசையை விளமாகவும் கருத வேண்டும். கலியடியின் ஈற்றுச்சீர் நேரசையால் முடிந்ததா யினும் காய்முன் நிரைபோல் கவித்தளையாகக் கொள்ளப்படும்.

வெண்சீரும் ஆசிரியப்பாவினுள் வரும். வஞ்சி உரிச்சீரும் ஒரோவழி ஆசிரியப்பாவில் வரும்.

5. அடி: நாற்சீர் கொண்டதை அடி எனச் சிறப் பித்துச் சொல்வர். நாற்சீரடிக்கண்ணேயே இவ்வரையறை கூறப்படும். எனவே அதனினும் மிக்கோ, குறைந்தோ வரின் அவை சிறப்பிலவாம். இது அறுவகைப்படும். இருசீரான் வருவதைக் குறளடி என்ப. இது 4–6 எழுத்துக்களைக் உடையது. மூச்சீரான் வருவதைச் சிந்தடி என்ப. இது 7-10 எழுத்துக்களைக் கொண்டது. நாற்சீரான் வருவதை அளவடி என்ப. இது 10-14 எழுத்துக்களைக் கொண்டது. ஐஞ்சீரான் வருவதை நெடிலடி என்ப. இது 15–17 எழுத்துக்களைக் கொண்டது. அறுசீர் முதலியவற்றுன் வருவதைக் கழிநெடிலடி என்ப. இது 18-20 எழுத்துக்கள் கொண்டது. இப்பெயர்கள் காரணப் பெயராம். தளையும் தொடையும் கோடல் நாற்சீரடிக் கண்ணதேயாம்.

இத்துணை மாத்திரை கொண்டது செய்யுள் என்றோ, இத்துணை அசையும் சீரும். தொடையும் கொண்டது செய்யுள் என்றோ வரையறுத்தற்கு இல்லை. ஆனால் அடியளவு கொண்டு இவ்வகைச் செய்யுளென அறிதற்கு இயலும். ஆதலின் அடியின் சிறப்பே பாட்டெனப்படும் என்றார்.

சீர் என்பது ஐந்தெழுத்தைக் கடந்து வாராது. வஞ்சியுள் வருங்கால் ஆறெழுத்தாகவும் வரும். ஒருசீர் இரண்டு முதல் 18 ஈறுகப் பல நிலையும் பெற்று வரும். அவ்வாறு வருங்கால் எழுத்தளவு மிகினும், குறையினும், ஓசையால் தம்முள் ஒத்து வரும். குறளடி முதலிய ஐவகை அடியும் ஆசிரியப் பாவிற்கு வரும். ஆசிரியப் பாவினுள் பிற தளைவிரவியும் வரும். வெண்பாவுள் வெண்சீர் முன் வெண்சீர் வந்து ஒன்றிய வெண்தளை வரும். பத்துவகை இயற்சீரின்முன் பிறசீர்வந்து இயையும்போது ஈற்றசையும் வருமசையும் ஒன்றி நிற்பின் ஆசிரியத்தளையாம். (நேர் ஒன்றாசிரியத்தளை, நிரை ஒன்றாசிரியத்தளை). கட்டளை வகையடியில் குறளடிமுதல் அளவடிகாறும் வஞ்சியடி உறழா. அதாவது 4 எழுத்துமுதல் 14 எழுத்து வரையான 11 நிலமும் வாரா. ஆனால் 6 எழுத்து முதல் 12 எழுத்துவரையான ஏழ் நிலம் மட்டும் வரும்.

அளவடியும் சிந்தடியும் வெண்பாவிற்குரிய. இயற்சீர் வெண்டளையும் வெண்சீர் வெண்டளையும் இதற்குரிய தளை களாம். கலிப்பாவிற்கு நெடிலடியும் கழிநெடிலடியும் உரிய. வெண்சீர் முன் நிரை வரும் கலித்தளை இதற்குரியதாம். ஆசிரியப்பாவில் வெண்சீர் வெண்டளையும் மயங்கி வரும். ஆசிரியப்பாவில் இயற்சீர் வெண்டளையும் ஆசிரியத் தளையும் விரவி வரும். ஐஞ்சீரடியும் இதற்குளவாம். ஆசிரியப்பாவில் நாற்சீரடியின் பின் அறுசீரடியும் வருவது உண்டு. கலிப் பாவில் ஐஞ்சீரடியும், அறுசீரடியும் அராகமாகவும் வரும். ஆசிரியப்பாவிலும் வெண்பாவிலும் முடுகியல் அடி வாரா. ஆசிரியப்பாவினுள் ஈற்றயலடியும், இடையடியும் மூச்சீரானும் வரப்பெறும். கலிப்பாவில் முச்சீரடியும் வரும். வஞ்சிப்பாவில் இறுதியடி, ஆசிரியப்பாவில் வரும் சீரும் தளையும் பெறும். வெண்பாவின் ஈற்றடி முச்சீராய் வரும். அதனிறுதிச்சீர் அசைச் சீராய் வரும். வெண்பாவில் இறுதியடியில் இரண்டாம் சீர் நேரீறாய் வரின் அதனொடு நிரையும், நிரையும் இறுதிச்சீராக

வந்து தளைகொள்ளப் பெறும். வெண்பாவின் இறுதியடியில் இரண்டாம்சீர் இறுதி நிரையாய் வரின் அதனொடு நேரும் நேர்பும் வந்து தளை கொள்ளும். கலிப்பாவின் இறுதி ஆசிரியப்பா அல்லது வெண்பாவில் முடியும்.

இருசீரடியும், முச்சீரடியும் குட்டமெனப்படும். குட்டம் – குறைந்தது. அதாவது நாற்சீரில் குறைந்தது. குறளடியும் சிந்தடியும் ஒத்தாழிசைக்கலியிலும் இணைக்குறளாசிரியப்பாவிலும் வரும். நேரிசையாசிரியப்பாவின் ஈற்றயலடியாகவும் வரும்.

6. யாப்பு: யாப்பென்பது ஒவ்வொரு அடியின் கண்ணும் தான் குறித்த பொருள் முடியச் செய்தலாம். அன்றி பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல், என இவ்வெழு வகையான் பொருள் முடிய வருதலும் உண்டு.

7. மரபு: நால்வகைச் சொற்களும் வழக்கின்கண் வழங்குமாறு செய்யுளின் கண்ணும் வழங்குமென்றல் மரபாம். அகவலோசையை ஆசிரியப்பாவும், செப்பலோசையை வெண்பாவும், துள்ளல் ஓசையைக் கலிப்பாவும், தூங்கலோசையை வஞ்சிப்பாவும் பெற்று நிற்கும். மருட்பா என்பது வெண்பா முன்னாகவும், அகவல் பின்னாகவும் வருவதாம். மேற்கூறிய நால்வகைப் பாக்களின் வேறாகப் பா கூறற்கியலாது.

8. தூக்கு: என்பது பாவென்னும் ஓசையைத் துணித்து நிறுத்தலாகும். பாவின்றித் தூக்கு அறியப்படாது. அது பற்றிப் பாவையே தூக்கு எனபர் சிலர்.

9. தொடை: மோனை, எதுகை, முரண், இயைபு, அளபெடை, பொழிப்பு, ஒரூஉ, செந்தொடை எனத் தொடை எண் வகைப்படும். இவையன்றி நிரல் நிரைத் தொடை, இரட்டைத் தொடை என இருவகைத் தொடையும் உள.

மோனை: அடிதோறும் முதல் எழுத்து ஒன்றி வரத் தொடுப்பதாம்.

எதுகை: முதலெழுத்து, அளவொத்து நிற்ப இரண்டா மெழுத்து ஒன்றின் அது எதுகையாம். மேற்கூறிய இருவகைத் தொடையிலும் வருக்க எழுத்துக்கள் ஒன்றி வரத்தொடுப்பதும் உண்டு.

முரண் தொடை: சொல்லாலும் பொருளாலும் முரணி வருதல் முரண் தொடையாம். சொல்லும் சொல்லும் முரணுதலும், பொருளும் பொருளும் முரணுதலும், சொல்லும் பொருளும் சொல்லொடு முரணுதலும், சொல்லும் பொருளும் பொருளொடு முரணுதலும், சொல்லும் பொருளும் சொல்லொடும் பொருளொடும் முரணுதலும் என ஐவகைப்படும்.

இயைபுத் தொடை: அடிதோறும் இறுதிக் கண் நிற்கும் எழுத்தோ அன்றிச் சொல்லோ இயைந்து வரின் இயைபுத் தொடையாம்.

அளபெடைத் தொடை: அடிதொறும் அளபெடை ஒன்றி வரின் அளபெடைத் தொடையாம்.

பொழிப் பெதுகை: முதற்சீரும், மூன்றும்சீரும் ஒன்றி வருவது பொழிப் பெதுகையாம்.

ஒரூஉ வெதுகைத் தொடை: முதற்சீரும் நான்காம்சீரும் இரண்டாம் எழுத்து ஒன்றி வரத் தொடுப்பது ஒரூஉ வெதுகையாம்.

செந்தொடை: மேற்கூறப்பட்ட தொடை வகை எதுவுமின்றி வருவது செந்தொடையாம். மேற்கூறிய தொடை வகை பதின்மூவாயிரத்து எழுநூற்றெட்டென்ப. இவற்றை மேலும் விரிப்பின் வரம்பிலவாம்.

10. நாக்கு: ஒரு பாட்டு தன் ஓசையானும் பொருளானு மெல்லாம் கேட்போரைப் பன்முறையும் தன்னையே நோக்கி நோக்கி இன்புறுமாறு செய்யும் பாங்கு பெறுமாயின் அது நோக்கின் பாற்படும்.

11. பா: இது ஆசிரியம், வெண்பா, வஞ்சி, கலி, என நால்வகைப்படும். அறம் பொருள் இன்பமும் அவற்றின் பயனாய வீடுபேறும் ஆகிய நால்வகைப் பொருளும் இப்பாக்களின் பொருண்மையாகும். மேற்கூறிய நால்வகைப் பாக்களுள் ஆசிரியப் பாவுள் வஞ்சியடங்கவும். வெண்பாவுள் கலியடங்கவும் நிற்க, அவை இருபாக்களும் தலைமை பெற்று

இலங்கும். வாழ்த்துதல் பொருண்மையும் இப்பாக்களில் இடம் பெறும்.

வரையறைப்படும் வாழ்த்து வகை: பொதுவாக வாழ்த்துவகை நால்வகைப்பாக்களுக்கும் உரியதேனும் சில வாழ்த்துவகை சில பாவிற்கே உரியவாய் வரும்.

புறநிலை வாழ்த்து: நின்னால் வழிபடப்பெறும் தெய்வம் நின்னைக்காப்ப இல்லற முதலிய செல்வத்தால் பழியின்றிப் பெற்ற செல்வமொடு, புதல்வர்ப் பயந்து அவரும் இப்பெற்றிய ராக எல்லீரும் நீடுவாழ்வீராக எனத் தெய்வத்தைப் புறத்தே நிறுத்தி வாழ்த்துவது புறநிலை வாழ்த்தாம். இவ்வாழ்த்து ஆசிரியம் வெண்பா ஆகிய இரண்டிலும் வரும்.

வாயுறை வாழ்த்து: வாய்மொழியாகிய மருந்தைக் கொடுத்து வாழ்த்துவது இதன் பொருளாகும். முன்னர் கைக்குமேனும் பின்னர் உறுதி பயக்கும், வேம்பும் கடுக்காயும் போல இச் சொற்கள் இப்பொழுது கைப்பினும் பின்னர் உறுதி பயக்கு மெனக் கடுஞ்சொற் கூறி அறிவுறுத்துவது வாயுறை வாழ்த் தாம். இப்பொருண்மையும் ஆசிரியம் வெண்பா ஆகிய இரு பாவிலுமே வரும்.

அவையடக்கியல்: பொருள் வகையான் வலிமையற்றதாயி னும் யான் கூறுவதை ஏற்று அவற்றை ஆராய்ந்து கொள்மின் என அவையத்தாரிடம் கூறுவது அவையடக்கியலாம். இப் பொருண்மையும் ஆசிரியம் வெண்பா ஆகிய இருவகைப் பாவிலுமே வரும்.

செவியுறை: பெரியோர் நடுவண் அடங்கி வாழ்தல் முறை மையாம் எனச் செவிக்கண் அறிவுறுத்துவது செவியுறையாம். இப்பொருண்மையும் ஆசிரியம் வெண்பா ஆகிய இருபாவிலுமே வரும்.

12. அளவியல் இருவகைப் பெறும். 1. அடிவரை யறையுடைய செய்யுட்கள். 2. அடிவரையறையில்லாத செய்யுட்கள். பிற்கூறிய அடிவரையறையில்லாதனவும் அறு வகைப்படும் என்று எண்ணியவாற்றான் அவையும் அளவியல் எனப்படும்.

## செய்யுளியல்

I அடிவரையறையுடைய செய்யுட்கள்:

வெண்பா யாப்பால் வரும் செய்யுட்கள்: 1. நெடுவெண் பாட்டு. இது ஐந்தடிச் சிறுமையும் பன்னிரண்டடி உயர்வும் உடையது. அளவடியினின்றும் (நான்கடியினின்றும்) நீண்ட பாட்டாதலின் இது நெடுவெண்பாட்டெனப்பட்டது. 2. குறு வெண் பாட்டு: நான்கடியினின்றும் குறுகியதாதலின் குறுவெண் பாட்டு எனப்பட்டது. இரண்டடியான் வரும் குறள் வெண்பா வும் மூவடியான் வரும் சிந்தியல் வெண்பாவும் இதன்பாற்படும். 3. கைக்கிளை: ஒருதலைக்காமமாக வரும் பொருண்மையைப் பெற்று வரும். இது வெண்பாவும் ஆசிரியமும் கலந்த மருட் பாவாகி வரும். 4. பரிபாடல்: ஒரு வெண்பாவாக வருத லின்றிப் பல வெண்பா உறுப்புக்களைப் (தளையும், சீரும்) பெற்று வருவதாம். இது இன்னபா என அறிய இயலாது. ஆசிரியம் வஞ்சி, வெண்பா, கலிப் பா என்று ஓதப்பட்ட எல்லாப் பாவின் உறுப்பையும் பெற்று வரும். கொச்சகமும் அராகமும், சுரிதக மும், தரவும் ஆகிய உறுப்புக்களைப் பெற்றும் வரும். காமப் பொருள் குறித்தும் வரும். சொற்சீரடியும் முடுகியலடியும் இதற்கு உறுப்பாகும். சொற்சீரடியாவது ஒருசொல்லே சீராக வும் அடியாகவும் வருவதாம். இது பேச்சின்கண் தொகை கொடுத்துக் கூறப்படுமாறு போல (ஆறுமுடையான் அரசருள் ஏறு என்புழிப் போல) தொகை பெறுதற்கண் வரும். இருசீர் முச்சீரடியானும் வரும். ஒருசீரே அசையாகியும் வரும். ஒருசீரின் கண் பிறிதொரு சீர் வர அவ்விரண்டும் சேர்ந்து ஓரடியாக வரும். 5. அங்கதம்: அங்கதம்-வசை. அது இருவகைப்படும் 1. செம்பொருள் அங்கதம்: இது வெளிப்படையாகக் கூறும் வசையாம். 2. பழிகரப்பங்கதம்: இது புகழ்வது போலப் பழித்திறம் புனைவதாம். அவ்வங்கதம் செய்யுள் வகையால் மேலும் இருவகைப்படும். 1. செவியுறை அங்கதம்: அரசர்க்கு நன்மை மிகுதற்காகக் கடிந்து கூறுதலாகும் 2. ஏனையங்கதம்: இது வசையொடும் நசையொடும் புணர்ந்து வரும்.

கலிப்பாவின் வகை: அவை ஒத்தாழிசைக்கலி, கலிவெண் பாட்டு, கொச்சகம், உறழ்கலி என்பனவாம். 1. ஒத்தாழிசைக் கலி. இது இருவகைப்படும். ஒன்று மனிதரைப் பரவி வரும். பிறிதொன்று தேவரைப் பரவி வரும். இவ்விரண்டிற்கும் உரிய உறுப்புக்கள் தரவு, தாழிசை, சுரிதகம், தனிச்சொல் என்பன

வாம். தரவு: இது நான்கடி முதல் பன்னிரண்டடி இறுதியாக வரும். தாழிசை தரவின் அடியில் குறைந்து வரும். தனிச் சொல்: இது ஆங்கு என்பது போல வருவதாம். இது தாழிசை யின் பின்வரும். சுரிதகம்: இது வைப்பெனவும் படும் இது தரவை யொத்து நான்கடிச் சிறுமையும் பன்னிரண்டடிப் பெருமையும் உடையதாய் வருதலும், அன்றித் தரவில்குறைந்து மூன்றடியானும் இரண்டடியானும் வருதலும் இதன் இயல்பா கும்.

தேவரைப் பரவும் ஒத்தாழிசைக்கலி: இது வண்ணக ஒத்தா ழிசை எனவும், ஒருபோகு எனவும் இருவகைப்படும். வண்ணக ஒத்தாழிசையின் உறுப்புக்கள்: தரவு, தாழிசை, எண், வாரம் என்பனவாம். தரவு: நான்கு, ஆறு, எட்டு என அடிபற்றி வரும் தாழிசை: மூன்றுதாழிசை ஒத்துவரும். இத்தாழிசைக் குரிய அடிகள், தரவில் குறைந்து வரும். சுரிதகம் தரவொடு ஒத்துவரும். எண்: முதற்கண் உள்ள உறுப்புப்பெருகியும் பின்வரும் உறுப்புக் குறைந்தும் வரும். சின்னம் என்ற இருசீரடி அம்போதரங்கம் உள்ள விடத்து முச்சீரடி, நாற்சீரடி அம்போதரங்கம் இல்லாமலும் வரும். ஒருபோகு: வண்ணக ஒத்தாழிசைக்கலியில் ஓதிய உறுப்புக்கள் யாதானும் ஒன்று குறைந்து வருவதாகும். கொச்சக ஒருபோகு அம்போதரங்க ஒருபோகு என இது இருவகைப்படும்.

கொச்சக ஒரு போகு: இது தரவின்றித் தாழிசை பெற்றும் வரும்: தாழிசையின்றித் தரவு பெற்றும் வரும். எண் இடை யிட்டுச் சின்னம் இன்றியும் வரும். அடக்கியலின்றி அடி நிமிர்ந்து ஒழுகியும் வரும். அடக்கியலின்றி அடிநிமிர்ந்து ஒழு கும் எனப்பட்ட கொச்சக ஒருபோகு பத்தடியில் சுருங்கியும் இருபதடியின் மேம்பட்டும் வாராது.

அம்போதரங்க ஒருபோகு: தன் உறுப்பெல்லாம் கூடி அறுபதடியாகவும் வரும். அதனில் செம்பாதியாகிய முப்பதடி யானும் வரும். அதன் வாரமாகிய பதினைந்தடியானும் வரும்.

அம்போதரங்க ஒருபோகு: இது தரவு, கொச்சகம், அராகம், சிற்றெண், வாரம், ஆகிய ஐந்து உறுப்புக்களோடு வரும்.

கலிவெண்பாட்டு: ஒரு பொருளையே நுதலி வெண்தளையாக வந்து ஈற்றடி மூச்சீராய் வருவது இதன் இலக்கணமாகும். பிறதளைவந்து ஈற்றடி மூச்சீராய் வருதலுமுண்டு.

கொச்சகக்கலி: தரவும் சுரிதகமும் தனித்தனியாக நிற்காமல் ஒரே பாட்டாகத் தொடர்ந்து வருவதும் உண்டு இடையிடை விரவி வருதலும், ஐஞ்சீரடி பல வருதலும், தரவு முதலிய ஆறு உறுப்புக்களையும் பெற்று வருதலும், பெறாது வருதலும், வெண் பாவிற்குரிய சீரும் தளையும் பெரிதும் வருதலும் இதன் இலக்கணமாகும்.

உறழ்கலி: ஒருவர் ஒன்று கூற மற்றவர் அதற்கு மறு மாற்றம் கூறும் வகையால் அமைவது உறழ்கலியாம்.

ஆசிரியப்பா: இது மூன்றடிச் சிறுமையும் ஆயிரமடிப் பெரு மையும் உடையது.

நெடுவெண்பாட்டு: பன்னிரண்டடி எல்லையுடையது. குறு வெண்பாட்டு ஏழுசீரை இழிவாக உடையது. அதாவது இரண் டடி உடையது. அங்கதப்பாட்டும் மேற்கூறிய வெண்பாவிற்குரிய அடிச்சிறுமை பெருமை ஆகும். கலிவெண்பாட்டு கைக்கிளை, செவியுறை வாயுறைவாழ்த்து புறநிலைவாழ்த்து ஆகியவற்றிற்கு அடிவகையால் பேரெல்லை வரையறையில்லையாம் புறநிலை வாழ்த்தும் வாழ்த்துறை வாழ்த்தும், செவியறிவுறூஉம், மருட்பாவாய் வரும்.

பரிபாடல்!

இருபத்தைந்தடிச் சிறுமையும், நானூறடிப் பெருமையும் உடையது.

II அடிவரையறையில்லாத செய்யுட்கள்! மேற்கூறியவாறு, அடி வரையறை பெறுதலின்றி வரும் செய்யுட்கள் ஆறுள. அவை அகமும் புறமுமாய ஏழு பொருண்மை பற்றியும் வரும், கைக்கிளை ஐந்திணை, பெருந்திணை ஆகிய ஏழும் அகப்பொருண்மையவாம். வெட்சி முதல் பாடாண்திணையீகருவுள்ளன புறப்பொருண்மை யவாம். இவ்வகையில் அமைந்த செய்யுட்கள் நூல், உரை, பிசி, முதுமொழி, மந்திரம், குறிப்பு என்பனவாம்.

அ. நூல்: நூலெனப்படுவது முதலும் முடிவும் மாறுபாடு இன்றியும், தொகுத்தும் வகுத்தும் பொருளை விளக்கியும், பருப்

பொருட்டானன்றி நுண்பொருட்டாக விளங்கும் அரிய பல நுட்பங்களையும் உடையதாகும். அது தொகுத்தும், விரித்தும், தொகை விரியாக்கியும், மொழி பெயர்ப்பாகவும் நால்வகையால் செய்யப்படும். சூத்திரம், ஓத்து. படலம். அம்மூன்றையும் அடக்கிய பிண்டம் என நூலின் பகுதி நான்காம்

சூத்திரம்: கண்ணாடியைப்போலச் சிலவகையெழுத்தில் பல்வகைப் பொருளைச், செவ்விதின் விளக்குவதாகும்.

ஓத்து:- தம்மில் ஒத்த மணிகளை ஒருவகைப் படத் தொகுத்தாற் போல தம்மில் ஒத்த பொருண்மை யெல்லாம், ஒரு வழித் தொகுப்பது ஓத்தாகும்.

படலம்: மேற்கூறியவாறு ஓரினப் பொருள்களைத் தொகுத்த ஓத்துக்கள் பலவும் அடங்க அவற்றை அடக்கிய பொதுப் பெயரால் கூறுவது படலமாகும்.

பிண்டம்: மேற்கூறிய சூத்திரம், ஓத்து, படலம் ஆகிய மூன்றுறுப்புக்களையும் அடக்கி வருவது பிண்டமாகும்.

ஆ. உரை: பாட்டு அல்லது சூத்திரத்தின் பொருளை உரைப்பது உரையாகும். அது பாட்டினை இடையிடையே கொண்டு நிற்கும் உரையும், பாட்டின்றி உரையளவிலேயே நிற்கும் உரையும், பொருளொடு புணர்தலின்றிப் பொய்மொழியாக வரும் உரையும், பொருளொடு புணர்ந்த நகைமொழியாக வரும் உரையும் என நான்கு வகைப்படும். மேற்கூறிய நான்கனுள் முதலன இரண்டும் எல்லார்க்கும் உரித்தாம் ஏனைய இரண்டும் செவிலிக்கு உரித்தாம்.

இ. பிசி: பி சி—விடுகதை. இது ஒப்புமைக் குணத்தொடு பொருந்தி வரும் உவமப்பொருளானும், ஒன்று சொல்ல, ஒன்று தோன்றும் துணிவுடைய சொல்லானும் பிறக்கும்.

ஈ முதுமொழி: இது நுண்மையும், சுருக்கமும், விழுப்பமும், எளிமையுமாக இருக்கும். ஒரு செய்யுட்கண் குறிக்கப்பட்ட பொருளை விளக்குதற்கு ஏதுவாக இது அமையும்.

உ. மந்திரம்: தாம் கூறிய சொல்லின் பொருண்மை யாண்டும் தயக்க மின்றிப் பயன் படுமாறு சொல்லும் ஆற்றலுடையார் தம்மாணையால் கிளக்கப்பட்டுப் புறத்தார்க்குப் புலனாகாத வண்ணம் மறைத்துச் சொல்லப்படுவது மந்திரமாகும்.

௨௯. குறிப்புமொழி: எழுத்தாலும், சொல்லாலும் பொருள் உணர இயலாது அச்சொற்றொடரின் புறத்ததாகக் குறிப்பால் அறியப்படும் மொழி குறிப்பு மொழியாம்.

பண்ணத்தி: பழம் பாடற் பொருளையே தனக்குரிய பொருளாகக் கொண்டு மேற்கூறிய பாட்டும் உரையும் போல செய்யப்படுவது பண்ணத்தியாகும். இது செவிலிக்குரித்தாம். இப்பண்ணத்தி பன்னிரெண்டடிப் பெருக்கத் தினையுடையது. அதற்மேல் வரினும் நீக்குதற்கில்லை.

13. திணை: கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை ஆகிய ஏழும் திணையாம்.

14. கைகோள்: இது அகப்பொருண்மைக்கண் கொள்ளப் படும் ஒழுகலாறாகும். அது களவு கற்பென இருவகைப்படும்.

களவு: இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், பாங்கியர்கூட்டம் என்ற நான்கினும் தலைவன்தலைவியை அவள் தமருடம் படுதலின்றிக் களவில் புணர்தலின் களவாயின

கற்பு: மறைந்தொழுகும் ஒழுகலாறு வெளிப்படுதலும், அதன்பின் தமர் கொடுப்பத்தான் பெறுதலும் என்னும் இரு வகையில் திரியாது, மகிழ்ச்சியும், புலத்தலும், ஊடலும், உணர்தலும், பிரிதலும், ஆகிய ஐவகையான் நிகழ்வதாகும். அகத்திணையின் புறத்ததாய்ப் புறத்திணை வருதலின் புறத்திணைக்கெனத் தனித்துக் கைகோள் கூறப்படாதாம்.

15. கூற்று: பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி, தலைவன், தலைவி ஆகிய அறுவரும் களவின்கண் கூற்று நிகழ்த்து தற்குரியராவர். பாணன், கூத்தன், விறலி, பரத்தை, அறிவர், கண்டோர், பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி, தலைவன், தலைவி ஆகிய பன்னிருவரும் கற்பின்கண் கூற்று நிகழ்த்துதற் குரியராவர். ஊரார், அயலார், சேரியோர், தலைவியின் நோய் நிலை அறிவோர், தந்தையர், தன்னையர் இவ்வறுவரும் கூறும் கூற்றைக் கொண்டெடுத்து மொழியப்படுவதல்லது, அவர் தாமே கூற்று நிகழ்த்துவதாகச் செய்யுட் செய்தல் இல்லை.

நற்றாய் தலைவன் தலைவியரோடு பேசப் பெறாள். கண்டோர் அவ்விருவரோடும் பேசுவர். இடைச்சுரத்துத் தலைவன், தலைவியிடத்து அறப்பண்பு வழாது பேசுதற்கும் உரியன். வழியிடத்துக் கண்டோரும் தலைவன் தலைவியிரிடத்து அறப்பண்பு வழாமல் பேசுவர்.

16. கேட்போர்: கூற்று நிகழ்த்துதற்குரிய பன்னிருவருள் தலைவன்தலைவியரின் கூற்றுக்களை அவர்கள் ஒழிந்த பதின்மரும் கேட்பர். பார்ப்பனர் கூற்றைத் தலைவனும் செவிலியும் நற்றாயும் கேட்பர் அறிவர் கூற்றைத் தலைவி, தோழி, செவிலி, நற்றாய், ஆகிய நால்வரும் கேட்பர். பரத்தையும் வாயில்களாவாகும். தலைவி கேட்கக் கூற்று நிகழ்த்துவர். வாயில்களாவார். தமக்குள் பேசிக்கொள்வர். ஞாயிறு, திங்கள், அறிவு, நாண், கடல், கானல், விலங்கு, மரம், பொழுது, பறவை, நெஞ்சு, முதலிய பொருள்கள் தம்மிடத்துப் பேசுவ போலவும் தாம் கூறுவன வற்றைக் கேட்பன போலவும் பேசுதலும் உண்டு.

17. களன்: இயற்கைப்புணர்ச்சி முதலிய வினை நிகழ்ச்சி இடமெனப்படும்.

18 காலம்: முக்காலத்தினும் நிகழ்கின்ற நிகழ்ச்சிகளைச் செய்யுளிடத்துத் தோன்றச் செய்வதாம்.

19. பயன்: இதனால் இது விளையும் எனக்கூறுவது பயனாம்.

20. மெய்ப்பாடு: ஒரு செய்யுளிடத்துச் சொல்லப்படும் பொருளைக் கேட்டான், அப்பொருளை நேரில் கண்டவாறே அறிதல் மெய்ப்பாடாம். அவ்வாறு அறிதலால் தோன்றும் மெய்ப்பாடு முற்கூறியவாறு எண்வகைப்படும்.

21. எச்சம்: ஒருபாடலில் எஞ்சி நிற்கும் கருத்தை வெளிப் படையாகச் சொல்வதும் உண்டு. அன்றிக் குறிப்பாகக் காட்ட லும் உண்டு. இவ்விரண்டும் எச்சமாம்.

22. முன்னம்: இவ்விடத்தில் இச்சொல்லை இவர் கூறற்குரி யர் என அவ்வவ்விடத்தும் அவரவரை அளந்து பேசுமாறு செய்தல் முன்னமாம்.

23. பொருள்வகை: இன்பமும், இடும்பையும், புணர்வும், பிரிவும் முதலாய ஒழுக்கங்கள் இத்திணைக்கண் இவ்வாறு கூற

வேண்டுமெனப் புலவர்கள் அமைத்துக்கொண்டு பேசுதல் பொருள் வகையாம்.

24. துறை: ஐவகை நிலத்திற்கு உரிய அவ்வம்மக்களும் விலங்கும் பறவையும் அன்றி வேறு பிற மக்களும், விலங்கும், பறவையும், பேசுவனவாகப் படைத்துக் கொண்டு செய்தல் துறையாம்.

25. மாட்டு: செய்யுட்கண் பொருள் கொள்ளுங்கால் அகன்று பொருள் கிடப்பச் செய்தலும் உண்டு. அணுகிக் கிடப்பச் செய்தலும் உண்டு. இவ்விருவகையானும் பொருள் முடியுமாறு செய்தல் மாட்டாம். மேற்கூறியவாறு மாட்டும் எச்சமும் வாராவகை கிடந்தவாறே பொருள் செய்யுமாறு செய்யுட் செய்தலும் உண்டு.

26. வண்ணம்: வண்ணம் என்பது சந்த வேறுபாடாகும். அவ்வேறுபாடு மிகப்பலவாகி வேறுபடுமாயினும், தொல்காப்பியர் இருபது வகையில் இச்சந்த வேறுபாடுகளை அடக்கியுள்ளார்.

1. பா அவண்ணம்: இது நூற்பாவில் வரும் சொற்சீரடியாக வரும்.

2. தா அவண்ணம்: பொழிப்பும், ஒரூஉமாக எதுகைவரும் சந்த ஓசையாம்.

3. வல்லிசை வண்ணம்: வல்லெழுத்துப் பயின்று வருங்கால் வரும் சந்த ஓசை வல்லிசை வண்ணமாம்.

4. மெல்லிசை வண்ணம்: மெல்லெழுத்துப் பயின்று வருங்கால் வரும் சந்த ஓசை மெல்லிசை வண்ணமாம்.

5. இயைபு வண்ணம்: இடையெழுத்துப் பயின்று வருங்கால் வரும் சந்த ஓசை இயைபு வண்ணமாம்.

6. அளபெடை வண்ணம்: உயிரளபெடையும், ஒற்றளபெடையும் விரவி வருங்கால் வரும் சந்த ஓசை அளபெடை வண்ணமாம்.

7. நெடுஞ்சீர் வண்ணம்: நெட்டெழுத்துப் பயின்று வருங்கால் வருவம் சந்தவோசை நெடுஞ்சீர் வண்ணமாம்.

8. குறுஞ்சீர் வண்ணம்: குற்றெழுத்துப் பயின்று வருங்கால் வரும் சந்தவோசையாம்.

9. சித்திர வண்ணம்: நெட்டெழுத்தும் குற்றெழுத்தும் ஒப்ப விரவி வருங்கால் வரும் சந்தவோசையாம்.

10. நலிபு வண்ணம்: ஆய்தவெழுத்துப் பயின்று வருங்கால் வரும் சந்தவோசையாம்.

11. அகப்பாட்டு வண்ணம்! ஒருபாட்டின் ஈற்றசை ஏகாரத்தின் அன்றி உயிரீறாகவோ ஒற்றீறாகவோ வருங்கால் வருவதாம்.

12. புறப்பாட்டு வண்ணம்: ஈற்றயலடி, இறுதியடி போன்று பொருள் முடிந்துழி வருவதாம்.

13. ஒழுகு வண்ணம்: ஒழுகியல் ஓசையால் வருவது.

14. ஒரூஉ வண்ணம்: சொல்லிய பொருள் பிறிதொன்றினை அவாவாது அறுத்துச் செய்யுங்கால் வருவதாம்.

15. எண்ணு வண்ணம்: ஒன்று இரண்டு என எண்ணி வருங்கால் வருவதாம்.

16. அசப்பு வண்ணம்: ஓசை இடையீடின்றிச் செல்லாது அறுத்துத் தனித்து இயலவரின் வருவதாம்.

17. துளங்கல் வண்ணம்: வஞ்சி உரிச்சீர் பயின்று வருங்கால் வருவதாம்.

18. ஏந்தல் வண்ணம்: சொல்லிய சொல்லே திரும்ப வருங்கால் வருவதாம்.

19. உருட்டு வண்ணம்: நாற்சீரடியுள் அராகம் பயின்று வருங்கால் வருவதாம்.

20. முடுகு வண்ணம்: நாற்சீரடியின் மிக்கு அராகமாக வருங்கால் வருவதாம்.

வனப்பு: வனப்பு எண்வகைப்படும். அவை, அம்மை, அழகு தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என்பன.

27. அம்மை: சிலவாய மெல்லிய சொற்களோடும் இடையிட்டு வந்த நூலிலக்கணத்தோடும், ஐந்தடியின் மிக்கு வாராதது ஆகும்.

28. அழகு: செய்யுட்குரிய திரிசொற்கள் பயின்று வருவதாம்.

29. தொன்மை: உரையொடு பொருந்திப் பழமையவாகிய பொருளாக வருவதாம்.

30 தோல்: இழும் என்மொழியால் விழுமிய பொருளேக் கூறியும் பரந்த மொழியால் அடிநிமிர்ந்து ஒழுகியும் வருவதாம் கொச்சகக் கலியிலும் ஆசிரியத்திலும் இதுவரும்.

31. விருந்து: புதிதாகப் பாடும் தொடர்நிலைச் செய்யுளாக வருவதாம்.

32. இயைபு: ஞ, ண, ந, ம, ன, ய, ர, ல, வ ழ, ள என்னும் பதினொரு புள்ளியீறுகளுள் ஒன்றனை யிறுதியாகப் பெற்று வரும். பொருள் தொடர்நிலைச் செய்யுள் அல்லது சொற்றொடர்நிலைச் செய்யுள் இவ்வழகுபட வருவதாம்.

33 புலன்: சேரியின் கண்ணுள்ளார் பயிலும் மொழியால், ஆராய்ந்து காணும் அருமைப் பாடின்றி எளிதாகப் பொருள் காணும் திறத்ததாய் வருவதாம்.

34. இழைபு: வல்லொற்றடுத்த வல்லெழுத்துப் பயிலாது இருசீரடி முதலாக எழுசீரடியளவும் வந்த அடி ஐந்திணையும் கொண்டு நெட்டெழுத்தும், அந்நெட்டெழுத்துப் போல் ஓசையெழும் மெல்லெழுத்தும், லகார ளகாரங்களும் உடைய சொற்களால் வருவதாம்.

புறனடை: இதுகாறும் செய்யுளிலக்கணத்தில் கூறிய இலக்கணம் பிறழ்ந்து வரும் செய்யுட்கள் வரினும் அவற்றையும் முன்னையவற்றோடு ஆராய்ந்து கூட்டி அமைத்துக் கொள்ளுதல் அறிவுடையோர் கடனும்.

— — o— —

எட்டாவது

# செய்யுளியல்

செய்யுட்குரிய உறுப்புக்கள்

313. மாத்திரை யெழுத்திய லசைவகை யெனாஅ
யாத்த சீரே யடியாப் பெனாஅ
மரபே தூக்கே தொடைவகை யெனாஅ
நோக்கே பாவே யளவிய லெனாஅத்
திணையே கைகோள் [1]கூற்றுவகை யெனாஅக்
கேட்போர் களனே காலவகை யெனாஅப்
பயனே மெய்ப்பா டெச்சவகை யெனாஅ
முன்னம் பொருளே துறைவகை யெனாஅ
[2]மாட்டே வண்ணமோ டியாப்பியல் வகையின்
ஆறு தலையிட்ட வந்நா லைந்தும்
அம்மை யழகு தொன்மை தோலே
விருந்தே யியைபே புலனே யிழைபெனாஅப்
பொருந்தக் கூறிய வெட்டொடுந் தொகைஇ
நல்லிசைப் புலவர் செய்யு ளுறுப்பென
வல்லிதிற் கூறி வகுத்துரைத் தனரே.

என்பது சூத்திரம். இவ்வோத்து என்ன பெயர்த்தோ வெனின், செய்யுளியலென்னும் பெயர்த்து; செய்யுளிலக்கணம் உணர்த்தினமையான் அப்பெயர்த்தாயிற்று. எனவே ஒத்து நுதலியதூஉஞ் செய்யுளிலக்கண முணர்த்தலென்பது பெற்றாம். மேற் பாயிரத்துள்,

"வழக்குஞ் செய்யுளும் ஆயிரு முதலி
னெழுத்துஞ் சொல்லும் பொருளும்" (தொல். பாயிரம்)

---

1. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே. பொருள்வகை என பாடங்கொள்வர் இளம்பூரணர்.

2. மாட்டே வண்ணமோடு என இளம்பூரணரும், மாட்டே வண்ணமொடு என நச்சினார்க்கினியரும் பாடங்கொள்வர்.

ஆராய்தலென்று புகுந்தமையால், எழுத்தினுஞ் சொல்லினும் வழக்கிற்குஞ் செய்யுட்கும் வேண்டுவன விராய்க்கூறிப், பொருளதிகாரத்துள்ளும் இதுகாறும் பெரும்பான்மையும் வழக்கிற்கு வேண்டுவனவே கூறிவந்தான். அப்பொருள்பற்றிச் செய்யுள் கூறுமாதலின் இவ்வதிகாரத்துட் செய்யுளிலக்கணமெல்லாந் தொகுத்துக் கூறுகின்றது இவ்வோத்தென்பது. எனவே, முற்கூறிய எழுவகையோத்தும் வழக்கிற்குஞ் செய்யுட்கும் பொதுவென்பதூஉம் இது செய்யுட்கே உரித்தென்பதூஉம் பெற்றாம்.

மற்றிதனை யாப்பதிகாரமென வேறோர் அதிகாரமாக்கி உரைப்பாருமுளர்; அங்ஙனங் கூறின் வழக்கதிகாரமெனவும் வேறு வேண்டுமென மறுக்க. அல்லதூஉம் எழுத்துஞ் சொல்லும் பொருளுமெனும் மூன்றற்கும் மூன்றதிகாரமாக்கி அதிகாரமொன்றற்கு ஒன்பதோத்தாகத் தந்திரஞ் செய்ததனோடு மாறுகொளலாம். இதனை வேறதிகாரமென்பார்க்கென்பது.

மற்று, ஓத்து நுவலுவதெல்லாம் நுவலுவதன்றே ஓத்தினுள் வைத்த சூத்திரம்; அதனான், இதன் முதற் சூத்திரம் என்னுதலிற்றோவெனின், இவ்வோத்தினுள் உணர்த்தப்படுகின்ற செய்யுட் குறுப்பாவன இவையெனவே, அவற்றது பெயரும் முறையுந் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) இக்கூறப்பட்ட முப்பத்துநான்கும் பேரிசைப் புலவரால் செயப்படுஞ் செய்யுட்கு உறுப்பாமென வன்மையால் வகுத்துக் கூறினர் புலவர் (எ-று).

அப்பெயர் பெயர்; அம்முறை முறை; அத்தொகை தொகை தொகை 'ஆறுதலையிட்ட அந்நாலைந்து' மெனவும், எட்டெனவும் இருவகையால் தோன்றக் கூறியது, ஏனைய போலாமல் எட்டுறுப்பும் ஓரோர் செய்யுட்கு ஒரோவொன்றேயும் வருமென்பதறிவித்தற்கும் அவை தாம் அச்செய்யுள் பல தொடர்ந்தவழியே பெரும்பான்மையும் உறுப்பாமென்பது அறிவித்தற்கும் என்க. எனவே, ஒழிந்த உறுப்பிருபத்தாறும் ஒன்றொன்றினை இன்றியமையாவென்பது பெற்றாம்.

இனி மாத்திரை யென்பது, எழுத்திற்கோதிய மாத்திரைகளுள் செய்யுளில் விராய்க்கிடக்கும் அளவையென்றவாறு.

மாத்திரையது மாத்திரையினை ஈண்டு மாத்திரையென்றான். அது 'மாத்திரையளவும்' (314) என்றதனாற் பெற்றாம்.

எழுத்தியல் வகையென்பது, மேற்கூறிய எழுத்துக்களை இயற்றிக்கொள்ளுங் கூறுபாடு

அசைவகை யென்பது, அசைக்கூறுபாடு; அவை இயலசை யும் உரியசையுமென இரண்டாம்.

யாத்தசீரென்பது, பொருள்பெறத் தொடர்ந்து நிற்குஞ் சீரென்றவாறு; எனவே, அசைபல தொடர்ந்து சீராங்கால் அவ்வசையுந் தத்தம் வகையாற் பொருள் பெற நிற்றலும் அவ்வாறன்றிச் சீர்முழுதும் ஒரு சொல்லாங்கால் அவ்வசை பொருள் பெறாது நிற்றலும் அடங்கின. தேமா என்று அசை பொருள் வேறுபெற்றன; சாத்தன் எனப் பொருள் வேறு பெறாது நின்ற அசையாற் சீர்யாத்து நின்றது.

பொருள்பெற நின்ற எழுத்தும் அசையுஞ் சிறப்புடைய வென்பாருமுளர். அற்றன்று, பொருள்பட நிற்பன எழுத்து யாண்டு மின்மையானும் பொருள் பெற நின்ற அசையானாகிய தேமாவென்னுஞ் சீரும் அவ்வசைச் சிறப்பினாற் சிறப்புடைச் சீரெனப்படாமையானுஞ் சாத்தனெனத் தன்பொருளொடு தான் துணிந்து நின்றவழி அதுவுஞ் சிறப்புடைச் சீரெனவும் படுமாதலானுமென்பது.

அடியென்பது, அச்சீர் இரண்டும் பலவுந் தொடர்ந்தாவ தோர் உறுப்பு.

யாப்பென்பது, அவ்வடிதொறும் பொருள்பெறச் செய்வ தொரு செய்கை.

மரபென்பது, காலமுமிடனும் பற்றி வழக்குத் திரிந்தக் காலுந் திரிந்த வற்றுக்கேற்ப வழுப்படாமைச் செய்வதொரு முறைமை.

மற்றுச் சொல்லோத்தினுட் கூறிய மரபிற்கும் மரபியலுள் உரைப்பன வற்றுக்கும் இதற்கும் வேற்றுமையென்னையெனின் இது செய்யுட்கே உரித்து, அவை வழக்கிற்குஞ் செய்யுட்கும்

பொது வென்பது. அல்லதூஉம் அவற்றது வேறுபாடு முன்னர் அகத்திணையியலுள் கூறிவந்தாம்.

தூக்கெனபது, பாக்களைத் துணித்து நிறுத்தல்.

தொடைவகையென்பது, தொடைப் பகுதி பலவுமென்ற வாறு: அவை வரையறையுடையனவும் வரையறையில்லனவு மென இருவகைய இப்பகுதி யெல்லாம் அடியாற் கோடலின் அடிக்கும் இஃதொக்கும்.

நோக்கென்பது, மாத்திரை முதலாகிய உறுப்புக்களைக் கேட்டோர்க்கு நோக்குப்படச் செய்தல்.

பா என்பது, சேட்புலத்திருந்த காலத்தும் ஒருவன் எழுத்துஞ் சொல்லுந் தெரியாமற் பாட மோதுங்கால், அவன் சொல்லு கின்ற செய்யுளை விகற்பித்து இன்ன செய்யுளென்று உணர்தற் கேதுவாகிப் பரந்துபட்டுச் செல்வதோர் ஓசை.

அளவியலென்பது, அப்பாவரையறை. திணையென்பது அகம்புற மென்று அறியச் செய்தல்.

கைகோளென்பது, அவ்வத்திணையொழுக்க விகற்பம் அறியச் செய்தல்; அது களவுங் கற்பும்.

கூற்றுவகையென்பது, அச் செய்யுள் கேட்டாரை இது சொல்லுகின்றார் இன்னாரென உணர்வித்தல்.

இவை யென்பது பாடமாயின், எண்ணிய மூன்றனையுந் தொகுத்தவாறே பிறிதில்லை.

கேட்போரென்பது இன்னார்க்குச் சொல்லுகின்றதிதுவெனத் தெரித்தல்.

களனென்பது, முல்லை குறிஞ்சி முதலாயினவும் இரவுக்குறி பகற்குறி முதலாயினவும் உணரச்செய்தல். மற்றுத் தன்மை முன்னிலை படர்க்கையுமாம்.

காலவகையென்பது, சிறுபொழுது பெரும்பொழுதென்னுங் காலப்பகுதி முதலாயின.

பயனென்பது’ சொல்லிய பொருளாற் பிறிதொன்று பயப்பச் செய்தல்.

மெய்ப்பா டென்பது சொற் கேட்டோர்க்குப் பொருள் கண்கூடாதல்.

எச்சவகையென்பது, (518) சொல்லப்படாத மொழிகளைக் குறித்துக்கொள்ளச் செய்தல்: அது கூற்றினுங் குறிப்பினும் வருதலின் வகையென்றான்,

முன்னமென்பது, உயர்ந்தோரும் இழிந்தோரும் ஒத்தோருந் தத்தம் வகையான் ஒப்பச் சொல்லுதற்குக் கருத்துப்படச் செய்தல்.

பொருளென்பது, புலவன் தான் தோற்றிக்கொண்டு செய்யப்படுவதொரு பொருண்மை.

துறைவகையென்பது; முதலுங்கருவும் முறைபிறழ வந்தாலும் இஃது இதன்பாற் படுமென்று ஒரு துறைப்படுத்தற் கேதுவாகியதொரு கருவி அச்செய்யுட்குளதாகச் செய்தல்; அவையும் பலவாதலின் வகையென்றானென்பது.

மாட்டென்பது, பல்வேறு பொருட்பரப்பிற்றாயினும் அன்றாயினும் நின்றதனொடு வந்ததனை ஒரு தொடர் கொளீஇ முடித்துக்கொள்ளச் செய்தல்.

வண்ணமென்பது, ஒருபாவின் கண் நிகழும் ஓசைவிகற்பம். எனவென்பன, எண்ணிடைச் சொல்.

யாப்பியல்வகையின் ஆறுதலையிட்ட அந்நாலைந்துமென்பது யாப்பிலக்கணப் பகுதியாகிய இருபத்தாறுமென்றவாறு. இவை, யாப்பிற்கு இன்றியமையாத இலக்கணப் பகுதியவென விதந்தோதவே, இனிக் கூறும் உறுப்பெட்டும் இன்றியமையாமை இல்லை யென்றவாறு.

''அம்மை யழகு தொன்மை தோலே விருந்தே யியைபே புலனே யிழைபெனுஅப் பொருந்தக் கூறிய வெட் டொடுந் தொகைஇ'' யென்பது, இக்கூறப்பட்ட எண்வகை வனப்பொடு முன்னர்க் கூறிய இருபத்தாறுந் தொகுப்ப முப்பத்து நான் குறுப்பா மென்றவாறு. மற்றிவற்றை வனப்பென்று கூறற்குக் காரணம் அவற்றைக்கூறும் வழிச் (547) சொல்லுதும்.

நல்லிசைப் புலவர் செய்யுளென்பது, இவ்வுறுப்பனைத்துங் குறையாமற் செய்யப்படுவன நல்லிசைப் புலவர் செய்யுஞ் செய்யுளெனப்படு மென்றவாறு. நல்லிசைப்புலவர் செய்யுள் எனவே, எழுநிலத்தெழுந்த (391, 479) செய்யுளுள்ளும் அடி வரையறை உடையவற்றுக்கே இவ்விலக்கண மென்பதூஉம் திணையே கைகோளெனக் கூறும் உறுப்பு முதலாயினவெல்லாம் ஏனை அறுவகைச் செய்யுட்கும் (476-7) உறுப்பாகா வென்பதூஉம் அவையொழிந்த உறுப்பினுள் ஏற்பன பெறுமாயினும் ஆண்டு வரையறையின்மையிற் கூறுனென்பதூஉம் அவை செய்தாரெல் லாம் அவற்றானே நல்லிசைப் புலவரெனப் படாரென்பதூஉம் பெற்றாம்.

இனி நூலும் உரையுஞ் செய்தார் நல்லிசை யுடைய ரென்பது அவற்றை நூலினான் உரையினானென இதற்கு இடை யின்றி வைத்தமையிற் பெறுதுமென்பது.

"வல்லிதிற் கூறி வகுத்துரைத்தனர்"

நல்லிசைப் புலவரென்பது, அவற்றை நூலினான் இனி இங்ஙனங் கூறிய நல்லாசிரியரிலக்கணமே கூறியொழிந்தார். எல்லாவற்றா னும் எல்லாமமையச் செய்யுஞ் சுவடுடையராகி அவ்வத்துறை போயினார் தாமும் என்றவாறு; எனவே, இவ்வுறுப்பமையச் செய்தனவே செய்யுளெனப் படுவனவென்று சிறப்பித்தவாறு.

மற்றுக் 'கூறி' யெனவும் 'உரைத்தன' ரெனவும் இருகாற் சொல்லியதென்னையெனின், அச்செய்யுளானே கூறி அவற்றும் பொருளுரைத்தா ரென்றவாறு; என்றார்க்குச் செய்யுட்குற்றம் ஈண்டோதாரோவெனின், ஓதல்வேண்டுமே? இவ்விலக்கணத்துப் பிறழ்ந்துங் குன்றியும் வருவனவெல்லாம் வழுவென்பதறிய வைத்தானல்லனே, ஆசிரியனென்பது.

மற்றுச் செய்யுளுறுப்பு ஈண்டோதினார்; செய்யுள் யாண் டோதுபவெனின், அறியாது கடாயினாய், உறுப்பென்பன உறுப்புடைப் பொருளின் வேறெனப்படா; பொருள் எனப் படுவன உறுப்பே, அவற்றது ஈட்டத்தினை முதலென வழங்குப வாகலான் உறுப்பினையே சொல்லியொழிந்தார்; முதற்பொருள திலக்கணமென உறுப்பிலக்கணத்தினையே வேறுபடுத்துக்

கூறலாவதின்மையானும் உறுப்புரைப்பவே அவ்வுறுப்புடைய பொருள் வழக்கியலாற் பெறலாமாகலானுமென்பது.

மற்று, யாத்தசீரே யடியாப் பென்றதென்னை? தளையென் பதோர் உறுப்புப் பிறர் வேண்டுபவாலெனின், இவருஞ் சீரது தொழிலே தளையென வேண்டுப, தளைத்தலின் தளையாதலானும் வேறு பொருளென வேண்டாரென்பது; என்றார்க்கு அசை யின்றிச் சீருமில்லை, சீரின்றி அடியுமில்லையாம் பிறவெனின் அற்றன்று; உறுப்பும் உறுப்புடைச் செய்யுளும்போல அவை கொள்ளப்படுந் தளையென வேறொன்றின்மையிற் கொள்ளான் என்னை? அது குறளடியென வேறுறுப்பாயினமையின் என் பது; தளையென்றிதனைக் கோடுமேல் அதனைக் குறளடி யென லாகாதென்பது. அல்லதூஉம், ஈரசை கூடி ஒரு சீராயினவாறு போல இருசீர் கூடியவழி அவ்விரண்டனையும் ஒன்றென்று கோடல்வேண்டும்; கொள்ளவே நாற்சீரடியினை இடைதுணித் துச் சொல்லுவதன்றி நான்கு பகுதியாவெய்திக் கண்டம்படச் சொல்லுமாறில்லையெனக. 'யாத்தசீர்' என்றதனானே அசை தொறுந் துணித்துச் சொல்லப்படா சீரென்பதூஉம், அச் சீரான் அடியானவழி 'சீரியைந்திற்றது சீரெனவே படு' (323) மென்றதனாற் சீரெல்லாந்துணித்துச் சொல்லப்படுமென்பதூஉங் கூறினான் இவ்வாசிரியனென்பது. அற்றன்றியும், அவ்வாறு தளைகொள்வார் சீரா னடிவகுப்பதூஉங் குற்றமென மறுக்க.

மற்றுத் தொடை கூறியதென்னை? அடியிரண்டு தொடுத்தற் றொழிலல்லதின்மையினெனின், அற்றன்று, தொடுத்தற்றொழின் மாத்திரையானே தொடை யென்றானல்லன், அவ்வடிக்கண் நின்ற எழுத்துஞ் சொல்லும் பிறபொருளாகலான் அவற்றானே தொடை கொண்டமையின் வேறுறுப்பென்றானென்பது. அஃ தேற், சீருஞ் சீரும் இயைந்தவழி அவையிடமாக நின்ற அசை யால் தளைகொள்ளாமோவெனின், கோடுமன்றே, அதனை அடி யென்னுமாயின் என முற்கூறியவாறே கூறிமறுக்க. அல்லதூஉம் அவ்விரண்டசையுங் கூடிச் சீராமன்றே வெனின் என்பது. மற்று நாற்சீரடியுள் இருசீ ரியைந்தவழிக் குறளடி யென்னு மாகலின் அதனைத் தளையென்னுமோவெனின் அங்ஙனங்கொள் ளின் இருசீரடிக் கட்டளை வேண்டாதானும்; ஆகவே, ஒருவழிக் கொண்டு ஒருவழிக்கொள்ளாமை (663) 'மயங்கக்கூறல்' என்

னுங் குற்றமாமென்பது. அல்லதூஉம், அங்ஙனமன்றி வருமாயின் அடிக்கெல்லாம் பொதுவகையால் தளையுறுப்பெனப் படாது எழுத்தும் அசையும்போல யாண்டும் வருவனவெல்லாம் உறுப்பெனப்படுவன வென்றற்கு,

''இணை நான் முடிபு தன்னான் மேற்றே''

என்பதனாற் காக்கைபாடினியார் ஓதிய தளையிலக்கணம் ஈண்டுங் கோடல் வேண்டுமெனின், அதுவே கருத்தாயின் அவர்க்கும் இவர் முடிவே பற்றித் தளை களையல்வேண்டும். அல்லதூஉம், இவர்க்கு இளையரான காக்கைபாடினியார் தளை கொண்டில ரென்பது இதனாற் பெற்றாம். தளைவேண்டினார் பிற் காலத்து ஓராசிரியரென்பது. என்னை?

''வடக்குந் தெற்குங் குணக்குங் குடக்கும்
வேங்கடங் குமரி தீம்புனற் பௌவமென்று
இந்நான் கெல்லை யகவயிற் கிடந்த
நூலதி னுண்மை வாலிதின் விரிப்பின்''

எனக் கூறி வடவேங்கடந் தென்குமரியெனப் பனம்பாரனார் கூறியவாற்றானே எல்லைகொண்டார் காக்கைபாடினியார். ஒழிந்த காக்கை பாடினியத்து,

''வடதிசை மருங்கின் வடுகு வரம்பாகத்
தென்றிசை யுள்ளிட் டெஞ்சிய மூன்றும்''
(தொல் பொருள். 650)

எனத் தென்றிசையுங் கடலெல்லையாகக் கூறப்பட்டதாகலான் அவர் குமரியாறுள்ள காலத்தா ரல்லரென்பதூஉங், குறும்பனை நாடு அவர்க்கு நீக்கல் வேண்டுவதன்றென்பதூஉம் பெற்றாம். பெறவே, அவர் இவரோடு ஒருசாலை மாணாக்கரல்லரென்பது எல்லார்க்கும் உணரல் வேண்டுமென்பது.

மற்றிது முறையாயவாறு என்னை யெனின், மாத்திரை எழுத்தினது குணமாதலானும் அசையுஞ் சீரும் அடியுந் தூக்கும் பாவும் வண்ணங்களுமென்று இன்னோரன்னவெல்லாம் மாத்திரை நிமித்தமாகத் தோன்றுவன ஆதலானும் அது முன் (3 4) வைத்தான். அக்குணத்திற்குரிய எழுத்தினை அதன்பின் வைத்தான். அவ்வெழுத்தான் அசையும், (315) அசையாற் சீருஞ்

(324) சீரான் அடியும், (346) அவ்வடி பெற்றவழி அதனை ஆக்கு மாறறியக் கூறும் யாப்பும் (390) அவ்வடியகத்தன சொல்லும் பொருளுமாகலான் அதன்பின் மரபும் (392) வைத்தான். அவ் வடியிரண்டினைத் தொடுக்குங்கால் அவற்றை ஓரடியென ஒரு தொடர்ப்படாமைத் துணிப்பது தூக்காகலான் (399) அதனைத் தொடைக்குமுன் (400) வைத்தான். அவ்வடியிரண்டு தொடுத்த வழியுங் கொள்ளப்படும் நோக்கென்பது அறிவித்தற்கு (416) அதனைத் தொடைப்பின் வைத்தான். அவ்வடி இரண்டும் பலவுந் தொடர்ந்தவழி முழுவதுங் கிடப்பது பாவாகலான் அதனை அதன்பின் (417) வைத்தான். அப்பாத் துணிந்த துணிவினை (501) எண்ணுதலான் அளவினை (496) அதன்பின் வைத்தான். திணையுந் திணைக்குறுப்பாகிய (497) ஒழுகலாறும் அவ்வொழுக் கத்தவாகிய கூற்றும் 506) அதன்பின் வைத்தான். கேட்போ ருங் (508) கேட்தும் இடனும் (510) அதுபோலப் புலப்படாத காலமும் (514) இவற்றூற் பயனும் (515) பயனது பரத்துவரும் மெய்ப்பாடும் (516) இவற்றினெல்லாம் ஒழிந்துநின்ற எச்சமும் (518) அவ்வெச்சத்தோடுங் கூட்டி யுணரப்படும் முன்னமும் (519) அம்முறைமையான் அதன்பின் வைத்தான். அவற்றிற் கெல்லாம் பொதுவாகிய பொருளை (520) அதன்பின் வைத் தான். அப்பொருட் பிறழ்ச்சியை ஒருதுறைப்படுக்குந் துறையை அதன்பின் (521) வைத்தான். மேல் (523) எச்சமும் மாட்டு மின்றியும் வருஉமென்பவாகலான் மாட்டினைத் துறை வகையின் பின் வைத்தான் அவற்றுள் எச்சத்தினை முன் ஓதி னுன் அது செய்யுட்கணின்றி வருஞ் சிறுபான்மை ஆதலா னென்பது; வண்ணம் பாவினது பகுதியுறுப்பாதலான் அதனை அவற்றுப் பின் (524) வைத்தான். வனப்பினை (525) எல்லா வற்றுக்கும் பின் (547) வைத்தான். அவற்றை ஒன்றொன்றாக நோக்குங்கால் அவ்வொட்டுமின்றியுஞ் செய்யுள் செய்பவா கலினென்பது.

மற்றிவ்வுறுப்பினையெல்லாம் ஆசிரியன் குறியென்றுமோ உலகு குறியென்றுமோ வெனின், அவ்விருதிறத்தானும் ஏற்பன வறிந்து கொள்ளப்படுமென்றொழிக. இவற்றை உயிருடையதன் உறுப்புப் போலக் கொளின் உயிர் வேறு கூறல்வேண்டுவதாம்; அவ்வாறு கூறுமையிற் கலவையுறுப்புப்போலக் கொள்க.

(வி-ரை)

யாப்பதிகாரம் என வேறொரு அதிகாரமாக்குவர் இறையனார் களவியலுரையாசிரியர் அதனை இருகாரணங்களால் மறுக்கின்றார். 1. யாப்பு என்பது செய்யுளாதலின் செய்யுட்கென ஒரு அதிகாரம் கூறுதல் வேண்டும். அவ்வாறு ஆசிரியர் கூறவில்லை 2. இதனை ஓர் அதிகாரமாக்கின் எழுத்ததிகாரத்திற்கும் சொல்லதிகாரத்திற்கும் ஒன்பதொன்பது இயல் உளவாக இப்பொருளதிகாரத்திற்கு மட்டும் எட்டு இயல் உளவாகும். யாப்பதிகாரம் என்பது ஓர் இயலே ஓர் அதிகாரமாகக் கருதவும் வேண்டும். ஆதலின் இது பொருந்தாதாம்.

செய்யுட்குரிய உறுப்புக்கள் முப்பத்தினுன்கனுள் வனப்பு எட்டையும் வேறு கூறக் காரணம் அவ்வனப்பு ஒவ்வொரு செய்யுட்கும் ஒவ்வொன்றே வருவதாகும் அவற்றுள் தொன்மை விருந்து போல்வன செய்யுள் பலவும் தொடர்ந்த நூல் முழுமையையும் கொண்டு கூறுவதாகும். ஆனுல் எஞ்சிய இருபத்தியாறு உறுப்புக்களோ ஒன்று ஒன்றோடு இயைபுற்று ஒவ்வொரு செய்யுளோடு வருவதாகும் இவ்வேறுபாடு பற்றியே இருபத்தியாறும் எட்டுமெனப் பிரித்துக் கூறினர்.

மாத்திரையது மாத்திரை– மாத்திரையினது அளவு. எழுத்திற்கு உரித்தாக எழுத்ததிகாரத்து ஓதிய மாத்திரைகள் தத்தம் அளவில் சிறந்து பாவின் ஓசை வேறுபாடுகளை உணர்த்தி விராஅய் நிற்கும் நிலையை மாத்திரை என்பர் நச்சினர்க்கினியர். எழுத்துக்களை இயற்றிக் கொள்ளுதலாவது எழுத்தியலுள் கூறிய முப்பத்து மூன்று எழுத்துக்களையும் செயயுட்கேற்பப் பதினைந்தாக அமைத்துக்கொள்வதாம். இதனை அடுத்த நூற்பாவின் உரை கொண்டு அறியலாம். இவ்வாசிரியர் தளையை உறுப்பாகக் கொள்ளாமைக்கு உரிய காரணத்தை நச்சினர்க்கினியர் பேராசிரியர் உரையைத் தழுவி நன்கு விளக்குவர் அவ்வுரை வருமாறு: தளையாவது சீரினது தொழிலாய்ப் பாக்களின் ஓசையைத் தட்டு இருசீரிணைந்ததாகும்; அவ்வாறிணைந்த இருசீரினையும் ஆசிரியரெல்லாம் இருசீர் குறளடியென அடியாகவே வகுத்துக்கொண்டார். ஆதலின் தளையென வேறோர் உறுப்பின்றும் அன்றியும், தளையான் அடி வகுப்பாரும் உள

ராயினன்றே அதனை உறுப்பென்று கொள்ள வேண்டுவது; அங்ஙனம் வகுத்துக் கொள்ளாமையின் உறுப்பென்றது சீரது தொழிலாய் ஓசையைத் தட்டு நிற்ப தொன்றென்றே கொண்டார். அதனையுறுப்பெண் பார்க்குச் சீரான் அடி வகுத்தல் குற்றமாகும். தொல்காப்பியரோடு ஒரு சாலை மாணாக்கராகிய காக்கைப்பாடினியாரும் உறுப்பென்னுர்; பின்தோன்றிய காக்கைப்பாடினியார் முதலியோர் கொள்வர்; அது பொருந்தாது. (1)

மாத்திரை அளவும் எழுத்தியல் வகையும்

314 அவற்றுள்,
[1]மாத்திரை யளவும் எழுத்தியல் வகையும்
[2]மேற்கிளந் தன்ன வென்மனார் புலவர்.

இது நிறுத்த முறையானே முதற்கணின்ற மாத்திரையும் எழுத்தியலு முணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள) மாத்திரைகள் பல தொடர்ந்து செய்யுட்கண்விராய் நிற்கும் அளவையும், எழுத்துக்கள் இயற்றப்பட்டு எழுத்ததிகாரத்தின் வேறுபட்ட தொகையுமென இரண்டினமும் மேல் எழுத்தோத்தினுட் கூறப்படாதனவல்ல; அவையே: அவற்றை ஈண்டு வேண்டுமாற்றாற் கொள்க என்பான் மேற்கிளந்தவகையிற் பிறழாமற் கொள்க என்றானென்பது.

அன்னவெனவே, இம் 'மாத்திரையளவும் எழுத்தியல் வகையும்' வேறென்பதூஉம், வேறுயினும் ஆண்டுக் கூறியவற்றோடு வேறுபடாமைக் கொள்க வென்பதூஉம் உரைத்தானும். எனவே, எல்லா வழியும் வரையாது எய்தற்பாலவாகிய மாத்திரைகள் ஓரோவழி வரையப்படுமாயினும் அவை முற்கூறுத வேறு சில மாத்திரையுமல்ல, ஈண்டுப் பதினைந்து எழுத்தென்று

1. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே. மாத்திரை வகையும் எனப்பாடங்கொள்வர் இளம்பூரணர்
2. மேற்கிளந்தனவே எனப் பாடம் கொள்வர் இளம்பூரணர்.

கூறிப் பயங்கோறிமாயினும் ஆண்டை முப்பத்து மூன்றெழுத்தின் வேறுபடப் பிறந்தன சில வெழுத்துமல்லவென்பான், மேற்கிளந் தன்னவென்றானென்பது. மாத்திரையென்றொழியாது மாத்திரை யளவு என்றதனான் அம்மாத்திரையை விராய்ச்செய்யும் அளவை ஈண்டுக் கூறினானென்பது கருத்து.

மற்று, எழுத்தியல் வகையினை முப்பத்து மாட்டேற் றான் மூன்றெனக் கொள்வ தன்றிப் பதினைந்தென்று கொள்ளுமாறு என்னை யெனின் எழுத்தோத்தினுட் குறிலும் நெடிலும் உயிரும்மெய்யும் இனமூன்றுஞ் சார்பெழுத்து மூன்றுமெனப் பத்தும் இயல்புவகையான் ஆண்டுப் படுத் தோதினான், உயிர்மெய்யும் உயிரளபெடையுந் தத்தம் வகையாற் கூடுமாறும் ஐகாரம் ஔகாரம் போலிவகையாற் கூடுமாறும் யாழ்நூலகத்து ஒற்றிசை நீளுமாறும் ஆண்டுத் தோற்றுவாய் செய்தான். செய்யவே, அவை ஈண்டுக்கூறும் எழுத்தியல் வகையோடொக்குமென்று உய்த்து உணர்ந்து கொள்ள வைத்தானென்பது.

இவற்றோடு மகரக்குறுக்கமுங்கூட்டிப் பதினாறெழுத்து என்பா ருமுளர். அதனாற் பயனென்னையெனின் பாட்டுடைத்தலைவன் கேட்டுக்குக் காரணமாமென்பர்.

மற்று உயிர்மெய்த் தொடக்கத்து ஐந்தனையும் மேல் எழுத் தென்றிலனாகலான் ஈண்டு எழுத்தியல்வகையுள் எழுத்தாக்கி அடக்குமாறு என்னையெனின் ஈண்டு அன்னவெனவே ஆண்டு இரண்டெழுத்தின் கூட்டமெனவும் மொழியெனவும் போலியெ னவுங் கூறினானாயினும் அவற்றை எழுத்தியல் வகையெனப் பெயர் கொடுப்பவே ஆண்டு நின்ற வகையானே ஈண்டு எழுத் தெனப்படும் என்பதாயிற்று.

இதன் கருத்து, ‘இய’லென்றதனான் இயற்றிக்கொள்ளும் வகையான் எழுத்து இனையதென்றானும். ‘வகை’ யென்பதனான் முப்பத்து மூன்றினைக் குறிலும் நெடிலுமென்றற் றொடக்கத்துப் பெயர் வேறுபாட்டாற் பத்துவகைப்பட இயற்றுதலுங் கூட்ட வகையானிரண்டும் போலிவகையானிரண்டும் யாழ்நூல்வேண் டும் வகையானொன்றுமென ஐந்துவகையான் இயற்றுதலுமென

இருவகையுங் கொள்ளப்படும். அல்லதூஉஞ் செய்யுட்கள் அவ்வெழுத்து வகையான் இன்னோசையவாக விராய்ச்செய் தலுங்கொள்க.

மற்றளபெடையை மேல் மொழியென்றூஉ ஈண்டெழுத் தென்றானாகலின் இதனை ஓரெழுத்தென்று கோடுமோ இரண் டெழுத்தென்று கோடுமோவெனின்,

''நெட்டெழுத் திம்பர் ஒத்தகுற்றெழுத்தே''
(தொல் - எழுத்-மொழி. 8)

என்று கூறியவாற்றான் ஆண்டு இரண்டெழுத்தெனக் கொள்ளக் கிடந்ததாயினும் முன்னர்ப் போக்கி,

''அளபெடை அசைநிலை யாகலு முரித்தே'
(தொல் - செய் .17)

என்றவழி எழுத்து நிலைமையும் எய்துவிக்குமாகலான் எதிரது நோக்கி ஈண்டு ஓரெழுத்தென்று கோடுமென்பது. இனி அவற் றுட் குறிலும் நெடிலுங் குற்றுகரமும் அசைக்குறுப்பாம். மற்று,

''ஒற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி' (தொல்- செ. 3) என்பதனான், ஒற்றும் அசைக்குறுப்பு ஆகாவோவெனின், அச் சூத்திரத்தானன்றே அவை குறிலும் நெடிலும் அடுத்து வந்தும் வேறுபடாது நேர்நிரையாதலெய்தியது நோக்கி அவை அசைக் குறுப்பாகா என்றதென்க. மற்றிடைநின்று நிரையாதலை விலக் காவோவெனின், அன்னதொரு விதியுண்டாயினன்றே இவை இடைபுகுந்து விலக்கவேண்டுவதென மறுக்க. நெடிலும் அள பெடையிரண்டும் உயிரும் உயிர்மெய்யும் வல்லினமும் மெல் லினமும் இடையினமும் ஐகாரக்குறுக்கமும் ஔகாரக்குறுக்கமு மெனப் பத்துந் தொடைக்கு உறுப்பாம். குறிலும் நெடிலும் அளபெடையிரண்டும் இனம் மூன்றும் ஆய்தமும் வண்ணத்திற்கு உறுப்பாம் இங்ஙனமே வேறுபடவந்த பயனோக்கி எழுத்தினை தியற்றிக்கோடலின் எழுத்தியல் வகையென்றானென்பது. அஃ தேல் ஒற்றுங் குற்றுகரமும் ஈண்டோதியதென்னை யெனின், ஒற்றளபெடையான் அசைநிலையுஞ் சீர்நிலையுங் கோடலின் ஈண்டு ஒற்றுக்கூறினான். குற்றிகரமும் உயிராயினும் ஒற்றுப்போல

எழுத்தெண்ணி அடிவகுக்குங்கால் எண்ணப்படாதென்றற்கு கூறினானென்பது. அஃதேல்,

"ஒற்றெழுத்து இயற்றே குற்றிய லிகரம்" (320)
என்பவாகலின் அதை ஈண்டுத் தழாஅஃகவெனின் அக்கருத்தினால் அவ்வாறும் அமையுமென்பது. அற்றன்று, இதனை மேற்புள்ளிபெறு மென்றிலனாதலான் புள்ளிபெறு மென்றற்கும்

"ஒற்றெழுத்து இயற்றே குற்றிய லிகரம்" (320)
என்றானென்பது.

இனி, ஒருசாரார் மாத்திரையென்றது எழுத்தல்லோசை யாகிய குறிப்பிசை கொண்டானென்பர். அக்குறிப்பிசை உறுப்பாக வருஞ் சான்றோர் செய்யுள் யாண்டுங் காணாமையின் நாம் அது வேண்டாமாயினும், சிறுபான்மை ஒரோவழி வரினும் அத்துணையானே அஃது இன்றியமையாத உறுப்போடு எண்ணப்படாதென மறுக்க. உறுப்பன்று என்றார்க்குக் குறிப்பிசை யாண்டுப் பெறுதுமெனின்,

'அசையுஞ் சீரும் இசையொடு சேர்த்தி"
(தொல் - செய் -11)

என்புழிப் பெறுதுமென்பது.

இனி,'எழுத்தியல் வகையும் மேற்கிளந் தன்ன' வென்பதனையும் எழுத்திலக்கணத்தில் திரியாமற் செய்யுள் செய்க வென்றவாறு என்பவெனின், அஃதே கருத்தாயிற் சொல்லோத்தினுள்ளும் எழுத்திலக்கணமாகிய மயக்கமும் நிலையும் முதலாகிய இலக்கணம் திரியாமற் சொல்லாராய்தல் வேண்மெனவும், இவ்வதிகாரத்துள்ளும் எழுத்தியல் வகையுஞ் சொல்லியல் வகையும் மேற்கிளந்தன்ன வெனவுஞ் சூத்திரஞ் செய்வான்மன் ஆசிரியனென மறுக்க.

மற்று, மாத்திரையளவைக்கும் இலக்கணங் கூறுமோ எனின், அதுவும்,

"அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி" (323)
என்புழி, வல்லோர் ஆறெனப் பாவொடுபொருந்தக் கூறுமென்பது. அல்லதூஉம் மாத்திரையினை அளவைப்பட நிறுத்துக

எனபதோரிலக்கணமாதலின் இங்ஙனம் வரையறை யுடைத்தாக நோக்கிச் செய்யுளுறுப்பென்றுணு மென்பது.

மற்று மாத்திரையினை அளவைப்பட நிறுத்தாக்காற் படுங் குற்றம் என்னையெனின். அற்றன்று;

வரகு வரகு வரகு வரகு என்னும் அடியினைப்,
பனுட்டுப் பனுட்டுப் பனுட்டுப் பனுட்டு"

என நிறுத்தின் அது மாத்திரைவகையால் சிதைவு பட்டதாம்.

"அம்ம வாழி கேளாய் தோழி"

என்றுற், பின்னர்நின்ற இருசீரும் நெடிலாதல் இன்னுதென்றுந் தோழியெனப் பின்னர் நின்ற சீரைக் குறுக்கினவழி இன்னே சைத்தாமென்றும் அவ்வாறே செய்யுள் செல்பபிறவுங் கொச் சகக்கலியுள்ளும் ஒழிந்தனவற்றுள்ளும் இவ்வாறே கண்டு கொள்க.

(வி — ரை)

எழுத்ததிகாரத்தில் கூறப்பட்ட மாத்திரையளவு என்றது ஒவ்வொரு எழுத்திற்கும் தனித்தனியாகக் கூறப்பட்ட ஒலியள வாம். ஈண்டுக் கூறப்படும் மாத்திரையளவென்பது பொது ஒாக செய்யுட்கண் கூறப்படும் ஒலியளவாகும். ஆயினும் எழுத்ததிகாரத்தில் கூறப்பட்ட எழுத்துக்கள் முப்பத்து மூன்றும் ஈண்டுச் செய்யுட்கேற்ப கொண்ட எழுத்துக்கள் பதினைந்தாம். பதினைந்தாவன: குறில், நெடில், உயிர், மெய், வல்லினம், மெல்லினம், இடையினம், குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம், உயிர்மெய், உயிரளபடை, ஒற்றளபடை, ஐகாரப் போலி, ஔகாரப்போலி.

இரண்டெழுத்தின் கூட்டம் உயிர்மெய் கூட்ட வகையான் இரண்டு உயிர்மெய், உயிரளபடை. போலி வகையானிரண்டு ஐ, ஔ, யாழ்நூல் வகையான் ஒன்று ஒற்றளபடை. (2)

நேரசையும் நிரையசையும்

**315. குறிலே நெடிலே குறிலிணை குறில்நெடில்
ஒற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி
நேரும் நிரையும் என்றிசிற் பெயரே.**

இது. நிறுத்த முறையானே அசைவகை யுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்) குறிலும் நெடிலுந் தனித்து வந்துங் குறில் இரண்டு இணைந்து வந்துங் குறிற்பின்னர் நெடில் இணைந்து வந்தும் அவை ஒற்றடுத்தும் முறையானே நிரனிறை வகையானே நேரசையும் நிரையசையுமென்றும் (எ - று).

"குறிலே நெடிலே ஒற்றொடு வருதலொடு"

எனவும்,

"குறிலிணை குறினெடில் ஒற்றொடு வருதலொடு"

எனவும், வேறு நிரனிறீஇப் பொருளுரைக்க.

'மெய்ப்பட நாடி' யென்பது பொருள்பெற ஆராய்ந்து; எனவே, இப்பெயர் ஆட்சி காரணமேயன்றிக் குணங்காரண மாகலுமுடைய வென்றவாறு. உயிரில்லெழுத்தல்லாதன (356) தனித்து நிற்றலின் இயலசை யென்னும் பொருள்பட நேரசை யென்றாயிற்று. அவை இரண்டும் நிறைதலின் இணையசையென்னும் பொருள்பட நிரையசை யென்றாயிற்று.

அல்லதூஉம் மெய்ப்பட நாடி என்றதனான் அவ்வாய்பாடே அவற்றுக்குக் காரணமென்பதூஉங் கொள்க. உடம்பொடு புணர்த்தல்' (665) என்பதனால் உதாரணமுங் கூறியவாறு. அவை நேர்நிரையெனச் சொல்லிக் கண்டுகொள்க: அ ஆ எனவும் அல் ஆல் எனவும், பல பலா எனவும், புகர் புகார் எனவும் பிறவும் இவ்வாறு வருவனவெல்லாங் கொள்க.

மற்றுக் குறில்நெடிலென எழுத்தாக ஓதியதென்னை? சொல் லாய வழி அசையாகாவோ வெனின், அவை ஒற்றொடு வருத

லென்றதனானே, சொல்லாதலும் நேர்ந்தானாகவே அவை இரு வாற்றானும் அசையாமென்பது. சீரின்றன்மைக்கண் வந்தது:

"உள்ளார் தோழி"

என நேரசை நான்கும் வந்தன.

"வரி வரால் கலா வலின்"

என நிரையசை நான்கும் வந்தன.

(வி-ரை)

உயிரில் எழுத்து-உயிரெழுத்தல்லாத ஒற்றெழுத்துக்கள். இவை தனித்து எண்ணப்படா. இரண்டெழுத்துக்களால் ஆகாது ஒரெழுத்தால் ஆதல் நேரிது ஆதலின் நேரிய அசை நேரசை யென்றாயிற்று. ஒரெழுத்தன்றி இரண்டெழுத்து இணை தலின் நிரையசை என்றாயிற்று. உடம்பொடு புணர்தல்-ஆசிரி யன் இலக்கண வகையால் கூறாது தான் கூறும் கூற்று வகை யானே இலக்கணம் தோன்ற உரைப்பது. நேர்நிரை என்ற விடத்து முறையே ஒரெழுத்து வருதலும் ஈரெழுத்து இணைதலு மாய அவற்றின் இலக்கணம் கூறியவாறாயிற்று.

சீரின் தன்மைக்கண் வந்தது என்ற தொடர் பொருள் விளக்கமில்லாது உள்ளது. பின் வரும் எடுத்துக்காட்டை விளக்க வந்தது போலும். (3)

இதுவும் அது

**316 [1]இருவகை [2]உகரமோடு இயைந்தவை வரினே நேர்பும் நிரைபும் ஆகும் என்ப.**

---

1. இந்நூற்பாவையும் அடுத்த நூற்பாவையும் இணைத்து ஒரே நூற்பாவாகக் கொள்வர் இளம்பூரணர்.
2. உகரமோடு என இளம்பூரணரும், உகரமொடு என நச்சினார்க்கினியரும் பாடங் கொள்வர்.

இது, சொல்லாத அசைக்கூறுஞ் சொல்லுகின்றது.

(இ - ள்.) இருவகை யுகர மென்பன; குற்றுகர முற்றுகரங்கள்; அவற்றோடு மேற்கூறிய நேரசையும் நிரையசையும் ஒரு சொல் விழுக்காடுபட இயைந்துவரின் நிறுத்தமுறையானே நேரசையோடு ஒன்றிவந்த குற்றுகரமும் அதனோடு ஒன்றி வந்த முற்றுகரமும் நேர்பசை யெனப்படும்; நிரையசையோடு ஒன்றிவந்த குற்றுகரமும் அதனோ டொன்றிவந்த முற்றுகரமும் நிரைபசை எனப்படும் (எ - று).

'இயைந்து' என்றான் இருவகை உகரமும் இரு பிளவு படாது ஒன்றாகி வரல்வேண்டும், அங்ஙனம் அசையாங்கால் என்றற்கு. இருவகை உகரமும் ஒரு காலத்து ஒன்றன்பின் வாரா; வேறு வேறு வருமென்பது. இருவகை உகரமும் இறுதிக்கண் நின்று அசையாக்குமென்ப தென்னை பெறுமாறெனின், குற்றுகரம் ஈற்றுக்கணல்லது வாராமையானும்,

"நிற்றலின்றே ஈற்றடி மருங்கினும்" (தொல்-செய். 9)

என்பதனானும் பெறுது மென்பது. அல்லதூஉம் நுந்தை யென்னும் முதற்கட் குற்றுகரம் இறுதிக்கண் நேரசை நிரையசை அடுத்து வருதலின்மையானும் அது பெறுதுமென்பது.

முன்னர் நேரசை நான்கும் நிரையசை நான்குமென எண்வகையான் அசை கூறி அவற்றுப் பின் இருவகையுகரமும் வருமெனவே. அவை குற்றுகரத்தோடு எட்டும் முற்றுகரத்தோடு எட்டுமாகப் பதினாறு உதாரணப் பகுதியவாய்ச் சென்றதேனும், அவற்றுள் குற்றெழுத்துப் பின்வரும் உகரம் நேரசை யாகாதென்பது,

"குறிலிணையுகர மல்வழி யான" (தொல்-செய்.5)

எனபுழிச் சொல்லுதும்; ஒழிந்தன குற்றுகர நேர்பசை மூன்றும் நிரைபசை நான்குமாயின.

உ-ம்: வண்டு, நாகு, காம்பு எனவும்;

வரகு, குரங்கு; மலாடு, மலாட்டு எனவும்,

இவை குற்றுகரம் அடுத்து நேர்பும் நிரைபும் வந்தவாறு.

இனி, முற்றுகரம் இரண்டசைப்பின்னும் வருங்காற் குறிலொற்றின் பின்னும் நெடிற் பின்னுமென நேரசைக்கு இரண்

டல்லதாகாது. நிரையசைக்கண்ணும் குறிலிணைப் பின்னும் குறினெடிற் பின்னுமல்லதாகாது.

உ - ம்: மின்னு நாணு எனவும்,
உருமு குலாவு எனவும் வரும்.

வாழ்வு, தாழ்வு என நெடிலொற்றின் பின்னும் முற்றுகரம் வந்ததாலெனின், அவை ஆகாவென்பதூஉம் இக்காட்டிய நான்குமே ஆவனவென்பதூஉம் முன்னர்,

"நிற்ற வின்றே யீற்றடி மருங்கினும்" (தொல். செய். 9) என்புழிச் சொல்லுதும்.

இனி, ஒருசாரார் நேர்பசை நிரைபசை யென்பன வேண்டா வென்ப. என்னை: குற்றுகர முற்றுகரங்களை வேறாக்கி அலகிட அமையாதே? 'ஞாயிறு' எனக் குற்றுகரங் குறிலிணையாய் அலகு பெறுமோவெனக் குற்றங் கூறுப. முற்றுகர முந் 'தேமா' வென நேரசையாயிற்றுப்போல 'மின்னு' என்ற வழியும் வேறலகுபெற அமையுமென்பது. அற்றன்று, குற்றுகரத்தினைக் குற்றெழுத்தென்ப; வேறு குற்றுகரம் வேண்டாதாரும். என்னிர்க்கு வேண்டினுனையுங் குற்றங் கூறுவரவர்; என்னை? குற்றிய லுகரம் அரைமாத்திரைத்தாகலின் ஒற்றுப்போல ஓரசையுள் ஒடுக்கி அலகிடப்படும். அற்றன்றேல் குற்றெழுத்தாக்கி அலகு வைக்கவே அமையுமென்பதூம் அவர் கருத்து. அதற்கு விடை, குற்றுகரம் ஒற்றுப்போன்று ஒடுக்கி நில்லாது; என்னை? தன்னான் ஊரப்பட்ட ஒற்றுந் தானுமாகி அரைமாத்திரைத்தாகியும் ஒடுக்கி இசையாது அகன்று இசைக்கும், அதனுல் ஒற்றென்றலு மாகாது; பின்னும் ஒரு மாத்திரைத் தாகாமையிற் குற்றெழுத் தெனலுமாகாது; மற்று அதனுன் அதனை ஒற்றென அடக்கார்; குற்றெழுத்தென ஏற்று அலகு கொள்வார், இனி அதனைச் செயற்பாலதோர் அசையாக்குதலென்பது நோக்கி நேர்பசை நிரைபசையென வேண்டினுனென்பது. அவை வண்டு தொண்டி என ஓசை யொவ்வாமை செவி கருவியாக உணர்ந்துகொள்க. அஃதேன், 'ஞாயிறு வலியது' என்றவழிக் குறிலிணையுகர மெனக் குற்றெழுத்தாக்குவது எற்றுக்கெனின், அளபெடையை ஓசையிற் சிதையாது 'நிலப்படையுள்அலகு சிதைத்தாற் போலக்' குற்றுகரத்தைக் குற்றெழுத்துப்போல அலகுபெறு

மென்பது இலக்கணமில்லதொரு வழுவமைதி தானாயதனை இலக்கணமாக ஓர்த்துக்கொண்டு இலக்கண வகையாற் குற்றுகரமாதலை விலக்குவாரும் உளரோவென மறுக்க. அஃதாக, முற்றுகரம் ஒரு மாத்திரையாதலிற் குற்றெழுத்தாக்கி நேரும் நிரையுமாகப் பெறுவோவெனிற் பெறா; என்னை?

"வண்டு வண்டு வண்டு வண்டு"

என நின்றவழிப் பிறந்த அகவலோசை.

"மின்னு மின்னு மின்னு மின்னு"

என நின்ற வழியும் பெறப்படுமாதலின், அதுவும் அது பட்டதே பட்டு அவ்வகையே பெறுமென்றானென்பது. அல்லதூஉம் வெண்பாட்டீற்றடி வண்டு எனக் குற்றுகரவீற்றான் இற்றவழிக் கொல்லு என முற்றுகரவீற்றான் இறுமாயினும் ஒத்தவோசையாம்.

இனி, உகர ஈறல்லாத தேமாவென்பதனான் முடியாவென்பர், அகனாலுங்குற்றுகரத்தின் செய்கை முற்றுகரத்திற்கும் வேண்டி நேர்பு நிரைபு கொண்டானென்பது. அற்றன்றியுங் குற்றுகரஞ் சார்ந்து தோன்றுமாறுபோல இம்முற்றுகரமும் வருமொழி காரணமாக நிலைமொழி சார்ந்து தோன்றுதலொப்புமை நோக்கியும் அதனைக் குற்றுகரம்போல ஓரசைக்கு உறுப்பாம் என்றானென்பது.

"எழுத்தளவு எஞ்சினுஞ் சீர்நிலை தானே
குன்றலு மிகுதலும் இல்லென மொழிப"
(தொல். செய்.48)

என்பதனான் அவை அவ்வாறுதல் அறிந்துகொள்க. இவையும் ஆட்சியுங் குணமுங் காரணமாகப் பெற்ற பெயர் ஆட்சி,

"நிரையவண் நிற்பின்றே நேர்பும்" (தொல். செய். 75)

எனவும்,

"நேரிற் றியற்சீர் நிரையு நிரைபும்"
(தொல். செய். 74)

வுளனம்,

வருமென்பது, இருவகை யுகரமும் அடைந்துவந்த இயலசையிரண்டும் நேர்பும் நிரைபு மென்றாலும், நேரும் நிரையு மென்னும் பொருண்மையவே ஆகலான் அவற்றது பெயரான் இவற்றையும் பெயர் கொடுத்தான் ஆகுபெயராக்கி யென்பது. எனவே, நேர்நிரையின் பின் உகரம் வருதலின் நேர்பு நிரைபு எனக் குணங் காரணமாகவும் பெற்றும்.

(வி-ரை)

நேர் நேரின் பின் உகரம் பெறுதலின் நேர் நேர்பு என்றாயிற்று. நிரையின் பின் உகரம் பெறுதலின் நிரை நிரைபு என்றாயிற்று.

ஒருசாரார்-சிறுகாக்கைபாடினியார். நேர்பு அசை, நிரைபு அசை எனப் பிறர் கூறுதிருக்கவும் தொல்காப்பியர் கொண்டதற்குரிய காரணத்தை இளம்பூரணர் விளக்குவர். அது வருமாறு: அஃதேல் நேர்பசை நிரையெனக் காக்கைபாடினியார் யிரண்டசை யாக்கி யுரைத்தாராயினும் அதனை முடிய நிறுத்தாது வெண்பாவீற்றின் கண் வந்த குற்றுகர நேரீற்றியற் சீரைத் தேமா புளிமா என்னும் உதாரணத்தான் ஓசையூட்டிற் செப்பலோசை குன்றுமென்றஞ்சி காசு பிறப்பென உகர வீற்றான் உதாரணங் காட்டினமை யானும் சீருந்தளையுங் கெடுவழிக் குற்றியலுகரம் அலகு பெறுதென்றமையானும், வெண்பா வீற்றானு முற்றுகரமுஞ் சிறுபான்மை வருமென உடன்பட்டமை யானும், நேர்பசை, நிரைபசை யென்று வருதல் வலியுடைத்தென்று கொள்க. அவை செய்யுளீற்றின் கண் வருமாறு:- பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவனடி சேராதார் (குறள் 10), வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க் கியாண்டும் இடும்பை இல (குறள்.4), இருள் சேர் இருவினையும் சேரா இறைவன் பொருள் சேர் புகழ் புரிந்தார் மாட்டு (குறள் 5), தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கல்லாள் மனக்கவலை மாற்றலரிது என வரும். (4)

குற்றியலுகரம் நேர்பசையாகாது என்றல்

**317. குறிலிணை யுகரம் அல்வழி யான.**

இஃது, எய்தியது ஒருமருங்கு மறுத்ததூஉம் எய்தாதது எய்துவித்ததூஉமாம்; வழுவமைத்ததெனினும் அமையும். தனிக்குறிலாகிய நேரசைப் பின்னும் இருவகையுகரம் வந்து நேர்பசையாதலை விலக்கினமையின் எய்தியதொருமருங்கு மறுத்ததாம். குற்றுகரங் குற்றெழுத்துப் போன்று அலகு பெறுமென்றமையின் எய்தாததெய்துவித்து வழுவமைத்ததாம்.

(இ-ள்.) இருவகை உகரமும் இரு குறிலாகி இணைந்த வழி நேர்பசையாகாது (எ-று).

கரு மழு என முற்றுகரம் நேர்பசையாகாது நிரையசை யாயிற்று. என்றூர்க்குக் குற்றுகரம் விலக்கியதென்னை? குறி லிணைந்தவழிக் குற்றுகரமாகாதென்பது.

"நெட்டெழுத்து இம்பருந் தொடர்மொழி யீற்றுங்
குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே" (தொல்.எழு. மொழி.3)

என்றதனாற் பெறுதும் பிறவெனின், அது நோக்கிக் கூறினு னல்லன்; 'ஏற்புழிக்கோடல்' என்பதனான், ஞாயிறு வலியது என ஓரசைப் பின்னர் வந்தவழி இது குற்றுகரமேயாமன்றே ஆண்டும் அது குறிலிணை யுகரமெனவே படுமென்பது; பட்டக் கண்ணுங் குற்றுகரமேயென வழுவமைத்தவாறு. குறிலிணை யெனக் குற்றுகரத்தையும் உடம்பொடு புணர்த்தல் (665) என் பதனாற் குற்றெழுத்தென வேண்டினுனென்பது பெற்றாம். இங்ஙனங் குற்றுகரங் குறிலிணையாகியுங் குற்றுகரமாகி எழுத் தள வெஞ்சினும் அமையுமெனவே நுந்தையென்னும் முதற்கட் குற்றுகரமுங் குற்றெழுத்துப் போன்று அலகுபெறும் எழுத்தள வெஞ்சினுமென்பது கொள்க. இஃது 'ஒன்றினமுடித்த றன்னின முடித்தல்' (665) என்னு முத்திவகை.

(வி-ரை)

தனிக்குற்றெழுத்தின் பின் வந்த குற்றியலுகரம் அல்லது முற்றியலுகரத்தை நிரையசையாகக் கொள்ள வேண்டும் என்பது இந்நூற்பாவின் கருத்தாகும். (5

இயலசையும் உரியசையும்

## 318. இயலசை முதலிரண்டு [1]ஏனைய வுரியசை.

இது, மேற்கூறிய அசை நான்கினையும் இருகூறு செய்து அவற்றுக்கு எய்தாததெய்துவிக்கின்றது. இனி, ஆட்சியுங் குணனுங் காரணமாக வேறு வேறு பெயர் கொடுக்கின்றது இச்சூத்திரமெனவும் அமையும்.

(இ-ள்) முதற்கண் நின்ற நேரும் நிரையும் இயற்றிக் கொள்ளப்படாது; இயற்கை வகையான் நின்றாங்கு நின்று தளைப்பனவாம், ஒழிந்தன விரண்டும் இயற்றிக்கொள்ளப் பட்டு இயலசையாதற்கு உரியவாம் (எ-று).

எனவே, எய்தாத தெய்துவித்தது; இயலசை உரியசை யென்று ஆளுமாகலானும் இயற்கையால் இயறலின் இயலசை யெனவும், அவை செய்யுந் தொழில் செய்தற்கு உரியவாகலான் உரியசையெனவும், ஆட்சியுங் குணனுங் காரணமாகப் பெய: ரெய்துவித்ததூஉ மாயிற்று.

அங்ஙனம் இயற்றிக் கொள்ளுமாறு சீர்கூறும்வழிக் கூறுதும்.

(வி-ரை)

நேரும் நிரையும் இயற்கை வகையான் நின்றனவாகலின் இயலசையாயிற்று. நேர்பும் நிரைபும் இயலசையாதற்கு உரியவாக இயற்றிக் கொள்ளப்படுதலின் உரியசையாயிற்று. இயற்றிக் கொள்ளுதலாவது தரம் கொண்ட இயலசைக்குப்பின் உகரத்தைக் கூட்டிக் கொள்ளுதலாம். (6)

விட்டிசைத்தவழி தனிக்குறில் நேரசையாமெனல்

## 319. தனிக்குறின் முதலசை [2]மொழிசிதைத் தாகாது.

இஃது, எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தனுதலிற்று. உகிரீ மயிரீஎன நின்றவழிக் குறிலிணையேயன்றி மூன்றெழுத்து

---

1. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே. ஏனவை எனப் பாடம் கொள்வர் இளம்பூரணர்.
2. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே. மொழி சிதைந் தாகாது எனப் பாடம் கொள்வர் இளம்பூரணர்.

"மண்டிணிந்த நிலனும்"

என்பது நேர்நிலைவஞ்சியாகலின் அடிநிலையோடு அடிக் கூட்டத்துக் கண் அதற்குத் தூங்கலோசை கொள்ளுமா றென்னையெனின், அஃது இலக்கண அடியன்மையின் ஈண்டா ராய்ச்சியின் றென்பது. நேர்நிலைவஞ்சியுள் இலக்கண அடிக்கண் இயற்சீரெல்லாம் வாரா வென்பது,

'குறளடி முதலா வளவடி காறும்' (தொல்-செய். (57)
என்புழிச் சொல்லுதும். (26)

நான்கசையும் சீராகும எனல்

339. இசைநிலை நிறைய [1]நிற்குவ வாயின்
அசைநிலை வரையார் சீர்நிலை[2] பெறலே.

இது, நான்கசையுஞ் சீராகும் இடனுமுடைய என்கின்றது.

(இ-ள்.) ஓசைநிலை நிறையாமையாற் சீர்த்தன்மைபட நிறைந்து நிற்குமாயின் அசைநிலைமைப்பட்ட சொற்களை யெல் லாம் சீர்நிலை பெறுதற்கண் வரையார் (எ-று.)

"கழல் தெழா மன்னர்தங்கை"

என்று நேரசை சீராயிற்று.

"புனல்நாடன் பேரே வரும்"

என நிரையசை சீராயிற்று.

"எய்போற் கிடந்தானென் னேறு"

(புறப்-வெண்பாமாலை--வாகை. 22)

என நேர்பசை சீராயிற்று.

"மேவாரை யட்ட களத்து" (களவழி-25, 27, 36)

என நிரைபசை சீராயிற்று. பிறவுமன்ன. இவற்றை உண்மை வகையாற் சீராமென்றான் அல்லன்:

---

1. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே. நிற்குவதாயின் எனப் பாடம் கொள்வர் இளம்பூரணர்.
2. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே. பெறவே எனப்பாடம் கொள்வர் இளம்பூரணர்.

"தொடர்மொழி யெல்லாம் நெட்டெழுத்து இயல"
(தொல். எழுத்-மொழி. 17)

என்றாற்போலக் கூறினானென்பது. இவை இன்ன பாவினுள் வருமென்பது முன்னர்ச் (385) சொல்லுதும்: இங்ஙனங் கூறாக் கால் வெண்பாவின் ஈற்றடியை முச்சீரடி யென்னுமாறு இல்லை யென்பது. (27)

உரியசைச் சீர் தளைகொள்ளுமாறு

## 340. இயற்சீர்ப் பாற்படுத் தியற்றினர் கொளலே தளைவகை சிதையாத் தன்மை யான.

இஃது எய்தியதொரு மருங்குமறுத்தல் நுதலிற்று; இயலசை யிரண்டுஞ் சீர்நிலைபெறினுந் தளைகொள்ளப்படா வென்றமை யின். இனி, எய்தாததெய்துவித்ததூஉமாம்; என்னை? உரியசை யால் தளைகொள்ளுமா றுணர்த்தினமையின்.

(இ - ள்) இயற்சீர்க்கண்ணே கூறுபடுத்து இயற்றப்படும் அவை தளைவகை சிதையாத் தன்மைக்கண் (எ - று)

பாற்படுத்' தெனவே அதிகாரத்தான் இறுதிநின்ற உரியசை யிரண்டும் (நேர்பு, நிரைபு) பகுத்துக்கொள்ளப்படும்.

நான்கியற்சீருள் இன்ன இயற்சீர்ப்பாற் படுமென்றானோ வெனின்,

'கலித்தளை யடிவயின் நேரீற்று இயற்சீர்'
(தொல்-செய் 25)

என அதிகாரம் வருகின்றமையின் தேமா புளிமாவென்னுஞ் சீர்போல் இரண்டரையுந் தளைகொள்ளுமென்றமையின் 'இயற்றுக' வென்றானென்பது. தானாக இயல்வதன்மையின் 'இயற்றுக' வெனப்பட்டது. 'தளைவகை சிதையாத் தன்மை யான' வென்று இடம் நியமித்தது என்னையெனின், சீர்வகையான அசைச்சீரென வேறாய் நிற்றலுடைய, தளைவகை சிதையாத் தன்மை நோக்கியே இயற்சீர்ப்பாற்படுத்து இயற்றுகவென அடங்கக்கூறிற்றென அறிவித்தற்கு எனவுணர்க.

இவ்வுரியசையிரண்டுஞ் சீர்வகையான் வேறுவேறு எண்ணித் தொகைபெற்றுத் தமக்குஒதிய அடியுறழுமெனவும், அஃதெண்ணப்பட்ட தளைவகை நோக்குங்கால் வேறுவேறெண்ணுத் தொகை பெற்று இயற்சீரெனவே யடங்குமெனவுங் கூறப்பட்டதாம்; இம்முனுந் தளைவகைக் கண்ணெனவே, கட்டளையடிக் கண்ணதே இவ்வரையறை யென்பதூஉம் அல்லாதவழி இந் நான்கசையும் வரையறையின்மையின் தளைகொள்ளப்படா தென்பதூஉங் கூறப்பட்டதாம். அஃது ஓரசைச்சீரல்லாத சீரா யின் கட்டளையடியல்வழியுந் தளைகொள்பவோவெனின், தளை கொள்ளிற் கட்டளையடி யெனப்படுமாதலின் அல்லாதவழி வந்தசீர் தளைகொண்டனவென்றல் பயனில் கூற்றுமென மறுக்க.

"உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு" (பத்து-திருமுரு.1) என்றவழி, ஆசிரியத்துட் பிறதளை வந்ததென்று இலக்கணம் கூறி வழுவமைக்கல் ரவண்டா. என்னை? அது பெருவரவிற் றுகலின்; அதனுன், வருஞ்சீர்வகையான் வந்ததென்று ஒழிதலே அமையும் வரையறை இல்லனவற்றுக்கு வரையறை கூறல் குற்றமாகலி னென்பது. மற்று இவ்வுரியசைச் சீரிரண்டும் வரையாது கூறினமையின் மூன்றுபாவிற்குஞ் சொல்லும் பிற வெனின்:

"கலித்தளை யடிவயி னேரீற் றியற்சீர், நிலைக்குரித் தன்று" (தொல்-செய்.25)

எனக்கூறி, ஈண்டு இவற்வை இயற்சீர்ப்பாற்படு மென்றமையின் இவையுங் கலிப்பாவிற்கு விலக்குண்டனவென்பது. எனவே ஆசிரியத்திற்கும் வெண்பாவிற்கும் உரியசைச் சீரிரண்டும் உரிய வாயின. ஆசிரியத்திற்கு மேற்கூறிய (337) சீர் பன்னிரண்டும் இவையிரண்டுமென அடியுறழுஞ்சீர் பதினன்காயின. வெண்பா விற்கு முன்னரெய்தியசீர் பதினென்கும் இவையிரண்டுமாக அடியுறழுஞ்சீர் பதினாறுயின. கலிப்பாவிற்கு மேற்கூறியசீர் பதினென்குமேயாயின. இங்ஙனம் வகுக்கப்பட்ட சீர் நாற்பத் நான்கினையும், சீர்வகையான் உண்மை நோக்கித் தொகுப்ப இயற்சீர்பத்துப் ஆசிரியவுச்சீரிரண்டும் வெண்சீர் நான்கும் அசைச் சீரிரண்டுமெனப் பதினெட்டாம்.

மேல் (362) ஐவகை அடியெனப்பட்ட அறுநூற்றிருபத்தைந் தடியும் இச்சீர் பதினெட்டானுந் தோற்றிக்கொள்ளப்படும். இப் பதினெட்டுச் சீரும் இரு நிலைமை யெய்துவனவும் எய்தாதனவு மாகி முப்பத்தொன்றாகி விரியுமாறு முன்னர்,

"எழுத்தள வெஞ்சினும்" (தொல்-செய் 42)

என்புழிச் சொல்லுதும், (28)

கலிப்பாவில் நேரசை நிரையசையாகக்
கொள்ளப்படும் இடம்

## 341. வெண்சீர் ஈற்றசை நிரையசை யியற்றே

இது, வெண்சீராற் கலித்தளையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

"கலித்தளை மருங்கிற் கடியவும் படாஅ"(தொல்-செய்.24) என்புழி, அவ்வாசிரியவுரிச்சீராற் கலித்தளையா மென்றான், அவ்வதிகாரம் இடையறாது நின்றமையின் இதுவுங் கலித்தளைக்கே இலக்கணமாயிற்று. என்றார்க்கு,

"வஞ்சி மருங்கினும்" (தொல்-செய் 26)

எனவுங்,

"இசைநிலை நிறைய" (தொல்-செய்.27)

எனவும்,

"இயற்சீர்ப் பாற்படுத்து" (தொல்-செய்.28)

எனவும், இம்மூன்று சூத்திரம் இடையிட்டனவாலெனின், அற்றன்று; கலிப்பாவிற்கு விலக்கப்பட்ட நேரீற்றியற்சீர் அதிகாரம் பற்றி இடைபுகுந்ததல்லது கலித்தளையதிகாரம் விலக்கினவல்ல வென்பது.

(இ-ள்) வெண்சீர் பல தொடர்ந்து ஒரு கலியடியுள் நின்றவழி அவ்வெண்சீருள் ஈற்று நின்ற சீரினமுதல்வந்த நேரசை மற்றை நிரைமுதல் வெண்சீர்வந்து முன்னைய இரண்டுங் கலித்தளையாய வாறுபோலக் கலித்தளையாம் (எ-று).

மேனின்ற அதிகாரத்தால்,

"தளைவகை சிதையாத் தன்மைக்கண்" (340)

என்பது, கூட்டியுரைக்க எனவே, வெண்சீர்ப்பின்னர் நிரை வந்து தட்டால சிறந்ததெனவும் நேர்வந்து தோன்றினும் அவ்

வோசையே பயந்து ஒரு நிகர்த்தாமென்பதூஉங் கூறி அவ்வா ருங்காலும் இறுதிச்சீரின் முதலசையே நிரையியற்றுவதெனவுங் கூறினனும் இது,

"மொழிந்த பொருளோ டொன்ற அவ்வயின்
மொழியா ததனை முட்டின்றி முடித்தல்" (665)

என்னும் உத்திவகை. 'வெண்சீரிறுதி', யென்பது ஏழாவதன் தொகை; என்னை? ஈறெனப்பட்டது சீராகலின், வெண்சீரும் சீற்றுச்சீரெனவே வெண்சீர் பலவுந் தொடர்ந்து நிரை முதல் வந்தழியன்றி இறுதிச்சீரொன்றியது நிரையசையியற் றாகா தென்பதாம். இதனன் நிரை முதல் வெண்சீர் வந்து நிரை தட்குங்கால் இயற்சீர் அடி முதற்கண் வருமென்பதூஉங் கூறப் பட்டதாம். மற்று, ஈறென்றது ஈற்றுச்சீரினையாயின் அச்சீரி னிடையும் இறுதியும் நின்ற அசையினை நிரையசையியற்றென்று கொள்ளுமெனின், நின்றசீரின் ஈற்றசை வருஞ்சீரின் முதலசை யோடு தட்டில் தளையாவதன்றி ஒன்றிடையிட்ட அசையுஞ் சீரும்பற்றித் தளை கொள்வாரின்மையின் அது கடாவன் றென்பது.

இனி வெண்சீரென்பது அஃறிணை யியற்பெயராகலானும் பன்மைவினைகொண்டு பால் அறிய வந்ததன்றாயினும் அதனை 'யானைக்கோடு' என்றாற்போல இறுதி யென்றமையானும் பன் மைப் பாற்பட உணர்க. என்னை? 'பின்னேன் முன்னேன்', என்றவழி, இவர்க்கு முன்னும் பின்னும் வேறு சிலருளரென்பது உணர்த்துமாகலின் என்றார்க்கு, வெண்சீரிறுதி நீடுகொடி குளிறுபுலி வந்தவழி அவற்று முன்னின்ற நேர்பசை நிரைபசை களைக் கலிப்பாவினுள் கலித்தளையாக்குதற்கு 'நிரையசை யியற்று'' என்றான் என்னுமோவெனின், அற்றன்று; வெண் சீர்களின் இறுதியெனவே மூன்றாஞ்சீரும் நான்காஞ்சீரும் வெண் சீராகல் கூறி நிரைமுதல் வெண்சீர் வந்து நிந்து நிரைதட்டல் (372) எனவே, இரண்டாஞ்சீரும் வெண்சீர் வரல்வேண்டுமெனக் கூறி, நிரை தட்டுமெனவே, இயற்சீரானும்ஆசிரியவுரிச்சீரானும் நிரையீறுயினவெல்லாம் முதற்கண் நிற்குமெனவுங் கூறினன் கூறவே, ஆசிரியவுரிச்சீர் இடைநில்லாவெனவும் அங்ஙனம் நிற் பிற் கலியோசைஅழியும் என்பதூஉமாம் இவர் கருத்தென்பது.

அல்லதூஉம் வெண்சீர்க்கு உரியசை யின்மையானும் அற்றன்றென்பது. எனவே, ஈற்றுச்சீர்நிரைமுதலியற்சீர் வரினும் ஆண்டுத் துள்ளலோசை ஒடுங்குமென்பதாம்.

"அரிதாய அறனெய்தி அருளியோர்க்கு அளித்தலும்"
(கலி-11)

என்பது,வெண்சீரிறுதி நிறையொடு தட்ட கலித்தளை

"அடிதாங்கும் அளவின்றி அழலன்ன வெம்மையான்"
(கலி-11)

என்பது, வெண்சீர்கள் பகைத்துவந்து ஈற்றுச்சீரின் முதற்கணின்ற நேரசை நிரையசைபோலக் கலியோசை கொண்டமையின் அது கலித்தளையெனப்பட்டது இனி, வெண்சீர் நான்கும் ஒன்றிவரினுங் கலித்தளையாகுமேனும், அது வெண்பாவடியெனவும்பட்டுத் திரிவுபடுதலின் அதனைக் கட்டளையடியென்னுது இறுதிக்கண் ஒரோவழி ஒருசீர் ஒன்றிவரினும் அதன் முதற்கட் பல வெண்சீர்வந்து பகைத்தலிற் கலியோசையே காட்டுமென்றுனென்பது. அஃதேற்,

"பண்டரங்கம் ஆடுங்காற் பணையெழில் அணை
மென்தோள்"

(கலி-கடவுள் வாழ்த்து.

என்றவழி, இடைநின்ற சீரின் நேரசை நிரையசையியற் என்றுமோவெனின், அது கட்டளையடியென்பது,

"அசையுஞ் சீரும் இசையொடு சேர்த்தி"
(தொல்-செய் 11)

என்பதனுன் அறியப்படும். அல்லாதாரும் அவை செவிகருவியாக உணர்தற்கருமைநோக்கி அடியறியுந்தன்மை அரிதென்று சொல்லுப. இனி, இயற்சீரானன்றித் தளைகொள்ளாமோவென்பார்.

"தன்சீ ருள்வழித் தளைவகை வேண்டா"
(தொல்-செய்-55)

என்பதனுன், வெண்சீர் தளைவிலக்கல்வேண்டி அவ்வெண் சீரினையும் இயற்சீராக இயற்றிக்கொள்ளப்படுமென்றற்கு ஒரு வெண்சீரின் ஈற்றசை நிரையசையியற்று என்றுனெனக் கூறி, ஞாயிறென்னும் இயற்சீரினை மாசெல்வாயெனப் பின்னுமொரு கால் திரிந்ததனையே திரியாமல் நிறுத்தி நிரைமுதல் வெண்சீர்

வந்து நிரைதட்பினுங் கலியாமெனக் காட்டுப. அது ஞாயிறு புலிசெல்வாய் மாசெல்வாய் எனவரும். இவ்வாறே,

"கலித்தளை மருங்கிற் கடியவும் படா"
(தொல்-செய்-22)

என்று ஆசிரியவுரிச்சீர்க்குந் திரிபுகூறுரோவெனின், அது நினைந் திலர்போலுமென்று இகழ்ந்துரைப்பாராவர். மற்று, வெண் சீரிறுதி நிரைவந்தாற் கலித்தளையாமென்பதற்கு ஒத்துவேறுண் டாயினன்றே நேரும் நிறையுப் தட்டதனை நேரும நிரையும் பகைத்த தெனவும் வேண்டுவதெனவும் இங்ஙனம் பொருளுரைப் பார்க்கு எவ்வாற்றானும் அச்சூத்திரம் ஏலாதெனவுந்,

"தன்சீர்வகையினுந் தளைநிலை வகையினும்"
(தொல்-செய்-54)

என்றவழித் தன்சீரானுந் தளைகோடுமாகலானும் அது பொருந்தாதென மறுக்க. இனி' வெண்சீரின் ஈற்றசை ஒன்றேயாகலான் இயற்றென்று ஒருமை கூறினான். இடை நின்ற நேரும் நிரையுங் கோடுநென்னுமையின் இங்ஙனந் திரிந்த நிலைமை வஞ்சியுரிச்சீரெனப்படும் இனி, வெண்சீரென்பது எழுவயாயின ஈற்றசை நிரையென்பது இயற்சீரின் பெயராதல் வேண்டும். அங்ஙனங் கருதினும் அசையென்பதனை ஒருகாற் சொல்லி ஈற்றசை நிரையசையெனல் ஆகாதென்பது. அல்ல தூஉம் வெண்சீரினை இயற்சீராக்கி அவ்வியற்சீரினை வெண் சீராக்குதல் வினையிலுழப்பாகி வரம்பின்றாமென மறுக்க. என் றார்க்குத் 'தன்சீருள்வழித் தளைவகை வேண்டாவெனல்'

"அரிதாய அறனெய்தி அருளியோர்க் களித்தலும்"
(கலி.11)

என்பதூஉங் கலித்தளையன்றாகிச் செல்லுமென்பது கலிப்பா விற்கு ஒன்றுது மருதல் உரிமையுடைய வெண்சீரெனவே வெண்பாவிற்கு ஒன்றுது வருதல் யாண்டுமில்லை, ஒன்றிவரினல்ல தென்பது உடம்படப்பட்டது. (29)

ஆசிரிய வடியில் கட்டளையடியல்லாதவழி வெண்சீர் வருமெனல்

**342. இன்சீர் இயைய வருகுவ தாயின்**
**வெண்சீர் வரையார் ஆசிரிய வடிக்கே.**

இது, கட்டளையடியல்லாதவழிச் சீர்மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) இன்னோசைத்தாகிய துணிவிற்றாகிவரின் ஆசிரிய வடிக்கண் வெண்சீரும் வரப்பெறும் (எ-று).

"இமிழ்கடல் வளைஇய ஈண்டகன் கிடக்கைத்
தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து" (புறம்.19)

எனத் 'தலையாலம் என்றவழி ஆசிரியவடியுள் இன்சீரியைய வெண்சீர் வந்தது. முன்னர் வெண்சீரினை,

"இன்பா நேரடிக் கொருங்கு நிலையில்" (தொல்-செய்.23)

என விலக்கி, ஈண்டு வரையாரென்றமையின் அது கட்டளையடிக்கெண்பதூஉம் இது கட்டளையடிக்கண் றென்பதூஉம் பெற்றாம். 'வருகுவதாயி'னென்று ஒருமை கூறினமையானும் இயைய வென்றதனானும் ஓரடிக்கண் ஒன்றே யாண்டும் வருவதெனக் கொள்க. (30)

ஆசிரியவடியில் கட்டளையடியல்லாதவழி வஞ்சிச்சீரும் மயங்குமெனல்

**343. அந்நிலை மருங்கின் வஞ்சி யுரிச்சீர்**
**ஒன்றுத லுடைய [1]ஓரொரு வழியே.**

இது, வஞ்சியுரிச்சீர் ஆசிரிய அடியுண் மயங்குமாறுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) கட்டளையடில்லாதவழி இன்சீரியைய வருகுவதாயின் வஞ்சியுரிச்சீர்களும் ஓரொருவழி ஆசிரியத்துள் தரப்பெறும் (எ-று).

ஒருவழி யென்னாது 'ஓரொருவழி' யென்றதென்னை யெனின் அறுபது வஞ்சியுரிச்சீருள்ளும் பத்துச்சீரே வரு

1. ஓரோவொரு வழியே என இளம்பூரணரும் ஓரொரு என நச்சினார்க்கினியரும் பாடங்கொள்வர்.

மென்பதூஉம், அவை வருங்காலும் பயின்றுவாரா வென்பதூஉம் அறிவித்தற்கென்பது அவை: மாசேர்சுரம், புலிசேர்சுரம், மாசெல்காடு, புலிசெல்காடு, மாசெல்கடறு, புலிசெல்கடறு, பாம்புசேர்வாய், பாம்புவருவாய், களிறுசேர்வாய், களிறுவருவாய் என்பன. அவற்றுக்குச் செய்யுள்:

"மாரியொடு மலர்ந்த மாத்தாட் கொம்மை" (யா. வி. ப.79)

"குறிஞ்சியொடு கமழுங் குன்ற நாடன்" (யா. வி. ப.80)

என மாசேர்சுரம் புலிசேர்சுரம் என்பன அடிமுதற்கண் வந்தன.

"முன்றிலாடு மஞ்ஞை முதிலை கறிக்கும்"

என புலிசெல்காடு வந்தது.

"அலரிநாறு துவர்வாய் அமர்த்த நோக்கின்" (யா. வி. ப72)

எனப் புலிசெல்காடு வந்தது.

கண்போன் மலர்ந்த வண்டுமெயங்கு தாமரை"

என மாசெல்கடறு வந்தது.

"கரடிவழங்கு குன்று கண்டு போகி"

எனப் புலிசெல்கடறு வந்தது.

"காடுதேரா வுழிதரு கடுங்கண யானை"

எனப் பாம்புசேர்வாய் வந்தது.

"சந்துசிதைய வுழுத செங்குரற் சிறுதினை" (யா. வி. ப. 72)

எனப் பாம்புவருவாய் வந்தது.

"மருந்துநாடாத் திருந்து சிலம்பிற் கைக்கும்"

எனக் களிறுசேர்வாய் வந்தது.

"கடறுகவரா விழிந்து கான்யாறு வரிப்ப"

எனக் களிறுவருவாய் வந்தது பிறவுமன்ன நேர்நிரையாகியும் நேர்புநிரையாகியும் ஈறுமுதல் பெறச் சீர்வந்தது. (31)

அடியெனப்படுவது

## 344. நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே.

இது, முதற்சூத்திரத்துள், "யாத்த சீரே யடியாப் பெனாஅ" (தொல்-செய்.1)

என நிறுத்தமுறையானே சீருணர்த்தி அடியுணர்த்திய வெழுந்தான், அவற்றுள் இது நாற்சீரடியுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) அடியென்று சிறப்பித்துச் சொல்லப்படுவன நாற்சீரடி (எ-று).

எனவே, இருசீரானும், முச்சீரானும், ஐஞ்சீரானும், அறுசீர் முதலியவற்றானும் வருமாயினும் அவை சிறப்பில வென்றவாறும். இருசீரான் வருவதனை என்னை அடியென்னுமா வெனின் அடிக்கெல்லாம் எழுத்துவகையானே மேற்பெயர் கூறும். அவ்வாறே சீர்வகையானுங் கொள்ளப்படுமென்பது. சுருங்கிய எழுத்தான் வருவன குறளடியென்றும், அவற்றின் ஏறிய எழுத்தான் வருவன சிந்தடியென்றும், இடைநிகரன அளவடியென்றும், அவற்றின் நெடியன நெடிலடியென்றும், அவற்றினும் நெடியன கழிநெடிலடியென்றுங் கூறுமாகலான், அவ்வாறே இருசீரடி குறளடியென்றும், முச்சீரடி சிந்தடியென்றும். நாற்சீரடி அளவடியென்றும், ஐஞ்சீரடி நெடிலடியென்றும், அறுசீர் முதலியன கழிநெடிலடியென்றுங் கோடு மென்பது. இவற்றினெல்லாம் நாற்சீரடி சிறந்ததென்றதென்னை யெனின், அளவிற்பட்டமைந்தமையானும் அது பயின்று வருத லானுமென்பது.

"திருமழை தலைஇய விருணிற விசும்பின் (பத்துப்.மலைபடு 1)

எனவும்,

"அறுசுவை யுண்டி யமர்ந்தில்லா ளூட்ட" (நாலடி 1. 1)

எனவும்,

"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்" (கலி 11)

எனவும் மூன்று பாவினும் அளவடி வந்தவாறு. இவற்றது விகற்பமெல்லாம் முன்னர்ச் சொல்லுதும்.

(வி- ரை)

அளவிற்பட்டு அமைந்தமை - மிகுந்தலும் குறைதலுமின்றி அளவாக அமைந்தது. (32)

நாற்சீரடிக்கண்ணே தளையும் தொடையும் கொள்ளப்படுமெனல்

345. அடியுள் ளனவே தளையொடு தொடையே.

இதுவுமது. நாற்சீரடியது சிறப்புணர்த்துதல் நுதலிற்று எதிரது நோக்கியதொரு கருவியெனினும் அமையும்.

(இ-ள்.) முன்னர்க்கூறிய நாற்சீரடியுள் உள்ளனவே தளையுந் தொடையும் (எ-று).

மற்று, மாத்திரையும் எழுத்தும் அசையுஞ் சீரும் அவ்வடியுள்ளன அல்லவோவெனின், அற்றன்று; அவ்வடிக்கணுள்ளன வெல்லாங் கூறுகின்றானல்லன் இதுவென்பது. என்னை? நாந் தளைப்பகுதியாற் கட்டளையடியென உறழ்வதூஉம் அறுநூற் றிருபத்தைந்தடியென வரையறை கூறுவதூஉம் அவ்வளடியோ என்றற்கு 'நாற்சீர்க்கண்ணது தளை' யென்றானென்பது. முன் னுஞ் சீர்வகையான் வகுத்டிம் அடியனறிக் கட்டளையடி யெல்லாந் தளைவகையுடையவென விதந்தோதி வந்ததனானே நாந்தளைகொள்வது நாற்சீரடிக்கணென்பான் 'அடியுள்ளதுதளை' யென்றானென்பது. மற்றையடிக்கட் டளைகொள்ளின் அது வரையறையின்றாமாகலின் ஈண்டு வரைந்தோதினானென்பது.

அது தக்காது, மற்றுப் பொழிப்பும் ஒரூஉவும் போலாத மமானை ஏதலிய தொடையெல்லாம் அடியிரண்டியையத் தொடுக்கல் வேண்டுமன்றே? அவற்றை 'அடியுள்ளனவே தொடையும்' என்றதென்னையெனின், அற்றன்று; நாந் தொடையுறழச் சீர்கொள்வதூஉம் இவ் வளவடிக்கணென்பது கூறினான் ஆண்டுத் தொடை கூறும்வழி வரையாது கூறுமாகலினென்பது. எனவே, கட்டளைப்படுப்பதூஉந் தொடையுறழ்தற்கு இடனாவதூஉம் நேரடியேயெனச் சிறப்பித்தவாறு.

(வி-ரை)

தளையும் தொடையும் கொள்ளுதல் நாற்சீரடிக் கண்ணேயாம் என்பது கருத்து. (53)

நாற்சீரடியைக் கடந்து தளையுந் தொடையும் வாரா எனல்

346. அடியிறந்து வருத லில்லென மொழிப.

இதுவும், கட்டளைப்பாட்டிற்குந் தொடைக்கும் ஆவதொரு கருவி யுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) அறுநூற்றிருபத்தைந்து அடியுள்ளும் ஓரடியின் இறப்துவாரா மேற்கூறிய தளையுந் தொடையும் (எ-று).

என்றது, மேற்கூறிய தளைவகையேயன்றி அடியோடு அக்கூட்டத்துத் தளைகொள்ளுங்காலும் ஓரடிக்கண்ணே வழுதாமற் கோடல் வேண்டுமெனவும் அங்ஙனமே தொடை கொள்ளுங்காலும் வந்த வந்த அடியே வரப்பெறுவதெனவுங் கூறியவாறு.

எனவே, தேமா தேமா தேமா தேமா வென்னும் அடிக்கண் தொடை கொள்ளுங்கால்,

"வாமா னேறி வந்தான் மன்ற"

என முன் வந்த அடியே வரல்வேண்டுமென்பதூஉம் அன்றித்

"தேமாஞ் சோலைத் தீந்தே னுண்ட
காமர் தும்பி யாதல் கண்டது'

என வரில் தளைவழுவாகிப் பதின்மூவாயிரத்தெழு நூற்றெட்டெனப்பட்ட தொடைப்பகுதியுட் படாவென்பதூஉம் பெற்றாம் இனி வெண்பாவினுள் அவை வருமாறு:

"சென்றே யறைப வொருகால் சிறுவரை
நின்றே யறைப பறையினை -நன்றேகாண்" (நாலடி-24.)

எனப் பன்னிரண்டெழுத்தடி ஒன்றினையும் இருகாற் சொல்லிக் கூட்டி எதுகைத்தொடை கொள்ளுங்கால் அடியோடு அடிக் கூட்டத்துத் தளைவகை சிதையாது வந்தமையின் அத்தொடை பதின்மூவாயிரத் தெழுநூற்றெட்டென வரையறைப்பட்ட தொடையுட்பட்டது.

"யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டபின்
றானூட யானுணர்த்தத் தானுணர்ந்தான்-தேனூறு"
(முத்தொள்ளாயிரம், 101)

என்றவழிப் பதினொன்கெழுத்தடியே தொடுத்தமையின் அடி யிறந்து வந்ததன்றாயினுந் தளைவகை ஒன்றாமையான் இது பதின் மூவாயிரத்தெழு நூற்றெட்டினுட் படாதாயிற்று.

"வண்டு வரகு வரகு வரகு"

என்கின்ற அடியினை மீட்டுந் தந்து தொடைகொள்ளுங்கால் வண்டு வரகு வரகு வரகு என்றது நேரொன்றாசிரியத்தளை தட்கு மாதலான் இது வழுவெனப்படுமென்பது. கலிப்பாவிற்கு

அன்னதொரு வரையறை இல்லை. இருவாற்றானும் வருமென்பது என்னை?

'வெண் சீரீற்றசை நிரையசை யியற்றே'

(தொல். செய். 92)

என்றாராகலின் மேலைச் சூத்திரத்தானே தளைவகை சிதையாமல் அறுநூற்றிருபத்தைந்து வகைப்படுவது நாற்சீரடியே என்பதூஉங் கூறி, அந்நாற்சீரடியே நாம் முன்னர் வேண்டுந் தொடை விகற்பத்திற் குரியவென்பதூஉங் கூறினான். இச்சூத்திரத்தானே அத்தொடை கொள்வது தம்மின் வேறாகாத இரண்டடிக்கண்ணென்பதூஉம் அறுநூற்றிருபத்தைந்தடியுள் ஒன்றனை இருகாற் சொல்லித் தொடை கொள்ளப்படுமென்பதூஉம் அங்ஙனந் தொடுக்குங்காலும் அடியோடு அக்கூட்டத்தின் கண்ணுந் தளைவகை சிதையாமல் தொடுக்க வேண்டுமென்பதூஉம் கூறிய வாறாயிற்று. இவற்றானெல்லாம் நாற்சீரடியே சிறப்புடைத்தென்பது பெற்றாம். இன்னும் அதன் சிறப்புடைமையே கூறுகின்றான்.

(வி-ரை)

தளையும் தொடையும் நாற்சீர் கடந்த அடியைக் கடந்து வருதலில்லை என்பது இதன் கருத்தாம். (34)

நாற்சீரடி பலவும் அடுத்து வந்த தொடையே பாட்டெனல்

347. அடியின் சிறப்பே பாட்டெனப் படுமே.

இது, நாற்சீரடியை விசேடித்துக் கூறி, அதனது இடத்தானே பாட்டென்பதொரு முதற்பொருள் தோன்றுமென்பதுணர்த்தியவாறு. 'எனப்படும்' என்றதனான் இவ்வடிகளான் வந்த செய்யுளே சிறப்புடையதுவென்பதூஉஞ் சொல்லியவாறு. மாத்திரை முதலியவற்றை உறுப்புக்களான இத்துணைமாத்திரை கொண்டது செய்யுளென்றானும், இத்துணை அசையுஞ் சீரும் தொடையுங் கொண்டது செய்யுளென்றானும் அளவியல் கூறிய உறுப்புக்களான் வரையறுக்கப்படா. அடியளவே கூறச் செய்யுட் புலப்பாடாமென்பது. 'எனப்படும்' என்றதனான் ஒழிந்த அடிகளானும் அவ்வாறு வருமாயினும் அவை சிறப்பில வென்பது.

(இ-ள்.) 'அடியின் சிறப்பென்பது'—அடி இரண்டும் பலவும் அடுத்து வந்த தொடையே பாட்டு (எ-று.)

தலையிடை கடைச்சங்கத்தாரும் பிற சான்றோரும் நாற்சீரடியான் வரும் ஆசிரியமும் வெண்பாவும் கலியுமே பெரும்பான்மையுஞ் செய்தார்; வஞ்சிப்பாச் சிறுவரவிற்றெனக் கொள்க.

"மாயோன் மார்பி லாரம் போல
மணிவரை யிழிதரு மணிகிள ரருவி
நன்பொன் வரன்று நாட
னன்புபெரி துடைய னின்னே செலினே"

(தொல். 390; 469-பேர்)

என நாற்சீரடியான் ஆசிரியம் வந்தவாறு.

"மலைமிசைத் தோன்று மதியம்போல் யானைத்
தலைமிசைக் கொண்டார் குடையர்" (நாலடி. 2-1)

என அளவடியானே வெண்பா வந்தவாறு.

"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்"

(கலி.11)

எனக் கலிப்பா அளவடியான் வந்தது. பிறவு மன்ன.

(வி-ரை)

அடி வரையறை வைத்தே இன்ன பாவென வரையறைப் படுத்தலின் இவ்வாறு கூறினர். (35)

நாற்சீரடியின் பெயரும் முறையும் தொகையும்

**348. நாலெழுத் தாதி யாக வாறெழுத்**
**தேறிய நிலத்தே குறளடி யென்ப.**

**349. ஏழெழுத் தென்ப சிந்தடிக் களவே**
**யீரெழுத் தேற்ற மல்வழி யான.**

**350. பத்தெழுத் தென்ப நேரடிக் களவே**
**யொத்த நாலெழுத் [1]தொற்றலங் கடையே.**

---

1. தேற்றலங் கடையே என்பது இளம்பூரணர் பாடம்.

351. மூவைந் தெழுத்தே நெடிலடிக் களவே
யீரெழுத்து மிகுதலு மியல்பென மொழிப.

352. மூவா றெழுத்தே கழிநெடிற் களவே
யீரெழுத்து மிகுதலு[1] மிவட்பெறு மென்ப.

இவை ஐந்து சூத்திரமும் உரையியைபுநோக்கி உடனெழுதப்பட்டன. நாற்சீரடி இத்துணைப்பகுதிப்படுமென அவற்றது பெயரும் முறையுந் தொகையு முணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) நாலெழுத்து முதலாக ஆறெழுத்தளவும் வந்த நிலம்மூன்றுங் குறளடி யெனவும், ஏழெழுத்து முதன் மூன்று நிலனுஞ் சிந்தடியெனவும் பத்தெழுத்து முதல் ஐந்துநிலனும் அளவடியெனவும், பதினேந்தெழுத்துமுதன் மூன்றுநிலனும் நெடிலடியெனவும், பதினெட்டெழுத்துமுதல் இருபதெழுத்து வரை மூன்றுநிலனுங் கழிநெடிலடியெனவுஞ் சொல்லுப ஆசிரியர் (எ-று)

குறளடி நிலங்களை வகுத்தொழியாது, ஒழிந்தனவும் வகுத்துரைத்தான்; அவை முதல இடை கடையென மூன்றுகூற்றுள் ஒன்றொன்றனிற் சிறப்பு இழிபுடையனவென்று கொள்ளினுங் கொள்ளலாமென்பது. அவற்றுக்குச் செய்யுள்:

குறளடி
"போந்து போந்து சார்ந்து சார்ந்து
நேர்ந்து நேர்ந்து மூசி நொந்து
வண்டு சூழ விண்டு வீங்கி

சிந்தடி
நீர்வாய் கொண்டு நீண்ட நீல
நீர்வா யூதை வீச வூர்வாய்
மணியேர் நுண்டோ டொல்கி மாலை

நேரடி
நன்மணங் கமழும் பன்னெல் லூர
வளையோர் மெனறூ ளாயரி நெடுங்க
ணிணையீ ரோதி யேந்திள வனமுலை
யிரும்பமன் மலரிடை யெழுந்த மாவி
னறுந்தழை துயல்வருஉஞ் செறிந்தேந் தல்கு

1. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே. இயல்பென மொழிப எனப் பாடம் கொள்வர் இளம் பூரணர்.

நெடிலடி { லணிநடை யசைஇய வரியமை சிலம்பின்
மணிமருள் வணர்குரல் வளரிளம் பிறைநுத
லொளிநிலவு வயங்கிழை யுருவுடை மகளிரொடு

கழிநெடில் { நளிமுழவு முழங்க வணிநிலவு தயங்குநக
ரிருந்தளவு மலரளவு சுரும்புலவு நறுந்தொடை
கலனளவு கலனளவு கலனளவு கலனளவு
பெருமணம் புணர்ந்தனை யென்பவஃ
தொருநீ மறைப்பி னொழிகுவ தன்றே''.

என இதனுட் பதினேழுநிலத்து ஐவகையடியும் முறையானே வந்தவாறு கண்டுகொள்க. குறளடி சிந்தடி அளவடி நெடிலடி கழிநெடிலடியென நாற்சீரடிதானே ஐவகைப்படுமென்று அவற்றது பெயரும் முறையுந் தொகையுங் கூறினான். தொகை பதினேழ்நிலத்து ஐவகையடியென்பது எண்ணிப் பார்க்க. இப்பெயரெல்லாங் காரணப்பெயர். மக்களுள் தீரக் குறியானைக் குறளனென்றும், அவனினெடியானைச் சிந்தனென்றும், ஒப்பமைந்தானை அளவிற்பட்டானென்றும், அவனினெடியானை நெடியானென்றும், அவனினெடியானைக் கழியநெடியானென்றுஞ் சொல்லுப. அவைபோற் கொள்க இப்பெயரென்பது.

(வி-ரை)

ஒன்று ஒன்றனில் சிறப்பு இழிபுடையன என்றது நாண்கெழுத்தடியினும் ஐந்தெழுத்தடி சிறப்பின்று. ஐந்தெழுத்தடியினும் ஆறெழுத்தடி சிறப்பின்று. இவ்வாறே ஆறெழுத்தடியினும் ஐந்தெழுத்தடி சிறப்புடையது. (15)

சீர்கள் ஐந்தெழுத்தின் மிக்கு வாராதெனல்.

## 353. சீர்நிலை தானே யைந்தெழுத் திறவாது.

இது, மேலெழுத்தெண்ணி அடிவகுக்கப்பட்ட ஐவகையடிக்குஞ் சீரும் எழுத்தெண்ணியே வகுகின்றது.

(இ-ள்.) சீரது நிலைமைதான் ஐந்தெழுத்து இறந்து வாராது (எ-று).

பெருமைக்கெல்லை கூறி வரையறுக்கவே சிறுமைக்கெல்லை வரையறைப்படாது ஒன்று முதலாக வருமென்பதாம். சீர்நிலை

தானேயென்பது பிரிநிலையேகாரம். அதனை அசைநிலையிற் பிரித்துக் கூறியவாறு. அதனை அவ்வாறு பிரித்துக்கூறவே அசைசீராயவழி ஐந்தெழுத்திறவாமை அவற்றுக்கில்லையென் பது கொள்ளப்படும் அஃதேல் அவற்றுக்கெல்லை கூறுதே வெனின் அவை மூன்றெழுத்தி னிறவாதென்பது உரையிற் கொள்க. தானென்பதனை இலேசுப்படுத்துக் கொள்ளினும் அமையும். மற்றிவற்றையுஞ் சீர்நிலைபெறுமென்ப வாதலாற் சீரென அடக்காதோவெனின், அடக்கானன்றே, அவை சீர்நிலை யெய்தியவழியும் அசையிரண்டாகாமையினென்பது.

'தளைவகை சிதையாத் தன்மை யான (தொல். செய் 28.)

என்று ஆண்டு வரைந்தமையின் அதனைச் சீர்நிலையென வாளாது பொதுவகையா னோதான். அதுவே கருத்தாயின், அவற்றை நேர்பசை நிரைபசையெனக் கூறியதனானும், அவற்றை

'ஈரசை கொண்டு மூவசை புணர்ந்துஞ்
சீரியைந் திற்றது சீரெனப் படுமே'' (தொல். செய். 12)

என்றதனானும் பயந்ததென்னையென மறுக்க. அல்ல தூஉம் இயற்சீர்ப் பாற்படுத் தியற்றுக' வெனவே இவைதா மியற் சீரல்ல, அவற்றது செய்கை இவற்றானுங் கொள்கவென்ற துணையே ஆண்டுக்கூறியதென்பது. அல்லதூஉந் தேவரும் நரகரும் மக்கட்பாற் படுத்துத் (588) திணைகொள்ளப்படு மென்ற துணையானே பிறப்பானும் பெற்றியானும் மக்களென வழங்கார். அதுபோல அசைநிலைத்தளையுஞ் சீர்நிலைத்தளையும் ஒக்குமென்றதுணையானே அவை அசைச்சீரெனவே, அடை யடுத்தே சொல்லவேண்டுவனற்றையும் வாளாதே சீரெனப் படுவனவற்றையும் ஒருவகையானே சீர்நிலையென மயங்கக் கூறல் (663) குற்றமாமென்பது. மயங்கக்கூறல் குற்றமன் றென்பார் உளராபின் அவர்கருத்தினான் அதுவும் அமையு மென்பது. ஒருசாதியல்லனவற்றைச் சாதியொன் றெனவும் புகலார்; அதுபோலச் சீரிலக்கணமுடைய இயற்சீர் உரிச்சீர்க ளைச் சீரெனக்கூறி அவ்வினத்தவல்லாத அசைச்சீரை இலேசினாற் கொண்டானென்பது.

ஓரெழுத்துச்சீர் நுந்தையென ஒன்றேயாம்; இதனோடு வண்டு என்னும் அசைச்சீர்கூட்ட இரண்டாம்.

ஈரெழுத்துச்சீர் நான்கு; அவை: தேமா ஞாயிறு போதுபூ போரேறு என வரும். மின்னு வரகு என்னும் அசைச்சீர் இரண்டனோடுங் கூட்ட ஆறும்.

மூவெழுத்துச்சீர் பத்து; அவை: புளிமா பாதிரி வலியது மேவுசீர் நன்ஞாணு பூமருது கடியாறு விறகுதீ மாசெல்வாய் நீடுகொடி எனவிவை. அரவு என்னும் உரியசைச்சீரோடுங் கூட்டப் பதினொன்றும்.

நாலெழுத்துச்சீர் ஒன்பது; அவை: கணவிரி காருருமு பெருநாணு உருமுத்தீ மழகளிறு மாவருவாய் புலிசெல்வாய் நாணுவரை உரறுபுலி எனவிவை.

ஐந்தெழுத்துச்சீர் மூன்று; அவை: நரையுருமு புலிவருவாய் விரவுகொடி என வரும். இக்கூறுபட்டன வெல்லாம் கண்டுக் காட்டுவாமாயிற்று.

> எழுத்தள வெஞ்சினுஞ் சீர்நிலை தானே
> குன்றலு மிகுதலு மில்லென மொழிப'
> (தொல். செய். 43)

என வருகின்ற சூத்திரத்தினை நோக்கியென்பது, 'முடவுமருது' என்பதனைக் குற்றுகரங் களைந்து ஐந்தெழுத்தென்று காட்டுவாருமுளர். அஃது உரியசைமயக்கமாகிய ஆசிரியவுரிச்சீராகலின்

> 'இன்பா நேரடிக் கொருங்குநிலை யிலவே'
> (தொல். செய். 23)

என்பதனான் விலக்கப்பட்டதென்பது. இனி, நுந்தையென்பதனை ஈரெழுத்துச் சீரென்பாருமுளர். அங்ஙனங் கூறின்,

> 'இரண்டு தலையிட்ட முதலா கிருபஃது'
> (தொல். எழுத். புணர் 1)

என்னும் எழுத்தோத்தினோடு மாறுகொள்ளுமென்பது. அது வழக்கிற்குக் கூறியது; செய்யுட்காயினவாறு கொள்ளாமோ வெனின், கொள்ளாம்; செய்யுட்கண்ணு மதனை வேறெழுத் தென்று வேண்டுமாகலின். என்னை?

> 'முற்றிய லுகர மொழிசிதைத்துக் கொளாஅல்'
> (தொல். செய். 9)

எனக் குற்றியலுகரமும் வருமொழியைச் சிதைத்துக்கொள்ளப் படாவென்பது கூறினாகலினென்பது.

வஞ்சியும் வரும்சீர் ஆறெழுத்தாகவும் வரும்.

**354. [1]நேர்நிலை வஞ்சிக் காறு மாகும்.**

இஃது, ஒழிந்த வஞ்சிப்பாவினுள் வருஞ்சீர் இத்துணை யெழுத்திறவாதென்கின்றது. நேர்நிலை வஞ்சியென்பது சமநிலை வஞ்சி; அஃது இருசீரான் வருதலிற் சமநிலை வஞ்சியெனப் பட்டது. முச்சீரான் வருவதனை வியநிலைவஞ்சி (338) யென்பவாகலின்.

(இ-ள்) இருசீரடிவஞ்சியுள் ஒருசீர் ஆறெழுத்துமாகப் பெறும் (எ-று.)

இதற்கு, மேனின்ற அதிகாரத்தாற் பெருக்கத்திற்கெல்லை கூறினன்' சுருக்கத்திற்கு வரையறையுடைமையின். அது முன்னர்ச் (353) சொல்லுதும். எனவே, அறுபது வஞ்சியுரிச்சீருள்ளும் ஆறெழுத்தான் வருஞ் சீருங் கட்டளையடியாய் வரப் பெருமென்றவாறு. உம்மை இறந்தது தழீஇயிற்று.

'தன்சீ ரெழுத்தின் சின்மை மூன்றே' (தொல்-செய்-46) என்றதனன் ஒன்றும் இரண்டும் எழுத்தாய் வருதலொழித்து ஒழிந்த எழுத்தான் ஆறெழுத்தளவும் வஞ்சியுரிச்சீர்வருமென் பது கொள்ளபடும. இதனை எச்சவும்மையென்பார் ஏழெழுத்தானும் வஞ்சியுரிச்சீர் வருமென்ப. அங்ஙனங் கொள்ளின் இரண்டுசீராற் பதினன்கெழுத்துளவாகிய செல்லும். செல்லவே,

"குறளடி முதலா வளவடி காறும்
உறழ்நிலை யியுவே வஞ்சிக் கென்ப." (தொல்-செய்-57)

என்பதனெடு மாறுகொள்ளுமென்பது.

'தன்சீ ரெழுத்தின் சின்மை மூன்றே' (தொல்-செய்-46. என்புழிசீஇவற்றிற்கு உதாரணங் காட்டுதும்.

---

1. நச்சினர்க்கினியர் பாடமும் இதுவே. நேர்நிரை எனப் பாடம் கொள்வர் இளம்பூரணர்.

சீர்கள் எழுத்தெல்லையில் வேறுபடினும் ஓசை வேறாகாதெனல்

**355. எழுத்தள வெஞ்சினுஞ் சீர்நிலை தானே
குன்றலும் மிகுதலும் இல்லென மொழிப.**

இது, மேற்கூறிய சீரெல்லாவற்றிற்கும் பொதுவிதி.

(இ-ள்) ஒருசீர் இரண்டுமுதற் பதினெட்டீறாகப் பல நிலைமைப்பட்டுப் பல சீராகிச் செய்யுளுள் வருமாற்றாற் றத்த மெழுத்துக் குறைந்தும் மிகுந்தும் அளவிறப்பினும் அவ்வச் சீரெனப்பட்டுச் செய்யுளுள் ஒத்த ஓசை இருவகையும் ஒரு தன்மையவேயாகச் சுருங்கிற்றும் பெருகிற்றுமில்லை (எ-று).

எனவே அவை எழுத்தெண்ணி அடிவகுக்கு மாற்றான் இருநிலைமையும், இரண்டிறந்த பலநிலைமையும் படுவன படும். அவ்விடத்து எழுத்திற்கல்லது சுருக்கப்பெருக்கமில்லையெனப தூஉங் கூறியவாறாயிற்று. 'தான்' என மிகுத்துச்சொல்லியவத ஞன் அசைச்சீர்க்கும் அவ்வாறே கொள்ளப்படும். 'தளைவகைக் குரிய'வென மேலோதிவந்த சீர் பதினாறும் அசைச்சீரிரண்டு மெனப் பதினெட்டினுள்ளும் இயற்சீர்பத்தினுட் புளிமாவும் வெண்சீர்நான்குமென ஐந்தும் ஒருநிலைமையவேயாம். ஒழிந்தசீர் பதின்மூன்றும் இருநிலைமையெய்தி இருபத்தாறும், ஆகச் சீர் முப்பத்தொன்றாமென்பது. அவற்றுக்குதாரணம்:

நுந்தை, தேமா; ஞாயிறு, பாதிரி, வலியது, கணவிரி போதுபூ, மேவுசீர்; போரேறு, நன்ஞானு; பூமருந்து காருருமு; கடியாறு, பெருநாணு; விறகுதீ உருமுத்தீ; மழகளிறு, நரை யுருமு; எனஒன்பதியற்சீரும் இருநிலைமையாற் பதினெட்டாயின. புளிமா வென்னும் இயற்சீர் ஒருநிலைநமத்தேயாம். அல்லாதார் வரகு என்பதனுட் குற்றுகரங்களைந்து புளிமாவிற்கு இரு நிலைமை காட்டுப; அங்ஙனங் காட்டின் வரகென்பதுபோலப் புளிமாவும் ஓரசையாகவானும புளிமாவென்பதுபோல வரகு என்பது இரண்டசையாகவானும், கோடல்வேண்டும் கொள்ளவே. இச்சூத்திரத்தினோடு மாறுகோளாமென்பது; என்னை?

'எழுத்தளவு எஞ்சினுஞ் சீர்நிலை தானே
குன்றலு மிகுதலு மில்லென மொழிப' (355)

என்ருகலின் என்பது.

நீடுகொடி நாணுத்தளை எனவும், உரறுபுளி விரவுகொடி எனவும் நிரையீற்ருசிரியவுரிச்சீரிரண்டும் இவ்விரண்டாகி இரு நிலைமை யெய்தியவாறு.

இனி, வெண்சீர் நான்கும் நிலைமையவேயாம்.

வண்டு, மின்னு; வரகு, அரவு; என அசைச்சீரிரண்டும் நான்காய் இருநிலைமையவேயாம்.

இவ்வாற்ருன் இவையெல்லாந் தொகுப்ப, இயற்சீர் பத்தொன்பது; ஆசிரியவுரிச்சீர் நான்கும், அசைச்சீர் நான்கும், வெண்சீர் நான்கும் என மூப்பத்தொன்ருயின. என்ருர்க்கு'

மாவருவாய் புலிவருவாய்

என்பவற்றையும்

ஞாயிறுகொல் வலியதுகொல்

எனக் குற்றுகரம்பெய்து இருநிலைமை கொள்ளாமோ வெனிற், கொள்ளாம். அவை,

'எல்லா இறுதியு உகரம் நிறையும்
(தொல்-எழுத்-குற்று-3)

என்பதனுன் முற்றுகரமெயாமென்பது. இனி, மூதற்கண்நின்ற குற்றுகரமுங் கொண்டு இருநிலைமை கொள்ளாம். என்னை? நுந்தையென்பது ஈரசையாகலானும் அதனை நீநுந்தையென வேருேர் சொற்பெய்து வெண்சீரெனக் காட்டின், அது 'வந்து நின்றது என்றதுபோலச் சீர்வகையான் வேருேர் சொல்லா மாகவே அது முற்றுகரம் ஆகலானுமென விடுக்க. என்ருர்க்குப் போதுபூ என்பதூஉம் இருநிலைமைத்து ஆகாதாம் பிறவெனின், அற்றன்று;

'சேற்றுக்கால், யாட்டுத்தான், வட்டுப்போர்'

எனப் பலவும் வருமாகலின் அஃதுஇ நிலைமைத்தேயாமென்பது இனி, வஞ்சியுரிச்சீர்க்கும் இடைநின்ற குற்றுகரங்களை வன்ருெட

ராக வருவித்துக்கொள்க. இனிச், சீரிறுதிக் குற்றுகரங்கள் நிறையாது நிற்றலும் உடையவென்பது.

'சீரியைந்து இற்றது சீரெனப் படுமே'

(தொல். செய். 12.)

என்றவழிக் கூறியவாற்று னறிக.

இனிச் சூத்திரம் வரையாது கூறினமையின் அறுபது வஞ்சியுரிச்சீருள்ளும் இருபத்துநான்குசீர் இருநிலைமையாகவும், இருபத்தெட்டுச்சீர் நான்குநிலைமையாகவும், எட்டுச்சீர் எட்டு நிலைமையாகவுங் கொள்ளப்படும். அவற்றுள்,

இரு நிலைமைப்படுவன நேரீற்றுச் சீரெட்டு, நிரையீற்றுச்சீரெட்டு நேர்பீற்றுச்சீர்நான்கு, நிரைபீற்றுச்சீர்நான்கு என இருபத்துநான்கு வஞ்சியுரிச்சீராம். அவை, மாபோகுவாய், மாவழங்குவாய் பாம்புசேர்வாய், பாம்புவருவாய், புலிபோகுவாய் புலிவருவாய், களிறுசேர்வாய், களிறுவருவாய், எனவும்; மாசேர்சுரம், மாவருசுரம், மாபோகுசுரம், மாவழங்குசுரம்; புலிசேர்சுரம், புலிவருசுரம், புலிபோகுசுரம், புலிவழங்குசுரம் எனவும்; மாசேர் காடு, மாவருகாடு புலிசேர்காடு, புலிவருகாடு எனவும்; மாசேர் கடறு, மாவருகடறு, புலிசேர்கடறு புலிவருகடறு எனவும் வரும்.

இவ் விருபத்து நான்கும் இருநிலைமையால் நாற்பத்தெட்டாமென்பது இனி.

நான்கு நிலைமைப்படுஞ்சீர் இருபத்தெட்டு வருமாறு: பாம்புபோகுவாய், பாம்புவழங்குவாய், களிறுபோகுவாய் களிறுவழங்குவாய், எனவும்; பாம்புசேர்சுரம், பாம்புவருசுரம், பாம்புபோகுசுரம், பாம்புவழங்குசுரம் எனவும், களிறுசேர்சுரம், களிறுவருசுரம் களிறுபோகுசுரம், களிறுவழங்குசுரம் எனவும்; மாபோகுகாடு, மாவழங்குகாடு, புலிபோகுகாடு, புலிவழங்குகாடு எனவும்; பாம்புசேர்காடு, பாம்புவருகாடு, களிறுசேர்காடு களிறுவருகாடு எனவும்; மாபோகுகடறு, மாவழங்குகடறு, புலிபோகுகடறு, புலிவழங்குகடறு எனவும்; பாம்புசேர்கடறு' பாம்பு வருகடறு, களிறுசேர்கடறு, களிறுவருகடறு எனவும் வரும். இவற்றைப்

'பாம்புபோகுவாய், பாம்புமன்னுவாய்,
மின்னுப்போகுவாய்,' மின்னுக்கோலுவாய்'

என ஒன்று நான்காக வாய்பாடுகொடுத்து ஒட்டியுணர்க.

இவற்றுள், உரியசை முதற்கணின்ற நிரையீற்று நான்கினை யும் ஒன்று நான்குசெய்யுங்கால்.

'பாம்புசேர்சுரம், பாம்புசேர்வது,
மின்னுச்சேர்சுரம், மின்னுச்சேர்வது'

என்றாற்போல வெவ்வேறு வாய்பாடு கொடுத்துரைக்க. இவை யிருபத்தெட்டும் விரிப்ப நூற்றிருபத்திரண்டு வஞ்சியுரிச்சீராம் இனி,

எட்டுநிலைமைப்படுஞ்சீர் எட்டுமாவன, பாம்புபோகுகாடு, பாம்புவழங்குகாடு, களிறுபோகுகாடு களிறுவழங்குகாடு எனவும் பாம்புபோகுகடறு பாம்புவழங்குகடறு, களிறுபோகுகடறு களிறுவழங்குகடறு எனவும் வரும்.

இவை இம்மூன்று உரியசையுடைமையின் முதற்கணின்ற உரியசையிரண்டும் நான்குநிலைமை எய்தும். பின்னர் நின்ற உரியசை யொன்றனை இருநிலைமையாக்கி அவற்றோடு முன்னர் நின்ற நான்கினையும் வேறுவேறு கூட்ட எட்டாமென்பது. உதாரணம்; பாம்புபோகுகாடு, மின்னுப்போகுகாடு, பாம்பு மன்னுகாடு, மின்னுமன்னுகாடு, பாம்புபோகுகாவு, மின்னு போகுகாவு, பாம்புமன்னுகாவு, மின்னுமன்னுகாவு எனவரும் இவ்வாறே ஒழிந்தசீர் ஏழனையும் வெவ்வேறு வாய்பாடு கொடுத் துரைக்க அறுபத்துநான்கு வஞ்சியுரிச்சீராம்.

இவ்வாற்றான் இருநிலைமையும் நான்கு நிலைமையும் எட்டு நிலைமையும்பட்ட சீரெல்லாந் தொகுப்ப வஞ்சியுரிச்சீர் இரு நூற்றிருபத்து நான்கெனப்படும். இவற்றுள் ஏழெழுத்தும் எட் டெழுத்தும் ஒன்பதெழுத்தும் பெற்றசீர் இருபத்து மூன்றுள. அவை நேர்நிலை வஞ்சிக்காகாவென்பது,

'உறழ்நிலை யிலவே வஞ்சிக்கு' (தொல்-செய்-57)

என்புழிச் சொல்லுதும்.

இனி, ஆசிரியவுரிச்சீர் நான்கும் ஒன்று நான்கு நிலைமைப் படுமென்பதூஉம் சண்டடங்கும். நீடுகொடி குளிறுபுலி என்பன இருநிலைமைப்படும். அது மேற்கூறினும். எவ்

ழுரீக்கு அவற்றை இருநிலைமை யென்பதென்னை? நீடுகொடி நீடுவது எனவும் நாணுத்தளை நாணுவது எனவும் ஒன்று நான்காம் பிறவெனின், அற்றன்று; நீடுவது (213) என்பதனை அலகு வைக்குங்கால்,

'அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி' (தொல்.செய்.11) என்பதனன் அவ்வசீராய் இசையாவாகலிற் பூமருது (251) என்னுஞ் சீராக வைக்கப்படுமாகலானென்பது.

எழுத்தெண்ணுங்கால் ஒற்றும் ஆய்தமும் குற்றுகரமும் எண்ணப்படா வெனல்.

**356. உயிரி லெழுத்தும் எண்ணப் படாஅ**
**உயிரித்திற மியக்கம் இன்மை யான.**

இது, மேல் எழுத்தெண்ணிச் சீர்வகுத்த முறையானே ஒற்றும் ஆய்தமுங் குற்றுகரமும்ஒருங்கெண்ணப்படுதலெய்தினவற்றை விலக்கினவாறு.

(இ - ள்.) உயிரில் எழுத்தும் எண்ணப்படாஅ-தத்தம் ஓசை இனிது வியங்கத் தத்தந் தன்மையான் ஒலித்தல் தொழிலில்லாத எழுத்துக்கள் ஈண்டெண்ணப்படா; உயிர்த்திறம் இயக்கம் இன்மையான - அங்ஙனம் எண்ணப்படாதவும் எழுத்தெனப்படுதலிற் சிறிது நாப்புடை பெயருந்துணையான் ஒலித்தலும் மொழிசார்ந்து ஒலித்தலும் உடையவன்றே? அங்ஙனம் ஒருவாற்றான் உயிர்க்குந் திறமுடையவாயினும் அவ்வுயிர்க்குத் திறம் ஈண்டுச் செய்யுட்பாற் படுங்கால் உபகாரப்பட இயங்குமாறு இலவாகலின் எண்ணப்படா (எ - று).

மேற் சீர்தளை இருநிலைமைப்படுத்த அதிகாரத்தான் ஒற்றுங் குற்றுகரமுமே ஈண்டு விலக்கினனென்பது இச்சூத்திரம் வலித்ததாயிற்று;

'ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம்' (தொல்-செய்.8) எனவும் மேற்கூறினனதலினென்பது.

'பேர்ந்து சென்று சார்ந்து சார்ந்து'

என ஒற்றுங் குற்றுகரமும் ஒழித்தெண்ணப்பட்டமையினால் எழுத்தடியாயிற்று பிறவும் அன்ன.

(வி-ரை)

உயிரிலெழுத்து,ஒற்றெழுத்து,உம்மையால் குற்றியலிகரமும் குற்றியலுகரமும் எண்ணப்படா என்பர் இளம்பூரணர். ஒற்றும் ஆய்தமும் குற்றுகரமும் என்பர் நச்சினார்க்கினியர். கட்டளை அடிக்கு எழுத்து எண்ணுங்கால் இம் மூவகை எழுத்துக்களையும் விடுத்து எண்ணப்பட வேண்டும். என்பது கருத்து. பின்னுள்ளோர் கொண்ட கட்டளைக்கலித்துறை சந்தம் தாண்டகங் கட்டும் இவ்வாறு எழுத்து எண்ணுதல் வேண்டும் என்பர் நச்சினார்க்கினியர். (16)

சமநிலை வஞ்சியடி குறள்டியான் வருமெனல்

**357. வஞ்சி யடியே யிருசீர்த் தாகும்.**

இது,

'நேர்நிலை வஞ்சிக் காறு மாகும்' (தொல்-செய்.42)

எனவும்,

'தன்சீ ரெழுத்தின் சின்மை மூன்றே' (தொல்-செய்-46)

எனவும்,

எழுத்தெண்ணி வரையறுக்கப்பட்ட சீரிரண்டு கொண்டது வஞ்சியடி யென்பது உணர்த்துதல் நுதலிற்று:

(இ - ள்) குறளடியே வரையறையுடைய வஞ்சியடி யெனப் படுவது (எ - று.)

ஏகாரம் பிரிநிலை என்னை? சிறப்புடை வஞ்சியடியைப் பிரித்து வாங்கிக் கொண்டமையின். எனவே, மூச்சீரான் வரும் வஞ்சியடியும் உள; அவை கட்டளையடியல்ல என்றுணயிற்று. இங்ஙனம் கூறவே, வஞ்சியடியும் ஒருவாற்றான் உறழந்துகொள்ள வழிகாட்டியவாறு. இவ்வாறு கூறுக்கால் மூன்று பாவிற்குங்கூறினன் இதற்குக்கூறியதிலனெனக் குன்றக் கூற (663) லெனனுங் குற்றமாமென்பது, இதனை மேல்,

"குறளடி முதலா அளவடி காறும்
உறழ்நிலை யிலவே வஞ்சிக் கென்ப" (தொல்-செய்-57)

என உறழ்நிலை ஒருவாற்ருனே கூறுமென்பது. அச்சூத்திரத்தான் முச்சீரும் உறழ்பவென்று கொள்பவெனின் அஃதே கருத்தாயின் இருசீரும் முச்சீரும் வஞ்சிக்கென்பவென்று உடனேதுவான்மன் ஆசிரியனென மறுக்க.

(வி–ரை)

கட்டளை அடி அல்ல – எழுத் தெண்ணி வரும் அடியல்ல.

சமநிலை வஞ்சி மூன்றெழுத்துச் சிறுமை பெறுமெனல்

358. தன்சீ ரெழுத்தின் [1]சின்மை மூன்றே.

இது, மேற்கூறிய வஞ்சியடிக்கண்வரும் இருசீர்க்கும், பெருமைக் கெல்லை.

'நேர்நிலை வஞ்சிக் காறு மாகும்' (தொல்-செய்.42)
என்றி கூறினன்; ஈண்டு அவை மூன்றெழுத்திற் சுருங்காவெனச் சுருக்கத்திற் கெல்லையுணர்த்துதல் நுதலிற்று.

(இ – ள்.) வஞ்சியடிச்சீர் மூன்றெழுத்துச் சிறுமை பெறும் (எ – று.)

சிறுமைக்கெல்லை வஞ்சிச்சீர்க்கல்லது இன்மையின் இதனை,
'வஞ்சி யடியே யிருசீர்த் தாகும்' (தொல்–செய்–45)
என்றதன்பின் வைத்தானென்பது. இது முச்சீர்க்குரித் தன்மைக்கானும் மூன்றெழுத்தி னிழிந்துவரும் வஞ்சியுரிச்சீர் பெரும்பான்மையும் முச்சீரடிக்கு உரிமையானும் இதன்பின்,
'முச்சீ ரானும் வருமிட னுடைத்து (தொல்–செய்––47)
என்றுனென்பது.

"கொன்றுகோடுநீடு கொலைக்களிறுகடாம்"
என்புழி, இருசீரடிமுதற்கண் மூவெழுத்தான் வஞ்சியுரிச்சீர் வந்தது. பிறவும் அன்ன, 'நுந்தைகாடு' என ஈழுரெத்தானும் வஞ்சியுரிச்சீர் வந்தவாறு.

---

1. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே சிறுமை எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

(வி-ரை)

சின்னம் - சிறுமை. எனவே மூன்றெழுத்தும், நான்கெழுத்தும், ஐந்தெழுத்தும், ஆறெழுத்தும் வஞ்சியுரிச்சீர் எழுத்தாம். என விளக்கம் காண்பர் இளம்பூரணர். ஏகாரத் தானே மேல் வருகின்ற வியநிலை வஞ்சிக்காயின் மூவெழுத்தினிழந்து ஈரெழுத்தானும் வருமென்று கொள்க. நுந்தை காடு என வரும் என்பர் நச்சினார்க்கினியர். (17)

வியநிலை வஞ்சி முச்சீரானும் வரப்பெறுமெனல்

## 359. முச்சீ ரானும் வருமிட னுடைத்தே.

இஃது ஒழிந்த வியநிலைவஞ்சி கூறுகின்றது.

(இ-ள்.) வஞ்சியடி முச்சீரானும் வரப்பெறும் (எ-று.)

'இடனுடைத்து' என்றதனான் இஃது உறழும் அடிக்கண்ணதன்று என்றவாறு. மற்று இருசீரடி வஞ்சிக்கும் இத்துணையென அடிவிரியுமாறு கூறியதிலனாகலின் இதற்கே வரையறையின்றென்றது என்னையெனின், இருசீரடிக்காயின் ஒருவாற்றான் உறழ்ச்சிகூறி வரையறுப்பதோராறு கூறினான்; இதற்கு அன்னதூஉம் இன்றென்பது மற்று உறழுமடி இல்வழி வஞ்சியடி இருசீர்ந்தாகப்பெறுதோவெனின், அதற்கன்றே முச்சீரானும், வருமென்று உம்மைகூறி இருசீரடியுந் தழீஇக் கொண்டு 'இடனுடைத்து' என வேறுபடுப்பானாயிற்றென்பது. இவ்விரண்டனையும் வஞ்சியடியென வரையாது கூறவே, அவற்றான் வேறுவேறு வருதலும் அவை மயங்கிவருதலுமுடைந்து வஞ்சிப்பாட்டென்பதும் பெறுதும். இக்கருத்தானே அவற்றைக் குறளடிவஞ்சியெனவுஞ் சிந்தடிவஞ்சியெனவும் மயக்கடிவஞ்சியெனவுஞ் சொல்லுப. சிந்தடியான் வருதல் சிறுபான்மையெனக் கொள்க.

(வி-ரை)

தனித்து இரு சீரடியான் வருவதைக் குறளடி வஞ்சியென்பர். தனித்து முச் சீரான் வருதலைச் சிந்தடி வஞ்சியென்பர். இவ்விரண்டும் மயங்கி வருதலை மயக்கடி வஞ்சியடி என்பர். பின்வந்த காரிகை ஆசிரியர் மேற்கூறியவற்றுள் முன்னிரண்டனையுமே கொண்டனர்.

வஞ்சியடியுள் அசை கூனாகி வருதல்

**360. அசை கூனாகும் அவ்வயி னான.**

இதுவும், அதற்கெய்தியதோர் விதி.

(இ-ள்.) மேற்கூறிய வஞ்சியடி இரண்டன்கணும் நான்கசையுங் கூனாகி வரப்பெறும் (எ-று.)

எனவே, அடியெனப்பட்ட இருசீர்க்கும் முச்சீர்க்கும் சைகூட்டிக்கொண்டு சொல்லப்படாவென்றவாறு. அவை

"வாள், வலந்தர மறுப்பட்டன
செவ்வானத்து வனப்புப்போன்றன" (புறம்

எனவும்,

"அடி, அதர்சேறலின் அகம்சிவந்தன"

எனவும்,

"வண்டு, மலர்சேர்ந்து வரிபாடின"

எனவும்.

"களிறு, கதவெறியாச் சிவந்துராய்
நுதிமழுங்கிய வெண்கோட்டான்
உயிருண்ணுங் கூற்றுப்போன்றன"

எனவும் முறையே நான்கசையுங் கூனாயின.

இனி, இடையும் இறுதியுங் கூனா மென்பாருமுளர். அது வஞ்சித்தூக்கு இரண்டுகொள்ளவருமாயின் அமையுமென்பது.

என்றார்க்கு,

'வாள் வலந்தர'

என்பதனை ஒரு சீராகக் கோடுமெனின்

'யாத்தசீர்'

என்றதனுன் வலந்தருதல் வாள்மேற்சென்று, வருகின்ற வயனிலை நின்று வற்றுமென்பது

(வி-ரை)

நான்கசையும் நேர் நிரை நேர்பு நிரைபு என்பன இடையும் இறுதியும் கூனும் என்பார் யாப்பருங்கல ஆசிரியர் உள்ளிட் டோர்.

கூன்-ஓர் அசையோ ஒரு சீரோ ஓர் அடியோ தனித்துவரின் அது கூனாம். வருகின்ற பயனிலை-மறுப்பட்டன என்பது

நேரடிக்கண் சீர் கூனாகி வருமெனல்

**361. சீர்கூ னாதல் நேரடிக் குரித்தே.**

இஃது, எய்தாத தெய்துவித்தது.

(இ-ள்) தளைவகையானுஞ் சீர்வகையானும் நின்ற நேரடிக் காயின் அசை கூனாகாது சீர்கூனாகும் (எ-று.)

"அவரே, கேடில் விழுப்பொருள் தருமார் பாசிலை
வாடா வள்ளியங் காடிறந் தோரே" (குறுந்-216)

எனவும்,

'உதுக்காண், சுரந்தானா வண்கைச் சுவர்ணமாப் பூதன்"

எனவும்,

'அவனுந்தான், ஏனல் இதணத்து அகிற்புகை யுண்டியங்கும்' (கலி-39)

எனவும் இவை மூன்றுபாவினும் அளவடிக்கட் சீர் கூனாயின வாறு என்றார்க்கு, நேர்பசை நிரைபசைகளையுஞ் சீர்நிலை பெறு மென்றானாகலின் அவற்றையுஞ்,

'சீர் கூனாதல் நேரடிக் குரித்தே'

என்றதனானே கொள்வலெனின், அசைச்சீரினை வாளாது சீரென்றானென்பது,

'சீர்நிலை தானே யைந்தெழுத் திறவாது (தொல்.செய்.41)

என்றவழிக் கூறியவதனான் அறிக. அசைச்சீரினை வாளாது சீரென்றமைக்கு மேலைச்சூத்திரமும் இச்சூத்திரமுந் தாமே கரியாயின வென்பது, என்றார்க்கு, இவற்றையும் முதற்கண்ணே காட்டியதென்னை? சூத்திரத்துள் அவ்வாறு வைத்துரைத்த

தில்லையாமெலனின், ஏற்புழிக் கோடலென்பதனுன் 'முதற்கணின்று என்பது கொள்ளப்படும். இக்கருத்தானே வஞ்சிப்பாவிற்கும் அவ்வாறே கொள்க.

(வி–ரை)

நேரடிக்கு-நாற்சீரடிக்கு மூன்று பாவினும்-ஆசிரியம், வெண்பா, கலிப்பா ஆகிய மூன்று பாவினும் இவ்வாறு சீர் கூறுதல் அவ்வப்பாட்டின் முதற்கண் என்பது ஏற்புழிக் கோடல் என்பதனுல் ஆம்.

ஐவகையடிகளின் விரி இவ்வளவெனல்.

**362. ஐவகை யடியும் யுரிக்குங் காலை**
**மெய்வகை யமைந்த பதினேழ் [1]நியித்த**
**எழுபது [2]வகைமையின் வழுவில வாகி**
**யறுநூற் றிருபத் தைந்தா கும்மே.**

இது, முன்னர்ச் சிறப்புடைத்தெனவேண்டிய நாற்சீரடியினைக் குறளடி சிந்தடி அளவடி நெடிலடி கழிநெடிலடி யென வகுத்தமையாமாறு கூறினுன் (தொல்-செய்-36,37,38,39,40).

இனி அறுநூற்றிருபத்தைந்தென அவைபட்ட விகற்பமுங் கூறியவாறு.

(இ–ள்) மேற்கூறிய ஐவகையடியினையும் விரிக்குங்காலைப் பொருள்வகையமைந்த பதினேழ்நிலத்து எழுபதுவகைக் குற்ற நீங்கி அறுநூற்றிருபத்தைந்தாம் (எ - று).

எனவே, பதினேழ்நிலத்தேறினும், எழுபதுவகைக்குற்றம் விரவச்செயினும் அறுநூற்றிருபத்தைந்தெனப்படாதென்பதாம். பதினேழ்நிலனும் ஆசிரியம்பெறுமென்பதூஉம் வெண்பாவுங் கலிப்பாவும் ஒரோவொன்று எட்டுநிலம் பெறுமென்பதூஉம் முன்னர்ச் சொல்லுதும். அவை மூன்றுந் தொகுப்ப முப்பத்துமூன்று நிலனுயின.

---

1. நச்சினுர்க்கினியர் பாடமும் இதுவே, நிலத்தும் எனப் பாடம் கொள்வர் இளம்பூரணர்.
2. வகையின் எனப் பாடங்கொள்வர் இளம்பூரணரும் நச்சினுர்க்கினியரும்.

வெள்ளை நிலம் பத்தென்பார்க்கு முப்பத்தைந்து நிலனும். எழுபது கூற்று வழுவெனப்பட்டன தளைவழு. தளைவழுவாவன ஆசிரியநிலம் பதினேழனுள் வெண்டளையுங் கலித்தளையுமாகி வேற்றுத்தளை தட்ப முப்பத்துநான்கு தளை வழுவாம். வெள்ளை நிலம் பத்தினும் ஆசிரியத்தளை பத்துங் கலித்தளை பத்துந் தட்ப இருபது தளைவழுவாம். இனிக் கலிநில மெட்டனுள் ஆசிரியத் தளை எட்டுங் கலித்தளை எட்டுந் தட்பப் பதினாறு தளை வழுவாம். இவையெல்லாந் தொகுப்ப முப்பத்தைந்து நிலத்தும் ஒன் றிரண்டுசெய்து எழுபது தளைவழுவாயினவாறு. இது வெள்ளை நிலம் பத்தென்பாருரை.

அது பொருந்தாது. என்னை? ஆசிரியத்து நாலெழுத் தடியுள் இரண்டு தளைவழுவுங் காட்டுகவெனின் அவர்க்கு அவை காட்டலரிய குறிப்பசைசெய்து காட்டின் அது கூறப்பட்ட உறுப்பினுள் இன்றென்றவாறு. எடுத்தோதிய எழுத்து முதல் உறுப்பினன் வந்த அடிக்கண்ணே காட்டாதொழிதலின் அது நூன்மாறுகோளாம்; அல்லதூஉம். அவ்வாறு தளைகொள்ளின் முழுவதுங் குறிப்பசையானே வரும் அடியும், ஓரெழுத்தடிமுதன் மூன்றுநிலனுங் கொள்ளல்வேண்டும். கொள்ளவே, நிலம் இரு பத்தொன்றாகலுங், காட்டுந் தளைவழுத் தொண்ணூற்று நான் காகலும்பெற்று,

ஞாயிறு வரகுவண்டு வண்டு வண்டு

என்பது கலித்தளை தட்ப ஆசிரியவடி அன்றாவான் செல்லுமென வுங் கூறி மறுக்க.

இனி, ஆசிரியத்துட் கலித்தளை தட்குங்கால் அவர் தாந்தளை வேண்டுமாற்றான் வெண்சீர்நிற்ப இறுதி நிரை வரவேண்டுமாக லானுங், கட்டளையடிக்கண் வெண்சீர் வருமென்றிலனாகலானும்.

'வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே' (தொல்.செய்.29)

என்பதனான் இயற்சீரை வெண்சீராக்கிக்கொள்ளினும் அச் சூத்திரத்துக்கு அவ்வாறு பொருளுரைப்பிற் படுங் குற்றம் ஆண்டுக் கூறினமாகலானும் அது நிரம்பாதென்பது. அற்றன் றியும், ஓரெழுத்து முதலிய நிலங்கள் ஓரோநிலத்து இரண்டும் மூன்றுந் தளைவழுக் காட்டலாமாகலின் எழுபது வகையின வழு வெனலுமாகாது என்பது. இனி,

'அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய' (தொல். செய். 58)

என்னும் எடுத்தோத்துக் கிடப்ப இலேசினான் இரண்டுநிலனேற்றி வெள்ளை நிலம் பத்தெனலுமாகாது. என்னை?

'அளவடி மிகுதி யுளப்படத் தோன்றி
யிருநெடி லடியுங் கலியிற் குரிய' (தொல். செய். 59)

என ஓதினான், இதனினுஞ் சிறந்த வெண்பாவிற்கும் அங்ஙனம் ஓதுவான்மன் ஆசிரியன் அதுவே கருத்தாயினென்பது. அல்லதூஉங் கலிப்பா வினுள்வெண்சீரொன்றினுங் கலியோசை பிறக்குமென்று பதினேழெழுத்தடியான் வந்த வெண்பாவடியினைத் தாமுங் கொளபவாகலானும் அது கூறி நிரம்பாதென்பது.

மற்றென்னை தளைகொள்ளுமாறெனின், ஆசிரியத்துள் இயற்சீர் பத்தொன்பதும், ஆசிரியவுச்சீர் நான்கும், அசைச்சீர் நான்குமென இருபத்தேழாகி,

'எழுத்தள வெஞ்சினுஞ் சீர்நிலை தானே-குன்றலு மிகுதலும்' (தொல் செய். 43)

இன்றி வரும்.

வெண்பாவினுள் ஆசிரியவுரிச்சீர் நான்கும், அசைச்சீர் நான்கும் ஒழித்து ஒழிந்தசீர் இருபத்து மூன்றும் வெண்சீர் நான்கினோடுந் தலைப்பெய்ய அவையும் அவ்வாறே இருபத்தேழாம்.

கலிப்பாவிற்கு நேரீற்றியற்சீர் மூன்றுமொழித்து ஒழிந்த இயற்சீர் பதினாறும், ஆசிரியவுரிச்சீர் நான்கும், வெண்சீர் நான்கும் என இருபத்துநான்காம். இவை மூன்று பகுதியுந் தொகுப்ப எழுபத்தெட்டாயின. அவற்றுள், ஆசிரியத்துள் வந்த அசைச்சீர் நான்கினையும் வெண்பாவினுள் வந்த அசைச்சீர் நான்கினையும் ஈண்டுத் தளைகொள்ளுங்கால், இயற்சீர்ப்பாற்படுத்து அடக்குகவென்று ஆண்டுக் (340) கூறினமையின். ஈண்டு அவற்றை இயற்சீர்ப்பாற் படுத்தடக்கின் எழுபதாகக் கொள்ளப்படும் அங்ஙனங் கொள்ளப்பட்ட சீர் ஒன்றொன்றனோடு தட்குங்கால் அவ்வெழுபதுவகையானு மன்றித் தட்குமாறில்லை அதுநோக்கி 'எழுபதுவகைமையின் வழுவிலவாகி யென்றானென்பது. அவை தட்குமாறு முன்னர்ச் (340) சொல்லுதும்.

அங்ஙனந் தளைசிதையா அடி அறுநூற்றிருபத்தைந்தும் மூன்று பாவிற்கும் உரிய பகுதியவாம். யாங்ஙனம்? ஆசிரியவடி முந்நூற்றிருபத்து நான்கும், வெண்பாவடி நூற்றெண்பத்தொன்றும் கலியடி நூற்றிருபதுமென அறுநூற்றிருபத்தைந்தாம். 'மெய்வகை யமைந்த' என்றதனன் நான்குசீருள்ளும் உறழ்கின்ற சீரினை அடிமுதற்கண்ணே வெளிப்படவைத்து அச்சீரின் அடியாக்கி உறழப்படுமென்பது கொள்க. அல்லாக்கால் இடையும் இறுதியும் வைத்துறழின் முதற்கணின்றதோர் சீர் இரண்டாம் அடியாகியும் அவ்வடிமயங்குமாகலான் அது மயக்கக் கூறலென்னுங் குற்றமாமென மறுக்க.

"எள்ளற்ற மூந்நூற் றிருபத்து நான்கு அகவல்
வெள்ளைக்கு நூற்றெண்பத் தொன்றுகுந்—துள்ளல்
நவையறு நூற்றிருப தாம்அடி நாடின்
நவையறு நூற்றிருபத் தைந்து."

ஆசிரியத்துள் வருமெனப்பட்ட சீர் இருபத்தேழும் ஒரோவொன்று பன்னிரண்டாயுறழ அகவலடி முந்நூற்றிருபத்து நான்காம். இது பயனில் வெளி.

"நால்வேறு உரியசைச்சீர் நால்வேறு அகவற்சீர்
பால்வேறு பட்டியற்சீர் பத்தொன்ப தாக
விருபஃதேழ் சீரகவற்kசீரிரண்டாதி
யிருப தெழுத்தளவு மேற்று"

"ஆசிரியப் பாவினுள் கைந்தாறே ழெண்டொன்ப
தாதி நிலமாறு மைஞ்சீரா னீறு
வரையாதொன் றேறிற்றே வந்து"

ஓரெழுத்துச்சீரும் ஓரெழுத்து அசைச்சீருஞ் சுருக்கத்திற் கெல்லையாகிய சீராகலான் அவை சுருக்கத்திற்கு எல்லையாகிய நாலெழுத்தடி முதற் பதினைந்தெழுத்தடியளவும் உயரும். அவை:

'நுந்தை வண்டு வண்டு வண்டு'

எனவும்,

'நுந்தை காருரும நனிமுழவு நனிமுழவு'

எனவும், ஓரெழுத்துத் தேமாவடி பன்னிரண்டற்கும் முதலடியும் முடிந்தவடியுங் கண்டுகொள்க.

'வண்டு வண்டு வண்டு வண்டு'

எனவும், வண்டு காருருமு நனிமுழவு நனிமுழவு எனவும் இவை வண்டு முதலும் முடிவுங் காட்டிய அடி.

இனி, நேரீற்று ஈரெழுத்துச்சீர் ஒன்றும் ஐந்தெழுத்தடி முதலாகவும், பதினாறெழுத்தடி யிறுதியாகவும் வரும். அது:

தேமா, வண்டு, வண்டு, வண்டு, எனவும்
தேமா, காருருமு, நனிமுழவு, நனிமுழவு

எனவும் வரும். மின்னு வரகு என்னும் ஈரெழுத்தசைச் சீரிரண்டும் அவ்வாறே யுறழும். நிரையீற்றிரெழுத்துச்சீர் மூன் றும் ஆறெழுத்தடி முதற் பதினேழெழுத்தடியளவும் உறழும். அவை, ஞாயிறு, போதுபூ, போரேறு என்பனவற்றை முத னிறீஇ வரகு வண்டு வண்டு எனவும், நனிமுழவு நனிமுழவு நனிமுழவு எனவும் தந்து இங்ஙனமாயினவாறு கண்டுகொள்க.

இனி, மூன்றெழுத்தான் வருவன ஒன்பது சீரும் அசைச் சீருமெனப் பத்து. அவை:

புளிமா, பாதிரி, வலியது, மேவுசீர், நன்ஞாறு,
பூமருது, கடியாறு, விறகுதீ, நீடுகொடி, அரவு

என்பன. இவற்றுட் புளிமாவும் அரவும் ஆறெழுத்தடி முத லாகப் பதினேழெழுத்தடியளவும் உறழ்ந்து ஓரொன்று பன் னிரண்டு நிலம்பெறும்.

ஒழிந்தசீர் எட்டும் நிரையீறுசுமின் ஏழெழுத்தாதி பதி னெட்டெழுத்தடியளவும் உறழும்; அவை:

புளிமா, வண்டு, வண்டு, வண்டு, எனவும்,
புளிமா, காருருமு, நனிமுழவு, நனிமுழவு எனவும்,
பாதிரி, வரகு, வண்டு, வண்டு எனவும்,
பாதிரி, நனிமுழவு, நனிமுழவு, நனிமுழவு எனவும்.

உறழ்ந்தவழிப் புளிமா ஆறெழுத்துமுதற் பதினேழன் காறும் உறழ்ந்தவாறும் பாதிரி ஏழெழுத்துமுதற் பதினெட்டன் காறும் உறழ்ந்தவாறுங் கண்டுகொள்க. ஒழிந்தனவும் அன்ன,

இனி, நாலெழுத்துச்சீர் ஏழுவகைய. அவை:

கணவிரி, காருருமு, பெருநாணு, உருமுத்தீ
மழகளிறு, நாணுத்தளை, உரறுபுலி

என்பன. இவையெல்லாம் எட்டெழுத்தடிமுதற் பத்தொன்ப தளவும் உயர்ந்தே ஒரோவொன்று பன்னிரண்டடி பெறும் அவை:

கணவிரி, வரகு, வண்டு, வண்டு எனவும்,
கணவிரி, நரையுருமு, நரையுருமு, நரையுருமு

எனவும் வரும். ஒழிந்தனவும் இவ்வாறே ஒட்டிக்கொள்க.

ஐந்தெழுத்துச்சீர் நரையுருமு, விரவுகொடி என இரண்டு இவை ஒன்பது முதல் இருபதின்காறும் உயரும்; அவை:

நரையுருமு, வரகு, வண்டு, வண்டு
எனவும்,

''கலனளவு கலனளவு கலனளவு கலனளவு'' (ப. 178)

எனவும் வரும்: விரவு கொடிக்கும் இஃதொக்கும்.

இவ்வாற்றான் ஓரெழுத்துச் சீரிரண்டும், ஈரெழுத்துச்சீர் ஆறும், மூவெழுத்துச்சீர் பத்தும், நாலெழுத்துச்சீர் ஏழும், ஐயெழுத்துச்சீர் இரண்டுமாகச் சீர் இருபத்தேழினையும் பன்னிரண்டிற் பெருக்கிப் பெற்ற ஆசிரியவடி முந்நூற்றிருபத்து நான்கும் பாட்டினுந் தொகையினும் வருமாறு கண்டுகொள்க.

இனி, வெண்பாவடி நூற்றெண்பத்தொன்றும் உறழுங்கால் ஏழெழுத்தடியும் எட்டெழுத்தடியும் ஒன்பதெழுத்தடியும் பத்தெழுத்தடியும் முதலாய் நிறபப் பதினெழுத்தடியளவும் ஏறி ஒரோசீர் எட்டடி பெறுவனவும் ஏழடி பெறுவனவும் ஆறடி பெறுவனவும் ஐந்தடி பெறுவனவுமாகி முறையானே வருமென்பது.

"இயற்சீ ரசைச்சீர் இருபத்து மூன்றோடு
உரிச்சீர்நான் கேற்றச்சீ ரொன்பதிற்று மூன்று
மயக்கறு வெள்ளைக்க ணேழ்தொடங்கி மாதே

யுயரிச்சி பதினொன்கெண் ணெழுட்டு''
''நாலெழுத்துச் செல்லா மேலெழுத்தா ஞசிரியத்
தாதிபெரு தொன்றேறிற் றுங்கதுபோ—ஞலெழுத்தான்
வந்தசீர் வெண்பாவிற் பத்தெழுத்தான் வாராவா
யைஞ்ர்க்கு நான்கா முதல்''

நுந்தை, வண்டு, ஞாயிறு, போதுபூ, போரேறு என ஐந்தும் ஏழெழுத்தடிமுதற் பதினன்கெழுத்தடியளவும் உயர்ந்து ஒரேசவொன்று எட்டடியுறழப் பெற்ற அடி நாற்பதாம்.

''ஞாயிறு போதுபூ போரேறு நுந்தைவண்
டேழாதி யெட்டா மடி''

தேமா, பின்னு, வரகு, பாதிரி, வலியது, மேவுரி நன்னுணு, பூமருது, கடியாறு, விறகுதீ, மாசெல்வாய் எனப் பதினொன்றும் எட்டெழுத்தடிமுதற் பதினன்கெழுத்தடி யளவும் ஒரொன்று ஏழடியுறழப்பெற்ற அடி எழுபத்தேழாம்.

''மின்னு வரகு வலியது மேவுசீர்
நன்னுணு பாதிரிப் பூமருதே யாறுதீ
மன்னுத மாசெல்வாய் தேமா வெனப்பதினே
ரெண்ணுகு மெட்டாதி யேழ்''.

புளிமா, அரவு, கண்விரி, காருருமு, பெருவேணு உருமுத்தீ, மழகளிறு, மாவருவாய், புலிசெல்வாய் என இவை ஒன்பதுசீரும் ஒன்பதெழுத்தடிமுதற் பதினன்கெழுத்தடியளவும் உயர்ந்து ஒரேசவொன்று ஆறடியுறழப் பெற்ற அடி ஐம்பத்து நான்காம்.

''அரவு புளிமா கணவிரி வேணு
புலிசெல்வாய் காருருமுப் பேருருமுத் தீயே''
''மழகளிறு மாவருவா யொன்பது மொன்ப
தெழுவா யிருமுன் றெனல்''

நனிமுழவு, புலிவருவாய் என்னும் இரண்டுசீரும் பத்தெழுத்தடிமுதற் பதினன்கெழுத்தடியளவும் உயர்ந்து ஒரோவொன்று ஐந்தடியுறழப் பெற்ற அடிபத்தாயின.

"புலிவரு வாயு நனிமுழவு மென்னுமிவை

யீரைந்தி ரேழுற்றி ரைந்து"

இவையெல்லாந் தொகுப்ப வெண்பாவடி நூற்றெண்பத் தொன்றாயின.

அவற்றுட் சில வருமாறு:

நுந்தை வரகு வரகு வரகு எனவும், நுந்தை நனி முழவு காருருமு காருருமு எனவும் இவை ஏழெழுத்தடிமுதற் பதினெழுத்தளவும் நுந்தை வந்தவாறு. வண்டென்பதற்கும் இஃதொக்கும்.

ஞாயிறு வண்டு வரகு வரகு எனவும், ஞாயிறு காருருமு மாவருவாய் காருருமு எனவும் இவை ஏழெழுத்தடியும் பதினென் கெழுத்தடியுமாயினவாறு. போதுபூ போரேறு என்பனவற்றிற்கும் இஃதொக்கும்.

தேமா வரகு வரகு வரகு எனவும், தேமா நனிமுழவு காருருமு பாதிரி எனவும், எட்டெழுத்தடி முதலாகப் பதினென் கெழுத்தடியளவும் உயர்ந்து தேமா ஏழடிபெற்றது. ஒழிந்த பத்துச்சீர்க்கும் இஃதொக்கும்.

புளிமா வரகு வரகு வரகு எனவும், புளிமா புலி வருவாய் காருருமு தேமா எனவும் இவை ஒன்பதெழுத்தடி முதலாகப் பதினென்கெழுத்தடியளவும் உயர்ந்து ஆறடிபெற்றது; ஒழிந்த எட்டுச்சீர்க்கும் இஃதொக்கும்.

நனிமுழவு வண்டு வரகு வரகு எனவும், நனிமுழவு காருருமு பாதிரி தேமா எனவும் இவை பத்தெழுத்தடி முதற் பதினென் கெழுத்தளவும் ஏறி ஐயெழுத்து நனிமுழவு ஐந்தடி பெற்றது; புலிவருவாய்க்கும் இஃதொக்கும்.

இவற்றுக்கெல்லாம் பதினென்கெழுத்தின் ஏறியக்காற் செப்பலோசை திரிபுடையவென்பது வல்லார்வாய்க் கேட்டு உணர்க. என்னை?

"அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி
வகுத்தன ருணர்த்தலும் வல்லோ ராறே"

(தொல். செய். 11)

என்றமையின்.

"அடியி னுட்ப மறிவருங் குரைத்தே"
எனப் பிறருஞ் சொல்லுப.

இனிக் கலியடிக்குரியசீர் இருபத்திறைன்கும் ஒரோவொன்று ஐந்தடியுறழ அதன் அடித்தொகை நூற்றிருபதாம்.

"அளவடி மிகுதி யுளப்படத் தோன்றி
யிருநெடி லடியுங் கலியிற் குரிய" (தொல். செய். 59)

என்பதனுன், பதின்மூன்றெழுத்தும் பதினன்கெழுத்தும் பதினைந்தெழுத்தும் பதினறெழுத்தும் முதலாக ஒரோவொன்று ஐந்தடி உறழ்ந்து கலியடியளவு பதினேழெழுத்து முதல் இருபதின்காறும் உயருமென்றது.

"நிரையீற் றியற்சீர் பதினறு மேனை
நிரையீற் றகவற்சீர் நான்கு மொருநான்கு
வெண்சீருந் துள்ளற்கு வெவ்வே றிருசீரா
னைந்தா முறழ்ந்த வடி"
"ஈரெழுத்துச்சீர் சீர்பதின்மூன் ருகி யிருபதின்கா
ரேுதியசீர் நான்கற் குயர்வு".

ஞாயிறு, போதுபூ, போரேறு என்னும் ஈரெழுத்துச்சீர் மூன்றும் பதின்மூன்றெழுத்துமுதற் பதினேழெழுத்துவரை ஒரோவொன்று ஐந்தடியுறழும்.

பாதிரி, வலியது, மேவுசீர், நன்ஞணு, பூமருது, கடியாறு, விறகுதீ, மாசெல்வாய், நீடுகொடி என மூவெழுத்துச் சீர் ஒன்பதும் பதினன்கெழுத்துமுதல் பதினெட்டளவும் ஒரோவொன்று ஐந்தடியுறழும்.

கணவிரி, காருருமு, பெருநாணு, உருமுத்தீ, மழகளிறு, மாவருவாய், புலிசெல்வாய், நாணுவளே, உராறுபுலி என நாலெழுத்துச்சீர் ஒன்பதும் பதினைந்தெழுத்துமுதற் பத்தொன்பதளவும் ஒரோவொன்று ஐந்தடியுறழும்.

நரையுருமு புலிவருவாய், விரவுகொடி என்னும் ஐந்தெழுத்துச்சீர் மூன்றும் பதினறெழுத்தடி முதல் இருபதெழுத்தடியளவும் உயர்ந்து ஒரோவொன்று ஐந்தடி பெறும்.

இவ்வாற்ருற் கட்டளைக் கலியடி நூற்றிருபதாமென்பது.

அவற்றுட் சில வருமாறு: ஞாயிறு, புலிசெல்வாய், மாசெல்வாய், புலிசெல்வாய் எனவும், ஞாயிறு, புலிவருவாய், புலிவருவாய், புலிவருவாய் எனவும், முதலும் முடிவும் பதின் மூன்றும் பதினேழுமாகி ஈரெழுத்துப் பாதிரி ஐந்தடி யுறழ்ந்த வாறு. ஞாயிறு, புலிவருவாய் என முதற்கண் ஆசிரியத்தளை தட்டதென்னுமோவெனின், என்னும்;

'நிரைமுதல் வெண்சீர் வந்து நிரைதட்டல்
வரைநிலை யின்றே அவ்வடிக்கென்ப' (தொல். செய். 160)

என்புழி அதனைக் கலித்தளையென்னுமாகலின். புலிசெல்வாய் மாசெல்வாய் என ஈற்றுக்கண் வெண்டளைவந்த தென்னுமோ வெனின், என்னும்;

'வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே'
(தொல். செய். 29)

என்றாகலின்.

ஒழிந்த மூவெழுத்துச் சீரும், நாலெழுத்துச் சீரும், ஐயெழுத்துச்சீரும் அவ்வாறே உறழ்ந்துகொள்க.

(வி-ரை)

இவ் வகையால் தளை ஏழு பாகுபட்டன எனக்கூறி அதனை விளக்குவர் இளம்பூரணர் அது வருமாறு: இவ் வகையால் தளை ஏழு பாகுபட்டன. இவை நேரொன்று சிரியத்தளை, நிரை யொன்றுசிரியந் தளை, இயற்சீர் வெண்டளை, வெண்சீர் வெண்டளை, கலித்தளை ஒன்றிய வஞ்சித் தளை, ஒன்றாத வஞ்சித் தளை என ஏழு வகையாம். இவ் வகையால் தளை ஏழு பாகு பட்டன. அவ்வழி ஈரசைச்சீர் இயற்சீர் பாற்படும். ஆசிரிய வுரிச்சீரும் அதுவேயாம். மூவசைச் சீருள் வெண்பா உரிச் சீரொழிந்தன வெல்லாம் வஞ்சியுரிச்சீராம். அவ்வழி இயற்சீர் நிற்ப வருஞ்சீர் முதலசையோடு நேராய் ஒன்றுவது நேரொன்று சிரியத்தளையாம். நிரையாய் ஒன்றுவது நிரையொன்றுசிரியத் தளையாம், மாறுபட்டு வருவது இயற்சீர் வெண்டளையாம். நிரையாய் ஒன்றிற் கலித்தளையாம். வஞ்சியுரிச்சீர் நிற்ப வருஞ் சீர் முதலசையோடு ஒன்றுவது ஒன்றிய வஞ்சித்தளையாம் ஒன்றாதது ஒன்றா வஞ்சித்தளையாம். இவ் வகையால் தளை. ஏழாயின. இவ்வாறாகி வருதல் வருகின்ற சூத்திரங்களானுணர்க என்பது அவர் உரையாகும்.

ஏனையடிகள் அளவில்லனவாகலின் விரிக்கப்படா எனல்.

363. [1]ஆங்கனம் விரிப்பி னளவிறந் தனவே
பாங்குற வுணர்ந்தோர் பன்னுங் காலே.

இஃது ஒழிந்த அடி இந்நாற்சீரடிபோல உறழ்கவென்றார்க்கு அவையுறழாவென உறழாமைக்குக் காரணம் கூறுகின்றது.

(இ-ள்.) அந்நாற்சீரடிபோல் மற்றையடிகளையும் விரிப்பின் அஃது இலக்கணக் கட்டளையின் இகந்துபட்டதாம். அப்பகுதியெல்லாம் அறிந்தோர் விரிக்குங்காலத்து (எ-று.)

அளவிறந்தன, எண்ணிறந்தன. அஃது இலக்கணங்கூறுமாறு அன்றென்றவாறு. அஃது எற்றாற்பெறுதுமெனின் முதனூல் செய்த ஆசிரியன் அகத்தியனார் சொல்லுமாற்றாற் பெறுதும் என்றவாறு.

எனவே என்சொல்லப்பட்டதாம்? அங்ஙனம் வரையாது சிறப்புடையனவற்றுக்குஞ் சிறப்பில்லனவற்றுக்கும் ஒருங்கு இலக்கணங் கூறின் அவையெல்லாம் எடுத்தோதப்பெறாத இலக்கணத்தவாம்; அதனால் வரையறையுடையனவற்றுக்கன்றி வாளாதே பரந்துபட்டவகையான் இலக்கணங்கூறல் பயனில் கூற்றாமெனவும் அது கருதி இதன் முதனூல் செய்த ஆசிரியருங் கூறிற்றிலரெனவுங் கூறியவாறு.

வடநூலாசிரியர் ஆறுவகைப் பிரத்தியங்களான் எழுத்துக்களைக் குருவும் இலகுவுமென இருகூறு செய்து உறழ்ந்து பெருக்கிக் காட்டுவதோ ராறுமுண்டு. அவரும் இருபத்தாறெழுத்தளவும் உறழ்ந்து காட்டி, ஒழிந்தன ஞெகிழ்ந்துபோவர். அவ்வாறே சீர்களையும் குருவும் இலகுவும்போல இருசீரடி இத்துணையெனப் பெருக்கவும் ஒழிந்தனவும் இவ்வாறே பெருக்கவுஞ் சிதைந்ததில்லை. அங்ஙனம் பெருக்குங்காலும் ஓரடிக்குரிய சீர் பத்தும் நூறும் ஆயிரமுமாக வைத்து உறழ்ந்தக்காலும் வருவதொன்றில்லை. அங்ஙனம் உறழினும் இத்துணைச் சீரான் வந்த அடிக்கே உறழ்ச்சி கூறுவதென்று ஓரெல்லை கூறிக்கொள்ளல்

---

1. இங்ஙனம் எனப் பாடம் கொள்வர் நச்சினார்க்கினியரும் இளம்பூரணரும்.

வேண்டும். கொள்ளவே; எத்துணையிடஞ் சென்றக்காலும், இத்துணையென வரையறைப்பாடு உடையனவல்ல. அவ்வரையறை இன்மையின் அதனை அளவிலவென்பதற்கொரு காரணங் கூறல்வேண்டு மாதலான் அதுநோக்கி நாற்சீரடி சிறப்புடைத்தென வேறுபல காரணங்கூறி, அவற்றுக்கே வரையறைகூறி அல்லனவற்றுக்கட் சொல்லப்படாதென்றான் இச்சூத்திரத்தானென்பது.

அஃதேல் அவை சிறப்புடையவாயினமைக்குக் காரணங் கூறியவாற்றாற் சான்றோர் செய்யுளுட் பயின்றுவரல்வேண்டும் பிறவெனின், இந்நூல் செய்த காலத்துத் தலைச்சங்கத்தாரும் இடைச்சங்கத்தாரும் அவ்வாறு கட்டளையடியாற் பயின்று வரச் செய்யுள் செய்தாரென்பது இச்சூத்திரங்களாற் பெறுதுமென்பது. இதன் முதனூல் செய்த ஆசிரியனாற் செய்யப்பட்ட யாழ்நூலுள்ளுஞ் சாதியும் உவமத்துருவுந் திருவிரியிசையுமெனக் கூறப்பட்டவற்றுட் கட்டளைப்பட்டுச் சிறப்புடைவன சாதிப் பாட்டுக்களே. அவை இக்காலத்துப் பயின்றிலவெனினும் மற்றையவற்றோடு ஒக்குமெனப்படாவென்பது.

அல்லதூஉம், உலகத்து மக்கட்பிறவி பலவாயினும் நால்வகை வருணமென்றே கூறுப, அவர் வரையறை யிலக்கணத்தாரா கலினென்பது. இனி, அவருள்ளும் அந்தணரும் வேளாளரும் போல இடையிருவகையோரும் பயின்றிலரெனினும் சிறப்பிலராகாரென்பதுமது.

இனிக் கடைச்சங்கத்தார் அறுநூற்றிருபத்தைந்தடியும் பயின்றுவரச் செய்யுள் செய்திலராலெனின் கட்டளையடியாற் செய்தவல்லன வேண்டாவென்பதோர் ஆணையுடையரல்லர். உடையவரும் இவ்வாசிரியனாற் சிறப்புடைத்தென்று சொல்லப் பட்ட அளவடியாற் செய்யுள் செய்தாரென்பது. இனிப் பிற்காலத்தார் அளவடியாற் பயின்றுவரச் செய்யுள் செய்திலரென்று கடைச்சங்கத்தார் செய்த செய்யுள் அடியுஞ் சிறப்பிலவாமோவென்பது. வஞ்சியடிக்கும் இங்ஙனம் வரையறையின்மைய தொக்கும். அது முன்னர்ச் சொல்லுதும்.

(வி-ரை)

அறு நூற்றிருபத்தைந்தினோடும் ஐந்தாவது வரும் ஐஞ்சீரை யும் உறழ மூவாயிரத்தொரு நூற்றருபத்தைந்து விகற்பமாம். அதன் கண் ஆறுவது இவ் வகையைந்து சீரையும் உறழப் பதினையாயிரத்து அறுநூற்றிருபத்தைந்து விகற்பமாம். அதன் கண் ஏழாவது வரும் சீரைந்தினையும் உறழ எழுபத்தெண்ணா யிரத்தொரு நூற்றிருபத்தைந்து விகற்பமாம். இவ் வகையினு லுறழ வரம்பிலவாய் விரியும். அன்றியும் இச்சொல்லப் பட்ட அடியினை அசைபானும் எழுத்தானும் விரிக்க வரம்பிலவாம். இவ் வகையினுறழ வரம்பிலவாய் விரியும். அன்றியும் இச் சொல்லப்பட்ட அடியினை அசையானும் எழுத்தானும் விரிக்க வரம்பிலவாம் என விளக்கம் காண்பர் இளம்பூரணர்.

ஆசிரியப்பாவிற்கு ஐவகையடியும் உரியவாதல்

## 364. ஐவகை யடியும் ஆசிரியக் குரிய.

இஃது, எய்தாததெய்துவித்தது; மேல் வகுக்கப்பட்ட அடியினை இன்ன பாவிற்குரிய அடி இவையென்று கூறுதான் அது கூறினமையின்.

(இ-ள்.) நாலெழுத்து முதலாக இருபதெழுத்தின்காறும் உயர்ந்த பதினேழ் நிலனும் ஆசிரியத்திற்குரிய (எ-று.)

"மெய்வகை யமைந்த பதினேழ் நிலத்து
..........அறுநூற்றிருபத் தைந்தாகும்."
(தொல்-செய்-50)

என்றான், அதனை ஈண்டுப் போதந்து ஆசிரியத்திற்கு எய்து வித்தவாறு. அவற்றுக்குச் செய்யுள் ஐந்தடியுங் கூறியவழிக் காட்டப்பட்டது.

மற்று,

'மெய்வகை யமைந்த பதினேழ் நிலத்தும்' (362)

எனவே இதுவும் அடங்காதோவெனின், அடங்காது; பாத் தோன்றும் அந்நிலங்கள் பகுத்துக்கொள்ளப் பொதுவகையால் ஆண்டோதினானென்பது.

மற்றும் ஐவகையடியும் ஓராசிரியத்துக்கண் வரல்வேண்டு மோவெனின், அன்னதொரு வரையறை யுண்டோ? வரையாது கூறினமையின் அவையெல்லாவற்றானும் வருக: வருங்கால் ஐந்தும் ஆசிரியத்துக்கு உரியவென்பதே கருத்து. ஒழிந்த பாவிற்கு நிலங் கூறுரோவெனின் ஆசிரியம் பதினேழ் நிலனு முடைமையின் அக்கூறிய பதினேழ்நிலனும் தளை விரவுதலின் தளை அதற்குப் பின் கூறித் தளையதிகாரம்பட்டமையின் அவற் றின் பின் ஒழிந்த பாவிற்கு நிலனுங் கூறுமென்பது.

மற்று ஆசிரியமென்பது மகரவீறுதலின்

'மகரஇறுதி அத்தொடு சிவணும்'' (தொல். எழுத்.-உரு. 14)

என்பதனான் அத்துச்சாரியை பெறல் வேண்டுமெனின் அது செய்யுள் விகார மென்பாருமுளர். அற்றன்று, ஆண்டு நின்றது நான்காமுருபாயினன்றே அது கடவாது, அதனை ஏழாவ தன் பொருண்மைக்கண் அக்குச்சாரியை ஈறுதிரியாது வந்த தென்று கொள்ளப்படும்.

(வி-ரை

ஆசிரியர்க்கு என்பதில் அக்கு என்பது சாரியையாம்

ஆசிரியப்பாவுள் தளை வரவி வரினும் நீக்கப்படாதெனல்

365. விராஅய் வரினும் ஒரூஉநிலை யிலவே.

இஃது, எய்தியதிகந்து படாமைக் காக்கின்றது; மெய்வகை யமைந்த பதினேழ் நிலமெனவும், எழுபது வகையின் வழு வெனவும் மேனிறுத்த (362) முறையானே ஆசிரியத்திற்குப் பதினேழ் நிலமாமாறு கூறினன். இனி, எழுபது வகையின் வழுவாயின அப்பதினேழ் நிலத்து யாண்டு மாகாதென்பது பட்டதனை இகந்து படாமைக் கூறினமையின்.

(இ-ள்.) தளைவிரவி வரினும் ஒருவப்படா (எ-று.)

மற்று, இதனைத் தளை விரவிவரினுங் கட்டளையடியாமெனப் புறனடுத்தானென்று கோடுமோ, தளைவிரவிற் கட்டளையடி யாகா தென்று கோடுமோவெனின், தளைமயங்காதனவே தளை வகையடி யெனவும் அல்லன கட்டளையடி யாகாவெனவுங்

கோடுமென்பது. அஃதேல் தளைமயங்குன அடிக்கும் பதினேழ் நிலனுங் கோடுமோ வெனின், கோடுமன்றே? 'விராய்வரினும்' என்ற உம்மை இறந்தது தழீஇயிற்றுகலினென்பது.

(வி-ரை)

ஒருஉநிலை—நீக்குநிலை: மேற்சொல்லப்பட்ட ஐந்தடியும் தனித்தனி ஆசிரியப்பாவிற்கு உரித்தாகி வருதலே யன்றி விரவி வரினும் நீக்கப்படாது என விளக்கம் காண்பர் இளம்பூரணர்

எய்தாதது எய்து வித்தது

**366.** [1]**தன்சீர் வகையினுந் தளைநிலை வகையினும்**
**இன்சீர் வகையி னைந்தடிக்கு முரிய.**

இஃது, எய்தாத தெய்துவித்தது: என்னை? இயற்சீராய் கட்டளையடியாமா றெல்லாம்,

"ஐவகை யடியு மாசிரியக் குரிய" (தொல்-செய்.52)

என்னுந் துணையுங் கூறிப் பின்னும்,

"விராஅய் வரினும் ஒருஉநிலை யிலவே"
(தொல்-செய். 53)

எனக் கட்டளையடியன்றியும் அளவடி வருமெனவும் அவை பதினேழ் நிலத்தவெனவுங் கூறி, இனி உரிச்சீரானுஞ் சீர்வரை யறையடி உளவென்பதூஉம் அவ்வுரிச்சீரால் தளைவகையடி உள வென்பதூஉம் அவை பதினேழ் நிலத்தின் இகந்துவாராவென் பதூஉங் கூறுகின்றமையின்.

(இ-ள்.) தன்சீர்வகையினும்—ஆசிரிய வுரிச்சீரானும்; அதனை அதிகாரத்தாற் கொள்ளப்படும்; தளைநிலைவகையினும்— அவ்வாசிரியவுரிச்சீரானாகிய தளைநிலைமைப் பகுதியானும்; இன் சீர்வகையினும்—இன்சீர்ப்பகுதியானும்; ஐந்தடிக்கு முரிய— அவையும் மேற்கூறிய ஐவகையடிக்கும் உரியவாம் (எ-று.)

---

1. இந்நூற்பாவோடு அடுத்த நூற்பாவையும் இணைத்து ஒரே நூற்பாவாகக் கொள்வர் இளம்பூரணர்.

'ஐந்தடிக்கு முரிய'வெனவே பதினேழ் நிலத்தின் இகந்து வாராவென்பதாம்: தன்சீரென்றது 'வகை' யென்றது,

"முன்னிரை யுறினு மன்ன வாகும்" (தொல்-செய்.34)

என்பதை

'வெண்பா வுரிச்சீர் ஆசிரிய வுரிச்சீர்'

என்புழி உடன்கூறுது இரு பகுதியாகக் கூறிய வேறுபாடு நோக்கியென்க. அதனது பயம் வருகின்ற தளைவகைக்காயின் ஆசிரியவுரிச் சீராறுந் தளைகொள்ளப்படா, முன்னிரையீற்ற இரண்டுமல்ல தென்றவாறு. தளைநிலைவகை சிறப்புடைமையின் அது முற்கூறுகவெனின், அங்ஙனமாயினும் அறுவகைச் சீரானுஞ் சீர்வகையடி வருதல் பெரும்பான்மையாகலானும் அவற்றுள்ளும் நீடுகொடி குளிறுபுலி என்னும் இரண்டுமே பற்றித் தளைகோடல் சிறுபான்மை நோக்கியுந் தன்சீர்வகை முற் கூறப்பட்டது. அல்லதூஉந் தளைநிலைவகை முற்கூறின் அவ்வியற் சீர்த்தளைமேற் செல்லும்; அவ்வாறன்றித் தன் சீர்த்தளையே கோடற்கும் அது பிற்கூறினுனென்பது. மற்றுத் தன்சீரா னுவதனை இன்சீர்வகையோடு ஐந்தடிக்கு முரித்தென்றதென்னை யெனின், ஆசிரியவுரிச்சீர் நான்கும் நிரலே நின்றுழி அகவ லோசை பிறவாதென்பது அறிவித்தற்கென்பது. எனவே, ஒன் றிடையிட்டும் இரண்டிடையிட்டும் இன்சீர் வரல்வேண்டுவதாம்.

'இன்சீர்வகையின்' என இயர்சீர்களான் உரிச்சீர்களை வகுத்து நிறீஇக் கொள்ளப்படும்.

உ-ம்: "ஓங்குகோட்டுத் தொடுத்த பாம்புபுரை யருவி"

எனவும்,

"நிவந்துதோன்று களிற்றின் இலங்குகோடு புரைய"

எனவும் இவை இயற்சீரொன்று இடையிட்ட ஆசிரியவுச்சீரான் வந்த நேரடி.

"பாம்புமணி யுமிழும் பானாள் ஈங்குவரல்"

என்பது இயற்சீரிரண்டு இடையீட்டு வந்தது. இதுவும்

"அசையுஞ் சீருமிசையொடு சேர்த்தி"

(தொல்-செய்-11)

என்பதனுன் அகவலோசை வழுவினவா றந்துகொள்க.

இனித் தன் சீரால் தளைநிலையடி வருமாறு:

"ஓங்குமலைப் பெருவிற் பாம்புநாண் கொளீஇ" (புறம்-55)

எனவும்,

"உவவுமதி யுருவி னோங்கல் வெண்குடை" (புறம்-3)

எனவும் வரும்.

தளைவகை யென்னாது 'நிலை' யென்றதனான், அவற்று இரண்டாசிரியவுரிச்நரும் அடிமுதற்கணின்று சீராவதன்றி இடைவாரா வென்பது கொள்க. தளைநிலை யென்னாது 'வகை' யென்ற தென்னையெனின், உரிச்சீரால் தளைவழங்கின் ஓரடிக் கண் இரண்டுவரின் ஓசையுண்டா மென்பதுணர்வித்தற் கென்பது. இவையும் இன்சீர் வகையொடு வருமெனவே தல்சீர் இயற்சீ ரொடு தட்குமென்பதாம். அஃதேல்,

'தன்சீ ருள்வழித் தளைவகை வேண்டா' (தொல்-செய்-55)

என வருகின்ற சூத்திரத்தானே தன்சீர் பெறுதுமாகலின் ஈண்டுத் தளை நிலைவகையே கூறுகவெனின், இஃது ஆசிரியத் திற்குக் கூறினான்; அது வெண்பாவிற்குக் கூறினான்; அல்லாக் கால், அது மிகையாமென்பது. எனவே, தன்சீர்வகை நாலெழுத்திற் குரித்தன்றென்பதூஉம், தளைவகையடிக் குறளடி முதன் மூன்று நிலத்திற்கும் உரித்தென்பதூஉம் உரையிற் கொள்க.

"ஓங்கு கோட்டுமீது பாய்ந்து பாய்ந்து
முசுக்கலை யாடு நாடற்கு
உரைப்பதை யெவன்கொல்நந் தோளே தோழீஇ

என்பது ஐந்தெழுத்தால் தன்சீரடி வந்தது.

"ஆடுகொடி நுடங்கு காடு போந்து
விளங்கிழை கோயிற சேர்ந்தனம்
முழங்குக வானந் தழங்குகுரல் சிறந்தே"

என்பதுஏழெழுத்தால் தளை நிலையடி வந்தது. பிறவும் அன்ன

இன்சீரென்னாது 'வகை' யென்றதனல் இயற்சீர்ப்பாற் படுத்து இயற்றிக்கொள்ளப்பட்ட அசைச்சீரும் (340) இன் சீரேயாம்; தன்சீர் வகையினுந் தளைநிலை வகையினும் இடை யிட்டு வந்ததென்பது. இவை மேற்காட்டியவற்றுள் காணப் படும்.

வெண்பாவிற்குறிய தளைவகையும் சீர்வகையும்

**367. தன்சீ ருள்வழித் தளைவகை வேண்டா.**

இது, மேல் ஆசிரியத்திற்குத் தன் சீர்வகையுந் தன்றளை வகையுங் கூறிய வழியானே வெண்பாவிற்குச் சீர்வகையுந் தளை வகையுங் கூறுகின்றது.

(இ-ள்) தன்சீர்—வெண்சீர்; உள்வழி—வெண்சீரே வருஞ்சீராகியும் வந்தவழி; என்னை? தளைவகைக்கு இரண்டுசீர் வேண்டுதலானுந் தளைவகை வேண்டாத நிலம் இதுவென்கின்ற குகலானுமென்பது; தளைவகை வேண்டா—தளைவகை நிலைமை கொள்ளப்படா மற்று அவ்வடிக்கண் (எ-று)

எனவே, வெண்சீர்நிற்ப இயற்சீர்வந்தொன்றி வெண் டளையாமென்பதே கருத்தாயிற்று. இஃது உய்த்துக்கொண் டுணர்தலென்னும் உத்திவகை. (665) இதனுனே வெண்சீர்க்கு வெண்சீர்வந்தொன்றுவது கட்டளையடியெனப்படாது சீர்வகை யடியாமென்பது பெற்றாம்.

"வெண்சீ ரொன்றின் வெண்டளை கொளாஅல்"
"வெண்சீ ரொன்றினும் வெண்டளை யாகு
மின்சீர் விரவிய காலை யாக"

என்றார் காக்கைபாடினியாரும்.

வெண்சீ ரொன்றியது வெண்டளை யாகாதென்றற்குக் காரணமென்னை யெனின்,

"அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய
தளைவகை யொன்றாத் தன்மை யான" (தொல்-செய் -58)

என்புழி, அளவுஞ் சிந்தும் அல்லாத ஏறிய நிலமெல்லாம் வெண்பாவுங் கலிப்பாவுந் தம்மில் தளைவகையொக்குமென்ற குகலினென்பது, எனவே; வெண்சீர் நான்கும் ஒன்றியவழின் அது கலிப்பாவிற்குஞ் சீர்வகையடியாவதாயிற்று.

மற்றும் வஞ்சியுரிச்சீருந் தன்சீராகலின் இன்னவாறு தளை கொள்ளு மென்றுனேவெனின், அவை தன்சீருருள்வழி ஒன்றி னும் ஒன்றுவாயினும், பிறசீர் வந்துழி ஒன்றினும் ஒன்றுவாயி னும் வஞ்சித்தளையாகி வரையறையின்மையானும் வஞ்சியடி

அறுநூற்றிருபத்தைந்தடியுட் படாமையானும் அவை கூறு ஞயினுன் ஆசிரியனென்பது.

(வி—ரை)

வெண்சீர்முன் வெண்சீர்வரின் வெண்பாவிற்குத் தளை கொள்ள வேண்டாவாம் என்பது இதன் கருத்தாகும். ஏறிய நிலமெல்லாம்-பன்னிரெண்டு எழுத்தடிக்கு மேற்பட்டவை எல்லாம். (55)

கட்டளையடிக்கண் இயற்சீர் தட்குமாறு

**368. சீரியைமருங்கி ேனாரசை யொப்பி**
**னாசிரியத்தளையென் றறியல் வேண்டும்.**

இது, கட்டளையடிக்கண் இயற்சீர் தட்குமாறுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) இயற்சீர்பத்தும் பிறிதொன்றனோடு இயையுங் கால் அவை தத்தம் ஈற்றசை ஒன்றி, வருஞ்சீரின் முதலசை யோடொப்ப நிற்பின் ஆசிரியவடிக்குந் தட்கும் முறைமையென் றறியப்படும் (எ—று).

'ஒப்பின் ஆசிரியத்தளை' யெனவே ஒவ்வாதொழியின் வெண்டளை யென்று எதிர்மறுத்துக் கொள்ளப்படும். என்னை?

'எடுத்த மொழியினஞ் செப்பலு முரித்தே'
(தொல்-சொல்-கிளவி-61)

என்றமையின்.

"அகலிரு விசும்பிற் பாயிருள் பருகி"
(பத்துப்-பெரும்பாண்-1)

என்றவழி நேரும் நிரையும் சீரியை மருங்கின் ஓரசை ஒன்றி ஆசிரியத்தளையாயின.

"மல்லர்க் கடந்தான் நிறம்போல் இருண்டெழுந்து")
(ஐந்திணை ஐம்.1

என்புழி முதலடி இயற்சீர் ஒன்றுது வெண்டளையாயிற்று.

---

1. நச்சினுர்க்கினியர் பாடமும் இதுவே. சீரிய எனப்பாடங் கொள்வர் இளம்பூரணர்.

மற்றுச் சீரியை மருங்கின் ஓரசையே வரினென்னுது 'ஒப்பின்' என்றதென்னையெனின், உரியசை முதலும் ஈறு மாகியவழி அவை இயலசையோடு ஒப்புமை நோக்கித் தளை கொள்ளினல்லது தம்மோடு தாம் ஒன்றுதல் கொள்ளாரென்றற் கென்பது; பிதனுனும் பெற்றும். போதுபூ என்பது வருஞ் சீராயவழிப் போரேறு என்பது ஓரசையொன்றிற்றென்று ஆசிரியத்தளை யென்னுமையென்பது. இஃது, அவை நின்ற சீராய வழி நிரையீருதல் 'அறியல்வேண்டு' மென்னும் மிகையானுங் கொள்க. இனி, 'ஈரசை யொப்பி' னென்பது பாடமாக உரைப் பின் நேரும்நிரையும் ஒன்றினென்றவாறுமாமெனக்கொள்க.

(வி-ரை)

இயற்சீர் பத்தாவன—தேமா, புளிமா, கணவிரி, பாதிரி, சேற்றுக் கால், களிற்றுத்தாள், போரேறு, பூமருது, கடியாறு மழகளிறு என்பன.

சீர்கள் தம்முட் பொருந்தும்வழி நிலைமொழியாகிய இயற் சீரினின்றும் வருமொழியாகிய சீரின் முதலசையும் நேராய் ஒன்றின் நேரொன்றுசிரியத் தளையாம். நிரையால் ஒன்றின் நிரையொன்றுசிரியத் தளையாம். இரண்டையும் ஆசிரியத்தளை என வேண்டுதலின் பொதுப்படக் கூறினர். அவ்வழி வருஞ்சீர் இயற்சீராயிற் சிறப்பின்றெனவுங் கொள்க என விளக்கம் காண்பர் இளம்பூரணர்.

வஞ்சியடி உறழுமாறும். பெறும் நிலனும்.

**369. குறளடி முதலா வழுவடி காறும்**
**உறழ்நிலை யிலவே வஞ்சிக் கென்ப.**

இது, வஞ்சியடி உறழுமாறும் அதுபெறும் நிலனும் உணர்த் துதல் நுதலிற்று.

(இ - ள்.) நாலெழுத்து முதலாகப் பதினென் கெழுத்தளவும் உறழும் நிலையில வஞ்சியடிக்கு (எ – று).

இனி, முதலும் ஈறும் யாதெனப்படுமோவெனின்,

'தன்சீ ரெழுத்தின் சின்மை மூன்றே' (தொல்-செய்-46)

என்றதனுன் ஆறெழுத்தடி முதலாகவும்,

'நேர்நிலை வஞ்சிக் காறு மாகும்' (தொல்-செய் 42)

என்றதனாற் பன்னிரண்டெழுத்தடி யீருகவும் உறழுமென்ற வாறு. எனவே, வஞ்சியடிக்கு நிலன் ஏழெனப்பது சொல்லிய வாறு. அதுவே கருத்தெனின், இச்சூத்திரம் மிகையாம் பிற வெனின், அற்றன்று; வஞ்சியுரிச்சீர் மூன்றெழுத்திற் சுருங்கா, ஆறெழுத்தின் ஏறாவெனவே நேர்நிலைவஞ்சிக்கு மூவெழுத்துச் சீர் இரண்டுவந்த இருசீரடிக்கு ஆறெழுத்துமுதலாமென்ப தூஉம் ஆரெழுத்துச்சீர் இரண்டுவரிற் பன்னிரண்டெழுத்தடி ஈறு மென்பதூஉம் பெறுதுமால் அவ்வச்சூத்திரங்களானே யெனின், ஆண்டு வஞ்சியுரிச்சீர்க்கு எழுத்துவரையறை கூறினன்; அவ்வடி யித்துணை நிலம் பெறுமென்றற்கு இது கூறல்வேண்டுமென்பது. அல்லதூஉம், அங்ஙனம் கொள்ளின் உய்த்துணர்ச்சியாம், இஃது எடுத்தோத்தாகலின் எடுத்தோத்துக் களைந்து உய்த்துணரா ரென்பது. இனி, இது கூறுக்காற் கட்டளையடிக்கண் இயற்சீர் வாராதென்பதூஉம் பெறலாகாதாம். ஆகவே, 'ஞாயிறு' புலி செல்சுரம்' என்பது கட்டளையடியாகிய செல்லும்; வஞ்சித் தூக்கின் இது கொள்ளாமையின் அது விலக்கல் வேண்டி இது கூறினன்; என்னை? இயற்சீர்கொள்ளின் ஓரெழுத்தாகிய இயற்சீரும் ஆண்டே கோடல்வேண்டும்; அது கொள்ளின் இச்சூத்திரத்திற்கு ஏலாமையினென்பது.

இனி, வஞ்சியுரிச்சீர் அறுபதும் இருநிலைமைப்படுவன இருபத்துநான்கும், நான்கு நிலைமைப்படுவன இருபத்தெட்டும், எட்டுநிலைமைப்படுவன எட்டுச்சீருமாகி இருநூற்றிருபத்து நான் காய் விரியும்.

"இரண்டுநான் கெட்டு நிலைமைய வாகித்
திரண்ட நிலைவஞ்சிச் சீர்க-ளொருங்கே
யிருபத்து நான்கிருபத் தெட்டுட னெட்டா
யிருநூற் றிருபத்து நான்கு"

அவ்வஞ்சியுரிச்சீர் இருநூற்றிருபத்து நான்கினுள்ளும் ஒன்ப தெழுத்துச் சீரொன்றும், எட்டெழுத்துச் சீரொன்பதும் ஏழெழுத்துச்சீர் முப்பத்துமூன்றுமாக நாற்பத்து மூன்று வகை யான் உறழும் நிலம் இல; இச்சூத்திரத்தான் ஓதியவாற்று னென்பது.

'நாலாதி யிற்றன நான்கு பதினறன்
ஆதிய வெண்சீ ரகப்பட்ட மூவைந்து
பொய்ப்பினவ் வஞ்சி யடியுற ழாமோனை
மூவைந்து மூன்றுமூன் றுன்று.''

''இரண்டெட்டு மூவெட்டு நாலேழா றைந்தொன்
றகன்றநாற் பஃதுநான் காறேழைம் பத்திரண்டு
நான்கைந்தைட் டொன்பா னறுபஃ தொன்றுநான்
காறேழு பெற்றனமூ வைந்து''

''நாலெட்டே யேழெட் டறுபத் திரண்டிவற்று
ளேழெழுத்தா றெட்டெழு பத்துமூன் றேழா
மேழெழு மும்மூன்று யெட்டெழுத்தா ளுெரொன்று
மாறெட் டறுபஃது மூன்று''

''எழுத்தள வெஞ்சினுஞ் சீர்நிலை யொக்கு
மசைக்கு வரையறை யின்மை யான''

''வஞ்சி யுரிச்சீர் நிரையுரி யுறழ்ந்து
மெல்லாங் குறைத்து மிகுத்துக் கொளாஅல்''

எனவே, இவ்வாற்றான் வஞ்சியுரிச்சீர் ஏழெழுத்தும் எட்டெழுத்தும் ஒன்பதெழுத்துமாகி வரும். அவையறிந்து மாற்றுக. அவை யாவன:

களிறு போகுவாய், களிறுவழங்குவாய், புலிவழங்குசுரம், மாவழங்குசுரம், களிறுவருசுரம், களிறுபோகுசுரம், புலிவழங்குகாடு, பாம்புவழங்குகாடு, களிறுவருகாடு, களிறுபோகுகாடு, மாவழங்குகாடு, புலிபோகுகடறு, பாம்புவருகடறு, பாம்புபோகுகடறு, களிறுசெல்கடறு

என இவை பதினைந்தும் ஏழெழுத்தாங்கால் உறழ்நிலை இல வெனப்படும். 'களிறு வழங்குவா' யென்பது அரவுவிரவுவா யென ஏழெழுத்துச் சீராம். ஒழிந்தனவும் அவ்வாறே கொள்க. இவை பதினைந்து ஏழெழுத்தின் இகவாதன.

இனி, ஏழெழுத்துச்சீரின் இவ்விரண்டும் எட்டெழுத்துச் சீர் ஒரோவொன்றுமாகி வருவன மூன்றுசீர் உள; அவை:

களிறுவழங்குசுரம், புலிவழங்குகடறு, களிறுவருகடறு என்பன. இவற்றைக் களிறுவிரவுசுரம், அரவுவழங்குசுரம், அரவு

விரவு சுரம் என்றாற்போல வாய்பாடுபடுத் தொட்டிக்காணவே ஏழெழுத்துச் சீராறும் எட்டெழுத்துச்சீர் மூன்றுமென ஒன்பதாம்.

களிறுவழங்குகாடு, பாம்புவழங்குகடறு, களிறுபோகு கடறு என இவை மூன்றுசீரும் ஒரோவொன்று ஏழெழுத்துச் சீர் மூன்றும் எட்டெழுத்துச் சீரொன்றுமாக முந்நான்கு பன்னிரண்டும் உறழ்நிலையில எனப்படும். அவை:

களிறுவிரவுகாவு, களிறுவழங்குகுரவு, அரவுவிரவுகாடு அரவு விரவுகுரவு என ஏழெழுத்துச்சீர் மூன்றும் எட்டெழுத்துச் சீரொன்றுமாயினவாறு கண்டுகொள்க. ஒழிந்தனவும் அவ்வாறே கொள்க.

இனிக், களிறுவழங்குகடறு என்பது ஆறெழுத்துச்சீர் ஒன்றும், ஏழெழுத்துச்சீர் மூன்றும், எட்டெழுத்துச்சீர் மூன்றும், ஒன்பதெழுத்துச்சீரொன்றுமென அதுவும் எட்டுநிலைமைத்தாம். அவற்றுள் ஆறெழுத்துச் சீரொன்றும் ஒழித்து, ஒழிந்த வஞ்சியுரிச்சீரேழும் உறழ்நிலையில் வஞ்சிக்கெனப்பட்டன. அவை:

களிறுவழங்குகுரவு, களிறுவிரவுகடறு, அரவுவழங்கு கடறு என மூன்றும் ஏழெழுத்துச்சீர்;

களிறுவிரவுகுரவு, அரவுவழங்குகுரவு, அரவுவிரவுகடறு என மூன்றும் எட்டெழுத்துச்சீர்;

அரவுவிரவுகுரவு என்பது ஒன்பதெழுத்துச்சீர்; இவையெல்லாந் தொகுப்ப ஏழெழுத்துச்சீர் முப்பத்துமூன்றும் எட்டெழுத்துச் சீரொன்பதும் ஒன்பதெழுத்துச்சீரொன்றும் ஒழித்து, ஒழிந்த வஞ்சியுரிச்சீர் நூற்றெண்பத்தொன்றும் உறழ்நிலையுடையவெனக் கொள்க.

ஏழெழுத்துச்சீரும் எட்டெழுத்துச்சீரும் ஒன்பதெழுத்துச் சீரும் அடியுறழ்வனவாக்கி மேன்மூன்று சீரானும் மூன்று நிலனேற்றிப் பதினைந்தெழுத்தடியளவும் உறழும் வஞ்சியடி என்பாருமுளர். அங்ஙனம் ஒன்பதெழுத்துச்சீர் இரண்டு வந்த குறளடி பதினெட்டெனப்படுதலின், வஞ்சிநிலம் பதின்மூன்றுதல் வேண்டும். ஓசை நோக்காது சீர்நோக்கி உறழ்ச்சி கொள்ளினென மறுக்க.

அவை அளவடியோடு ஒத்த சிறப்பினவன்மையானும், அவற்றுக்குத் தளைவகையின்மையானும் எடுத்தோதித் தொகை கூறிற்றிலனாயினும், நாம் அவற்றை எண்ணி உணர்ந்து கூறுங்கால் ஒரு சீர்க்கு அடிநான்காக வஞ்சியடி எழுநூற்றிருபத்து நான்காமெனக் கொள்க. அவையுறழுங்கால் மூன்றெழுத்துச் சீர் ஆறுமுதல் ஒன்பது உயர்வும் நாலெழுத்துச்சீர் ஏழாதி பத்தெழுத்துயர்வும், ஐயெழுத்துச்சீர் எட்டாதி பதினொன்றுயர்வும், ஆறெழுத்துச்சீர் ஒன்பதுமுதல் பன்னிரண்டுயர்வும் பெற்று நின்ற சீரோடு மூன்றெழுத்துச்சீரும் நாலெழுத்துச் சீரும் ஐயெழுத்துச்சீரும் ஆறெழுத்துச்சீருந் தந்துறழ்க வென்பது அவை:

"கால்காய்ந்தது காம்புநீடி

என்பது ஆறெழுத்தடி.

"நல்கூர்ந்து வில்லோர்சுரம்"

என்பது ஏழெழுத்தடி.

"வான்பெய்தது மண்குளிர்ப்புற"

என்பது எட்டெழுத்தடி

"தேன்பெய்தது செழுந்தரைதொறும்"

என்பது ஒன்பதெழுத்தடி.

இவை மூவெழுத்து மாசெல்காடு நின்றுறழ்ந்த நான்கடியும் வந்தவாறு. ஒழிந்தனவும் அன்ன.

"மண்மாய்ந்தென உள்வீழ்ந்தது"

என்பது, ஏழெழுத்தடி.

"விண்பாய்ந்தென மேற்றொடுத்தது"

என்பது எட்டெழுத்தடி

"காடோங்கிய கல்கெழுசுரம்"

என்பது ஒன்பதெழுத்தடி.

"கோடோங்கிய குறும்பொறைமருங்கு"

என்பது பதினெழுத்தடி.

இவை நான்கடியும் நாலெழுத்து மாசெல்சுரம் நின்றுறழ்ந்த அடி.

"மழைபெய்தென வான்வெள்ளென்று"

என்பது எட்டெழுத்தடி.

"தழைபச்சென்னுந் தன்மணன் காவு"

என்பது ஒன்பதெழுத்தடி.

"கமழ்பூந்துணர் கள்ளவிழ்தொறும்"

இது பத்தெழுத்தடி.

"இமிழ்தூங்கிசை யிசை சுரும்புவர"

என்பது பதினொரெழுத்தடி.

இவை நான்கும் ஐயெழுத்துப் புலிசெல்சுரம் நின்றுறழ்ந்த அடி.

இனி ஒன்பதெழுத்துமுதற் பன்னிரண்டளவும் உயர மற்றையபோல நான்கடி பெறும்.

"அமைவிடுகொடி வஞ்சியோர்ந்து"

என்பது ஒன்பதெழுத்தடி.

"கனைகுரலன கானக்கோழி"

என்பது பத்தெழுத்தடி.

"தினைப்புனத்திதணயற்பிரியாது"

என்பது பதினொரெழுத்தடி.

"மனைக்குறமகள் கடைப்புறந்தரும்"

என்பது பன்னிரண்டெழுத்தடி.

இவ்வாறே ஒழிந்தனவும் உறழ்ந்து கொள்க.

மூன்றுபாவின்றுணைச் சிறப்பின்மையின் வஞ்சியடி ஈண்டுப் போதந்து கூறினானென்பது. ஒழிந்த முச்சீரடி சிறுவரவிற்றாகலின் அதற்குக் கூறிய திலனென்பது. (5?)

வெண்பாவடி எட்டுநிலம் பெறுமெனல்

370. அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய
தளைவகை யொன்றாத் தன்மை யான.

இஃது ஆசிரியவடிக்கும் அதன் நடைத்தாகிய வஞ்சியடிக்கும் உரிய நிலங்கூறி வெண்பாவிற்குரிய நிலங் கூறுகின்றது.

(இ-ள்.) அளவடி ஐந்துஞ் சிந்தடி மூன்றுமென எட்டு நிலம்பெறுந் தளைவிரவாதவாற்றான் வெண்பாவடி (எ-று).

அளவடி முற்கூறியதென்னையெனின், மேல் நிறுத்த முறையாற்கொள்ளாது ஈண்டுச் சொல்லும் முறைமையாற் கூறினனென்பது.

"நின்று நினைந்து நெடிது பெயர்ந்து"

என்பது ஏழெழுத்தடி.

"அறிவறிந்தார்த் தேறியக்கா லஞ்சுவ தில்லை"

என்பது பதினென்கழுத்தடி.

இதனும்பர் நெடிலடியானும் வெண்பாவடி வருவன உள. அவை கட்டளையடி யெனப்படா, செப்பிக்கூறும் பாவாகாது செய்கை தோன்றியே நிற்குமாகலினென்பது' பிறிது காரணம் உண்டாயினும் அறிந்துகொள்க. தளைவகை ஒன்றுமையென்பது வெண்பாவும் வெண்பா நடைத்தாகிய கலிப்பாவும் மயங்காமை காரணத்தானென்றவாறு. கலியோசை மயங்கி வருவனவும் வெண்பா வடியுளுள. அவை நெடிலடி மூன்றனும் வருமெனக் கொள்க. ஓரோவடியே வெண்பா வடியுமாய்த், துள்ளிக் கலி யடியுமாகித் தளைவகை ஒன்றுமாகலான் அம்மயக்கந் தீராதென

'அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய'

என்றானென்பது.

"மாவருவாய் மாவருவாய் மாவருவாய் மாவருவாய்"

என்றக்கால், இதனை

"அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி" (தொல். செய்-11)

என்றதனாற் கலியோசை பிறப்பவுஞ் சொல்லிக் கண்டுகொள்க.

"மாவருவாய் மாவருவாய் மாவருவாய் மாவருவாய்
மாவருவாய் தேமா வரகு"

என்றிதனையே ஓசையூட்ட வெண்பாவாயிற்று. இது,

"மாவருவாய் மாவருவாய் மாவருவாய் மாற்றினரே"

எனக் கலியோசையாயினவாறறிக.

(வி-ரை)

இச் சூத்திரத்தால வெண்பாவிற்குரியதோர் தளை உணர்த்தினராம். சிந்தடியாவது ஏழெழுத்து முதல் ஒன்ப தெழுத்திறுகிய அடி. அளவடியாவது பத்தெழுத்து முதலாகப் பதினென்கெழுத்திறுகிய அடி. தளைவகை ஒன்றுமையாவது நிலை மொழியும் வருமொழியும் ஆகிய இயற்சீர் நேராயொன்றுவதும்

நிரையாயொன்றுவதுமன்றி மாறுபட வருவது. அவ்வழி நிரையீற்றியற்சீர் நிற்ப நேர்வரினும் நேரீற்றியற்சீர் நிற்ப நிரை வரினும் இயற்சீர் வெண்டளையாம். இனி ஒன்றுந் தன்மையாவது வெண்சீர் நிற்க வருஞ்சீர் முதலசையோடொன்றுவது வெண்டளையாம். இவ்விரண்டும் வெண்பாவிற்குத் தளையாமென்று கொள்க. என விளக்கம் காண்பர் இளம்பூரணர்.

கலியடியும் எட்டுநிலம் பெறுமெனல்.

371. அளவடி மிகுதி யுளப்படத் தோன்றி
இருநெடி லடியுங் கலியிற் குரிய.

இது முறையானே கலிக்குரிய நிலமுணர்த்துதல் நுதலிற்று

(இ-ள்.) ஐவகையடியினும் அளவடி மிகுதியாகிய பதின் மூன்றெழுத்தும் பதினான்கெழுத்தும் நெடிலடியுங் கழிநெடிலடியுங் கலியடிக்குரிய (எ-று).

எனவே, அதுவுந் தன் முதற்கட் பாவாகிய வெண்பாப் போல எட்டு நிலம் பெறுவதாயிற்று. ஒழிந்த அடி மூன்றனோடும் ஒவ்வாது மிக்க நிலம் இரண்டனையும் மிகுதியென்றானென்பது.

இனி:

"ஒத்த நாலெழுத்து ஒற்றலங் கடையே"
(தொல்-செய்.38)

என்பதே கொண்டு பதினேழெழுத்து முதல் நான்கு நிலனும் அளவடி மிகுதியெனப்படும் எனவும், அவை கலிக்குரிய எனவுங் கொள்வாருமுளர். அங்ஙனங் கொள்வார்க்கு,

'ஞாயிறு கடியாறு கடியாறு கடியாறு'

என்றதனைப் பதினேழெழுத்தடியென்று காட்டல் வேண்டும். அஃது ஆசிரியவடிவாம். ஆகலான் அற்றன்றென்பது. இனி,

'ஞாயிறு மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய்'

என்பதோவெனின், அது கலிப்பாவோடு தளைவகை ஒன்றிய வெண்பாவடியாகலானும், நிரைமுதல் வெண்சீர் வந்து நிரை தட்பினன்றி ஞாயிறு என நின்ற நிரையீற் றியற்சீர்ப்பின்னர்,

நேர்வந்தாற் கலித்தளையாகாது வெண்டளையாமாகலானுங் கட்டளையடிக்கு அவ்வாறு கோடல் குற்றமென்பது. அல்லதூஉங் கலிப்பாவிற்குப் பத்துநிலங் கொள்ளிற் கட்டளையடி அறுநூற்றிருபத்தைந்தன்றிப் பல்குமென்பது.

(வி-ரை)

அளவடியின் மிக்க பதின்மூன்று எழுத்து முதலாக நெடிலடியும் கழிநெடிலடியுமாகிய இருபது எழுத்தின்காறும் வரும் அடி கலிப்பாவிற்கு உரிய அடியாம் என்பர் இளம்பூரணர்

கலித்தளையின் விகற்பம்

372. நிரைமுதல் வெண்சீர் வந்துநிரை [1]தட்பினும்
வரைநிலை யின்றே யவ்வடிக் கென்ப.

இதுவுங், கலித்தளை விகற்பங் கூறுகின்றது.

(இ-ள்.) நிரையீற்றியற்சீரும் நிரையீற்றாசிரியவுரிச்சீரும் நிற்ப நிரைமுதல் வெண்சீர் வந்து நிரையொன்றியக்காலுங் கலித்தளையாம் (எ-று).

"மணிபுரை திருமார்பின் மறுத்தயங்கத் தோன்றுங்கால்"

என்புழித் 'திருமார்பின்' என நிரைமுதல் வெண்சீர் வந்து 'மணிபுரை' யென்னுஞ்சீர் இறுதி நிரையொடு தட்டுக் கலித்தளையாயிற்று. எனவே, நிரைமுதலியற்சீர் வந்து நிரைதட்பினும் நேர்முதல் வெண்சீர் வந்து ஒன்றுதொழியினும் அது கட்டளை வகையாற் கலியடியாகாதென்றவாறு; என்னை? துள்ளாத இயற்சீர்ப்பின் நிரைமுதல் வெண்சீர் வந்து துள்ளுவிக்கல் வேண்டுமாதலானும் ஞாயிறு மாசேர்வாயென்பது வெண்பாவடியுமாம் ஆகலானுமென்பது. 'அடிக்கென்ப' என்றதனான் இதுவுங் கட்டளையடிக்கே யென்பது கொள்க. மற்று நிரை முதல் வெண்சீர் வருவது முதனின்ற இயற்சீர்ப்பின்னர் இடைநின்ற இயற்சீர்ப்பின்னரென்பது அறியுமாறென்னையெனின், அங்ஙனம் வரையாது கூறினமையின் முதற்கண்ணதே இவ்விதியென்ப

1. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே. தட்டல் எனப் பாடம் கொள்வர் இளம்பூரணர்.

தாம். அல்லதூஉம் அவ்வாறு இயற்சீரினை இடையும் வரு மென்றுகொள்ளிற் பதின்மூன்றெழுத்திற் சுருங்கிய நிலனும் அது பெறுவான் செல்லும். செல்லவே கலியோசை இனிது பெறலாகாவென மறுக்க, என்றூர்க்குப் பின்வருஞ்சீர் மூன்றும் நிரைமுதல்வெண்சீர் வருவதென்றிலனாதலின் மூன்றுஞ்சீர் நேர் முதல் வெண்சீர் வந்தும்,

"வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே"

(தொல்.செய்.29)

என்றதனானும் இடைநிற்பன வெண்சீரென்பது பெறுதுமாக லானும் அது கட்டளையன்றென்பது. இனி முதனின்றது நிரை யீற்றியற்சீராகலான் துள்ளலோசை பிறவாமையின் அவற் றோசை குறைதீரக் கலித்தளை பலவாகி வரல்வேண்டுமென்பது. இவ்வாற்றான் ஓசைச்சுருக்கம் பெருக்கம் உணர்தற்கு அருமை நோக்கி,

"அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி
வகுத்தன ருணர்த்தலும் வல்லோ ராறே"

(தொல்-செய்.11)

என்பானாயிற்றென வுணர்க. இக்கருத்தினானன்றே நிரைமுதல் வெண்சீர் வருகவெனவும் நிரையீற்றியற்சீர்ப் பின்னர் மாசெல் வாய் மூன்றுவரினுஞ் சிறிது கலியோசை பிறக்குமாயினும் அதனைக் கட்டளையடியென நேரானாயிற்றுமென்பது.

(வி-ரை)

வெண்பா உரிச்சீரொன்று தன் வருஞ்சீர் முதலசையோடு ஒன்றுதலும் வெண்பா உரிச்சீர் நிற்பப் பிறிதாகி வரும்சீர் முதலசையோடு ஒன்றுதலும் கலித்தளையாம் என இந்நூற்பா விற்கு விளக்கம் காண்பர் இளம்பூரணர். (60)

சீர்வகையான் வரும் கலியடி தளை விரவி வருமெனல்

## 373. விராஅய தளையும் ஒரூஉநிலை [1]யின்றே.

---

1. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே. இதுவே எனப்பாடம் கொள்வர் இளம்பூரணர்.

இது, சீர்வகையான்வரும் கலியடித்தளை விரவினும் கடியப் படாதென்கின்றது; யாதனொடு விரவியோவெனின் வெண்பாவி னோடு விராய்த் தட்பினுமென்றவாறு; என்னை?

"தளைவகை யொன்றாத் தன்மை யான" (தொல்-செய். 58)
என வெண்பாவிற்குங் கூறினமையின்.

(இ-ள்.) வெண்சீர் ஒன்றிவருதலுங் கடியப்படா கலிக்கு (எ-று.)

'சீர்வகையடிக்கண்' என்பது என்னை பெறுமாறெனின்,

'விரா அய தளை' யென்றமையிற் பெறுதுமென்பது.
உதாரணம்:

"தளைவகை யொன்றாத் தன்மை யான" (தொல்-செய்.58)
என்புழிக் காட்டப்பட்டது.

(வி-ரை)

விராஅயதளையும் — பெரும்பாலும் ஆசிரியத்தளையும், வெண்டளையும், சிறுபான்மை வஞ்சித்தளையும் விரவி வருதல் என்பர் இளம்பூரணர். (61)

ஆசிரியப்பாவினுள் இயற்சீர் வெள்ளடியும் வருமெனல்

374 இயற்சீர் வெள்ளடி யாசிரிய மருங்கி
னிலைக்குரி மரபி னிற்கவும் பெறுமே.

இது வெண்சீரொன்றிவரும் அடி கலிப்பாவிற்கும் உரித் தென்ற முறையானே, இயற்சீர் வெள்ளடியான் வரும் ஆசிரியத் திற்கு மயங்கியல் வகையான் நிலைக்குரித்தாகி நிற்கவும் பெறு மென்கின்றது.

(இ-ள்.) அம்மயங்கியல்வகைதான் அப்பாவிற்கு உரிமை பூண்டு நிற்கும்; ஆசிரிய அடியோடு கூடிய கூட்டத்துக்கண் (எ-று).

வெண்பாவினுளாயின் ஆசிரியவடி முழுவதுந் தன்றளை யோடு வாராது; என்னை?

"தூஉத் தீம்புகை தொல்விசும்பு போர்த்ததுகொல்
பாஅய்ப் பகல்செய்வான் பாம்பின்வாய்ப் பட்டான்கொல்

மாஅ மிசையான்கொ னன்ன ளறுநுதலார்
மாஅமை யெல்லாம் பசப்பு'' (மலைபடுகடாம்)

என்பதன் முதலடியுள்ளே 'தூஉத் தீம்புகை'யென ஓர் ஆசிரியத் தளைவர மற்றையன வெண்டளையாகி வந்தமையின். அற்றன்றி முழுவதூஉம் ஆசிரியத்தளை வரின் வெண்பா சிதையுமாகலின் இதனையே சொல்லின் முடிவிலக்கணத்தான் வெண்பா வென்றான். எனவே, வேற்றுசை விராயவழித் தன்னோசை அழிதல் இதற்குப் பெரும்பான்மையாயிற்று. ஆசிரியமாயின் அவ்வாறு அழியாதென்பது கருத்து. என்போலவோ வெனின் பளிங் குடன் அடுத்த பஞ்சி வேற்றுமையால், பளிங்கு வேறுபடி னல்லது பஞ்சி வேறுபடாததுபோல வென்பது இதனான் வெள்ளை யென்பது ஒப்பினான் ஆகிய பெயரென்பதூஉம் பெற்றாம்.

''எறும்பி யளையிற் குறும்பல் சுனைய
வுலைக்க லன்ன பாறை யேறிக்
கொடுவி லெயினர் பகழி மாய்க்கும் (குறுந்-12)

இவ்வாசிரியத்துள் எல்லாவடியும் பாவேறுபட்டு இசையா மையின் மூதற்கணின்ற இயற்சீர் வெள்ளடி நிலைக்குரிமரபின் நின்றதாயிற்று.

''கொலைநவில் கேட்டுவன் கோள்வேட் டெழுந்த
புகர்நுதல் யானை நுதல்மீ தழுத்திய
செங்கோற் கடுங்கணை போலு மெனஅது
நெஞ்சங் கவர்ந்தோ நிரையிதழ்க் கண்ணே''

என்பது, செய்யுண் முழுவதும் இயற்சீர் வெள்ளடியான் வந்தது.

மற்று இயற்சீர்வெள்ளடியல்லது பிறவடி ஆசிரியத்துண் மயங்கப்பெறுதோவெனின், அது நிலைக்குரிமரபின நில்லாமை யின் உம்மையால் தழீஇக்கொள்ளப்படுஞ் சிறுபான்மை வென்பது.

''பாஅல் புளிப்பினும் பக லிருளினும்''

என்றாற்போல்வன.

''மாவழங்கு பெருங்காட்டு மழகளிறு காணாது''
(யா-வி-30)

என்னும் ஆசிரியவடியினைக் கலிப்பா மயங்கிற்று என்பாரும்உளர். 'அது துள்ளச்செல்லுங்கால் அளபெடுக்கவேண்டும்மெனக் கூறிமறுக்க.

(வி-ரை)

இயற்சீர் வெண்டளையானாகிய வெண்பா அடி ஆசிரியப் பாவில் நிற்றற்குரிய என்பது இதன் கருத்தாம். 'இயற்றளை வெள்ளடி வஞ்சியின் பாதம் அகவலுள்ளான் மயக்கப்படா அல்ல' என்னும் காரிகையும். வெண்பாவில் வேற்றுப்பாவிற்குரிய ஓசை கலப்பினும், வெண்பா ஓசை அழியும். ஆனால் ஆசிரியப் பாவில் பிறபாவின் ஓசை கலப்பின் அதன் ஓசை அழியாது. பஞ்சைச் சேர்ந்த பளிங்கு தன்னிறம் வேறுபடும்; ஆனால் பஞ்சின் நிறம் வேறுபடுவதில்லை. எனவே வெண்பா பளிங்கு போன்றது என்பது கருத்து. கொலைநவில் வேட்டுவன் என்ற பாடலில் வெள்ளடி முழுதும் வந்தது என்று பேராசிரியர் காட்டினார். இதனை அகவலோசை பிறக்குமென்று கொள்ளின் இயற்சீர் வெண்டளையால் வருமென்ற கட்டளை வெண்பா இன்றாம் என மறுப்பர் நச்சினார்க்கினியர். (62)

கலிப்பாவிற்கு ஐஞ்சீரடியும் வருமெனல்

375. வெண்டளை விரவியும் ஆசிரியம் விரவியும்
ஐஞ்சீ ரடியும் உளவென மொழிப.

இஃது ஐஞ்சீரடியும் வருமாறு கூறுகின்றது.

(இ-ள்.) மேனின்ற அதிகாரத்தாற் கலிப்பாவிற்கு ஐஞ்சீரடியும் உள (எ-று).

"வெண்டளை விரவியும் ஆசிரியம் விரவியும்"

என்றது என்னையெனின், அவ்வைஞ்சீரடி வெண்பாவோடு விராயும் ஆசிரியப்பாவோடு விராயும் வருமென்றவாறு. ஈண்டுத் தளையென்றது அப்பாக்களையாதலான் அப்பாக்களோடு விரவு மெனவே, அப்பாக்களை உறுப்பாகக்கொண்டு வரும் பிற செய்யுட் கண்ணும் அவ்வைஞ்சீரடி வருமென்பது பெற்றாம். வெண்டளையொடு விரவுமெனவே ஐஞ்சீரடி அவற்றுக்கு உரிய வல்ல வென்பதாம்; எனவே, கலிப்பாவின்கண் வரும் ஐஞ்சீரடி யாயின் அக்கலியோசைக்கு உரிமையுடைத்தென்பதாம்.

'உள' வெனவே, ஐஞ்சீரடி கலியினுட் பயின்றுவருமென் பதூஉம் அல்லனவற்றுட் பயிலாவெனவுங் கொள்க.

'விராஅய தளையு மொரூஉநிலை யின்று. (தொல்-செய்-61)

எனப்பட்ட கலிப்பாவினோடு இயைபுபட்ட வெண்பாவடியும் அதனோடு இயைபுபட்ட ஆசிரியவடியுங் கூறி, அம்மூன்றனையும் உடன் கூறினுைமினும், ஆண்டுச் சிறந்தவாறே ஈண்டும் அவ்வதிகாரத்ததாக நாட்டி ஐஞ்சீரடியும் உளவென்று ஆண்டு நின்ற கலிக்குக் கூறிய அவ்வடி வெண்டளைவிரவியும் ஆசிரியம் விரவியும் வருமெனப் பிறவற்றுக்குங் கூறினனென்பது.

'ஐஞ்சீரடியும்' அளவடி மூன்றுபாவிற்கும் உரித்தென்றால் அளவடியை அவ்வப்பாவிற்கு வேறுவேறாகக் கொண்டாற்போல ஐஞ்சீரடியையும் பாத்தோறும் வேறுபடுத்துக்கொள்க.

உதாரணம்:

''தகைமிகு தொகைவகை யறியுஞ் சான்றவ ரினமாக''

(கலி-39)

எனக் கலிப்பாவினுள் ஐஞ்சீரடி வந்தது.

''அரவணிந்த கொடிவெய்யோ னகம்புக்கான்று அரசவையன் றகற்றியே'' எனக் கலியடி வெண்சீரான் வந்தது.

''கண்டகம் பற்றிக் கடக மணிதுளங்க
வொண்செங் குருதியி னோஒ கிடப்பதே—கெண்டிக்
கெழுதகை யில்லேன் கிடந்தூடப் பன்னா
ளழுதகண் ணீர்துடைத்த கை'' (யா-வி-93)

என்னும் வெண்பாவினுள் இரண்டாமடி ஐஞ்சீரான் வந்தது.

சிறுசோற்றானும் நனிபல கலத்தன் மன்னே''
பெருஞ்சோற்றானும் நனிபல கலத்தன் மன்னே''

(புறம்-235)

என்பன ஐஞ்சீரான் வந்த ஆசிரியவடி - ஆசிரியத்துள் இவ்வாறு இரணடடி ஒருங்கு நிற்குமென்பது அறிவித்தற்கு ஐஞ்சீரடிக்குச் சிறந்த கலிப்பாவோடு வைத்தான் அதனை மூறை பிறழவென்பது. எனவே, வெண்பாவிற்கு ஐஞ்சீரடி ஒன்றல்லது வாராதாயிற்று. இக் கருத்தேபற்றி,

"ஐஞ்சீ ரடுக்கலு மண்டில 'மாகலும்
வெண்பா யாப்பிற் குரிய வல்ல"

என்றார் பிறருமெனக.

உம்மையான் இருசீரடியும் கலியடியாம்.

"மன்று பார்த்து
நின்று தாயைக்
கன்று பார்க்கும்
இன்றும் வாரா" (467-பேரா)

எனக் கொச்சகக்கலியுள் இருசீர் வந்தது.

மூன்றுபாவிற்கும் முச்சீரடி உரித்தென்பது முன்னர்ச் சொல்லுதும், வரையாது கூறினமையின் கலிப்பாவிற்காயின் ஐஞ்சீரடி வருங்கால் தளைவிரவியும் விரவாதும் வேண்டியவாறு வரப்பெறுமென்பது.

(வீ-ரை)

ஆசிரியப்பா, கலிப்பா ஆகிய இரண்டுபாவிலும், ஐஞ்சீரடி வருமென்பது இதன் கருத்தாகும். 'அருகிக் கலியோடு அகவல் மருங்கின் ஐஞ்சீரடியும் வருதற்குரித்தென்பர் வான்தமிழ் நாவலர்' என்னும் காரிகையும். (63)

கலிப்பாவிற்கு அறுசீரடியும் உரித்தெனல்

**376. அறுசீ ரடியே யாசிரியத் தளையொடு
நெறிபெற்று வரூஉ நேரடி முன்னே.**

இது, முறையானே அறுசீரடியுங் கலிப்பாவிற்கு உரித்தென்கின்றது.

(இ-ள்.) நாற்சீரடிக்கு முன்னும் பின்னும் அறுசீரடியும் வருதலுமுண்டு. அன்னது வருங்கால் தனக்குரிய வெண்டளையேயன்றி ஆசிரியத்தளையொடும் வழக்குப் பெற்று நடக்குங் கலிப்பாவினுள் (எ-று.)

'நெறிபெற்றுவரும்' என்றதனாற் சிறுபான்மை நேரடி இடையிட்டன்றி ஒரு செய்யுள் முழுவதூஉந் தானே வருதலுங் கொள்க. 'ஆசிரியத்தளையொடும்' என்ற உம்மையாற் கலி தனக்குரிய வெண்டளையான் வருதலும் மயங்கிவருதலும் உரியவாம்.

"முன்னைத்தஞ் சிற்றில் முழங்கு கடலோதம் மூழ்கிப்
பெயர
அன்னைக் குரைப்பன் அறிவாய் கடலேயென் றலறிப்
பேருந்
தன்மை மடவார் தளர்ந்துகுத்த வெண்முத்தம்
புன்னையரும் பேயென்னப் போவாரைப் பேதுறுக்கும்
புகாரே யெம்மூர்"

என்பது, மூன்றும் அடி நேரடியாக முன்னும் பின்னும் அறுசீர் வந்தது. பிறவுமன்ன.

"கரைபொரு கான்யாற்றங் கல்லதர் எம்முள்ளி வருதி ராயின்
அரையிருள் யாமந் தடுபுலியோ நும்மஞ்சி யகன்று போக
நரையுருமே றுங்கைவே லஞ்சுக நும்மை
வரையர மங்கையர் வெளவுத லஞ்சுதும் வாரலையோ"

என்பதன் முதலடியுள் 'வருதி ராயின்' என்பது ஆசிரியத்தளை; ஒழிந்தன வெண்டளை. 'முன்' னென்றதனுன் இடமுன்னுங் காலமுன்னுங் கொள்ளப்படும்.

"தொக்குத் துறைபடியுந் தொண்டையஞ்செவ் வாய்மகளிர்
தோண்மேற் பெய்வான்
கைக்கொண்ட நீருட் கருங்கண் பிறழ்வ
கயலென் றெண்ணி
மெய்க்கண்ணும் பெய்கலார் மீண்டுகரைக் கேசொரிந்து
மிளிர்வ காணுர்
எக்கர் மணற்கிளைக்கு மேழை மகளிர்த்தே
யெறிநீர்க் கொற்கை"

எனச் செய்யுள் முழுவதும் அறுசீரடியே வந்தது.

"வரைபுரை திரைபோழ்ந்து மணநாறு
நறுநுதல் பொருட்டு வந்தோய்"

என ஆசிரியத்தளையானும் அறுசீரடி வந்தது.

மற்றுத் தளையென்றேழுவது கட்டளையடிக் கென்றிரால் ஈண்டுத் தளையென்றதென்னையெனின், அவ்வரையறை ஒருவன் சொல்லுவது: அறுசீரடி வருங்கால் முதற்கண் நேரடி தூங்கிப் பின் இருசீரொடு தொடுத்தல் வேண்டும் என்னும். அஃது இச் சூத்திரத்திற்கேலாது; நேரடிமுன் அறுசீர் வரினென்பது பதின் சீரடியாமாகலின் அல்லதூஉங் குறளடி தூங்கியுஞ் சிந்தடி

தூங்கியும் அறுசீரடி வருதலின் அஃது அமையாதென்பது. என்னை,

"வாராது நீத்தகன்றூர், வருமாறு பார்த்திருந்தார், வடிகண் போல'

என்றவழி இருசீரான் யாத்தமையின் அது தூக்கெனப்படாது;

"செங்காந்தள் கைகாட்டுங் காலஞ்,
சேட்சென்றூர் வாரார் கொல் பாவம்"

என முச்சீரான் யாத்தமையின் அதுவுந் தூக்கெனப்படாது; அறுசீரடியே தூக்காகக் கொண்டமையின், நேரடி முன் இரு சீரடி வந்ததென்றதூஉம் பிழைக்குமென்பது.

(வி-ரை)

ஆசிரியத்தளை பயின்ற அறுசீரடி, கலிப்பாவிற்குரிய நேரடிக்கு முன்னும் பின்னும் வரும் என்பது இதன் கருத்தாகும். இவ்வடி ஆசிரியப்பாவிற்கு வருமென்பர் இளம்பூரணர்.

கலிப்பாவுள் முடுகியற்கண் எழுசீரடி உரித்தெனல்

## 377 எழுசீ ரடியே முடுகிய னடக்கும்.

இஃது எழுசீரான் வரும் அடி கூறுகின்றது.

(இ-ள்.) எழுசீரான் வருமளவும் அடியுள; அவை பயின்று நடப்பது முடுகியற்கண் (எ-று.)

எனவே, முடுகாதவழி அத்துணை நடையாட்டம் இல எழுசீரடி என்பதாம். பாவென்னும் உறுப்பு இடனுகும். ஏகாரம் பிரிநிலை.

"தாதுறு முறிசெறி தடமல ரிடையிடை
தழலென விரிவன பொழில்'' (யா. வி. 229)

எனவும்,

"கவிரிதழ் கதுவிய துவரித ழரிவையர்
கவிமயிற் கணமொடு விளையாட''

எனவும், எழுசீரடி முடுகிவந்தது. இவை பரிபாடலுள்ளுங் கலியுள்ளுங் காணப்படும். முடுகாது வரும் எழுசீரடி வந்தவழிக் கண்டுகொள்க.

(வி-ரை)

முடுகியல்—அராகம் (65)

ஐஞ்சீரடியும், அறுசீரடியும முடுகியல் பெற்றும் வருமெனல்

**378. முடுகியல் வரையார் [1]முதலீ ரடிக்கும்.**

இஃது, எய்தாத தெய்துவித்தது; எழுசீரடியேயன்றி ஐஞ்சீரடியும் அறுசீரடியும் அராகந் தொடுக்குமென்றமையின்.

(இ-ள்.) எழுசீரடிக்கு முன்னர் இடைநின்ற ஐஞ்சீரடியும் அறுசீரடியும் முடுகியல் நீக்கார் (எ-று)

அவற்றுக்குச் செய்யுள்:

"காரெதிர் கலியொலி கடியிடி யுருமி னியங்கறங்க
நேரிதழ் நிரைநிரை நெறிவெறிக் கோதைய
ரணிநிற்ப" (கலி-105)

என்பது ஐஞ்சீரடி முடுகிவந்தன.

"மலர்மலி புகலெழ அலர்மலிர்
மணிபுரை நிமிர்தோள் பிணை இ" (கலி-102)

என்பன அறுசீரடி முடுகிற்று.

முதல் ஈரடிக்கும் என்ற உம்மை எச்சவும்மை. அவ்வும்மையால் நாற்சீரடியும் இத்துணைப் பயிலாது முடுகுமென்பது.

"புரிபு புரிபு புக்க பொதுவரைத்
தெரிபு தெரிபு குத்தின ஏறு" (கலி-103)

என வரும்.

"இரிபெழுபு அதிர்பதிர்பு இகழ்ந்துடன் பலர்நீங்க
வரிபரி பிறுபிறுபு குடர்சோரக் குத்தித்தன்
கோடழியக் கொண்டானை யாட்டித் திரிபுழக்கும்
வாடில் வெகுளி யெழிலேறு கண்டை யிஃதொன்று"
(கலி-104)

என்பதனுண் முடுகியலடி இரண்டும் வந்தன.

---

1. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே. 'முதலிரண்டடிக்கும்' எனப் பாடம் கொள்வர் இளம்பூரணர்.

மற்று இவற்றை அராகமென்னுமோவெனின், அதனைப் பரிபாடற்கு உறுப்பென்றமையாற் பிறவடியொடு தொடரா வுற்று வாவேண்டும். இஃது அன்ன தன்றென்பது. எழுசீரடியிற் சிறுவரவின வாகலான் ஐஞ்சீரடியினையும் அறுசீரடியினையும் வரையாரென்றான். அவற்றினுஞ் சிறுவரவிற்றாகலின் இதனை உம்மையாற்கொண்டான். முற்றும்மையாகாதோ வெனின் அதுவும் எச்சப்படுதலின் அமையுமென்பது. அல்லதூஉம் முதலடியிரண்டே அன்மையின் முற்றாகாதென்பது.

(வி-ரை)

அவ்வராகம் ஐஞ்சீரடியையும், அறுசீரடியையும் பெற்று வருதல் உண்டு என்பது இதன் கருத்தாகும். (66)

வெண்பாவிலும், ஆசிரியத்துள்ளும் முடுகியலடி வாராஎனல்.

**379. ஆசிரிய மருங்கினும் வெண்பா மருங்கினு**
**மூவகை யடியு முன்னுத லிலவே.**

இது, முடுகியல் இன்னபாவிற்கு உரித்தென்கின்றது; எய்திய திகந்துபடாமற் காக்கின்றதூஉமாம்: என்னை? நாற்சீரடி முதன் மூன்றும் அகவலோசைக்குஞ் செப்பலோசைக்கும் உரியவெனவே, அவை முடுகி ஆண்டுஞ் சேறலெய்தியதனைக் கலிப்பாவிற்கல்லது ஆகாதென்றமையின்.

(இ-ள்) ஆசிரியம் வெண்பா என்னும் இரண்டு பாவினும் முடுகியலடி மூன்றும் புகா (எ-று.)

உம்மை, முற்றும்மை மற்றை முச்சீரடியோடு நான்கென்னுமேவெனில், அஃது இவற்றுக்கு ஈண்டு ஒவ்வாது முடுகி வருதல் பெரும்பான்மைத்தாகலின் 'மூவகையடி' யென அடையடுத்துக் கூறினனென்பது. அல்லதூஉம் எழுசீரடி விலக்கானன்றே, அதனை ஆசிரியமருங்கினும் வெண்பாமருங்கினும் மயங்குமென்ப தின்மையினென்பது.

இனி, அறுசீரடி ஆசிரியத்தளையோடும் வருமென்றது (376) அகவலோசைக்கு உரித்தென்றமையானும்.

"வெண்டளை விரவியும் ஆசிரியம் விரவியும் ஐஞ்சீரடியும் வரும்" என்றமையானும் அவற்றை அளவடியுடன் எடுத்தோதி

விலக்கினன். மூவகை அடியுமென்றது ஐஞ்சீரடி முதன்மூன்று மெனப்படுமென்பார், அளவடி முடுகுதல் ஆசிரியத்திற்கும் உரிமையின் அது வரையறையின் றென்றலும் ஒன்று; அது,

"திருமழை தலைஇய இருள்நிற விசும்பின்" (பத்துப்-மலைபடு 1) என வரும். அதற்கு முடுகியற்றன்மை இன்றென்பது கருத்து. வஞ்சிப்பாவிற்குக் குறளுஞ் சிந்தும் அல்லது இன்மையின் இவ் வாராய்ச்சி இன்றென்பது.

எனவே, ஆசிரியத்தளையோடு முடுகிய வடியினைக் கலியடி யென்றும் முடுகாத அறுசீரடி ஆசிரியத்தளையோடு நெறிபெற்று வருதற்குங்கலிப்பாவிற்குச் சிறுபான்மையான் வருமென்பதூஉஞ் சொல்லப்பட்டது. அல்லாதார் ஐஞ்சீரடி முதலிய மூன்றுங் கலிக் குரிய, பிறபாவிற்கு உரியவல்ல என்றற்கு வந்தது இச்சூத்திர மென்ப அற்றன்று; அங்ஙனம் கூறில் தாம் வேண்டும் ஐஞ்சீரடி ஆசிரியத்துள்ளும் புகாதென்று மறுக்க. 'முன்னுதலில' வென்றது யாண்டுமாகா தென்றவாறு. இவ்விலக்கணமெல்லாம் மேற்காட்டிய செய்யுளுள்ளே கண்டறிந்து கொள்க.

(வி-ரை)

முற்கூறிய அடிவரையுடைய ஐஞ்சீர், அறுசீர், எழுசீர் ஆகிய முடுகியல் கலிப்பாவிற்கே வரும். ஏனைய ஆசிரியம் வெண்பா ஆகிய இரண்டிற்கும் வாரா என்பது இதன் கருத்தா கும். (67)

ஆசிரியத்துள் ஈற்றயல் இடையடிகள் சிந்தடியானும் வருமெனல்

**380. ஈற்றய லடியே யாசிரிய மருங்கில்**
**தோற்ற முச்சீர்த் தாகு மென்ப.**

**381. இடையும் வரை யார் [1]தொடையுணர் வோரே.**

இவை இரண்டு சூத்திரமும் உரை யியைபுநோக்கி உட னெழுதப்பட்டன. இவை, ஆசிரியத்துட் சிந்தடி வருமென் றமையின் எய்தாத தெய்துவித்தனவாம்.

---

1. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே. தொடையுணர்ந் தோரே எனப் பாடம் கொள்வர் இளம்பூரணர்.

(இ - ள்.) ஆசிரியத்துள் எருத்தடியொன்றும் இடையடியிரண்டுமாகி முச்சீரடி வரும் (எ - று).

'முச்சீர்த்' தென்று ஒருமை கூறினமையின் அஃது ஒன்றாகலும், தொடையுணர்வோ ரென்றமையின் இடைவருவனஇரண்டாகலுங் கூறினானென்பது 'இடையும்வரையார்' என்றமையான் ஈற்றயன் முச்சீர்த்தாதல் பெரும்பான்மை.

உதாரணம்:

"கண்ணி கார்நறுங் கொன்றை காமர்

... ... ... ... ...

நீரற வறியாக் கரகத்துத்

தாழ்சடைப் பொலிந்த வருந்தவத் தோற்கே" (புறம்.1)

என அப்பாட்டினை முழுவதூஉங் கொள்ள ஈற்றயலடி முச்சீர்த்தாயிற்று;

"நீரின் தண்மையுந் தீயின் வெம்மையுஞ்

சாரச் சார்ந்து தீரத் தீருஞ்

சாரல் நாடன் கேண்மை

சாரச்சாரச் சார்ந்து

தீரத் தீரத் தீர்பொல் லாதே" (யா. வி. 253)

என்பதனுட் 'சாரல் நாடன் கேண்மை' எனவுஞ் 'சாரச் சாரச் சார்ந்து' எனவும் முச்சீரடி இரண்டு வந்தன. ஏகாரம் பிரிநிலை மற்று,

"நரந்தம் நாறுந் தன்கையாற்

புலவுநாறு மென்தலை தைவரு மன்னே" (புறம்-253)

என முச்சீரடி இடையும் ஒன்று வந்ததாலெனின், 'தோற்ற' மென்றதனுன் எருத்தடி முச்சீராய காலத்துக் குட்டம்பட்டு இனிது விளங்கும். இடையிடை ஒன்று வருதலும் உண்டாயினும் அத்துணை இனிதன்று அது வென்பது கொள்க.

"பெரியகட் பெறினே" (புறம்-235)

என இருசீரடி வந்ததாலெனின், அதனைச் சொற்சீரடி யென்றுணர்க.

"உப்பிலாஅ அவிப்புழுக்கல்-கைக்கொண்டு பிறக்குநோக்காது
(புறம்-235)

எனவுங் காட்டுப. இவை வஞ்சியடியெனப் படுமென்பது. வெண்சீரான் வஞ்சியடி வருமோவெனின், வாரா; வஞ்சிச்சீர் விரவினல்லதென்பது.

"உப்பிலாஅ அவிப்புழுக்கல்"

என்பதோவெனின், அது மற்றை இருசீரடியொடு கூட்டத்துக் காட்டலானும் வஞ்சியடி போன்றது.

(வி-ரை)

எருத்தடி-ஈற்றயலடி. ஆசிரியப்பாவின் ஈற்றயலடியும், இடையீரடிகளும், முச்சீரடியாக வருமென்பது இந்நூற்பாவின் கருத்தாகும். ஈற்றயலடி முச்சீராய்வரின் அதனை நேரிசையாசிரியப்பா என்பர். இணையடிகள் முச்சீராய்வரின் அதனை இணைக்குறள் ஆசிரியப்பா என்பர். குட்டம்பட்டு-நாற்சீரில் குறைவுபட்டு.

கலிப்பாவிற்குச் சிந்தடியும் உரித்தெனல்

## 382. முச்சீர் முரற்கையு ணிறையவு நிற்கும்.

இது, கலிப்பாவிற்கு அளவடியும் நெடிலடியும் அதனி ணிறந்த அடியும் உரிமை கூறி இனிச் சிந்தடியும் உரித்தென்கின்றது.

(இ-ள்) கலிப்பாவினுண் முச்சீரடி நிரம்பவும் நிற்கும் (எ-று).

'நிறைய நிற்றல்' என்பது அச்செய்யுண் முழுவதும் அவ்வடியே வருதலாம். உம்மையான் ஒரு செய்யுள்நிறைய வாராது ஒன்றும் இரண்டும் பலவுமாகி அம்முச்சீரடி வருதல் பெருவரவிற்றென்பது. தாங்குறைந்த அடியாதலிற் கலிப்பாவிற்கு உறுப்பாகிய சின்னத்திற் குறைய நிற்கும் இபல்பினவாயினும் நிறைய நிற்றலுடைய கொச்சகத்துளென்றவாறு.

"செய்தானக் கள்வன் மகன்" (கலி-51)

எனவே வெண்கலியுள் இறுதிக்கணல்லது வாராது

"நின் கண்ணாற் காண்பென் மன்யான்" (கலி-:9)

என்பது இடைவந்தது. எண் உறுப்பின்கண் இரண்டும் நான்கும் வருமாறு கண்டு கொள்க.

"நீர்வரக் கண்கலுழ்ந் தாங்குக்
கார்வரக் கண்டனங் காதலர்
தேர்வரக் கண்டில மன்னோ
பீர்வரக் கண்டனந் தோளே"
என முச்சீரடி ஒரு செய்யுள் நிறையவும் வந்தவாறு.

(வி-ரை)

முரற்கையுள்-கலிப்பாவில். கலிப்பாவினுள் முச்சீரடியே மிகுதியாக வருதலுமுண்டு எனப்பொருள் காண்பர் பேராசிரியரும், நச்சினார்க்கினியரும். இளம்பூரணர் மேல் ஈற்றயலடி முச்சீராய் வருமென்றது நாற்சீராய் நிரம்பி கலிப்பாவுள் வரும் என இந்நூற்பாவிற்கு உரை காண்பர்.

வஞ்சியின் இறுதியடி ஆசிரிய அடியால் முடியுமெனல்

## 383. வஞ்சித் தூக்கே செந்தூக் கியற்றே.

இது, முறையானே அடியுரிமை கூறியவாற்றான் வஞ்சிப் பாவிற்குக் கூறியதிலன்; ஈண்டுக் கூறினன். எற்றுக்கு? அது, "வஞ்சி யடியே யிருசீர்த் தாகும்" (தொல்-செய்-49) எனவும், "முச்சீ ரானும் வருமிட னுடைத்து" (தொல்-செய்-47) எனவும் மேற் கூறப்பட்டமையின். அது நோக்கி அடியுரிமை கூறப்படாத வஞ்சிப்பாவிற்கு வஞ்சியினது ஈற்றடியும் அவ்விரு சீரடியும் முச்சீரடியுமாவான் சென்றதனை விலக்கி இன்ன அடியான் முடியுமென்கின்றது.

(இ-ள்.) வஞ்சிப்பாவினது இறுதியடி ஆசிரியவடி இறுதி போன்று இறுக (எ-று).

எனவே, ஆசிரியத்திற்கு ஓதிய சீரானுந் தளையானும் இறுமென்றவாறு.

"மாக்கடல் நிவந்தெழுதரும்
செஞ்ஞாயிற்றுக் கவினைமாதோ
அனையை யாகன்மாறே
தாயில் தூவாக் குழவி போல
வோவாது கூஉநின் னுடற்றியோர் நாடே" (புறம்-4)
என மண்டிலவாசிரியத்தா னிற்றது.

'செந்தூக் கியற்றே' யென்ற மாட்டேற்றானே,

"ஈற்றய லடியே யாசிரிய மருங்கிற்
றோற்ற முச்சீர்த் தாகு மென்ப" (தொல்-செய் 68)

எனவும்,

'இடையும் வரையார் தொடையுணர் வோரே' (தொல்-செய் 69)

எனவும் எய்திய விதி ஈண்டும் எய்துவிக்க.

"அனையை யாகன் மாறே" (புறம்-4)

என முச்சீரடி இடை வந்தது.

"இழைபெற்ற பாடினிக்குக்
குரல்புணர்சீர்க் கொளைவல்பாண்
மகனும்மே யெனவாங்கு
ஒள்ளழற் புணர்ந்த தாமரை
வெள்ளி நாராற் பூப்பெற் றிசினே." (புறம்-11)

இஃது ஈற்றயலடி முச்சீர்த்தாகி வந்த செந்தூக்கியற்றாகி இற்ற வஞ்சிப்பா. பிறவும் அன்ன.

ஈண்டுத் தனிச்சொல் வேண்டுமென்று பிற்காலத்து நூல் செய்தாரும் உளர். அது சான்றோர் செய்யுள் எல்லாவற்றோடும் பொருந்தாமையானும், பிற் காலத்தில் செய்த நூல்பற்றி முற் காலத்துச் செய்யுட்கெல்லாம் இலக்கணஞ் சேர்த்துதல் பய மின்றாதலானும் அஃதமையாதென்பது. வஞ்சிப்பாவின் ஈற்றடி வரைந்தோதவே இடையாயின எல்லா அடியும் வரப்பெறு மென்பதாம்.

"நேரிழை மகளிர் உணங்குணாக் கவருங்
கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை" (பத்துப்-பட்டி-23-24)

என ஆசிரியவடியும் வெண்பாவடியும் இடைவந்தன.

(வி-ரை)

வஞ்சிப்பாவின் ஈற்றயலடியும், இடையடிகளும் முச்சீரான் வரும் என்பது இதன் கருத்தாகும் வஞ்சிப்பாவின் ஈற்றயலடி முச்சீரானும் நாற்சீரானும் வரும் என்பர் இளம்பூரணர்.

வெண்பாவின் ஈற்றடி முச்சீரான் அல்லது வாராது

384. [1]வெண்பாட் டீற்றடி முச்சீர்த் தாகும்[2]

இது வெண்பாவிற்கு ஈறு உணர்த்துகின்றது, ஆசிரியத்துக்கோவெனின், தனக்கோதிய அளவடியானே இறுதலின் வேறுபாடு கூறவேண்டா. எருத்தடியும் இடையடியும் முச்சீரான் வருமென வேறுபட்டவழிக் கூறி, அல்லாதன அளவடியாதல் கொள்ளவைத்தானென்பது.

(இ-ள்.) வெண்பாவின் இறுதியடி ஒன்றும் முச்சீரான் அன்றி வாராது (எ-று).

அவை முன்னர்க் காட்டுதும். அஃதேல்,

"அட்டாலும் பால்சுவையிற் குன்றாது அளவளாய்
நட்டாலு நண்பல்லார் நண்பல்லர்" (மூதுரை-4)

என முச்சீரடி இடையும் வந்ததால் வெண்பாவிலுளெனின் முச்சீர்த்தென்னாது 'ஆகும்' என்று ஆக்கங் கொடுத்துக் கூறினமையான் அத்துணை ஆக்கமின்றி இடையுஞ் சிறுபான்மை வருமெனக் கொள்க. அல்லாதார் அதனை வெண்பாவன்றென்ப.

(வி-ரை)

எருத்தடி-ஈற்றயலடி. அல்லாதார்-யாப்பருங்கல விருத்தியுரைகாரர்.

வெண்பாவின் இறுதிச்சீர் அசைச்சீர் வருமெனல்

385. அசைச்சீர்த் தாகும் [3]அவ்வயி னான.

இது, மேலதற் கெய்தியதொரு விதி.

(இ-ள்) வெண்பாவின் இறுதிவரும் முச்சீரடியின் ஈற்றுச்சீர் வரப்பெறாது அசைச்சீரல்லாது (எ-று).

---

1. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே. வெண்பா ஈற்றடி எனப் பாடம் கொள்வர் இளம்பூரணர்.
2. இதனையும் அடுத்த நூற்பாவையும் இணைத்து ஒரே நூற்பாவாகக் கொள்வர் இளம்பூரணர்.
3. அவ்வழியான எனப்பாடம் கொள்வர் இளம்பூரணர்.

மேல்,

'அசைநிலை வரையார் சீர்நிலை பெறல்'

(தொல்-செய்-27)

என்றான், அவற்றுள் உரியசைச்சீர் முதலும் இடையும் இறுதியும் வருமென்பான்,

'இயற்சீர்ப் பாற்படுத்து' (தொல்-செய்-28)

இயற்றுக என்றான். அவ்வாறே இயலசைச்சீரும் முச்சீரடி இறுதிவருமென்பது ஈண்டுக் கூறியவாறு.

(வி-ரை)

வெண்பாவின் இறுதிச்சீர் நேர்பு, நிரைபு, நேர், நிரை ஆகிய நான்கனுள் ஒன்றாய் வரும் என்பது இதன் கருத்தாகும்.

இயற்சீர் நான்கும் வருங்கால் நேரிறுதி வந்தநிரையும் இறுதிச்சீர்ரெனல்

**386. நேரீற் றியற்சீர் நிரையு நிரைபுஞ்**
**சீரேற் றிறூஉ மியற்கைய வென்ப.**

இது, மேற் கூறப்பட்ட இயற்சீர் நான்கும் வருங்கால் இன்னுழி நின்று இன்னவாறு கொள்ளப்படுமென்ப துணர்த்துதல் நுதலிற்று.

(இள்.) நேரிறுதி வந்த நிரையும் நிரைபுமே இறுதிச் சீராய் நிற்பன (எ-று).

எனவே, தனிவந்த நிரையும் நிரைபும் நிரைமுதற்சீர் போலத் தளைகொள்ளப்படு மென்பதாம் 'ஏற்றிறூஉம்' என்ற இலேசினான் இடைவந்த நிரைபசையும் அவ்வாறு கொள்க. அஃது,

'இயற்சீர்ப் பாற்படுத் தியற்றினர் கொளலே'

(தொல்-செய்-28)

என்பதனான் அடங்காதோவெனின் அடங்காது. என்னை? அசைச்சீர்தான் அடங்குமாற்றுக்கு ஆண்டுக் கூறினான், அது பிறிதுசீர் அசைச்சீரொடு தட்குமாற்றுக்குங் கூறல்வேண்டு

மென்பது. அல்லதூஉம் ஆண்டு அளவடிக்குக் கூறினன் இது சிந்தடிக்கென்பது வரலாறு:

"வாரிய பெண்ணை வருகுரும்பை வாய்ந்தனபோல்
ஏரிய வாயினு மென்செய்வ—கூறியவேற்
கோட்டியானைத் தென்னன் குளிர்சாந் தணியகலங்
கோட்டுமணங் கொள்ளா முலை"

(முத்தொள்ளாயிரம்-71)

எனவும்,

"அயிற்கதலம் பாய்ந்துழக்கி யாழித்தேர் குத்தி
எயிற்கதவங் கோத்தெடுத்த கோட்டாற் பனிக்கடலுட்
பாய்செய்த நாவாய்போற் றோன்றிற்றேயெங்கோமான்
காய்சினவேற் கோதை களிறு."

(முத்தொளளாயிரம்-17)

எனவும் இவற்றினுட் 'கொள்ளா எனவும்' 'கோதை' எனவும் நின்ற நேரீற்றியற்சீர் முன்னர் முலையெனவுங் களிறெனவும் நிரையும் நிரைபுஞ் சீரேற்றவாறும் வெண்பாட்டீற்றடி முச்சீர்த் தாயவாறும் ஆண்டு அசைச்சீர் வந்தவாறுங் கண்டுகொள்க.

என்றார்க்கு, முச்சீரடியின் முதற்சீர்க்குத் தளைகூறாரோ வெனின், ஆண்டுத் தளைவகையின்றியும் வருதலின், அதனை வரைந்து கூறாரென்பது; என்னை? 'கோட்டுமணங் கொள்ளா முலை' எனவுங் 'காய்சினவேற் கோதை களிறு' எனவுந் தளை வகையான் வந்தன.

"உறுஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறுஅய் வாழியென் நெஞ்சு" (குறள்.120-10)

எனவும்,

"கலாஅற் கிளிகடியுங் கானக நாட
இலாஅர்க் கில்லை தமர்" (நாலடி.29-3)

எனவும் தளைவகையின்றி வந்தன.

(வி-ரை)

வெண்பாவின் இறுதியடியின் இரண்டாம்சீர் நேர் ஈறாய் வரின் அதனையடுத்து வரும் மூன்றும்சீர் நிரைபும் நிரைபுமாகவே வரும் என்பது இதன் கருத்தாகும். (74)

அசைச்சீர் நிரையீற்றுப் பின்னன்றி வாராவெனல்

**387. நிரையவ ணிற்பி னேரு நேர்பும்
வரைவின் றென்ப வாய்மொழிப் புலவர்**

இஃது, ஒழிந்த அசைச்சீர் நிரையீற்றுப் பின்னன்றி வாரா வென்கின்றது.

(இ - ள்) நேரீற்றியற்சீர் நின்ற வழி நிரையீற்றியற்சீர் நிற்பினென்பான் 'நிரையவண் நிற்பின்' என்றான், ஆண்டு நிரையும் நிரைபும் வரின் தளைவழுவாமாதலான் நேரும் நேர்புமே வந்து சீரேற்று முடிதல் வரைவின்று (எ - று)

"கொழுநனை மைந்தன் கொணர்ந்ததற் காக
முழுமுலை பாய்ந்தன பால்"

எனவும்,

"வண்டொன்று வந்தது வாரல் பனிவாடாய்
பண்டன்று பட்டினங் காப்பு" (முத்தொள்ளாயிரம் 97)

எனவும் இவற்றுட் பாய்ந்தனவெனவும் பட்டினமெனவும் வந்த நிரையீற்றியற்சீர்ப்பின்னர் நேரும் நேர்பும் வந்தன. முன்னர்,

"நேரீற் றியற்சீர் நிரையு நிரைபும்' (தொல்-செய்.74)

எனக் கூறி ஈண்டு நிரையவண் நிற்பினெனச் சுட்டிக்கூறியவதனானே அதுவும் நிரையீற்றியற்சீரென்பதூஉம் அஃதிரண்டாஞ் சீரென்பதூஉம் கொள்க. அல்லாதார், அதனை வெண்சீர்க்கும் பொதுவெனக் கூறி,

'வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே' (தொல்-செய்.29)

என்றதனான் வெண்சீரிறுதி நிரையாக இயற்றி அதன் அடிப்பின் நேர்பசை கொடுப்ப;

"எய்போற் கிடந்தானென் னேறு" (பு.வெ.வாகை.22)

என்புழிக் 'கிடந்தானென்' என நின்ற 'புலிசெல்வா'யினைக் 'கணவிரி'யாக இயற்றி,

'நிரையவ ணிற்பின் நேரும் நேர்பும்'

என்றதனான் ஏறு என்னும் நேர்பசை கொடுப்பர். அஃதுஈண்டு

ஆராய்ச்சி யின்றென்பது என்னை? இது கட்டளையடி யன்மையின்.

(வி-ரை)

வெண்பாவின் இறுதியடியின் இரண்டாம்சீர் நிரையீறும் வரின் அதனை அடுத்து வரும் மூன்றாம்சீர் நேரும் நேர்புமாக வரும் என்பது இதன் கருத்தாகும். (75)

கலிப்பாவின் இறுதி ஆசிரியத்தாலும் வெண்பாவாலும் முடியுமெனல்

**388. எழுசீ ரிறுதி யாசிரியங் கலியே.**

**389. வெண்பா வியலினும் பண்புற முடியும்.**

இவை, இரண்டு சூத்திரமும் முறையானே கலிப்பாவிற்கு, அன்னதோர் அடி அதற்கு வகுத்தில்லாமையின் வகுக்கின்றன.

என்றார்க்கு, முதலது நேரடியும் ஈற்றது சிந்தடியுமாகக் கொள்ளல் அவ்வெழு நிலையுமெனின் அங்ஙனங் கொள்ளாமைக் கன்றே,

"ஈற்றய லடியே யாசிரிய மருங்கிற்
றோற்ற முச்சீர்த் தாகு மென்ப" (தொல்-செய்.68)

எனவும்,

"இடையும் வரையார் தொடையுணர் வோரே"
(தொல்-செய்.69)

எனவுங் கூறிற்றென்பது. எழுசீர் இறுதி ஆசிரியமெனவே, ஆசிரியவடி பலவும் வந்து ஈருத்தடி முச்சீராக வருமென்பது கொள்க.

"அரிதாய வறன்" என்னும் (11) கலிப்பாவினுள்,

"இனைநல முடைய கானஞ் சென்றோர்"

என்பது ஈற்றயன் முச்சீரிறுதி ஆசிரியத்தாற் கலிப்பா இற்றது.

"மணிநிற மலர்ப்பொய்கை"

என்னும் (70) கலிப்பாவினுள்,

"மெல்லியான் செவிமுதல் மேல்வந்தான் காலைபோல்
எல்லாந் துயிலோ வெடுப்புக நின்பெண்டிர்

இல்லி னெழீஇய யாழ்தழீஇக் கல்லாவாய்ப்
பாணன் புகுதராக் கால்''

என வெண்பாவியலினும் பண்புற வந்தவாறு.

பண்புறவென்பது, விசேடம்; மிகமுடியு மென்றவாறு. எனவே, ஈண்டுக்கூறுத இருசீரடியானும் நாற்சீரான் வந்த கலிப்பா வடியானும் ஐஞ்சீரடியானும் முடிவன கொச்சகக் கலியு; அவை இத்துணை விசேடமில வென்றவாறு. ஈண்டு விதந்து ஓதிய வெல்லாம் பெருப்பான்மையும் ஒத்தாழிசைக் கலிக்கென வுணர்க. 'இயல்' என்றதனாற் கட்டளை வெண்பாவே வரல் வேண்டுவதில்லை எனக்கொள்க. 'பண்புற' என்றதனான் மூன்றடியின் இழியிற் பண்புபடவாரா வெள்ளைச்சுரிதகமெனவுங் கொள்க.

(வி-ரை)

கலிப்பாவின் ஈற்றயலடி முச்சீராய் வரும் ஆசிரியமாகவும், ஈற்றடி முச்சீராக வரும், வெண்பாவாகவும் வரும் எழு. சீர் இறுதி என்றது ஈற்றயலடியையும் ஈற்றடியையும் கூட்டியுணர நின்றது. (76, 77)

யாப்பு

390 எழுத்து முதலா ஈண்டிய வடியிற்
குறித்த பொருளை முடிய நாட்டல்
யாப்பென மொழிப யாப்பறி புலவர்

இஃது

"யாத்த சீரே யடியாப் பெனாஅ" (தொல்-செய்-1)

என நிறுத்த முறையானே அடியுணர்த்தி யாப்புணர்த்துகின்றது.

[இ-ள்.] எழுத்துமுதலா ஈண்டிய அடியிற் குறித்த பொருள்களை முடிய யாத்தல் யாப்பாவதென்று சொல்லுவர் புலவர் [எ-று].

அடிக்கண்ணே முடியுமெனவே இருசீரு முச்சீருங் கிடப்ப முடியநாட்டினும் நாற்சீர் கொண்டு முடியநாட்டினும் அமையுமென்பது. மாத்திரை முதலாக வென்னாது 'எழுத்து' என்ற

தென்னையெனின், எழுத்தும் அசையுஞ் சீருங்கொண்டியன்ற ஒரோவடிக்கண்ணே இன்பஞ் செய்யும்; அது பொருட்காய் இன்றியமையாமையின் எழுத்து முதலாக வென்று னென்பது. 'ஈண்டியவடி' யென்பது அவை மூன்றும் ஒன்றுகத் தொடர்ந்து ஈண்டிய அடியென்றவாறு. எனவே, இவற்றைப்பொருளின்றி வேறுவேறு செய்யாது, பொருட்டொடபுபடச் செய்யவேண்டு வென்பதூஉங் [கூறி, ஓரடிக்கட் பொருளாற் செய்யாது, ஒழிந்த அடிக்கண் ஒரு சொல்லினைப் பகுத்து வாங்கிக்கொண்டு போய் வைத்தலாகாதென்பதூஉங்] கூறியவாறுமாயிற்று. குறித்த பொருளென்றது அவ்வடியில் தான் வைக்கக் கருதிய பொருளைப் பிறிதோர் அடியுங்கொண்டு கூட்டாது அமைந்து மாறச் செய்தல்: ''யாப்பறிபுலவர்'' என்பது அவ்வாறு செய்தல்வல்ல புலவர் அது கூறினரென்றவாறு அஃது, இதுபோலச் சீரும் பொருண்முடிய நிற்றலின் யாத்தசீரென்றுனென்பது.

''மாயோன் மார்பி லாரம் போல
மணிவரை யிழிதரும் அணிகிள ரருவி
நன்பொன் வரன்று நாடன்
அன்புபெரி துடைய னின்சொல் லினனே''

என இது குறித்த பொருளை நாற்சீரடிதோறும் முடிய நாட்டினவாறு.

''மண்டில மழுங்க மறுநிறங் கிளர
வண்டின மலர்பாய்ந் தூத மீமிசைக்
கண்டற் கானற் குருகின மொலிப்ப'' [அகம்-256]

என்றவழி, இருசீரானும் முச்சீரானும் நாற்சீரானுங் குறித்த பொருளை முடிய நாட்டிவாறு ஒருசார் வெண்பாட்டினுட் பயின்று வருமென வுணர்க,

முச்சீரான் முடிய நாட்டுவன ஒருசார் வெண்பாட்டினுட் பயின்று வருமென வுணர்க.

''முயற்கோடு சீவி சீவி முதுவிசும்பு போழ்ந்தான்''

என்றவழி எழுத்தும் அசையுஞ் சீரும் பொருளிலவாகி வந்தமையின் அஃதமையாது, யாப்பெனப்படாது; சொல்லிலக்கணத்தாற் சொற்றொறும் பொருளுடையவாயினுமென்பது.

கைக்கிளைச் செய்யுள்

**431. கைக்கிளை தானே வெண்பா வாகி**
**ஆசிரிய வியலான் முடியவும் பெறுமே.**

இஃது, எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) வெண்பா உறுப்பாகி வருமென்முன், அற்றன்றி வெண்பாவினேடு ஆசிரியப்பாவும் உறுப்பாகக் கைக்கிளைக்கு வரும் (எ-று).

அங்ஙனம் வருவது மருட்பாவாகலாற் கைக்கிளைப் பொருளே மருட்பாவிற் குரித்தென்பது பெற்றும்: பெறவே,

"கலிநிலை வகையும் வஞ்சியும் பெறு"
(தொல்-செய்-110)

என்புழி, விலக்கப்படாத ஆசிரியப்பாவும், வெண்பாவும் உறுப்பாக வருதலின் வாழ்த்தியல் வகையுள் புறநிலைவாழ்த்து முதலாயினவும் கைக்கிளையும் பொருளாக வரும் மருட்பா வென்பது பெற்றும். கைக்கிளையதிகாரப்பட்டது கண்டு அதனை ஈண்டுக் கூறினுன். ஒழிந்த புறநிலை வாயுறை செவியறிவுறூஉக்களும் பொருளாக மருட்பா வருமென்பது முன்னர் அளவியலுள் (472) சொல்லும். இவற்றுக்கெல்லாஞ் செய்யுள் ஆண்டுக் காட்டுதும். (119)

பரிபாடல்

**432. பரிபா டல்லே தொகைநிலை [1]விரியின்**
**இதுபா வென்னு மியல்நெறி யின்றிப்**
**பொதுவாய் நிற்றற்கும்உரித்தென மொழிப**

இது, பரிபாடற் காவதொரு புறனடையுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) பரிபாடல் வெண்பாவுறுப்பாக வருதலேயன்றி இன்ன பா வென்பதுணராமைப் பொதுப்பட நிற்றற்கும் உரித்து (எ-று).

---

1. நச்சர் பாடமும் இதுவே. வகையின் எனப்பாடம் கொள்வர் இளம்பூரணர்.

"மண்ணார்த்து இசைத்த முழவொடு கொண்டதோள்
கண்ணேறு டெனவிழுஉம் காரிகை கண்டார்க்குத்
தம்மோடு நிற்குமோ நெஞ்சு" (கடவுள் வாழ்த்து)

எனப் பரிபாடல் வெண்பா உறுப்பாக வந்தது.

"ஆயிரம் விரித்த அணங்குடை அருந்தலைத்
தீயுமிழ் திறலொடு முடிமிசை அணவர (பரி-1)

என்பது வெண்டளையும் ஆசிரியத்தளையும் விராய் வந்து துள்ளலோசைபடச் சொல்லவும்படுதலின்,

"ஒதுபா வென்னும் இயல்நெறி யின்றிப்
பொதுவாய் நின்றது"

எனப்படும்.

உம்மை இறந்தது தழீஇயிற்று.

மற்று இது கலிப்பாட்டிற்கும் ஒக்கும் பிறவெனின், ஒவ்வாதாகாதே? ஆசிரியன் இவ்வாறு கூறினமையினென்பது. அல்லதூஉங் கலிக்கு ஓதிய இலக்கணமின்மையானும் பரிபாடலெனவே படும் பெரும்பான்மையுமென்பது. தொகுத்து விரித்த பா நான்கனுள்ளும் அடங்காது வேறுங்கால் அது வெண்பாவினான் யாக்கப்படாது பொதுவகையான் யாக்கப்படுமென்றவாறு.

அதற்குரிய உறுப்புக்கள்

431. கொச்சக மராகஞ் சுரிதக மெருத்தொடு
செப்பிய நான்குந் தனக்குறுப் பாகக்
காமங் கண்ணிய நிலைமைத் தாகும்.

இது, மேற்கூறிய வகையாற் பரிபாடற்கேற்ற பாவுறுப்பினையெடுத்து விரிகூறி இத்துணை உள்ளுறுப்புடைத்தென்கின்றது. உள்ளுறுப்பெனக் கூறவேண்டுவதென்னை, பண்புபற்றி நான்குறுப்பான் எண்ணப்படாவோவெனின், அவை எல்லாச் செய்யுட்கும் பொதுவாகலான் அவற்றேடெண்ணாது இவற்றை இப்பாவிற்குறுப்பாகக் கூறினனென்பது. மேல்வருகின்ற கலியுறுப்பிற்கும் இஃதொக்கும்.

(இ-ள்) செப்பிய நான்குறுப்புங் கலிக்குறுப்பாகச் சொல்லப்பட்ட வகையானே வரும் ஆவை ஈண்டும் (எ-று.)

'தனக்'கென்றதனுன் அவையல்லா உறுப்புமுள வென்பது முன்னர்ச் சொல்லும்;

"சொற்சீரடியும்" (தொல்-செய்-122)

என்புழிக் காண்க.

கொச்சக மென்பது ஒப்பினுனாகிய பெயர். ஓராடையுள் ஒரு வழியடுக்கியது கொச்சகமெனப்படும். அதுபோல ஒரு செய்யுளுட் பலகுறள் அடுக்கப்படுவது கொச்சகமெனப் பட்டது. குறிலிணை பயின்ற அடி அராகமெனப்படும். சுரிதக மென்பது அடக்கியலெனப்படும். எருத்தென்பது தரவு. இவை நான்குறுப்பாக வருவது பரிபாடலென்றவாறு. பெரும்பான்மை யும் கொச்சகவுறுப்புப் பயின்று வருதலின் அதனை முன்வைத் தான். அராகம் எழுவாயாகாமையின் அதனை இடை வைத் தான். சுரிதகமென்பது எஞ்ஞான்றும் ஈற்றதாகலான் அதனை அதன்பின் வைத்தான். எருத்தினை ஈற்றுக்கண் வைத்தான் அதனையின்றியும் வரும் பரிபாடலென்றற்கும் அஃது இடையும் வருமென்றற்கு மென்பது.

உதாரணம்;

"வானூர் எழிலி மழைவள நந்தத்
தேனூர் சிமய மலையி னிழிதந்து
நான்மாடக் கூட லெதிர்கொள்ள ஆனு
மருந்தாகுந் தீநீர் மலிதுறை மேய
இருந்தையூ ரமர்ந்த செல்வநின
திருந்தடி தலையுறப் பரவுதுந் தொழுதே" (இது தரவு)

"ஒருசார், அணிமலர் வேங்கை மராஅ மகிழம்
பிணிநெகிழ் பிண்டி நிவந்துசேர்பு ஓங்கி
மணிநிறங் கொண்ட மலை;
ஒருசார், தண்ணறுந் தாமரைப் பூவி னிடையிடை
வண்ண மரையிதழ்ப் போதின்வாய் வண்டார்ப்ப
விண்வீற் றிருக்குங் கயமீன் விரிதகையிற்
கண்வீற் றிருக்குங் கயம்.
ஒருசார், சாறுகொ ளோதத் திசையொடு மாறுற்று
உழவின் ஓதை பயின்றறிவு இழந்து
திரிநரும் ஆர்த்து நடுநரும் ஈண்டித்
திருநயத் தக்க வயல்.

ஒருசார் அறத்தொடு வேதம் புணர்தவமுற்றி
விறற்புகழ் நிற்ப விளங்கிய கேள்வித்
திறத்திற் றிரிவில்லா அந்தணர் ஈண்டி
அறத்தில் திரியா பதி'' (இவை நான்குங் கொச்சகம்)

ஆங்கொருசார், உண்ணுவ பூசுவ பூண்ப உடுப்பவை
மண்ணுவ மணிபொன் மலைய கடல
பண்ணிய மாசறு பயந்தரு காருகப்
புண்ணிய வணிகர் புனைமறுகு ஒருசார்.
விளைவதை வினையெவன் மென்புல வன்புலக்
களமர் உழவர் கடிமறுகு பிறசார்
ஆங்க அனையவலவை நல்ல நனிகூடும் இன்ப
மியல் கொள நண்ணியவை'', (இது கொண்டு நிலை.)

''வண்டு பொரேரென வெழ
வண்டு பொரேரென வெழுங்
சுடிப்புகு வேரிக் கதவமிற் றேட்டிக்
கடிப்பிகு காதிற் கனங்குழை தொடர
மிளிர்மின் வாய்த்த விளங்கொலி நுதலா
ரூர்களிற் றன்ன செம்மலோரும்
வாயிருள் பனிச்சை வரிசிலைப் புருவத்
தொளியிழை யோங்கிய வொண்ணுதலோரும்
புலத்தோ டளைஇப் புகழணிந் தோரு
நலத்தோ டளவிய நாணணிந் தோரும்
விடையோ டிகலிய விறனடை யோரும்
நடைமட மேவிய நாணணிந் தோருங்
கடனிரை திரையிற் கருநரை யோருஞ்
சுடர்மதிக் கதிரெனத் தூநரை யோரும்
மடையர் குடையர் புகையர்பூ வேந்தி
யிடையொழி வின்றி யடியுறை யாரீண்டி
விளைந்தனர் விளைவின் விழுப்பயன் துய்க்குந்
துளங்கா விழுச்சீர்த் துறக்கம் புரையு
மிருகே ழுத்தி யணிந்த வெருத்தின்
நனைகெழு செல்வ னகர்.
வண்டொடு தும்பியும் வண்டொடைய மார்பின
விண்ட கடகரி மேகமோ டதிரத்

தண்டா வருவியோ டிருமுழ வார்ப்ப
வரியுண்ட கண்ணுரோ டாடவர் கூடிப்
புரிவுண்ட பாடலோ டாடலுந் தோன்றக்
கூடு நறவொடு காமமகிழ் விரியக்
கூடா நறவொடு காமம் விரும்ப
வினைய பிறவி மிவைபோல் வனவு
மனையவை யெல்லா மியையும் புனையிணமுப்
பூமுடி நாகர் நகர்'', (இவையும் கொச்சகம்)

''மணிமருட கைவகை நெறிசெறி யொலி யொலி
யவிர் நிமிர் புகழ் கூந்தற்
பிணி நெகிழ் துணையின தெளியொளி திகழ்ஞெகிழ்
தெரியரி மதுமகிழ் பரிமலர் மகிழுண்கண்
வாணுதலோர்
மணிமயிற் றொழிலெழி லிகன்மலி திகழ்பிறி
திகழ்கடுங் கடாக்களிற் றண்ண லவரோ
டணிமிக வந்திறைஞ்ச வல்லலிகப்பப் பிணிநீங்க
நல்லவை யெல்லா மியைதருந் தொல்சீர்
வரைவாய் தழுவிய கல்சேர் கிடக்கைக்
குளவா யமர்ந்தா னகர்'', (இது முடுகியல்)
திகழொளி முந்நீர் கடைந்தக்கால் வெற்புத்
திகழ்பெழ வாங்கித்தஞ் சீர்ச்சிரந் தேற்றி
மகர மறிகடல் வைத்து நிறுத்துப்
புகழ்சால் சிறப்பி னிருதிறத் தோர்க்கு
மமிழ்து கடைய விருவயி னாணி
மிகாஅ விருவட மாழியான் வலங்க
வுகாஅ வலியி னொருஉ தோழங் கால
மறாஅ தணிந்தாருந் தாம்
மிகாஅ மறலிய மேவலி யெல்லாம்
புகாஅ வெதிர் பூண்டாருந் தாம்
மணிபுரை மாமலை ஞாறிய ஞால
மணிபோற் பொறுத்தாருந் தாம்
பணிவில் சீர்ச் செல்விடைப் பாகன் றிரிபுரஞ்
செற்றுழிக்

கல்லுயர் சென்னி யிமயவி லுணுகித்
தொல்புகழ் தந்தாருந் தாம்.''

(இவையும் கொச்சகம்.)

''அணங்குடை அருந்தலை ஆயிரம் விரித்த
கணங்கொள் சுற்றத் தண்ணலை வணங்கி
நல்லடி யேத்திநிற் பரவுது
மெல்லாம் பிரியற்கவெஞ் சுற்றமொ டொருங்கே''

(என்பது ஆசிரியச் சுரிதகம்)

''அறவோ ருள்ளா ரருமறைகாப்ப''

என்னும் பரிபாடலுள்

''செறுநர் விழையாச் செறிந்தநம் கேண்மை
மறுமுறை யானு மியைக நெறிமாண்ட
தண்வரல் வையை யெமக்கு''

இது, வெள்ளைச்சுரிதகத்தான் இற்றது.

''காமங் கண்ணிய நிலைமைத் தாகும்''

என்பது, காமப்பொருள் குறித்து வருமென்றவாறு. கண்ணிய வென்ற அதனானே முப்பொருளுமன்றிக் கடவுள் வாழ்த்தினும் மலைவிளையாட்டினும் புனல் விளையாட்டினும் பிறவுமெல்லாங் காமங் கண்ணியே வருமென்பது. என்னை? ''எல்லாம் பிரியற்க வெஞ்சுற்றமோ டொருங்கே'' எனத் துனைபிரியாமை காரண மாகத் தொழுதேமென்றலின்.

''காமரு சுற்றமோ டொருங்குநின் னடியுறை
யாமியைந் தொன்றுபு வைகலும் பொலிகென
ஏமுறு நெஞ்சத்தேம் பரவுதும்
வாய்மொழி முதல்வநின் தாள்நிழல் தொழுதே''

(பரி. க: 62-5)

என்பதும் அது.

இனிச் 'செப்பிய நான்கு' என்றது, எண்ணப்பட்ட நான் கனையுமன்று; அன்னவற்றோடு மேற்கூறிய நான்கு பாவும் இடைவந்து விரவுமென்பது. அதுவும் நோக்கிப்போலும் பரி பாடல் என்றது.

''எரிமலர் சினைஇய கண்ணை பூவை
விரிமலர் புரையு மேனியை மேனித்
திருஞெமிர்ந் தமர்ந்தமார்பினை மார்பில்

தெரிமணி விளங்கும் பூண்ணை மால்வரை
யெரிதிரிந் தன்ன பொன்புனை யுடுக்கையை
……………………………………
நாவலந்தண ரருமறைப் பொருளே'' (பரி.1:6-13)

என ஆசிரியம் வந்தது.

''நின்னொக்கும் புகழ்நிழலவை'' (பரி 1:6-55)

என்பது வஞ்சித்தூக்கு; பிறவும் அன்ன காட்டுப. அது பொதுவாய் நிற்றலும் உரித்தென்றதனான் அடங்கும்.

இனிச், செப்பிய நான்கென்றதனான் அராகமின்றி வருதலும், கொச்சகம் ஈற்றடி குறைந்து வருதலும், அவ்வழி அசைச்சீராகி இறுதலும் மேற்கலிப்பாவிற்குச் செப்பிய சுரிதகமாதலுங் கொள்க.

[வி-ரை]

எழுவாயாகாமையானும்-முதலில் வாராமையானும்.

இதுவுமது

434. சொற்சீ ரடியு முடுகிய லடியும்
அப்பா நிலைமைக் குரிய வாகும்.

இதுவும் பரிபாடலுறுப்பு உணர்த்துகின்றது.

(இ-ள்) எண்ணப்பட்ட இரண்டும் பரிபாடற்குள்ள உறுப்பாய் வரும் (எ-று).

சொற்சீரும் முடுகியலுமென்னாது அடியென்றதனான் மேற் கூறிய அடியொடு தொடர்ந்தல்லது வாராவென்பதாம். சொற் சீரடியாமாறு முன்னர்ச் சொல்லுதும். முடுகியலடியென்பது முடுகியலோடு விராய்த் தொடர்ந்தொன்றாகிய வெண்பாவடி. அராகமென்பது தாமே வேறு சில அடியாகி வருவன.

இவையன்றிக் குறிலிணை பயில்வன முடுகியலெனவுங் குறிலிணை விரவிவருவன அராகமெனவுஞ் சொல்லுவாரும் உளர்.

''முடுகு வண்ண—மடியிறந் தோடி யதனோ ரற்றே''
(தொல்-செய்.234)

என்பவாகலின் மேலதே யுரை.

'உரிய'வென்றதனான் இத்துணை பயின்றுவாரா இவ்விரண்டுங் கலிப்பாவினுளென்பது கொள்க. எனவே, அராகவுறுப்புத் தேவபாணியிலல்லது அக்கலிக்கண் யாண்டும் வாராதாயிற்று.

[வி-ரை]

மேற்கூறிய அடி-வெண்பா அடி. பிறருரையாகக் கூறியிருப்பது இளம்பூரணருடையதாகும். தேவபாணி-கடவுள் வாழ்த்துச்செய்யுள் முடிகியலாவது ஐந்தடியானும் ஆறடியானும் ஏழடியானும் குற்றெழுத்துப் பயிலத் தொடுப்பது என விளக்கம் தருவா இளம்பூரணர். (122)

சொற்சீரடியும் அதன் வகையும் உணர்த்தல்

**435. கட்டுரை வகையா னெண்ணொடு புணர்ந்து**
**[1]முட்டடி யின்றிக் குறைவுசீர்த் தாகியும்**
**ஒழியசை யாகியும் வழியசை புணர்ந்துஞ்**
**சொற்சீர்த் திறுதல் சொற்சீர்க் கியல்பே.**

மேலெண்ணப்பட்ட சொற்சீரடியாமா றுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) சொற்சீரடி இக்கூறிய நான்கு வகையாலும் வந்து பயிலும் (எ-று).

கட்டுரைவகையான் எண்ணொடு புணர்ந்தது:

"வடவேங்கடந் தென்குமரி, யாயிடை" (தொல்-பாயிரம்)

எனவும்,

"அஇஉ, எஒ என்னு மப்பா லைந்தும்"
(தொல்-எழுத்-நூன்,3)

எனவும், இவை கட்டுரைக்கட் சொல்லுமாறுபோல எண்ணினமையிற் கட்டுரைவகையான் எண்ணொடு புணர்ந்தன. இனி, 'முட்டடியின்றிக் குறைவுசீர்த்தாகும் இயல்பாய்' வருமாறு:

"நின்னொக்கும் புகழ்நிழலவை" (பரி-1-55)

எனவும்,

---

1. முற்றடி என நச்சரும் இளம்பூரணரும் பாடம் கொள்வர்.

"கறையணி மிடற்றினவை
கண்ணணி நுதலினவை
பிறையணி சடையினவை"

எனவும் வரும்.

'முட்டடியின்றி' என்ற இவை தூக்குப்பட்டு முடியுமடி யல்ல (எ-று.)

மேற்காட்டிய பரிபாடற் செய்யுளுள், 'ஒருசார்' என்பது ஒழியசை; என்னே? அது சீராகலின் அதனேடு சில அசை கூடியன்றி அசையெனப்படாமையின். 'ஆங்கு' எனவருந் தனிச் சொல் வழியசை யெனப்பட்டது; என்னே? அஃது, அசையாய் நின்று சொற்சீரடியாகலின். மற்றுச் சொற்சீரடியினே அசை யென்றதென்னேயெனின், இயலசை தானேயும் ஒழியசையாய் நிற்குமென்றற்கென்பது..

"ஒரூஉக், கொடியியல் நல்லார் குரல்நாற்றத் துற்ற
முடியுதிர் பூந்தாது மொய்ம்பின வாகத்
தொடிய வெமக்குநீ யாரை பெரியார்க்கு
அடியரோ ஆற்று தவர்" (கலி-88)

என்புழி 'ஒரூஉ' வென நின்ற இயலசைதானே ஒழியசையாய் நின்றது.

"உகுவது போலுமென் னெஞ்சு; எள்ளித்
தொகுபுட னாடுவ போலு மயில்" (கலி-33)

என்பது வழியசை புணர்ந்த சொற்சீரடி; என்னே? 'எள்ளி' என நின்ற சீரின்வழித் 'தொகுபு' என வந்தவசை உகுவதுபோலு மென்னுந் தொடையொடு பொருந்தி,

"உகுவது போலுமென் னெஞ்செள்ளித், தொகுபுடன்"

எனப் புணர்ந்து நின்றுற் போல்வதொரு சுவைமைசெய்து நின்றமையின். கொச்சகம் இடைநிலைப் பாட்டெனப் படாமையின்.

"தொகுபுடன் ஆடுவ போலு மயில்"

என நாற்சீரடியாலும் வருவதாயிற்று, வரையறையின்மை யின், இங்ஙனம் வந்தமையின் சொற்சீரடிமேல் எண்ணவும் படும். இவை கலிக்கண் வருங்கால் ஒத்தாழிசைக்கண் முடுகிய லடி வாராதென்பதூஉஞ், சொற்சீரடி வருஞான்றுந் தனிச்

சொல்லாகியன்றி வாராதென்பதூஉம் உறழ்கலிக்கண்ணும் முடுகியலடி உரித்தன்றென்பதூஉம் கொள்க.

சொற்சீர்த்திறுதலென்பது: ஓரெழுத்தொருமொழி முதலிய சொற்களெல்லாம். தாமே சீராய் அடியிறுதிக்கண் அடிப்பட முடிந்து அடியாத விலக்கணத்த அவையென்றவாறு.

இனி, ஒழியசையினையும் வழியசையினையும் கூறின் என்னோவெனின்,

"சீர்கூ றுதல் நேரடிக் குரித்து" (தொல்-செய்-49)

என்றமையின் ஈண்டு அசைகூறுகாது; அல்லதூஉம் ஆண்டுக் கூனெனப்பட்டதும் ஈண்டுச் சொற்சீரடியெனப்பட்டு அடங்குமென்பதனானு முடைத்தென்பது.[1] இவையெல்லாம் பரிபாடற் கண்ணதே கூறினானும் ஒழிந்த பாவினுட் சொற்சீரடி வருமென விதந்தவழி, இதுவே இலக்கணமாக வரும் ஆண்டு மென்பது. 'இயல்பு' என்றதனானே யாண்டு வரினும் அஃதிலக் கணமென்பது பெற்றும்; அல்லதூஉந்

"தொகைநிலை விரி" (தொல்-செய்-120)

என்ற மிகையாற் பரிபாடற்கு உரியவாகக் கண்டுகொள்க. அவை யாவையோவெனின், முடுகியலடி மேற்காட்டிய பரி பாடலுள் "மணிமருடகை" என்பது முதலாகக் "குளவா யமர்ந்தா னகர்" என்பதீறாகக் கண்டுகொள்க.

[வி-ரை]

கட்டுரை வகையான்-உரை வகையான். எண்ணொடு புணர் தல்-வட வேங்கடம் தென்குமரியென எண்ணுதலொடு பொருந்துதல். முற்றடி-நாற்சீரடி. முற்றடி என்பது இளம் பூரணரும். நச்சினார்க்கினியரும் கொள்ளும் பாடம். தூக்குப் படுதல்-அவ்வப்பாவிற்குரிய ஓசையைக் காட்டுதற்கு அடி அறுத்து இசைத்தல். ஒழியசை-வேறோர் அசையோடு கூடாது ஒழிந்து நிற்பதோர் அசை-வழியசை-அவ்வாறன்றி அதற்குப் பல அசை புணர்க்கப்பட்டு வருவது. சொற்சீர்த்து இறுதல்-ஓரெழுத்தொரு மொழி முதலாகிய சொற்களெல்லாம் சீர் தன்மை பெற இறுத்தல் என விளக்கம் காண்பர் நச்சினார்க் கினியர். (123)

1. இவ்விடத்துப் பிழையுளதாகக் கருதுவர் கணேசய்யர்

அங்கதச் செய்யுளின் வகை

**436. அங்கதந் தானே அரில்தபத் தெரியிற்**
**செம்பொருள் கரந்த தெனவிரு வகைத்தே.**

இது, முறையானே அங்கதச் செய்யுளுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அது செம்பொருள் கரந்தது என்று இரு வகைத்தாம் (எ-று).

அங்கதமென்பது வசை: அதனை இருவாற்றாற் கூறுகவென்பான் இது கூறினான். அவையாமாறு முன்னர்ச் சொல்லுதும். 'அரில்தப' வென்ற தென்னையெனின், அவை புகழ்போன்று வசையாதலும்பட்டுத் தோன்றும் மயக்கமுடையவாதலின் மயக்கமறத் தெரியினென்றவாறு.

'நூற்றுவர் தலைவனைக் குறங்கறுத் திடுவான்'' (கலி-52)

என்பது புகழ்போன்று வசையாயிற்று; என்னை? கொன்றானாயினுங் குறங்கினை கதத்துத்தண்டுகொண்டு எற்றுதல் குற்றமாதலின் என்பதறிக. கொடைமடங்கூறுதல் வசைபோன்று புகழெனப்படும். அஃது அங்கதமாகாதென்பான் 'அரிறப' வென்றானென்பது. பிறவும் அன்ன.

(வி-ரை)

நூற்றுவர்தலைவன்—துரியோதனன். குறங்கு—தொடை.

செம்பொருள் அங்கதம்

**437. செம்பொரு ளாயின் வசையெனப் படுமே.**

இது, முறையானே செம்பொருளங்கத முணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) வாய்காவாது சொல்லப்பட்ட வசையே செம்பொருளங்கதமெனப்படும் (எ-று).

அஃது,

"இருந்தீர் மணிவிளக்கத்து ஏழிலார் கோவே
குருடேயு மன்றுநின் குற்றம்-மருள்தீர்ந்த
பாட்டு முரையும் பயிலா தனவிரண்
டோட்டைச் செவியு முள''

என்பது ஏழிற்கோவை, அவ்வை முனிந்து பாடியது.

"எம்மிகழ் வோரவர் தம்மிகழ் வோரே
யெம்மிக ழாதவர் தம்மிக ழாரே
தம்புகழ் இகழ்வோர் எம்புகழ் இகழ்வோர்
பாரி யோரி நள்ளி யெழினி
யாஅய் பேகன் பெருந்தோண் மலையனென்று
என்றுஎழுவரு ளொருவனும் அல்லை யதனால்
நின்னை நோவ தெவனோ
அட்டார்க் குதவாக் கட்டி போல
நீயு முளையே நின்னன் னோர்க்கே
யானு முளனே யெம்பா லோர்க்கே
குருகினும் வெளியோய் தேளத்துப்
பருகுபா லன்னவென் சொல்லுகுத் தேனே"

எனவும் வரும்,

கலிப்பாட்டினுள் வருவன வசைக்கூத்தினுட் கண்டு கொள்க.

"அறச்சுவையினன் வையெயிற்றினன்
மயிர்மெய்யினன் மாசுடையினன்
பொய்வாயாற் புகழ்மேவலன்
மைகூர்ந்த மயலறிவினன்
மேவருஞ் சிறப்பி னஞ்சி
யாவரும் வெருஉ மாவிக் கோவே"

என்பது, வஞ்சிப்பாட்டு. இது, வெண்பாவினுள் வருதலே பெரும்பான்மை. (125)

பழிகரப்பங்கதம்

**438 மொழிகரந்து[1] சொல்லினது பழிகரப் பாகும்.**

இது, பழிகரப்பங்கதம் உணர்த்துகின்றது.

(இ-ள்). வசைப்பொருளினைச் செம்பொருள் படாமல் இசைப்பது பழிகரப்பங்கதம் (எ–று).

மாற்றரசனையும் அவனிளங்கோவினையும் வசைகூறுமாறு போலாது தங்கோனையும் அவனிளங்கோனையும் வசைகூறுங்கால் தாங்கியுரைப்பர்; அவைபோலப் பழிப்பனவென்றவாறு; அது,

---

1. மொழியினது எனப் பாடம் கொள்வர் நச்சரும், இளம்பூரணரும்,

"நன்றுய்ந்த செங்கோலாய் நாடிய நின்னிளங்கோக்
குன்றெறிந்த சேந்த னெனமதியா—வன்றிறத்து
நின்ருலிக்குந் தானையோ டெல்லா நிகர்த்தார்மேல்
வென்றெறியும் வேலே விடும்"

என வந்த வெண்டொடைச் செய்யுளுட் கண்டு கொள்க. இதனுள்,

"வென்றெறியும் வேலே விடும்"

என்பது, 'முனையகத்துப் படையோடு' மென வகைகூறுவான் 'குன்றெறிந்த சேந்தனைப்' போல எறிந்தானெனப் புகழ்ந்தான் போலக் கூறினுனென்பது.

"இன்றுளன் ஆயின் நன்றுமன் என்றநின்
ஆடுகொள் வரிசைக் கேற்பப்
பாடுவன் மன்னல் பகைவரைக் கடப்பே" (புறம்-53)

என்பதும் அது.

(வி-ரை)

தாங்கி உரைப்பர்—பாதுகாத்துரைப்பர். (126)

அங்கதம் இவ்வகையானும் வகைப்படுமெனல்.

39. செய்யுள் தாமே யிரண்டென மொழிப.

மேற்கூறிய இரண்டனையும் இவ்வகையானும் வகுக்கப்படு மென்கின்றது.

(இ-ள்.) செம்பொருட்செவியுறை, செம்பொருளங்கதம், பழிகரப்புச் செவியுறை, பழிகரப்பங்கதமென நான்கு கூறுபடும் மேற்கூறிய அங்கதமிரண்டும் (எ-று).

"பாய்த்துன், விக்குன்" என்றாற்போலச் 'செய்யுள்' என்ப தூஉந் தொழிற்பெயர்; அவையாமாறும் அவற்றது வேறு பாடும் முன்னர்ச் சொல்லுதும்.

இனி, ஒருவனுரை. இவற்றுள் தொகைச்சூத்திரத்துட்,
"கைக்கிளை பரிபாட் டங்கதஞ் செய்யுள்"
(தொல்-செய்-118)

என்று ஓதிச் செம்பொருளங்கதமுஞ் செய்யுளுமென இரண்டாக நிறுத்தான்; நிறுத்தமுறையானே அங்கதமுணர்த்திச் செய்யு ளுணர்த்திய விதந்தானென்பது: அற்றன்று, எல்லாப் பாட்டுஞ்

செய்யுளெனப்படுதலின் ஒன்றனையே செய்யுளெனலாகாது: அல்லதூஉம்,

"அங்கதச் செய்யு ளென்மனார் புலவர்" (தொல்-செய்-1 9)

என வருகின்ற சூத்திரத்து ஓதுமாதலான் இவையும், அங்கதச் செய்யுளே. மேலைச் சூத்திரத்துள்ளும் (430) அங்கதச் செய்யுளென்பதே பாடமென்பதூஉம் அதனாற் பெறுதுமென்பது. அல்லாத பாடம் ஓதினும் அங்கதச்செய்யுள் செய்கைமேலெனை அதனைத் 'தாய்க்கொலை'யென்றது போல் இரண்டாவதன் பொருண்மைப் படுத்துக்கொள்க. (127)

செவியுறை அங்கதம்

**440.** [1]துகளொடும் பொருளொடும் புணர்ந்தன் றுயிற்
செவியுறைச் செய்யு [2]ளதுவென மொழிப.

இது, மேற்கூறிய அங்கதச்செய்யுட்பகுதி இரண்டனுள் ஒன்று கூறுகின்றது.

(இ-ள்.) மேற் செம்பொருளும் பழிகரப்புமெனப்பட்ட இரண்டும் அங்கதச்செய்யுளெனப்படுதலேயன்றி, அதனனே அரசர்க்குப் பொருள்வருவாயாகச் செய்தானேயெனினும் அது செவியுறையங்கதமெனவும் படும் (எ-று).

துகளாவது: படைகுடி கூழமைச்சு நட்பரணுறும் என்னும் இவற்றைப் பாதுகாவாதிருத்தல்.[3] 'அரசியல்' என்பனவற்றுனே தங்கோன் அறியாமல் வகுத்தவை வருமாயின் அவற்றை உள்ளவா றுரைத்தலுமொன்று. மாற்றரசன் நமரது வூரடு கின்ற நாட்டவர் யாதிவை நுதலிபன வேதுவாகப் போய்ச் சார்ந்தவர்க்கு நாட்டழிவு கூறுதலுமொன்று. அன்ன பிறவும் அவற்கு உறுவகையாகலான் அவற்றை யுள்ளவாறு உணர்த்திப் பொருள்செய அவர்க்குப் பொருள்செயல்வகை கூறினமையின் அது செவியுறைப்பாற்படு மென்பது; அது:

---

1. நச்சர் பாடமும் இதுவே, புகழொடும் எனப்பாடம் கொள்வர் இளம்பூரணர்.
2. நச்சர் பாடமும் இதுவே. என்மனார் புலவர் எனப்பாடம் கொள்வர் இளம்பூரணர்.
3. இவ்விடத்துப் பிழையுளதாகக் கருதுவர் கணேசய்யர்.

"அறவை ஆயின் நினதெனத் திறத்தல்
மறவை யாயிற் போரொடு திறத்தல்
அறவையு மறவையு மல்லை யாகத்
திறவா தடைத்த திண்ணிலைக் கதவின்
நீள்மதி லொருசிறை யொடுங்குதல்
நாணுத்தக வுடைத்திது காணுங் காலே" (புறம் 44)

என இது செம்பொருட்செவியுறை: பிறவும் அன்ன. இவை முகவிலக்கினுட் பயின்று வருமென்பது. இனி, மொழிகரந்து சொல்லினும் இஃதொக்கும்;

இனிப்,

"புகமொடும் பொருளொடும்"

என்பதூஉம் பாடமாக உரைப்ப. புகழும் பொருளும் புணர்ப்பது அங்கதமாயின் அஃதமையும்; அற்றன்றாயின் ஈண்டாராய்ச்சியின்றென்பது; என்னே?

"வசையொடும் நசையொடும் புணர்ந்தன் றாயி—னங்கதச்
செய்யுள்" (தொல்-செய்-120)

என மேலோதுமாதலின் இவனென்பது.

(வி–ரை)

பிறருரையாகக் கூறியிருப்பது இளம்பூரணர் உரையையே யாம். புகமொடும், பொருளொடும் என்று பாடமோதி மேல் வசையொடும் நசையொடும் என்பது பொருந்தாதாம். என இவருரையைத் தழுவி மறுப்பர் நச்சினார்க்கினியர்.

ஏனை அங்கதம்

**441. வசையொடும் நசையொடும் புணர்ந்தன் றாயின் அங்கதச் செய்யு ளென்மனார் புலவர்.**

இஃது, ஒழிந்த அங்கதச்செய்யு ளுணர்த்துதல் நுதலிற்று.

(இ–ள்) மேற்கூறிய அங்கதச்செய்யுள் வசையேயன்றி அவ்வசையானே நசைதோன்றச்செய்வது செவியறிவுறையெனப் படாது அங்கதச்செய்யுளெனவே படும் (எ–று)

எனவே, இல்லாதன சொல்லி நகைப்பொருட்டாகச் செய்யினும் அங்கதச்செய்யுளெனப்படும் என்றவாறு. அவை

விலக்கியற்செய்யுளுட் கண்டுகொள்க. இதுவுஞ் செம்பொருளாகியும் பழிகரப்பாகியும் வருமென வுணர்க. எனவே, கூறப்பட்டனவெல்லாம் வெகுளியும் பொருளும் நகையும் பயப்பனவாயின.

கலிப்பாவின் வகை

**442. ஒத்தா ழிசைக்கலி கலிவெண் பாட்டே**
**கொச்சக முறழொடு கலிநால் வகைத்தே.**

இது, கலிப்பாவெனப்பட்ட உறுப்பினை இத்துணைப்பகுதியான் வருமென்பது வருஞ் செய்யுள் பற்றி விரிகூறுகின்றது.

(இ-ள்) ஒத்தாழிசை—ஒத்தாழிசையென்னும் உறுப்புடைச்செய்யுள்; ஒத்து ஆழ் இசையை ஒத்தாழிசை யென்றான்; அது வினைத்தொகையாகலின் மருவியவகையான் முடியுமென்பது: தாழிசை யென்பது தானுடைய துள்ளலோசைத்தாம்; இது முறைமையிற் பெற்ற பெயர்; எனவே, தரவுவேறுபடினும் வேறுபடா தென்பதூஉங், கொச்சகக் கலிபோல்வனவற்று வரும் இடைநிலைப்பாட்டுக்கள் அவ்வாறு தாழமுடையதன்றியும் வருமென்பதூஉங் கொள்க. இது பன்மைபற்றிப் பெற்ற பெயர்; தாழிசையின்றியும் ஒத்தாழிசை சிறுபான்மை வருதலின். இனி, ஒழிந்த உறுப்புநோக்கத் தாழிசை சிறந்தமையின் தலைமையாற் பெற்ற பெயரெனவும் அமையும்.

"வலிமுன்பின் வல்லென்ற யாக்கைப் புலிநோக்கிற்
சுற்றமை வில்லர் சுரிவளர் பித்தையர்
அற்றம்பார்த் தல்குங் கடுங்கண் மறவர்தாங்
கொள்ளும் பொருளில ராயினும் வம்பலர்
துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வவ்வலிற்
புள்ளும் வழங்காப் புலம்புகொ ளாரிடை
வெள்வேல் வலத்திற் பொருள்தரல் வேட்கையின்
உள்ளினி ரென்பது அறிந்தனள் என்றோழி" (கலி-4)

என்பது தாழ்ந்த ஓசைத்தன்றி ஒத்தாழிசைக் கலியுள் தரவு வந்தது. எனவே, இவ்வேறுபாடு கட்டளைக்கலி அல்லாதவழி யென்பது பெற்றும். அதுவன்றே இதன் முழிசையுள்ளும் நேரீற்றியற்சீரும் வந்ததென்பது; என்னை?

"காழ்விரி வகையார மீவரு மிளமுலை
போழ்திடைப் படாஅமல் முயங்கியும் அமையாரென்
தாழ்கதுப் பணிகுவர் காதலர் மற்றவர்
சூழ்வதை யெவன்கொ லறியே னென்னும்" (கலி-4)

என்புழி "அறியே னென்னும்" என ஆண்டைத் தாழிசை தோறும் இரண்டு நேரீற்றியற்சீரும் வந்தன. பிறவும் அன்ன.

"நீயே, வினைமாண் காழகம் வீங்கக் கட்டிப்
புனைமாண் மரீஇய வம்பு தெரிதியே;
இவட்கே, சுனைமாண் நீலங் காரெதிர் பவைபோ
லினைநோக் குண்க ணீர்நில் லாவே"

எனக் கொச்சகக்கலியுள் இடைநிலைப்பாட்டுத் தாழிசையின்றி வந்தது; பிறவும் அன்ன.

இனிக், கலிவெண்பாட்டு—கலிப்பாவாகிய வெண்பாட்டு. இது பண்புத்தொகையானே முன்மொழிப் பொருட்டாயிற்று. கொச்சகமென்பதும் உறுப்பினாற் பெற்ற பெயர். உறழ்கலி யென்பது பொருள்பற்றி வந்த பெயர்.

ஒத்தாழிசையென்பது தம்மினொத்துவருதற் கட்டளையுடைமையானுங், கலிப்பாவிற்குச் சிறந்து வருமாகலானும் முன் வைத்தான்; என்னை இது கலிப்பாவிற்குச் சிறந்தவாறெனின்; நூற்றைம்பது கலியுள்ளும் ஒத்தாழிசை அறுபத்தெட்டு வந்தன வாகலின் அது பெருவரவின எனப்பட்டுச் சிறப்புடைத்தாயிற்று. அதுநோக்கி முன்வைத்தான்; இது பா வென்னும் உறுப்பிலக்கணங் கூறுகின்ற இடமாகலின் கலிவெண்பாட்டினை ஒத்தாழிசைக்குங் கொச்சகத்திற்கும் இடைவைத்தான், அதுபோல உறுப்புடைத்தரகியும் வருமென்றற்கு அதன்பின் கொச்சகப்பா வைத்தான்; அது தரவும் போக்குஞ் சிறுபான்மையின்றியும் வருதலின், எல்லாவற்றுப்பின்னும் உறழ்கலி வைத்தான்; அவைபோலாது சுரிதகமின்றி வருதலே பெரும்பான்மையாகலானென்பது.

அஃதேல், உறழ்கலியுங் கொச்சகக்கலியுள் அடங்காதே அதுவும் அடக்கியலின்றியும் யாப்பினும் பொருளினும் வேற்றுமை உடைத்தாய் வருமாலெனின், — அற்றன்று; அடக்கியலின்றி வரின் அடி நிமிர்தலும் ஒழுகிசைத்தாகலும் வேண்டும்; உறழ்கலியாயின் அடிநிமிராதும் ஒழுகிசையின்றியும்வருமென்பது. அதி

துணையான் இதனை வேறென்பதென்னை? ஒன்றாக ஓதுக வெனின், அற்றன்று; மேற்கூறி வருகின்ற செய்யுளெல்லாஞ் சீரும் அடியும் பாவும் பொருளுமெனச் சிலவுறுப்பு வகையான் வேறு படுகின்றதன்றிப் பிறிதின்மையின். அவ்வேறுபாடுஞ் சிலவாக நோக்கி ஒன்றென்னுதலின் அது கடாவன்றென்பது; அல் லதூஉம் நூல்செய்யுங்கால் மரபென்பது வேண்டும்; என்னை?

"மரபுநிலை திரியா மாட்சிய வாகி
யுரைபடு நூல்தா மிருவகை யியல" (தொல்-மர. 93)

என்பதனான், முதனூற்காயினும் மரபுவேண்டுதலின். அது வன்றே நிலம் நீர் தீ வளி விசும்பென்னும் ஐம்பெரும் பூதங் களும் அவற்ற னிலையபாகிய பொருள்களும் அஃறிணையான் வழங்கினும் பொருளின் இயைபாகிய மக்களுந் (544) தேவரும் முதலாயினாரை உயர்திணைவாய்பாட்டான் வேறுபடுத்து வழங்கு கின்றதென்பது. மற்று உறழ்கலியென்னும் வழக்குண்டாயி னன்றே மரபொடு மாறுபடுவதெனின்; மரபென ஆசிரியர் வழக்கும் அடங்குமாகலின் அது கூறினான்; அல்லாக்கால் ஒழிந்த செய்யுளும் வேறுபாடிலவாமன்றே வென்பது.

இனிப், பரிபாடலுங் கலிப்பாவினுள் அடங்கு மென்பாரும் உளர். கலியும் பரிபாடலுமென எட்டுத் தொகையுள் இரண்டு தொகை தம்மின் வேறுதலின் அவ்வாறு கூறுவார் செய்யுள் அறியாதாரென்பது; அல்லதூஉம், அராகவுறுப்பில்லாத முடுகிய வடியுங் கொச்சகக்கலியல்லாத கலிப்பாவினுள் உண்டாவதாக லுங் கொச்சகக் கலியுறழ்ந்து வருதலும் உடையவாம், அவ் வாறு கூறினால் என மறுக்க.

(வி-ரை)

தாழிசை—தாளம் படவரும் ஒரு ஓசை: துள்ளலோசை. முறைமையின்—இயல்பில். தாழிசை—துள்ளிச் செல்லுதலின் அவ்வியல்பில் பெற்ற பெயர் என்பது கருத்து.

முன்மொழி—கலியென்னும் முன்மொழி. ஒன்றோடொன்று உறழ்ந்து வரும் பொருளுடைமையின் உறழ்கலியாயிற்று. கட்டளை-எழுத்தெண்ணிக்கூறும் வரையறை.

ஒத்தாழிசைக் கலியின் வகை

**443.** [1]அவற்றுள்,
**ஒத்தா ழிசைக்கலி யிருவகைத் தாகும்.**

இது, முறையானே ஒத்தாழிசைக்கலி யுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஒத்தாழிசைக்கலி இரண்டு கூற்றதாம் (எ-று).

இதனது பயம்:— அவை இரண்டுந் தம்முட்பகுதியுடைய வென்பது; அவையாமாறு முன்னர்ச் சொல்லுதும் (131)

அகநிலை ஒத்தாழிசைக் குரிய உறுப்புக்கள்

**444** **இடைநிலைப் பாட்டொடு தரவுபோக் கடையென**
**நடைபயின் றொழுகு மொன்றென மொழிப.**

(இ-ள்) மேற்கூறிய ஒத்தாழிசை இரண்டனுள் ஒன்று தாழிசையுந் தரவுஞ் சுரிதகமுந் தனிச்சொலுமென நான்கு உறுப்பாகப் பயின்றுவரும் (எ-று).

'பயின்றுவரும்' எனவே இவ்வாறன்றிப் பயிலாது வருவனவும் இதன் பகுதியாயடங்குவனவும் உளவென்பது. அவை தாழிசைப் பின்னர் எண்ணுறுப்பு வருங்கால் ஐந்துறுப்புப் பெறுதலும் அவற்றிடை அராகம்பெறின் ஆறுறுப்பு வருதலுமென இவையென்ப; அற்றன்று, நூற்றைம்பது கலியுள்ளும் ஒத்தாழிசைக் கலியின் அராகவுறுப்பும் அம்போதரங்கவுறுப்பும் பெற்றுவருவன இன்மையின் அவைபொருளன்றென்பது.

மற்று 'நடைநவின்றொழுகு' மென்றதென்னை யெனின் இத்துணை பயின்றுவாராது ஏனையொன்றும் என்றற்கென்பது. தாழிசையினை இடைநிலைப்பாட்டென்பவோ வெனின்,—அவ்வாறுஞ் சொல்லுப; அச்செய்யுள் இடைநிற்றலானென்பது. இனி இடைநிலைப் பாட்டென்பது தாழிசையினை நோக்காது என்னை? தாழம்பட்ட வோசையல்லாதனவும் இடைநிலைப்

1. இளம்பூரணர் பாடமும் இதுவே. நச்சர் பாடத்துள் அவற்றுள் என்பது காணப்படவில்லை.

பாட்டாங் வருமாதலினென்பது அது:

"காணாமை யிருள்பரப்பிக் கையற்ற கங்குலான்
மாணாநோய் செய்தான்கட் சென்றாய்மற் றவனை நீ
காணவும் பெற்றாயோ காணாயோ மடநெஞ்சே"
(கலி. 123)

என்பது, தாழிசை யெனவும் இடைநிலைப்பாட்டெனவும் படும்.

"இன்மணிச் சிலம்பிற் சின்மொழி யைம்பால்
பின்னொடு கெழீஇய தடவர லல்குல்
நுண்வலை வாட வாராது விடுவாய்
தண்ணந் துறைவ தகாஅய் காணீ" (கலி. 125)

என்றாற்போல்வன தாழிசையல்லாத இடைநிலைப்பாட்டு. இவ்விரு பகுதியுங் கூட்டித் தாழிசையென்றாது இடைநிலைப்பாட்டென்பது இங்ஙனந் தம்முட் பகுதியுடைமையானு மாயிற்று. ஒத்தாழிசைக்கலி இருவகைத் தென்றதற்குப் பயனுந் தோற்றுவாய் செய்து போந்ததென்பது.

தரவு என்றதன் பொருண்மை என்னையெனின், முகத்துத் தரப்படுவதென்ப; அதனை எருத் தெனவுஞ் சொல்லுப; என்னை? உடம்புந் தலையுமென வேறுபடுத்து வழங்கும் வழக்குவகையான் உடம்பிற்கு முதல் எருத்தென்பதாகலின். இனி, இசைநூலாரும் இத்தரவு முதலாயினவற்றை முகம் நிலை கொச்சகம் முரியென வேண்டுப. கூத்தநூலார் கொச்சக முள்வழி அதனை நிலையென அடக்கி முகம்நிலை முரியென மூன்றாக வேண்டுப. அவரும் இக்கருத்திற்கேற்ப முகத்திற்படுந் தரவினை முகமெனவும்; இடைநிற்பனவற்றை இடைநிலை யெனவும் இறுதிக்கண் முரிந்துமாறுஞ் சுரிதகத்தினை முரியெனவுங் கூறினாரென்பது. செந்துறைச் செய்யுள் அடைநிலை பயப்ப தின்மையின் அது சிறந்த தன்றென்று அடக்கிமொழிப. உள்ளுறுப்பின் பொருளெல்லாம் ஒருவகையான் அடக்குமியல்பிற்றாகலின் அடக்கியலெனவுங் குறித்த பொருளை முடித்துப் போக்குதலிற் போக்கெனவும் அவையெல்லாம் போதந்து வைத்தலின் வைப்பெனவுங் கூறிய பகுதியைப் பின்னும் பற்றிக் கூறுதலின் வாரமெனவும் எல்லாம் ஒன்றென்றனை ஒத்தே பெயராயின. அடைநிலையென்பது முன்னும் பின்னும் பிறவுறுப்புக்களை அடைந்தன்றி வாராது;

அது, தனி நின்று சீராதலின் தனிச் சொல்லெனவும் படும். இடைநிலை யுறுப்பென்றது 'பாட்'டென்ற தென்னையெனின், அவை தாமே பாட்டாயும் வருமிடனுடைய; வருங்கால் அவை ஒன்றும் இரண்டும் பலவுமாய் வருமென்பது. இடைநிலைப் பாட்டினைத் தரவிற்கு முற்கூறினன்; அது பெயர் பெறுதலின்; எனவே தரவு முன்வைத்தலை மரபாயிற்று. ஒத்தாழிசை கூறிய முறையானே தரவு தாழிசை போக்கென்னும் மூன்றுறுப் பானுஞ் சிறுபான்மை வந்து தனிச்சொலின்றி வருதலின் தனிச் சொல்லினை இறுதிக்கண் வைத்தானென்பது. இவை போக்கிச் சொல்லுதும்.

(வி-ரை)

எண்ணுறுப்பு—அம்போதரங்கம். அடைநிலை—தனிச்சொல்.

தரவிற்குரிய அடி வரையறை

**445. தரவே தானும் நாலடி யிழிபாய்**
**ஆறிரண் டுயர்பென் றேறவும்பெறுமே.**

இது, தரவின் அடியளவுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) மேற்கூறப்பட்ட தரவுதானும் நான்கடி முத லாய்ப் பன்னிரண்டடிகாறும் வரப்பெறும் (எ-று).

எனவே, ஒன்பதுநிலம் பெறுந் தரவென்றவாறாயிற்று.

"உயர்பென் றேறவும் பெறும்"

என்றதனாற் பன்னிரண்டடியின் இகந்துவரவும் பெறும் சிறு பான்மையெனக்கொள்க. இதனை எடுத்தோதாது இலேசினாற் கொண்டான்: பன்னிரண்டடியின் இகந்தன துள்ளலோசை யான் வாராமையின்; அது:—

"நீரார் செறுவின் நெய்தலொடு நீடிய
நேரிதழாம்பல் நிரையிதழ் கொண்மார்" (கலி-75)

என்னும் மருதத்திணைக் கலிப்பாட்டினுட் கண்டு கொள்க.

தாழிசைக்குரிய அடி வரையறை

**446.** [1]இடைநிலைப் பாட்டே
தரவகப் பட்ட [2]மரபின தென்ப.

இது, தரவிற்குச் சுருங்கியன்றித் தாழிசை வாராதென்ப துணர்த்துதல் நுதலிற்று.

(இ–ள்.) தரவின் அகப்பட்டது தாழிசை (எ–று).

'அகப்படுதல்' என்பது அகம்புறமென் றிருகூறுசெய்த வழி முற்கூற்றினுட் படுதல். முன்னென இடவகையுங் காலவகையும் பற்றிய இருகூற்றினுள் யாதானுமொன்று கொள்க. எனவே பதினோரடி முதல் இரண்டடிகாறும் இழிந்துவரப்பெறும் என்றவாறாயிற்று; அது,

"கருங்கோட்டு நறும்புன்னை மலர்சினை மிசைதொறும்
சுரும்பார்க்குங் குரலினோடு இருந்தும்பி யிமைபுஊத
வொருங்குட னிம்மென இமிர்தலிற் பாடலோடு
அரும்பொருள் மரபின்மால் யாழ்கொளக் கிடந்தான்
போற்
பெருங்கடல் துயில்கொள்ளும் வண்டிமிர் நறுங்கானல்;
காணமை யிருள்பரப்பிக் கையற்ற கங்குலான்
மாணநோய் செய்தான்கட் சென்றாய்மற் றவனை நீ
காணவும் பெற்றாயோ காணாயோ மடநெஞ்சே;
கொல்லேற்றுச் சுறவினங் கடிகொண்ட மருள்மாலை
யல்லல்நோய் செய்தான்கட் சென்றாய்மற் றவனை நீ
புல்லவும் பெற்றாயோ புல்லாயோ மடநெஞ்சே;
வெறிகொண்ட புள்ளினம் வதிசேரும் பொழுதினாற்
செறிவளை நெகிழ்த்தான்கட் சென்றாய்மற் றவனை நீ
யறியவும் பெற்றாயோ வறியாயோ மடநெஞ்சே;
எனவாங்கு,
எல்லையு மிரவுந் துயில்துறந்து பல்லூழ்

1. அடைநிலைக்கிளவி என இளம்பூரணரும், நச்சினார்க் கினியரும் பாடம் கொள்வர்.

2. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே. 'மரபின என்ப' எனப்பாடங் கொள்வர் இளம்பூரணர்.

அரும்படா ரவலநோய் செய்தான்கட் பெறல்நசைஇ
யிருங்கழி யோதம்போல் தடுமாறி
வருந்தினை யளியையென் மடங்கெழு நெஞ்சே" (கலி-123)

என இது தரவகப்பட்ட மரபிற்றாகித் தாழிசை வந்தது.

தரவிற் சுருங்குமென்னாது அகப்படுமென்றான், தரவோடு ஒத்துவருந் தாழிசையென்பதூஉங் கோடற்கு; என்னை? மக்களகத்துப் பிறந்தானென்றவழி அச்சாதியோடொக்கப் பிறந்தானென்பது படுமாகலின்.

"ஞாலமூன் றடித்தாய முதல்வற்கு முதுமுறைப்
பாலன்ன மேனியா னணிபெறத் தைஇய
நீலநீ ருடையே போல் தகைபெற்ற வெண்டிரை
வாலெக்கர் வாய்சூழும் வயங்குநீர்த் தண்சேர்ப்ப;
ஊரல ரெடுத்தரற்ப வுள்ளாய் நீ துறத்தலிற்
கூருந்தன் னெவ்வநோ யென்னையு மறைத்தாள்மற்
காரிகை பெற்றதன் கவின்வாடக் கலுழ்பாங்கே
பிரல ரணிகொண்ட பிறைநுத லல்லாக்கால்;
இணைபிவ்வூ ரலர்தூற்ற வெய்யாய்நீ துறத்தலிற்
புணையில்லா வெவ்வநோ யென்னையு மறைத்தாள்மன்
துணையாருள் தகைபெற்ற தொன்னல மிழந்தினி
யணிவனப் பிழந்ததன் அணைமென்றோ ளல்லாக்கால்;
இன்றிவ்வூ ரலர் தூற்ற வெய்யாய்நீ துறத்தலி
னின்றதன் னெவ்வநோ யென்னையு மறைத்தாள்மன்
வென்றவேல் நுதியேய்க்கும் விறனல மிழந்தினி
நின்றுநீ ருகக்கலுழு நெடும்பெருங்க ணல்லாக்கால்;
அதனால்,
பிரிவில்லாய் போலநீ தெய்வத்தில் தெளித்தக்கா
லரிதென்னா துணிந்தவ ளாய்நலம் பெயர்தரப்
புரியுளைக் கலிமான்றேர் கடவுபு
விரிதண்டார் வியன்மார்ப விரைகநின் செலவே" (கலி-124)

எனவரும்.

பன்னிரண்டடியின் இகந்த தரவிற்கும் இவ்வாறே தாழிசை கொள்ளப்படும். மற்று மேற்கூறிய வரையறையில் தாழிசை கூறுகவெனின், ஆண்டு முறைபிறழ வைத்தற்குக் காரணங்கூறிப்

போந்தாமென விடுக்க. இனிவருஞ் சூத்திரத்திற்கும் இதுவே விடை; 'மரபின' வென்றதனுன் மேலேக்கொண்டும் அடிப்பட வந்த மரபிஞற் சுருங்குமென்பது. எனவே, நான்கடியின் உயர வாராவென்பது கொள்க. இன்னும் மரபினென்றதனுற் சிறுபான்மை ஐந்தடியானும் வருவனவும் உள.

"அரிதே தோழி நாணிறுப்பா வென்றுணர்த்தல்"

என்னும் நெய்தற்றிணைக் கலிப்பாட்டினுள்,

"நகைமுத லாக நட்பினு ளெழுந்த
தகைமையின் நலித லல்ல தவர்நம்மை
வகைமையி னெழுந்த தொன்முரண் முதலாக
பகைமையி னலிதலோ விலர்மன் ஆயிழை
பகைமையிற் கடிதவர் தகைமையின் நலியுநோய்"
(கலி-137)

என ஐந்தடியால் தாழிசை வந்தது.

ஆறடியின் வருவன வந்தவழிக் கண்டுகொள்க. மற்று நான்கடியின் இழிந்தோரடியானுந் தாழிசை வருமாலெனின் வாரா தன்றே, 'இடைநிலைப் பாட்டே' என்ருகலின்; என்னை? பாட்டெனப்படுவன ஓரடியான் வாராமையின், (134)

தனிச்சொல்

**447. அடைநிலைக் கிளவி தாழிசைப் பின்னர்**
**நடைநவின் ருெழுகும் [1]ஆங்கென் கிளவி**

இஃது ஆங்கென்னுஞ் சொல் தனிச்சொல்லெனப்படுமென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) தாழிசைப் பின்னர் ஆங்கு, தனிச்சொல்லாய் நின்று பயிலும் (எ-று).

ஆங்கென்னுஞ் சொல்லினை எடுத்தோதினுன், அது நடைநவின் ருெழுகுமாகலின். ஆங்கென்னுஞ் சொல் பயின்று வருமெனவே அல்லாதனவும் உள இத்துணைப் பயிலாதனவென்பது கொள்க. ஆங்கு என்பது ஏழாம் வேற்றுமை இடப்பொருள் தோன்ற நின்ற சொல்லாகலின் அஃதெல்லாச் செய்யுட்கண்ணுங்

1. நச்சினர்க்கினியர் பாடமும் இதுவே "ஆங்கென மொழிப" எனப் பாடம்கொள்வர் இளம்பூரணர்.

தன் பொருண்மைக்கேற்ப நிற்றல்வேண்டும் பிறவெனின், அற்றன்று; அதனை அசைநிலையாகக் கொள்க; அல்லதூஉம், எல்லாச் செய்யுளும் இதன் பொருண்மைக்கேற்பச் செய்யவேண்டுமென்றான் மிகைகூறிப் பயந்ததின்மையாமெனன்பது. அசைநிலைபெய்து செய்யுள் செய்தன் மரபாகலின் அஃதமையுமென்பது. நடைநவிலாதன பொருள்பெற வருமென்பது; அவை முன்னர்க் காட்டுதும்.

(வி-ரை)

நடை நவின்றொழுகும்—செய்யுள் வழக்கில் பயின்று வரும்.

சூரிதகம் உணர்த்தல்

**448, [1]போக்கியல் வகையே வைப்பெனப் படுமே.**

இஃது, ஒழிந்த சுரிதகம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) போக்கின திலக்கணப்பகுதி வைப்பென்று சொல்லப்படும் (எ-று).

இங்ஙனங் கூறப்பட்ட உறுப்பினை அடக்கியலெனவும் வாரமெனவுஞ் சொல்லுப.

அடக்கியல் வாரந் தரவோடு ஒக்கச் சொல்லப்படுமென்றவாறு. என்றதென்னேக்கியெனின்,—போக்குதலும் வைத்தலுமென்னும் இரண்டடிலக்கணமுடைத்து, வாரமெனச் சொல்லின் முடியுமிலக்கணமே கூறுவான்போலப் போக்கினிலக்கணப் பகுதிவைப்பென்றதனைச் சுட்டிக் கூறப்படுமாகலின்.

என்றதென்னேக்கியெனின், போக்குதலும், வைத்தலுமென்னும் இரண்டடிலக்கண முடைத்து எனச் சொல்லின் முடியுமிலக்கணமே கூறுவான் போலப் போக்கினிலக்கணப்பகுதி வைப்பென்று அதனைச் சுட்டிக் கூறியவாறு. இங்ஙனங் கூறப்பட்ட உறுப்பினை அடக்கியலெனவும் வாரமெனவுஞ் சொல்லுப. "அடக்கியல் வாரந்தரவோடொக்கும்" என்பவாகலின் என்பதும் பாடம்.

1. இந்நூற்பாவோடு அடுத்த நூற்பாவையும் இணைத்து ஒரே நூற்பாவாகக் கொள்வர் இளம்பூரணர்.

சுரிதகம்

**449. தரவிய லொத்தும் அதனகப் படுமே**
**புரைதீ ரிறுதி நிலையுரைத் தன்றே.**

(இதுவுஞ்) சுரிதக முணர்த்துகின்றது.

(இ-ள்.) தரவியலொத்தும் அதனகப்படும் — சிறுபான்மை தரவுகளோடொத்து உம்மையான் ஏறிய வருமாயினும் பெரும்பான்மை தரவின்பாகம் பெறுதலை இலக்கணமாகவுடைத்து மேற்கூறிய சுரிதகம். புரைதீர் இறுதிநிலை உரைத்தன்றே- இடைநிலைப்பாட்டுப் பொருளெல்லா முடிபுகாட்டி நிற்கும் அதுதான் (எ-று).

'அகப்படும்' என்று அதற்கும் உம்மை கொடுத்தமையின் அஃதிலக்கணமாயிற்று; ஆகவே அவ்விலக்கணத்திற்கேற்ற தரவின் கண்ணே ஒத்தலும் உயர்தலும் கொள்க. சுருங்கிய வெல்லை, ஆசிரியத்திற்கு இழிந்த வெல்லையாகிய மூன்றடிச்சிறுமையிற் கூறுமையிற் அதிற் சுருங்காது வருவதாயிற்று. ஈண்டும் 'அகப்படு'மெனவே பன்னீரடித்தரவின் பாகமாகிய ஆறடியே சுரிதகத்திற்கு உயர்விற்கு எல்லை என்பதூஉம் இழிந்த வெல்லை கூறுமையிற் பன்னீரடித்தரவிற்காயின் ஈற்று மூன்றடிச் சுரிதகம் வருதலும் ஒழிந்த கலி நாலிற்கும் அவ்வாறே வருதலுங் கூறினனென்பது. இனி, வெள்ளைச் சுரிதகத்துக்கும் இஃதெல்லா மொக்கும்.

இனித் தரவியலொத்தல் என்றதனால் ஈற்றயலடி முச்சீராகாது மண்டிலமாகி வருதலுஞ் சிறுபான்மையெனக் கொள்க. 'இறுதிநிலை' யென்பதனை 'நுனிவிரல்' என்றாற் போலக் கொள்க. நிலையெனப்பட்டது இடைநிலைப்பாட்டு. அதனிறுதியைக் கூறுமெனவே அவற்றுப் பொருளினை முடித்து விடுக்கு மென்பதாம்.

"போக்கியல் வகையே வைப்பெனப் படும்"

என்றவழி உள்ளுறுப்பின் பொருளினைத் தன்கண் வைக்கப்படுவது சுரிதகமென்றதன்றி இன்ன உறுப்பின் பொருள் வைக்கப்படுமென்றிலாதான் முற்கூறியது பொதுவிதிமாத்திரையேயன்றி இடைநிலைப்பாட்டின் பொருளே பெரும்பான்மையும் வைக்கப்

படுமென்பதூஉம் பொதுவிதியாற் சிறுபான்மை தரவின் பொருண்மை வைத்தலு முடைத்தென்பதூஉங் கூறினன். 'தரவியல்' என்றதனுல் தரவோடொத்த பொருட்கேற்றனவுங் கொள்க.

"நச்சல் கூடாது பெரும விச்செல
வொழிதல் வேண்டுவல்" (கலி-8)

என்பது, தாழிசைப்பொருண்முடிவு தன்பால் வைக்கப்படுதலின் இறுதியுரைத்தது. 'புரைதீ ரிறுதி' யென்றதனுன் அத்தாழிசைப் பொருளேயன்றி அவற்ருேடு போக்கியற் பொருள் வந்தக்கால் அவ்விரண்டினையும் புரைபடாமற் பொருந்தச் செய்கவென்பது. அது,

"தன்னகர் விழையக் கூடின்" (கலி-8)

எனப் போக்கியற்பொருளோடு புரைதீர்ந்திற்றது; பிறவும் அன்ன.

"இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை யந்தணன்" (கலி-38)

என்னுங் குறிஞ்சித்திணைப் (38) பாட்டினுள்

கோடுபுய்க் கல்லா துழக்கு நாடன்"

என்று உள்ளுறையுவமத்தால் தலைவியது விழுமங் கூறினமையின் அதனையுமுட்கொண்டு போந்து, சுரிதகத்து

"நின்னுறு விழுமங் கூறக் கேட்டு
வருமே தோழி நன்மலை நாடன்"

என வைத்தமையின் அது தரவியலொத்ததாயிற்று; இனி,

"ஞாலமூன் றடித்தாய" (கலி-124)

என்னும் நெய்தற்றிணைக் கலிப்பாட்டு அளவியலாற் சுரிதக மொத்தது.

"கருங்கோட்டு நறும்புன்னை" (கலி-123)

என்பது, தரவிற்கு அடியைந்தாகச் சுரிதகம் நான்கடியாய்ச் சுருங்கி வந்தது; அஃதேல் தரவகப்பட்டதெனச் சுருங்குத லன்றி ஒத்தற்பொருளும் படுமாயின் தரவகப்படும் போக்கென் னுது 'தரவிய லொத்தும்' என்றதென்னையெனின், தரவிய லொத்தும் என்ற உம்மையாற் சிறுபான்மை மிக்கு வரவும் பெறும் போக்கென்பது கொள்க.

"பாடின்றிப் பசந்தகண் பைதல பனிமல்க
வாடுபு வனப்போடி வணங்கிறை வளையூர

வாடெழில் அழிவஞ்சாது அகன்றவர் திறத்தினி
நாடுங்கால் நினைப்பதொன் றுடையேன்மன் னதுவுந்
தான்'' (கலி-16)

என்னும் பாலைப்பாட்டுத் தரவுந் தாழிசையும் நான்கடியாகி ஒத்தவழிச்;

''செய்பொருட் சிறப்பெண்ணிச் செல்வர்மாட் டினையன
தெய்வத்துத் திறநோக்கித் தெருமரல் தேமொழி
வறனோடின் வையகத்து வான்தரும் கற்பினாள்
நிறனோடிப் பசப்பூர்த லுண்டென
அறனோடி விலங்கின்றவ ராள்வினைத் திறத்தே''
(கலி-16)

எனச் சுரிதகம் ஐந்தடியாயிற்று.

(வி-ரை)

ஒழிந்த கலி நான்கு —இவ்வகநிலை ஒத்தாழிசையல்லாத ஏனைய ஒத்தாழிசை, கலிவெண்பாட்டு, கொச்சகம், உறழ்கலி. மண்டிலமாகி – ஈற்றயலடியும் நாற்சீராகி. (137)

ஏனை ஒத்தாழிசைக் கலி

450. ஏனையொன்றே
தேவர்ப் பராஅய முன்னிலைக் கண்ணே.

இஃது, ஒழிந்த ஒத்தாழிசை யுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அது முன்னிலையிடமாகத் தேவரைப் பராவும் பொருண்மைத்து (எ-று).

எனவே, இஃது அகநிலைச் செய்யுளாகாதென்றான்; இதனானே முன்னையது அகநிலை யொத்தாழிசை யெனப்படும். மற்றிது,

''வாழ்த்தியல் வகையே நாற்பாற்கு முரித்தே''
(தொல். செய்-109)

என்றவழிச் சொல்லப்பட்டதாமெனின், அஃது உறழ்கலிக்கும் வெண்கலிக்குங் கொச்சகக்கலிக்கும் பொதுவாகலின் அவற்றுக்குத் தேவபாணி விலக்கினானென்பது.

மற்று முன்னிலைக்கணென்ற தென்னையெனின், —தெய்வத்தினை முன்னிலையாகச் சொல்லப்பட்டனவன்றி அல்லன தேவ

பாணியெனத் தகாவென்பது; என்னை? யான் இன்ன பெருஞ் சிறப்பின் இன்ன தெய்வமென்று தன்னைத்தான் புகழ்ந்து கூறி 'நின்னைக் காப்பேன்; நீ வாழிய' வெனத் தெய்வஞ் சொல்லிற்றாகச் செய்யுள் செய்தலும் ஆகாது, 'வாழ்த்தினுள் அவ்வாறுண்டாயினென்பது. இதனானே படர்க்கையும் விலக்கினானும். ஆகவே, தெய்வம் படர்க்கையாயவழிப் புறநிலைவாழ்த்தாவதன்றித் தேவர்ப்பராயிற்றாகாது பாட்டுடைத் தலைவனோடு கூட்டிச் சொல்லினு மென்றானும். இங்ஙனங் கூறவே, பாட்டுடைத் தலைவனைக் கூட்டினுங் கூட்டாக்காலுந் தேவர்ப்பராயிற்றேயாம் முன்னிலையாயினென்பது பெற்றாம். மற்றிவை பாடல்சான்ற புலனெறிவழக்கிற்கன்றித் தேவர்ப்பராயதற்கும் உரியவோவெனின், ஆண்டு அகப்பொருட்குரிமையுடையன கலியும் பரிபாடலுமென்றதனானே அத்துணையன்றிக் கடவுள்வாழ்த்துப் பொருள்படவும் வருமென்பது ஈண்டுக் கூறினானென்பது. அதுவன்றே 'ஏனையது' எனச் சிறுமைதோன்றப் பிற்கூறியதென்பது. (138)

அதன்வகை

**451. அதுவே,**
**வண்ணக மொருபோ கெனவிரு வகைத்தே.**

இஃது அதன்வகை யுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) 'ஏனையொன்' றெனப்பட்ட ஒத்தாழிசை, வண்ணக ஒத்தாழிசையெனவும் ஒருபோகெனவும் இரண்டாம் (எ-று).

இதன் பயன்:—ஒத்தாழிசை யெனப்படாது இவற்றுளொன்றென்பது அறிவித்தலாறாயிற்று: அஃதென்னை பெறுமாறெனின், மேல் ஒத்தாழிசைக்கலி இருவகைத்தாகுமென்றான்; பின்னர் அவ்விரண்டனுள் ஒன்றற்கு வண்ணகம் ஒருபோகென வேறு பெயர் கூறவே முன்னரதே ஒருதலையாக ஒத்தாழிசைக்கலி யெனப்படுவதென உய்த்துணர வைத்தமையானும், 'ஏனையொன்'றென வேறுபடுத்தமையானும், அப்பெயரும் உடன்கூறாது போதந்து வைத்தமையானும், அதனோடு ஒரினத்த வல்லவென்பது பலவாற்றானுங் கொள்ளவைத்தானென்

பது. அஃதேல், வண்ணகமும் ஒத்தாழிசை யெனப்படாதாம் பிறவெனின், — அது மாற்றுதற்கன்றே வண்ணகம் முற்கூறி அதிகாரம்பட வைப்பாராற்றென்பது. இக்காலத்தார் ஒருபோகினையும் ஒத்தாழிசையென்று தாழிசை பெய்து காட்டுப.

"எருத்தே கொச்சக மராகஞ் சிற்றெண்
அடக்கியல் வாரமோடு அந்நிலைக் குரித்தே"
(தொல்-செய்.153)

என்புழித் தாழிசையுறுப்பு ஓதாமையின் அது பொருந்தாது.

வண்ணக ஒத்தாழிசை

**452. வண்ணகந் தானே,**
**தரவே தாழிசை யெண்ணே வாரமென்று**
**அந்நால் வகையிற் றோன்று மென்ப.**

இது, முறையானே வண்ணக வொத்தாழிசை யுணர்த்துகின்றது.

(இ-ள்.) தரவுந் தாழிசையும் எண்ணும் வாரமுமென்னும் உறுப்பு முறையானே வருவது வண்ணக வொத்தாழிசையாம் (எ—று).

அது,

"முதல்தொடை பெருகிச் சுருங்குமன் எண்ணே"
(தொல்-செய்.145)

என்றவழிக் காட்டுதும். வண்ணித்துப் புகழ்தலின் வண்ணக மெனப்படும். என்னை? தரவினுனே தெய்வத்தினை முன்னிலையாகத் தந்து நிறீஇப் பின்னர்த் தெய்வத்தினைத் தாழிசையானே வண்ணித்துப் புகழ்தலின் அப்பெயர் பெற்றதாகலின். ஒழிந்த உறுப்பான் வண்ணிப்பினுஞ் சிறந்த உறுப்பு இதுவென்க; எனவே, அகநிலைச் செய்யுட்டாழிசை வண்ணித்து வாராவென்பதாம். எண்ணுறுப்பாமாறு முன்னர்ச் சொல்லும். அவ்வெண்ணுறுப்புத்தான் நீர்த்திரைபோல வரவரச் சுருங்கிவருதலின் அம்போதரங்கமெனவும் அமையுமாகலின் அதனை அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பாவெனவுஞ் சொல்லுப.

இனி வண்ணகமென்பது, அராகமென உரைத்து அவ்வுறுப்புடையன வண்ணகவொத்தாழிசை யெனவுஞ் சொல்லு

வாரும் உளர். எல்லா ஆசிரியருஞ் செய்த வழிநூற்கு இது முன்னூலாதலின் இவரொடு மாறுபடுதல் மரபன்றென மறுக்க. இசை நூலுள்ளும் மாறுபடின் அஃது அவர்க்கும் மரபன்றென்பது. மற்று இதற்குத் தனிச்சொல்லோதிய தில்லையாலெனின் அதனை அதிகாரத்தாற் கொள்க. (140)

(வி-ரை)

வண்ணித்து—வருணித்து.

வண்ணக ஒத்தாழிசைக்குரிய தரவின் அடிவரையறை

**453. தரவே தானு,**
**நான்கு மாறு மெட்டு மென்ற**
**நேரடி பற்றிய நிலைமைத் தாகும்.**

இஃது, ஒத்தாழிசையுள் ஏனையொன்றற்குத் தரவு வேறுபட்ட இலக்கணத்திற்றாகலான் அது கூறுகின்றது.

(இ-ள்.) இது நான்கு முதல் பன்னிரண்டடி யீறாக வாராது: தேவபாணிக்காயின் எட்டும் ஆறும் நான்குந் தரவடியாம் (எ-று)

இதனானே தலையளவும் இடையளவுங் கடையளவு மென்பன கூறினானும். இங்ஙனங் கூறவே ஒழிந்தவுறுப்பிற்குந் தலையிடை கடையென்பது கொள்ளப்படும்.

"நேரடி பற்றிய நிலைமைத் தாகும்"

என்பதனை அளவடியான் வருமென்றற்குக் கூறினானென்பாருமுளர்; அற்றன்று; பிற அடி மயங்குவனவும் அளவடியுரியவென்பதும் முன்னர்க் கூறப்பட்டமையின். மற்றென்னை கருதியதெனின்,—சமநிலையின்று வியநிலை வாராவென்பது.

இனிப் 'பற்றிய' வென்ற மிகையானே முற்கூறிய தரவுந் தாழிசையும் அளவடியான் வருதலில்லையென்பது கொள்க. வருகின்ற ஒத்தாழிசைக்கும் பேரெண்ணிற்குஞ் சிற்றெண்ணிற்கும் இஃதொக்கும். (141)

வண்ணக ஒத்தாழிசை

**454. [1]ஒத்துமூன் றாகு மொத்தா ழிசையே.**

இது, முறையானே ஒத்தாழிசை உணர்த்துகின்றது.

---

1. இந் நூற்பாவையும் அடுத்த நூற்பாவையும் இணைத்து ஒரே நூற்பாவாகக் கொள்வர் இளம்பூரணர்.

(இ-ள்.) தம்மின் ஒத்த அளவினவாகலும் ஒத்த பொருளவாகலுமுடைய தேவபாணிக்கண் மூன்றாக வரும் ஒத்தாழிசை (எ-று).

இவை பொருள் ஒக்குமெனவே, முன்னை அகநிலையொத்தாழிசைக்கண் வரும் இடைநிலைப்பாட்டிற் பொருள் ஒவ்வாது வருதலுஞ் சிறுபான்மை யுண்டெனவறிக; அவை,

"கல்லெனக் கவின்பெற்ற விழவாற்றுப் படுத்தபின்
புல்லென்ற களம்போலப் புலம்புகொண் டமைவாளோ"
(கலி-5)

என இடத்தியல் பொருளொழிய இடப்பொருளோடு உவமங் கூறினான்.

"ஓரிரா வைகலுள் தாமரைப் பொய்கையுள்
நீர்நீத்த மலர்போல நீ நீப்பின் வாழ்வாளோ"

என இடப்பொருளொழிய இடத்தியல் பொருளோடு உவமங் கூறினமையின் வேறுபட்டன. ஒத்து வருவன முன்னர்க் காட்டினாம். (142)

வண்ணக ஒத்தாழிசையின் அடிவரையறை

## 455. தரவிற் சுருங்கித் தோன்று மென்ப.

இஃது, ஐயம் அறுத்தது; அகநிலை யொத்தாழிசைகட்குப் போலத் தரவோடொத்து வருங்கொலென் றையுறாமைத் தரவிற் சுருங்கித்தோன்று மென்றமையின்.

(இ-ள்.) மூவகை வண்ணத்தின் தாழிசையுஞ் சமநிலைத் தரவிற் சுருங்கித் தோன்றும் (எ-று).

வாளாதே தரவென்றமையின் இடையளவின்மேற் செல்லும். 'அடியென்றவழி' 'அளவடிமேற்றாயது' போலவென்பது. 'தோன்று'மென்பதனான் இடைநிலையாகிய நான்கடியானும் மூன்றடியானுமின்றி ஐந்தடியானாகாதென்பது கொள்க. எண்ணோடு தொடர்தலின் இரண்டடியானாகாதென்பது பெற்றாம். இடையளவு தரவிற் சுருங்குமெனவே கடையளவு தரவினுந் தாழிசை சுருங்குமென்பது உய்த்துணரப்படும். தோன்றுமென்றதனாற் கடையளவினை ஒழித்து மற்றைத் தரவிரண்டளவாகக் கொள்வாமெனக் கொள்க. இங்ஙனங் கூறுக்கால் ஓரடி முதலாகத் தாழிசைகோடல் வேண்டுமஃதன்றேயென்பது. (143)

வண்ணகத்திற்குரிய சுரிதகம்

**456. அடக்கியல் வாரந் தரவோ டொக்கும்.**

இது, சுரிதக விலக்கணங் கூறுகின்றது.

(இ-ள்). தரவொடு ஒத்துவரும் அடக்கியல்வாரம் (எ-று).

அடக்கியல் வாரமென்பது அடக்கும் இயல்பிற்றாகிய வார மென்றவாறு. நிறுத்த முறையானே எண்ணுறுப்புணர்த்தி தாது மயங்கக் கூறியதனானே தனிச்சொல் வருமாறன்று எண்ணீற்றினுஞ் சுரிதகத்துமுன்னும் புணர்க்க. அடக்கிய லென்றான், முன்னர்ப் பலவகையாற் புகழப்பட்ட தெய்வத்தினை ஒரு பெயர் கொடுத் தடக்கி நிற்றலின். வாரமென்றான், தெய்வக்கூற்றின் மக்களைப் புகழ்ந்த அடி மிகுமாகலினென்பது.

அம்போதரங்கம் வருமாறு

**457. முதற்றொடை பெருகிச் சுருங்குமன் னெண்ணே.**

இஃது, எண்ணுறுப்பாமா றுணர்த்துகின்றது.

(இ-ள்.) முதல் பெருகியவழி முதலெண் (எ-று)

'தொடை'யென்றதனால் தலையெண் இரண்டு அளவடியான் ஒரு தொடையாகி வருமெனவும், 'பெருகி'யென்றதனான் இரண் டடியான் இரண்டனை நாட்ட அதுவே பற்றி முதல் பெருகிய வென்றதனான் ஒழிந்த எண்ணுத்தொடை பெறுதலும் நேர்ந்தா னும். இதனை 'முத'லெனவே வழிமுறை வருவனவும் எண் ணளவென்பது பெற்றாம். அவை இத்துணையென்பது அறியு மாறென்பதென்னை? 'முதற்றொடை பெருகி'யென்றதனான், இரண்டடியான் இரண்டனை நாட்டி, அதுவே பற்றிச் 'சுருங்கு' மென்றமையின் ஈரடியிற் சுருங்கி ஓரடியாதலும், ஓரடியிற் சுருங்கி இருசீராதலும், இருசீரிற் சுருங்கி ஒருசீராதலும் கொள் ளப்படும். முதலடி இன்னதென்றிலனாயினும் அளவடியே கொள்ளப்படும்.

"நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே" (தொல்-செய்:32) என்றாகலின், ஆகவே, இருசீரெனப்பட்டது குறளடியாயி னும் இவை இரண்டு தொடர்ந்தன்றி எதுகையாய் அமையா

மையிற் குறளடியென்னுமாறென்பது. ஒருசீர்க்கும் அளவடிப் படுத்துத் தொடைகோடலொக்கும்; என்னை?

"போரவுணர்க் கடந்தோய் நீ
புணர்மருதம் பிளந்தோய் நீ
நீரகல மளந்தோய் நீ
நிழல்திகழ்ஐம் படையோய் நீ"

எனவும்,

"ஊழிநீ; யுலகுநீ; யுருவுநீ; யருவுநீ;
யாழிநீ; யருளுநீ; யறமுநீ; மறமுநீ"

எனவும் அளவடிப்படுத்தே தொடை கொள்பவாகலின்.

அஃதேல், ஒருசீரினுஞ் சுருங்கப்பெறுதோவெனின் கந்தருவ நூலின்கண்ணும் ஒருசீரிற் சுருங்கின வாராவாகலின் இவனும்,

"பிறநூன் முடிந்தது தானுடம் படுதல்"

என்னும் உத்திவகையான் ஒருசீரிற் சுருங்குதல் நேரானென் பது. மற்று வழிமுறையாற் பாகஞ் சுருங்குதல் பெறுமா றென்னை யெனின்,

"வகார மிசையு மகாரங் குறுகும்"

(தொல்-எழுத்-புள்ளி-35)

என்றாற்போல மேலைக்கொண்டும் வருகின்றவாற்றாற் பாகமே சுருங்குதல் பெறலாமென்பது. மன்னென்பது, ஆக்கத்தின்கண் ணும் வந்ததாகலிற் சுருங்கிப் பலவாமென்பது கொள்க. எனவே இரண்டடி யிரண்டும், ஓரடி நான்கும், இருசீரெட்டும், ஒருசீர் பதினாறுமாகி என் பல்குமென்பது. இருசீர் குறளடியுமாகலின் ஒருசீரான் வருவன சிற்றெண்ணெனவே படும்; ஆகவே, ஒழிந்த எண் மூன்றும் தலையெண்ணும் இடையெண்ணும் கடையெண் ணுமென மூன்றுங் கூட்டி எண்ணி நிற்றற்குரியவாயின. இது நோக்கிப் போலும் எண்ணென்று அடக்காது,

"சின்ன மல்லாக் காலை" (தொல்-செய்.146)

என ஒருசீரினை வேறுபடுத்து மேற்கூறுகின்றதென்பது.

இனி, அளவடியினை நாட்டியே முதற்றொடை பெருகிச் சுருங்குமென்றமையின், அளவடியிற் சுருங்கின இருசீரும் ஒரோவழிச் சின்னமெனப்படும். இனி, அல்லாதார் ஈரடியிரண்

டினைப் பேரெண்ணெனவும், ஓரடி நான்கினைச் சிற்றெண்ணென வும், கடையெண்ணினை இடையெண்ணெனவும், ஒருசீரான் வருவனவற்றை அளவெண்ணெனவுஞ் சொல்லுப. அளவடியாக நோக்கிப் பேரெண் சிற்றெண்ணென்றலுஞ் சின்னம்பட்டவழி இடை நின்றது இடையெண்ணுதலும் எல்லையளவைத்தாகிய சின்னம் அளவெண்ணுதலும் அமையும். அவற்றுள் இருசீரினை. முச்சீராகவும், ஒருசீரினை, இருசீராகவும் அலகுவைப்பினும் அதனை,

"அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி" (தொல்-செய்.11) என்பதனான் மறுக்க. இதற்குச் செய்யுண் முன்னர்க் காட்டுதும். (145)

மேலதற்கொரு புறனடை

458. எண்ணிடை யொழித லேத மின்றே
சின்ன மல்லாக் காலை யான.

இது, மேலதற்கொரு புறனடை.

(இ-ள்.) முற்கூறிய எண்களின்றி வருதல் செய்யுட்கு ஏதமின்று; சின்னவெண்ணென்று மொழிந்து நில்லாவிடத்து (எ-று).

எனவே, சின்னவெண்ணொழியாது மூவகையெண்ணும் ஒழிதலினும் சின்னவெண்ணொழிய மூவகையெண்ணும் பெறுதல் பெரிதும் சுவையுடைத்தென்றவாறாயிற்று. இதனானே 'எண்ணொழிதல்' என்றது, 'இடை'யென்றதனால் தலையெண்ணும் இடையெண்ணு மல்லன எட்டு நான்காகியும், பதினாறு எட்டாகியுங் குறைந்து வருமென்பதுங் கொள்க. மூவகையெண்ணுஞ் சின்னமும் பெற்று வருதல் சிறப்புடைமை, 'ஏதமின்'றென்றதனாற் பெறுதும். அவை வருமாறு:-

(உ-ம்) "மணிவிளங்கு திருமார்பின் மாமலராள் வீற்றிருப்பப்
பணிதயங்கு நேமியும் பால்நிறத்த சுரிசங்கு
மிருசுடர்போ லிருகரத்தி லேந்தியமர் மாயோனும்
பங்கயத்தி லுறைவோனும் பாகத்தோர்பசுங்கொடிசேர்
செந்தழற்கண் ணுதலோனுந் தேருங்கால் நீயென்பார்க்
கவரவர்த முள்ளத்து ளவ்வுருவா யல்லாத

பிறவுருவு நீயென்னிற் பிறவுருவு நீயேயா
யளப்பரிய நான்மறையால் உணர்த்துதற் கரியோனே''
(எட்டடித்தரவு)

''எவ்வுயிர்க்கு முயிரேயா யியங்குதல் நின்றொழிலாகி
யவ்வுயிர்க்க ணடங்கியே யருளாது நிற்றலினால்
வெவ்வினைசெய் தவையிழந்து வெம்பிறவிக் கடலழுந்த
வவ்வினையை யகற்றாமல் நிற்பதுநின் னருளன்றே;
பல்லுயிரும் படைப்பதுநின் பண்பன்றே பகலினால்
வல்வினையின் வலைப்பட்டு வருந்தங்கூ ருயிர்தம்மை
நல்வினையே பயில்வித்து நடுக்கஞ்செய் பவை நீக்கி
யல்லல்வா யழுந்தாம லகற்றுவது மருளன்றே;
அழிப்பதுநின் றொழிலன்றே யறைந்தாலு முயிரெல்லா
மொழித்தவற்றுள் ளுணர்வுகளை யொருவாம லுடனி
(ருத்திப்
பழிப்பின்றிப் பலகாலு மிப்பரிசே பயிற்றுதலி
னழிப்பதுவு மில்லையா லங்கதுவு மருளன்றே''
(நான்கடித்தாழிசை.)

''வேள்வி யாற்றி விதிவழி யொழுகிய
தாழ்வி லந்தணர் தம்வினை யாயினை;
வினையி னீங்கி விழுத்தவஞ் செய்யு
முனைவர் தமக்கு முத்தி யாயினை'' (ஈரடியிரண்டு.)

''இலனென விகழ்ந்தோர்க் கில்லையு மாயினை;
யுளனென வுணர்ந்தோர்க் குளையு மாயினை;
யருவுரு வென்போர்க் கவையு மாயினை;
பொருவற விளங்கிய போத மாயினை; (ஓரடிநான்கு.)

''பான்றிற வண்ணனீ; பனிமதிக் கடவுள்நீ
நீனிற வுருவுநீ; நிறமிகு கனலிநீ;
யறுமுக வொருவனீ; யானைமுகற் கடவுணீ;
பெறுதிரு வுருவுநீ; பெட்பன வுருவுநீ'' (இருசீரெட்டு)

''மண்ணுநீ; விண்ணுநீ, மலையுநீ; கடலுநீ;
யெண்ணுநீ; யெழுத்துநீ; யிரவுநீ; பகலுநீ;
பண்ணுநீ; பாவுநீ; பாட்டுநீ; தொடருநீ;
யண்ணல்நீ; யமலனீ; யருளுநீ; பொருளுநீ''
(ஒருசீர்பதினாறு)

"ஆங்க" (தனிச்சொல்)

"இனியை யாகிய விறைவனின் னடியிணை
சென்னியின் வாங்கிப் பன்னாள் பரவுது
மலர்தலை யுலகின் மன்னுயிர்க் கெல்லா
நிலவிய பிறவியை நீத்தல் வேண்டி
முற்றிய பற்றொடு செற்ற நீக்கி
முனிமை யாக்கிய மூவா முத்தியை
மயலற வளித்ததின் மலரடி
யரிய வென்னா யுரிதினிற் பெறவே" (சுரிதகம்)

இஃது, எட்டடித்தரவும், தரவின் பாகம்பற்றிய நான்கடித் தாழிசை மூன்றும், ஈரடியிரண்டும், ஓரடிநான்கும், இருசீரெட்டும், ஒருசீர் பதினாறுமாகிய நால்வகையெண்ணும், தனிச்சொல்லும், எட்டடிச்சுரிதகமும் பெற்ற தலையளவுவண்ணகப் பெருந்தேவபாணி.

"பலியுருவிற் கேலாத படைமழுவாள் வலனேந்திப்
புலியுரிமேற் பைத்தலைதாழ் பூங்கச்சை விரித்தமைத்துக்
கண்கவருந் திருமேனி வெண்ணூலின் கவின்பகைப்பத்
தண்கமழ்பூந் தாரிதழித் தலைமலைந்து பிறைதயங்க
மொழிவலத்தான் மயங்காதே முறுவலால் தோலாதே
விழிவலத்தா னுருவழிந்தோன் வேடங்கண் டுணர்வழியக்
கலிகெழு கடற்கச்சிக் கமழிளந் தேமாவி
னெளிதளிரு முலைச்சுவட் டுடன் பிறப்ப வுலவுங்கழல்"
(எட்டடித்தரவு)

"நீறேறுந் திருமேனி நெடும்பகலே நிலவெறிப்ப
ஏறேறிக் கடைதோறு மிடுபலிக்கு வருதிரால்
ஏறேறி யிடுபலிக்கு வரும்பொழுது மிடைபிரியாக்
கூறேறும் பசும்பாகங் கொள்ளுமோ கொள்ளாதோ;
நாணுக மடந்தையர்பாற் பலிக்கென்று நடந்தக்காற்
பூணுகந் தழீஇக்கொளினும் பொங்காது போலுமாற்
பூணுகந் தழீஇக்கொளினும் புகையுயிர்த்துக் பொங்காத
கோணுகம் யாந்தருபால் குடிக்குமோ குடியாதோ;
பல்லேற்ற பரிகலத்துப் பலியேற்றன் மேலிட்டு
வல்லேற்ற முலைமகளிர் மனமேற்ப வருதிராஸ்
வல்லேற்ற முலைமகளிர் மனமேற்ப நீர்வருங்காற்
கொல்லேற்றுக் கறுகிடினுங் கொள்ளுமோகொள்ளாதோ

(இது தரவின் பாகம்பற்றிய நான்கடித்தாழிசை)

"எரிகல னிமைக்கு மிடவயின் தொடிக்கை
பரிகல மேந்தும் பரிசிறந் ததுகொல்;
உமையவள் விலக்கவு மொலிகடல் நஞ்ச
மிமையவர் தம்மை யிரந்துகொண் டதுகொல்"
(ஈரடி இரண்டு)

"இடைபெழு பொழில்கட்கு மிமைப்பளவிற் கொல்லேறே;
கடைதொறு மவைநிற்பக் கற்பித்த வாறென்கொல்;
இரப்புநீர் வேட்டதுகேட் டிமையவரென் பட்டனரே;
பரப்புநீர்க் கங்கையோர் படர்சடையிற் கரந்ததே"
(ஓரடிநான்கு)

"பூண்டன வென்பு; புனைந்தது தும்பை;
ஆண்டன பூதம்; அறைவது வேதம்;
இசைப்பன பல்வேய்; எழ்இயது வீணை;
அசைப்பன வேணி; அதிர்வன பொற்கழல்,'
(இருசீரெட்டு)

"எனவாங்கு" (தனிச்சொல்)

"எல்வளை மகளி ரிடுபலி நசைஇப்
பல்கடை திரிதருஞ் செல்வநிற் பரவுதுங்
கொடியணி யேனம் பொடியணிந்து கிடப்ப
வடதிசை வாகை சூடித் தென்றிசை
வென்றி வாய்த்த வன்றுள் வளவ
னிமிழிசை வேங்கடம் போலத் தமிழகத்து
நாவலொடு பெயரிய ஞாலங்
காவல் போற்றி வாழிய நெடிதே" (சுரிதகம்)

இஃது எட்டடித் தரவுந் தரவிற்சுருங்கிய ஒத்தாழிசை மூன்றுஞ் சின்னமல்லா மூவகை எண்ணுந் தனிச்சொல்லுந் தரவோடொத்த அடக்கியல் வாரமும் பெற்று வந்தது.

"ஆயிரங் கதிராழி யொருபுறந்தோன் றகலத்தான்
மாயிருந் திசைசூழ வருகின்ற வரவுணர்த்த
மனக்கமல மலரிணையு மலர்த்துவான் றுணைத
லினக்கமல முணர்த்துவபோன் றெவ்வாயும்
வாய்திறப்பக்
குடதிசையின் மறைவதூஉ மறையென்று கொள்ளாமை
கடவுளர்த முறங்காத கண்மலரே கரிபோக

வாரிருளும் புலப்படுப்பா னவனேயென் றுலகறியப்
பாருலகத் திருள்பருகும் பருதியஞ் செல்வகேள்'' (தரவு)
''மண்டலத்தி னிடைநின்றும் வாங்குவார் வைப்பாராய்
விண்டலத்திற் கடவுளரை வெவ்வேறு வழிபடுவா
ராங்குலக முழுதுபோர்த் திருவுருவி னொன்றாக்கி
யாங்கவரை வேறுவே றளித்தியென் றறியாரால்;
மின்னுருவத் தாரகைநீ வெளிப்பட்ட விடியல்வாய்
நின்னுருவத் தொடுங்குதலா னெடுவிசும்பிற் காணுதா
ரம்மீனுங் காலைவா யிடைகரந்து மாலைவா
யம்மீனை வெளிப்படுப்பாய் நீயேயென் றறியாரால்;
தவாமதியந் தொறுநிறைந்த தண்கலைகள் தலைத்தேய்ந்
துவாமதிய நின்னொடுவந் தொன்றாகு மென்றுணரார்
தண்மதியி னின்னொளிபுக் கிருளகற்றுந் தவற்றாற்கொ
லம்மதியம் படைத்தாயு நீயேயென் றறியாரால்;
(தாழிசை)
''நீராகி நிலம்படைத்தனை; நெருப்பாகி நீர்பயந்தனை;
ஊழியிற் காற்றெழுவினை; ஒளிகாட்டி வெளிகாட்டினை''
(இரு சீர்நான்கு)
''கருவாயினை; விடராயினை; கதியாயினை; விதியாயினை;
யுருவாயினை; அருவாயினை; ஒன்றாயினை; பலவாயினை
(ஒரு சீரெட்டு)
''என வாங்கு'' (தனிச்சொல்)
''விரிதிரைப் பெருங்கட லமிழ்தந் தன்ன
வொருமுதற் கடவுள்நிற் பரவுதுந் திருவொடு
சுற்றந் தழீஇக் குற்ற நீக்கித்
துன்பந் தொடரா வின்பமெய்திக்
கூற்றுத் தலைபனிக்கு மாற்றல் சான்று
கழிபெருஞ் சிறப்பின் வழிவழி பெருகி
நன்றறி புலவர் நாப்பண்
வென்றியொடு விளங்கி மிகுகம்யா மெனவே'' (சுரிதகம்)

என்பது, எட்டடித்தரவுந் தாழிசையும் இருவகைச் சின்னமுந் தனிச்சொல்லுந் தரவொடொத்த சுரிதகமும் பெற்றுவந்த தலையளவு வண்ணகப் பெருந்தேவபாணி.

சின்னமெனவே இருசீரெட்டும் ஒருசீர் பதினாறும் அடங்குமென்றாராகலின், இது சின்னமல்லாக்கால் எண்ணிடையிட்டு

வந்த வண்ணகவொத்தாழிசையாயிற்று.

இனி; இருசீருமன்றி ஒருசீர் பதினாறாகிய சின்னவெண் பெற்று வரும். அது வருமாறு:

"உறைபதியி னுடனயனை யுந்தியாற் படைத்தோயு
மறைகடல்சூழ் நிலமுதலா யனைத்துலகும் புரப்போயுந்
திருநிறமே கரிபோகத் திருமேகம் பயந்தோயு
மொருநிறமே நிறமாக வொள்ளெரியை யுயிர்த்தோயு
மறுவத்து மார்பென்ன மலர்மகளை வைத்தோயு
நிறத்தோடு நெஞ்சொத்த நிலமடந்தை கணவனுநீ"
(தரவு)

"பின்னமா மொன்றாகும் பெருமாயை யியற்றுவா
யின்னமா யந்தெளிய வெமக்கருளி யிமையவர்க்கு
மன்னமாய் முன்னொருகா லறம்பயந்த வரனுநீ;
குறியாதும் பிழையாத குறிமறைய மதன்மயக்கி
வெறியாதி மலரோற்கு வெளிப்படுத்து வேறுபடுத்
தறியாத மறையெமக்கு மறிவித்த வறிவனீ"
மாறாத மதிகொடுத்து வானவரை மயக்கியுங்
கோறாத மதிவாங்கிக் கொடுத்தருளி யிமையவர்க்குக்
காறாத மதிகாட்டுங் கருணைகூர் காட்சியைநீ;
(மூன்றுந் தாழிசை)

"வானுநீ; நிலனுநீ; மதியுநீ; விதியுநீ;
தேனுநீ; யமிழ்துநீ; திருவுநீ; யருவுநீ;
யன்புநீ; யருளுநீ; யாதிநீ; யந்தநீ;
யின்பநீ; துன்பநீ; யின்மைநீ; யுண்மைநீ, (ஒருசீர்ச்சின்னம்)

"என வாங்கு" (தனிச்சொல்)

"நால்வகை யுருவிற் பால்வே றாகிய
கோல முதல்வநிற் பரவுது ஞாலத்து
நல்லவை யல்லவை யெல்லா நிறுஅது
செல்வ நோக்கி னெய்தி(ய) வல்விதின்
துயரொடு தொல்வினை நீங்கிப்
பெயராச் சுற்றம் பெறுகம்யா மெனவே" (சுரிதகம்)

எனவரும்.

இதனுள் தரவுந் தாழிசையும் ஒருசீர்ச்சின்னமுந் தனிச் சொல்லுஞ் சுரிதகமும் வந்தவாறு கண்டுகொள்க

நெறி பெற்று வரூஉ நேரடி முன்னே" (தொல்-செய்.64)
என்றோதப்பட்டதாயினும் பாமயங்கி வரும் பகுதிபற்றி வேறு கூறப்பட்டது.

"புன்னை நீழல் நின்றோர் யார்கொ
லன்னை காணின் வாழான் தோழி"

எனவும்,

"மல்ல லூர விவ்வி லன்றோற்
பல்பூங் கோதை யில்"

எனவும்,

இவை இரண்டடியான் ஈற்றடி குறையாதுங் குறைந்தும் வந்தன. இன்னும் மேற்கூறிய கொச்சக வொருபோகின் பகுதியுள் ஒழிந்தனவும் இவ்வாற்றான் வருவனவெல்லாம் வந்தவழிக் கண்டுகொள்க.

இனி, 'வகை'யென்றதனான் வெண்கலியுறுப்பு நிலைஒத்துப் பாவேறுபடும் கொச்சகம் வருமாறு:

"ஒன்று இரப்பான்போ லெளிவந்துஞ் சொல்லு முலகம்
புரப்பான் போல்வதோர் மதுகையு முடையன்
... ... ...
மற்றவன் மேவழி மேவாய் நெஞ்சே" (கலி-47)

என்பது, தரவும் கொச்சகமுஞ் சுரிதகமும் முறையானே வந்து ஆசிரியச்சுரிதகத்தான் இற்றது. இதனுள் 'ஒன்று' எனவும் 'அவனே' எனவுஞ் சொற்சீருந் தனிச்சொல்லும் வந்தன. இப்பாட்டு மூன்றனுளொன்று ஓரடிமிக்கு மற்றைய நான்கடியாயே வருதலின் மூன்றும் ஒரு பொருண்மேல் வரினும் நூலறிபுலவரான் ஒத்தாழிசை யெனப்படாக் கொச்சகமாயிற்று. பிறவும் இன்னோரன்னவற்றாற் கலியோடு இதனிடை வேறுபாடு தெரிந்து உணரப்படும்: அஃதறியாதார்க்கு ஒன்றுபோலக் காட்டினு மென்பது,

"வேனி லுழந்த வறிதுயங் கோய்களிறு
... ...
முன்னிய தேஎத்து முயன்றுசெய் பொருளே" (கலி-7)

என்னும் பாட்டுத், தரவும் போக்கும் பாட்டிடைமிடைந்து ஐஞ்சீரடுக்கி வந்தது. இதனுள் தரவடி நான்கும் வெண்பாவாயினும் அச்செய்யுண் முழுதும் வெண்பாவன்மையிற் கொச்சகமாயிற்று. இனி, அறுசீரான் வருவனவும் வந்தவழிக் கண்டுகொள்க.

"காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள்" (கலி-39)
என்னுங் கொச்சகக் கலியுள்,

"ஏன லிதணத் தகிற்புகை யுண்டியங்கும்
வானூர் மதியம் வரைசேரி னவ்வரைத்
தேனி னிறாலென வேணி யிழைத்திருக்குங்
கானக நாடன் மகன்"

என இடைநின்ற கொச்சகம் ஈற்றடி குறைந்தது.

"புனவேங்கைத் தாதுறைக்கும் பொன்னறை முன்றி
னனவிற் புணர்ச்சி நடக்குமா மன்றோ
நனவிற் புணர்ச்சி நடக்கலு மாங்கே
கனவிற் புணர்ச்சி கடிதுமா மன்றோ"

எனக் கொச்சகம் ஈற்றடி குறையாது வந்தது. இவை யிரண்டும் வெண்பா. இதனுள் ஒழிந்த பா மயங்கியவாறு கண்டுகொள்க.

"கொடுமிட ஞாஞ்சிலான் றூர்போன் மராஅத்து" (கலி-36)
என்னும் பாட்டினுள்,

"பாஅய்ப் பாஅய்ப் பசந்தன்று நுதல்
சாஅய்ச் சாஅய் நெகிழ்ந்தன தோள்"

என முட்டடியின்றிக் குறைவுசீர்த்தாகிய சொற்சீரடி வந்தது.

"மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வெளவலின்" (கலி.104)
என்னும் முல்லைப்பாட்டினுள்,

"இரிபெழுபு அதிர்பதிர்பு இகந்துடன் பலர்நீங்க
வரிவரிபு இறுபிறுபு குடல்சோரக் குத்தித்தன்
கோட்டழியக் கொண்டானை ஆட்டித் திரிபுழக்கும்
வாடில் வெகுளி யெழிலேறு கண்டை

எனவும்,

"தாளெழு துளிபிணி யிசைதவிர்பு இன்றித் தலைச்சென்று"
எனவும் முடுகியலடி வந்தது.

இவற்றுளெல்லாஞ் சொற்சீரடி வந்தன. ஒழிந்த கொச்சகப் பகுதியும் இவ்வாறே வந்தவழிக் கண்டுகொள்க.

இனித், தரவும் போக்குமின்றிக் கொச்சகம் பல தொடர்ந்திற்றது வருமாறு:

"காலவை. சுடுபொன் வளைஇய வீரமை சுற்றொடு" (கலி-85)
என்னும் மருதக்கலி உறழ்பொருட்டு அன்மையிற் கொச்சகக்கலி

யாயிற்று. இவையெல்லாம் பாநிலையெனப்பட்ட கொச்சகமா மெனின்,—அற்றன்று;

"அம்போ தரங்கம் அறுபதிற் றடித்து" (863)

என்றவழி அளவை முற்கூறிய மயக்கினுன் இனியெல்லாந் தன்னளவெனப்படுமென்று புகுந்தமையின். இதற்குக் கொச்சகவொருபோகின் அளவை கொள்ளப்படாது, பாநிலைவகைத்தென்னுமையின்; பிறவும் அன்ன.

இனிக், கலிவெண்பாட்டெனக் கூறிய உறுப்புடைக் கலிவெண்பாட்டும் ஈண்டுப் பாநிலையெனப்பட்ட கொச்சகப் பகுதியுமென இரண்டுங் கொச்சகவுறுப் புடைமையிற் கொச்சகக்கலியென ஒன்றேயாமென மேலைச் சூத்திரத்தோடு இதனை ஒன்றாக வகுப்ப[1]; அற்றன்று, மேல் ஒரு பொருள் கரந்து வெளிப்படத் தோன்றின் ஒரு பொருணுதலியதுபோலக் கலிவெண்பாட்டாதற்கும் வாளாது கலிப்பாவாதற்கும் காரண மென்னையெனின் பிறிது மொருபொருள் கூறுவது கலிவெண்பாட்டென்றதற் கடையின்றியே,

"வெண்பா வியலான் வெளிப்படத் தோன்றும்"
(தொல்-செய்.154)

கரந்த பொருட்டன்று இஃது என்றமையின் இதுவும் வெண்கலியாம்; அல்லதூஉம்,

"வெண்பா வியலான் வெளிப்படத் தோன்றும்"

என வேறொரு பாவினை உறுப்பாகக் கூறுதன் மற்றொரு பாவிற் கேதுவாகக் கூறுதலாமோவென மறுக்க. ஒரு பொருணுதலிய வெண்பாட்டாயின் "ஒத்தாழிசைக்கலி கலிவெண்பாட்டென" மற்றைய வற்றோடொத்த பரப்புடையதுபோல உடனோதாதாகலின் இதுவும் அவ்வாறு பரப்புடைத்தாகல் வேண்டுமாகலானும் அஃதமையா தென்பது. இங்ஙனம் மயங்குவாரை நோக்கியன்றே நூல்நவின்றோர்க்கே இவ்வேறுபாடுணரலாவதென்று ஆசிரியன் ஓதுவானாயிற்றென்பது.

மற்று இதற்கு அளவைகொள்ளுமாறென்னை? மேற் கொச்சகவொருபோகின் அளவு இன்னதென்றிலனாலெனின்,—அற்றன்று; வண்ணகத்திற்கு ஓதிய உறுப்பு அமையவராமையின்

1. இளம்பூரணர்.

அது கொச்சகமே யாமெனவும் எண்ணுஞ் சின்னமும் இழந்ததே பற்றி அதுவும் ஒருபோகே யாமெனவும்,

"அடக்கிய லின்றி அடிநிமிர்ந் தொழுகியது"

வெண்பாவும் ஆசிரியமுமாகி இறுதலின் அடக்கியலில்லாச் சுரிதகம் பெற்றுத் தரவுபோல வருமெனவும், இவ்வாறன்றி ஒப்பழிய வருமெனவும் மேற்கூறினானன்றே? அங்ஙனங் கூறவே அவ்வுறுப்புக்கள் அவ்வவ்வளவின வென்பதூஉம், அவற்றிற் சிறிய வேறுபட்டு வருமென்பதூஉம் அங்ஙனம் வேறுபடுங்கால் அடிநிமிர்ந்தொழுகியதன் இழிந்த வெல்லையின் ஒன்றிற்றென்பதூஉந் தெரித்தானும்; என்னை? அடிநிமிர்ந்தொழுகியதற்கு இழிந்த எல்லை பத்து அடியென்றமையின்.

இனி, அடிநிமிர்ந்தொழுகிய தொவ்வாமையின் அதற்களவை இத்துணையென்று,

"ஒருபான் சிறுமை யிரட்டியத னுயர்பு" (தொல்-செய்.150)

என விதந்தோதினான். இங்ஙனம் பல்வேறு வகைப்பட்ட அளவின் வேறுபட்டவற்றையும் யாப்பின் வேறுபட்டு வருமென்றான், எனவே ஈரடியானே தாழிசைக் கொச்சகம் வருமெனவும் அடிநிமிர்ந் தொழுகியதன் சிற்றெல்லையாகிய பதிதடியளவும் பாவைப்பாடலும் அம்மனைப்பாடலும் போலுந் தரவு கொச்சகம் வருமெனவும், அவையும் இரண்டடியின் இழியாவெனவும்,

"எண்ணிடை யிட்டுச் சின்னங் குன்றியது"

வேறுபட்டு ஏழடியும் ஐந்தடியுமாகித் தரவுவரினும் வருமெனவும் எட்டடி பாகமாகிய நான்கடியின் உயரா தாழிசையெனவும் எல்லாம் ஆண்டே கொள்ளப்படுமாகலின் அவற்றுக்கு அளவை கூறியதிலனென்று கடாவருவதென்னையென மறுக்க. அஃதேல், தாழிசைக் கொச்சமாகிய பரணிச்செய்யுளும் தரவு கொச்சகமாகிய தொடர்நிலைச்செய்யுளும் முழுவதும் ஒன்றாக நோக்கியக்கால், உயர்ந்த எல்லை கூறுரோ வெனின்,- அஃது அடிவரையறையின் கண் ஒவ்வொரு செய்யுளாக்கியே அளவை கூறினான், அவை கொச்சகமாயினுந் தரவு கொச்சகமெனப் பெயர் பெறுதலா யினமையினென்பது; அஃதேல் அகநிலைக் கொச்சகத்திற்கும் அவையே அளவாம் பிறவெனின்,—அற்றன்று;

"அம்போ தரங்கம் அறுபதிற் றடித்து" (463)

என்றவழி, அளவை முற்கூறிய மயக்கினான் இனிக் கூறும் உறுப்புடைக் கலிப்பாவிற்கெல்லாம் அதனள வெனப்படுமென்று புகுந்தமையின் இதற்குக் கொச்சக வொருபோகின் அளவை கொள்ளப்படாது: பாநிலைவகைத்தென்றமையின் இவற்றைத் தொகு நிலையளவின் அடியுடையவென்பது,

"தொகுநிலை யளவி னடியில" (தொல்-செய். 169)

என்புழிச் சொல்லுதும். அஃதேல், பாநிலைவகையே கொச்சகக் கலியென்றவழிக் கொச்சகவொரு போகொடு ஒப்பது அள வொழித்தே யென்பதும் வரைந்தோதுக வெனின்,— ஒருவழி யொப்பனவும் உளவாகலின் அங்ஙனங் கூறினானென்பது. அவை இரண்டடி முதலாகப் பத்தடியளவும் வருவன தரவுகொச் சகமென மேற்காட்டிய செய்யுளுட் காணப்படும்.

(வி-ரை)

உறுத்த—வலியுறுத்த. (155)

உறழ்கலியின் இலக்கணம்

**468. கூற்று மாற்றமும் இடையிடை மிடைந்தும்**
**[1]போக்கின் றாக லுறழ்கலிக் கியல்பே.**

இது முறையானே உறழ்கலி யுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) ஒருவர் ஒன்று கூறுதற்கு மறுமாற்றம் மற் றொருவர் கூறிச் சென்று பின்னர் நின்றது உறழ்கலி (எ-று).

'போக்கின்று' எனவே தரவுபெறுதலும் பாட்டிடையிடை தலும், ஐஞ்சீரடுக்கலும், ஆறு மெய்பெறுதலும், ஒழிந்த சொற் சீரடி பெறுதலும், பா மயங்கி வருதலும், அம்போதரங்கத்திற் கோதிய அளவை பெறுதலுமெல்லாம் வெண்கலிப்பாட்டிற்குப் போல மேனின்ற அதிகாரத்தாற் பெறப்படுவதாயிற்று. 'போக் கின்றாகல் இயல்பு' எனவே இயல்பின்றி விகாரவகையாற் சில போக்குடையவுமா மென்றானாம்; அதுவும்,

"பல்பொருட் கேற்பி னல்லது கோடல்" (665)

என்பதனான் வெள்ளைச்சுரிதகம் ஒழித்து ஆசிரியச்சுரிதகமே

---

1. இளம்பூரணர் பாடமும் இதுவே. போக்கின்றுதல் எனப் பாடம் கொள்வர் நச்சினார்க்கினியர்,

கொள்ளப்படும்; என்னை? வெள்ளைக் கொச்சகம் பல வந்தவழி ஒன்றனைச் சுரிதகமென லாகாமையானும், அச்சுரிதகம் இரண்டும்,

"போக்கியல் வகையே வைப்பெனப் படும்",
(தொல்-செய். 136)

எனக் கூறப்பட்ட இலக்கணத்த அல்லவாயினும்,

"எழுசீ ரிறுதி யாசிரியங் கலியென" (தொல்-செய் 76)

நின்றவழி அப்பாட்டு முடிந்து காட்டி நிற்றலானும் அதுவே கொண்டாஞ் சிறுபான்மை யென்பது.

மற்றுத் தரவின்றி வருவனவும் உளவாலெனின், இதற்குத் தரவு முதலாயின உறுப்பு விதந்தோதியதிலனாகலின் அஃது ஆராய்ச்சியின்றென்பது; அற்றன்று, தரவும் போக்கும் உடன் கூறியதனால் 'போக்கும் பாட்டிடை மிடைந்தும்' என்னும் அதிகாரம் பற்றி ஈண்டுப் போக்கு விலக்கினமையின் அது பொருந்தாது; மற்றென்னை கருதியதெனின்—இதற்கு அதிகாரம்பட நிறீஇய கலிவெண்பாட்டு ஒழிய சூத்திரத்திற் பாட்டினை இடை கூறாது தரவும் போக்கும் உடன் கூறியதனாற் போக்கின் இலக்கணத்தனவும் பெறுமென்றானும்; அதனானே ஈண்டு விலக்குண்ட போக்குப் போலச் சிறுபான்மை தரவின்றியும் வருமென்பது. இக்கருத்தினானன்றே, இதனைப் பாநிலையோடு கூறாது தரவு வகைப்படுங் கொச்சகத்தின் பின்னர் வைப்பானாயிற்றென்பது.

இனிப் போக்குடையன தரவின்றி வாரா, அவை ஓரின மென்று ஓதப்பட்டமையினென்பது. மற்று இதற்குப் போக்கின்மையும் இலக்கணமாகலின் அது பற்றியும் பெயர்கொள்ளாமோவெனின்,—போக்கின்மை சிறுபான்மை கொச்சகத்திற்கும் உரிமையின் அவ்வகை யுரியதோர் இலக்கணம் பற்றிப் பெயர் கூறானென்பது. மற்றிதனையுங் கொச்சகமென்றக்கால் இழுக்கென்னையெனின்,—நாடகச் செய்யுட் போல வேறு வேறு துணிபொருளவாகியும் பல தொடர்ந்தமையிற் பெரிதும் வேறுபாடுடைமை நோக்கியும் இது பொருளதிகாரமாதலாற் பொருள் வேறுபாடு பற்றியும் வரலாற்று முறைமைபற்றியும் வேறு செய்யுளென்றானென்பது. என்னை?

"மரபுநிலை திரிதல் செய்யுட் கில்லை
மரபுவழிப் பட்ட சொல்லி னான" (தொல்-மர-90)

எனவும் மரபியலுள் ஓதுகின்றமையினென்பது. அல்லாக்காற்

கைக்கிளையுஞ் செவியறிவுறூஉவும் வாயுறையும் புறநிலையுமென்னும் நான்கும் மருட்பாவெனவொன்றேயாகிய செல்லுமன்றே வென மறுக்க.

அவற்றுக்குச் செய்யுள்:

"அரிநீ ரவிழ்நீல மல்லி யனிச்சம்" [கலி-91]

என்னும் பாட்டினுள் தரவும் பாட்டும் உடைத்தாகிய பாட்டுத் தாம் ஐஞ்சீரடுக்கியும் ஆறுமெய் பெற்றும் வந்து போக்கின்றி நின்று முடிந்தது. என்றார்க்குக்,

"காணி னெகிழுமென் னெஞ்சாயி னென்னுற்றாய்
பேணாய்நீ பெட்பச் செயல்" [கலி-91]

என்பது, 'வெள்ளைச் சுரிதகமாகாதோவெனின்,—ஆகாதன்றே?

"போக்கியல் வகையே வைப்பெனப் படும்"
[தொல்-செய்-136]

என்ற இலக்கணத்தான் முற்கூறியவற்றையெல்லாந் தொகுத்து இதன்கண் வைத்திலாமையினென்பது; அல்லதூஉம், அவ்வாறு முடிதலேயன்றி இன்னும் ஒரு கொச்சகம் பெய்து சொல்லி உறழ்ந்த வழியும் அஃதேற்பதாகலான் அஃது ஒருதலையாக அமைந்ததெனப்படாது; என்னை?

"அன்னதே யாயினு மாகமற் றாயிழாய்
நின்னகை யுண்க முயங்குவாய்—நின்னெஞ்ச
மென்னோடு நின்ற தெனின்"

என்றாற்போலப் பின்னுமொன்று தலைமகன் உரைத்தற்கு இடம் பட்டு நின்றமையின் அது, 'போக்கியல் வகைத்தாகிய வைப் பெனப்படாது' என்க.

இனி, அவ்வாறன்றி ஆசிரியச்சுரிதகம் வந்தவழி அக்கலிப் பாட்டு முடிந்து காட்டுதலின் அதுவும் அடக்கியலன்றாயினும் அதனைச் சிறுபான்மை நேர்ந்தான் இது வழிநூலாகலின் முத -னூல்பற்றி யென்பது.

"நலமிக நந்திய நயவரு தடமென்றோள்" [கலி-118]

என்னும் முல்லைக்கலி (113) போக்கிலக்கணமில்லாத ஆசிரியச் சுரிதகம் பெற்றுவந்த உறழ்கலியாயிற்று.

"வாரி நெரிப்பட் டிரும்புறந் தாஅழ்ந்த" (கலி-114)

என்னும் முல்லைப்பாட்டுஞ்,

"சுணங்கணி வனமுலைச் சுடர்கொண்ட" (கலி-60)

என்னும் குறிஞ்சிப்பாட்டும் அது.

ஒரூஉநீ எங்கூந்தல் கொள்ளல்யா நின்னை
வெரூஉதுங் காணும் கடை;
தெரியிழாய் ............ பனியானுப்
பாடில்கண் பாயல் கொள'' (கலி-87)

என்பது தரவும் போக்குமின்றி வந்த உறழ்கலி. இவற்றுள் ஐஞ்சீரும் அறுசீரும் வந்தன. ஒழிந்த சொற்சீரடி வந்தன பிறவுங் கண்டுகொள்க.

(வி–ரை)

உறழ்கலி இலக்கணம், கூற்றும் மாற்றமும் விரவி வந்து சுரிதகமின்றி முடிவதாகும் என்பர் இளம்பூரணர். ஒருவர் ஒன்று கூறுதற்கு மறுமாற்றம் மற்றொருவர் கூறிச் சென்று பின்னர் அவற்றை அடக்குவதோர் சரிதகமின்றி முடிவது உறழ்கலியாம் இதனை விளக்குவர் நச்சினார்க்கினியர். (156)

ஆசிரியப்பாவிற்குரிய அடி வரையறை

**469. ஆசிரியப் பாட்டி னளவிற் கெல்லை.**
**ஆயிர மாகும் இழிபுமூன் றடியே.**

இத்துணையும் பாவுறுப்புக் கூறி, இனி அப்பாவினுள் உள்ளுறுப்பாகிய அடியளவை கூறுவானெழுந்தான், முறையானே ஆசிரியப்பாவிற்கு அளவு கூறுகின்றானென்பது.

(இ-ள்.) ஆசிரிப்பாவின் பெருக்கத்திற்கெல்லை ஆயிரம் அடி; சுருக்கத்திற்கெல்லை மூன்று அடி (எ-று.)

''நீலமேனி வாலிழை பாகத்து
ஒருவன் இருதாள் நிழற்கீழ்
மூவகை யுலகு முகிழ்த்தன முறையே''
(ஐங்குறு-கடவுள் வாழ்த்து)

என்னும் ஆசிரியப்பா மூன்றடியால் வந்தது.

''மாயோன் மார்பி னாரம் போல''

என்பது, நான்கடியான் வந்தது.

''வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
... ...
பெருந்தே னிழைக்கு நாடனொடு நட்பே'' (குறுந்,18)

என்பது, ஐந்தடியான் வந்தது.

"தாமரை புரையும் காமர் சேவடி
பவழத் தன்ன மேனித் திகழொளிக்
குன்றி யேய்க்கு முடுக்கைக் குன்றின்
நெஞ்சுபக வெறிந்த வஞ்சுடர் நெடுவேற்
சேவலங் கொடியோன் காப்ப
ஏம வைக லெய்தின்றா லுலகே" (குறுந்-கடவுள் வாழ்த்து)

என்பது, ஆறடியான் வந்தது.

"மாநிலஞ் சேவடி யாக [நற்றிணை-கடவுள் வாழ்த்து] என்பது ஏழடியான் வந்தது. பிறவும் அன்ன. ஆயிரம் அடியான் வருவனவும் உளவேற் கண்டுகொள்க.

ஆசிரியப் பாட்டினெல்லையென்னாது 'அளவு' என்றதனான் அதனியற்றாகிய வஞ்சிப்பாவிற்கும் இவ்வாறே கொள்ளப்படும். இனி வெண்பா நெறித்தாகிய கலியளவை அதனின் வேறுபடுதலின் அதற்கு வேறு விதந்து கூறுமென்பது

(வி-ரை)

அடிப்பெருக்கமுடைய பாட்டைப் பத்துப் பாட்டினுள்ளும் சிலப்பதிகாரத்துள்ளும், மணிமேகலையினுள்ளும் கண்டு கொள்க என்பர் இளம்பூரணர். (157)

வெண்பாவின் அடியளவு

**470. நெடுவெண்[1] பாட்டே[2] முந்நா லடித்தே
குறுவெண்[3] பாட்டின் அளவெழு சீரே.**

இது, முறையானே வெண்பாவின் அடியளவு கூறுகின்றது.

[இ-ள்] வெண்பாவிற்கு இரண்டும் பன்னிரண்டும் இழிபும் ஏற்றமுமாம் [எ-று].

மற்று இவற்றையும்,

"ஆசிரியப் பாட்டி னளவிற் கெல்லை" [தொல்-செய்.157 என்றாற்போலக் கூறாது, குறுவெண்பாட்டும் நெடுவெண்பாட்டு

---

1. இளம்பூரணர் பாடமும் இதுவே. பாட்டு எனப்பாடம் கொள்வர் நச்சினார்க்கினியர்.
2. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே. முந்நான்கடித்தே எனப்பாடம் கொள்வர் இளம்பூரணர்.
3. பாட்டிற்கு அளவெழுசீரே-எனப்பாடம் கொள்வர் நச்சர்.
பாட்டிற்கு அளவேழ் சீரே ,, ,, இளம்பூரணர்.

மெனப் பெயர் கொடுத்ததுற் பயந்ததென்னையெனின்,-குறு மையும் நெடுமையும் அளவியலோடு படுத்துக்கொள்ளப்படுத லின் அளவியல் வெண்பாட்டும் உளவென்பதூஉம், அதுவே சிறப்புடையதென்றற்கும் அங்ஙனங் கூறினனென்பது

இனி, அவற்றைத் தத்தம் வகையாற் சுருக்கப் பெருக்கம் உணருங்கால் 'உய்த்துக்ககாண்டுணர்தல்' என்பதனான் உணரப் படும்; என்னை? நெடுவெண்பாட்டிற்கு உயர்ந்த அளவை பன் னிரண்டடியெனவே, அதன் பாகமாய ஆறு அளவில் வெண்பா விற்கு உயர்ந்த எல்லையெனவும், நெடுவெண்பாட்டிற்கு இழிந்த வெல்லை ஏழடியெனவும், அளவியல் வெண்பாவிற்கு இழிந்த வெல்லை நான்கடியெனவும் கொள்ளவைத்தமையினென்பது. இங்ஙனம் அளவியல் வெண்பாச் சிறப்புடைத்தாதனேக்கிப் பதினெண்கீழ்க் கணக்கினுள்ளும் முத்தொள்ளாயிரத்துள்ளும் ஆறடியினேருமற் செய்யுள் செய்தார் பிறசான்றேருமெனக் கொள்க; இக்கருத்தினனே,

''அம்மை தானே யடிநிமிர் பின்று'' [தொல்-செய்-335]

எனக்கூறிய நெடுவெண்பாட்டு நேர்ந்திலன் ஆசிரியன் அதற் கென்பது; அஃதேல். அவ்வளவியல் வெண்பாவுள்ளும் ஆறடி யானும் ஐந்தடியானும் வருதல் சிறுவரவினவாலெனின்,— அங்ஙனமே செப்பிக்கூறிய மரபிற்ருகிய வெண்பாவினைப் பரந்து படக்கூறல் இயல்பன்ருகலின் அவற்றுள்ளுஞ் சுருங்கிய நான் கடியே சிறந்ததென்று அதனையேபற்றிப் பெரும்பான்மையுஞ் செய்யுள் செய்தாராவரென்பது. அஃதேல், குறளடி வெண்பா அதனினுஞ் சிறந்ததாம் பிறவெனின்,-அற்றன்று: செப்பிக் கூறுங் கால் தெரியக் கூறல்வேண்டுமாகலின் அளவியல் வெண்பாவே பயின்றவென்பது. பயின்றவெண்பாட்டுப்போலச் சிறப்பின்ருங் குறுவெண்பாட்டுமெனின்:—

''சிறப்புடைப் பொருளைப் பிற்படக் கிளத்தல்''

என்பதனன், அவ்விரண்டினுள்ளும் அதனைப் பிற்கூறியது அச் சிறப்பு நோக்கியன்றேவென்பது;

உ-ம்: ''அவிசொரிந் தாயிரம் வேட்டலி ஒன்றன்
உயிர்செகுத் துண்ணுமை நன்று'' [குறள்-259]

எனவும்,

"அறிந்தானை யேத்தி யறிவாங் கறிந்து
செறிந்தார்க்குச் செவ்வ னுரைப்பச் சிறந்தார்
செறிந்தமை யராய்ந்து கொண்டு" [யா.வி.ப.226]

எனவும், இவை குறுவெண்பாட்டு.

"துகள்தீர் பெருஞ்செல்வந் தோன்றியக்காற் றொட்டுப்
பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க
வகடுற யார்மாட்டு நில்லாது செல்வஞ்
சகடக்கால் போல வரும்" (நாலடி-1-2)

எனவும்,

"நாள்ஞாயி றுற்ற செருவிற்கு வீழ்ந்தவர்
வாள்மாய் குருதி களிறுழக்கத்-தாள்மாய்ந்து
முன்பக லெல்லாங் குழம்பாகிப்-பின்பகல
துப்புத் துகளிற் கெழூஉம் புனல்நாடன்
தப்பியா ரட்ட களத்து" [களவழி-1]

எனவும்,

"நாஞற் றிசையும் பிணம்பிறங்க யானை
யடுக்குபு வேற்றிக் கிடந்த விடித்துரறி
யங்கண் விசும்பி னுருமெறிந் தெங்கும்
பெருமலைந் தூறெறிந் தற்றே யெரிமணிப்பூண்
ஏந்தெழின் மார்பத் தியல திண்டேர்ச் செம்பியன்றெவ்
வேந்தரை யட்ட களத்து" (களவழி-6)

எனவும், இவை அளவியல் வெண்பாட்டு.

"பன்மாடக் கூடன் மதுரை நெடுந்தெருவின்"

என்பதும் அது. நெடுவெண்பாட்டு வந்தவழிக் கண்டுகொள்க.

அங்கதப் பாட்டின் அடியளவு

## 471. அங்கதப் பாட்டவற் றளவோ டொக்கும்.

அங்கதப் பாட்டிற்கும் வெண்பாவே உறுப்பாகலான் ஈண்டு வைத்தான். இதுவும் மேற்கூறிய இரண்டெல்லையும் பெறுமென்றவாறு.

"இருடீர் விளக்கத் தேழிலார்கோவே
குருடேயு மன்றுநின் குற்ற-மருள் தீர்ந்த
பாட்டு முரையும் பயிலா தனவிரண்
டோட்டைச் செவியு முள"

என்பது, நான்கடியான் வந்த அங்கதம்; பிறவும் அன்ன.

இது, மந்திரத்தின் வேறுபட்டு அடிவரைத்தாயினமையின் இதுவும் வெண்பாட்டுப் போன்று அமைந்து வரல்வேண்டு மென்றற்கும், இது வேறு பாட்டெனப்பட்டாமையின் அடிவரை யின்றுகொலென்னும் ஐயந்தீர்த்தற்கும் இதற்கே ஈண்டு அளவை கூறி, அதனோடும்,

"கைக்கிளை பரிபாட்டு அங்கதச் செய்யுள்" (தொல்செய் 1.8)

என்று ஓதப்பட்ட கைக்கிளைச் செய்யுள் முத்தொள்ளாயிரத்துட் போலப் பலவாயினும் அவற்றுக்கு அளவையும் வெண்பாவின் அளவேயென்று அடக்கினனென்பது. நூற்பாவாக அடிவரைப் படுவன உளவாயினவற்றுக்கும் இஃதொக்குமென்பது மேற் கூறுதும்.

(வி-ரை)

அங்கதம் ஈரடிச் சிறுமையும் பன்னீரடிப் பெருமையும் உடையது என்பது கருத்து. (159)

அடிப்பெருமைக்கு எல்லை கூறமுடியாதன இவை யெனல்

472. கலிவெண் பாட்டே கைக்கிளைச் செய்யுள்
[1]செவியறி வாயுறை புறநிலை யென்றிவை
[2]தொகுநிலை யளவி னடியில வென்ப.

இஃது, எய்தாததெய்வித்தது: அளவை கூறாதவற்றுக்கு அளவை கூறினமையின்.

(இ-ள்) இவை ஐந்தும் பெருமைக்கெல்லை இத்துணை யெனத் தொகுத்துக் கூறுந் தன்மையுடைய அளவால வரும் அடியையுடைய அல்ல (எ-று).

கலிவெண்பாட்டென்பது ஒரு பொருணுதலுதலால் திரி பின்றி நடப்பதன்றிப் பன்னிரண்டடியின் இகந்துவந்து,

"தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்து" (466)

வாராது ஒன்றேயாகி வருவதெனக் கொள்க.

கைக்கிளைச் செய்யுளென்பது கைக்கிளைப்பொருட்டு உரித் தாய்வரும் மருட்பா வென்றவாறு. அஃதேல், ஈண்டோதிய கலி

1. இளம்பூரணர் பாடமும் இதுவே. புறநிலை வாயுறை செவியறி வென்றிவை எனப்பாடம் கொள்வர் நச்சினார் கினியர்.

2. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே. தொகைநிலையும் எனப் பாடம் கொள்வர் இளம்பூரணர்.

வெண்பாட்டு மொழிந்த கைக்கிளைப் பொருண்மேல் வாராவோ வெனின்,—வருமென்பது.

"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்" (தொல்-அகத்58) என்புழிக் கொண்டாமென்பது. எனவே வெண்பாட்டல்லாதன கலிப்பாட்டுக்கள் கைக்கிளைப்பொருண்மேல் வந்தவழியும் அவற்றுக்கு அளவை மேற்கூறியவாற்றானே அடங்குமென்பதாயிற்று. செவியறி வாயுறை புறநிலையென்பன மேற்,

"கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ" (தொல்-செய் 110) எனவே, ஒழிந்த பாவான் வருமெனப்பட்ட பொருண்மேல் வருஞ் செய்யுள். ஆண்டோதியவற்றிற்கு ஈண்டு அளவை கூறுனோ வெனின்,—இஃது ஆசிரியமும் வெண்பாவுமாகி வேறு வருதலின் முற்கூறிய வகையானே அடங்குமென்பது. மற்றுக் கொச்சக வொருபோகாகியும் தொடர்நிலைச்செய்யுட்கண் வருமால் அவையடக்கெனின், அஃது,

"யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடைய"
(தொல்-செய்-149)

கொச்சக வொருபோ கென்றொழிக.

"தொகுநிலை யளவின் அடியில";

என்பது, விரவுறுப்புடைய வெண்கலியுங் கொச்சகக்கலியும் உறழ்கலியுமென்றிவற்றிற்கு மேல் அம்போதரங்கம் பெற்ற அளவினை முதலாக நாட்டிக்கொண்ட தொகுநிலையளவெனப்பட்ட அடி மேல் அடியிகந்தோடா வென்றவாறு. 'தொகுநிலையள' வென்பது தலையளவு இடையளவு கடையளவெனப்பட்ட அம்போதரங்கம் மூன்றற்கும் பெருகிய வெல்லையாகி அளவின் விரியாது அவற்றுக்குச் சுருங்கிய வெல்லையாகி அறுபதும் முப்பதும் பதினைந்துமெனத் தொக்குநிற்கும் அளவினவாகிய அடிமேலரு வென்றவாறு தொகுமளவென்னது தொகுதிநிலை'யென்றான் மூன்று தொகையினும் முப்பஃதாகிய இடைநிலைத் தொகையே கோடற்கென்பது. இன்னென்னும் ஐந்தாமுருபு நீக்கத்தின்கண் வந்தமையின் முப்பஃதடியின் இகந்துவரும் அடி இலவென்றவாறு. இனி, அம்முப்பஃதாகிய தொகுநிலை இவ்வைந்தற்கும் நீண்டவடிக்கெல்லையாதலின் தொகுநிலையென்னது 'அளவு' என்றானென்பது, 'நீண்டதனை அளவுடைத்'தென்பவாகலின். மற்றிங்ஙனம் இவை முப்பஃதடியின் மேல் வாராவென்று பெருக்

கத்திற்செல்லை கூறவே, சுருக்கத்திற்கெல்லை வரையறையில வென்றுனும்; ஆகவே, இரண்டடியானும் வருமென்றுனும் பிற வெனின்'—அற்றன்று; ஒருபொருணுதலிவருங் கலிவெண்பாட் டாயிற் பன்னீரடி இகவாதென்பது.

''திரிபின்றி வருவது கலிவெண் பாட்டு'' (தொல்-செய்-153)

என்றவழிப் பேசதுமாகலின், ஈண்டு ஓதிய கலிவெண் பாட்டுப் பதின்மூன்றடியிற் சுருங்காதென்பது பெற்றும் இது கைக்கிளைப் பொருண்மேல் வந்ததாயினும் ஒக்கும். ஒழிந்த நான்கும் மருட் பாவாதலான்,

''வெண்பா வாகி யாசிரிய வியலான் முடியவும்பெறும்''
(தொல்-செய்-119)

என்றுனகலானும்,

''வெண்பா வியலினு மாசிரிய வியலினும்
பண்புற முடியும்'' (தொல்-செய்-161)

என வருகின்ற சூத்திரத்தானும், அவ்விரண்டு பாவின் கூட்டம் இரண்டடியால் வாராவாகலானும் அவையும் நான்கடியிற் சுருங்காவென்பது உய்த்துக்கொண் டுணரவைத்தானென்பது; என்னை? கைக்கிளைப் படலத்துள்:

''பேசற்றி வெண்பா வாகி மற்றத
னிறுதி யைஞ்சீ ராசிரி யம்மே''

என்றுராகலின். மற்று மூன்றடியிற் சுருங்காது வெண்பாவாத லானும் இவ்வைந்தடியிற் சுருங்காவென்று கொள்க. இது,

''பண்புற முடியும் பாவின'' (தொல்-செய்-161)

என வேற்சொல்லும்.

அவற்றுக்குச் செய்யுள்;

''நெஞ்சு நடுக்குறக் கேட்டுங் கடுத்துந்தா
மஞ்சிய தாங்கே யணங்காகு மென்னுஞ்சொல்
இன்றீங் கிளவியாய் வாய்மன்ற நின்கேள்
புதுவது பன்னுளும் பாராட்ட யானு
மிதுவொன் றுடைத்தென எண்ணி யதுதேர
மாசில்வண் சேக்கை மணந்த புணர்ச்சியுட்
பாயல்கொண் டென்தோ கனவுவா ராய்கோல
தொடிநிரை முன்கையாள் கையாறு கொள்ளான்
கடிமனை காத்தோம்ப வல்லுநள் கொல்லோ

விடுமருப் பியானை யிலங்குதேர்க் கோடு
நெடுமலை வெஞ்சுரம் போகி நடுநின்று
செய்பொருள் முற்று மளவென்று ராயிழாய்
தாமிடை கொண்டது அதுவாயின் தம்மின்றி
யாமுயிர் வாழு மதுகை யிலேமாயில்
தொய்யி துறந்தா ரவரெனத் தம்வயி
னெய்யார் நுவலும் பழிநிற்பத் தம்மொடு
போயின்று சொல்லென் னுயிர்'' (கலி-24)

என்பது, பதினேழடியான் வந்த கலிவெண்பாட்டு

''சுடர்தொடீ கேளாய்'' (கலி-51)

என்பது, ஒரு பொருணுதலிப் பதினறடியான் வந்தது.

''திருந்திழாய் கேளாய்'' (கலி-65)

என்பது, இருபத்தொன்பதடியான் வந்த கலிவெண்பாட்டு. ஒழிந்தனவும் அன்ன; நூற்றைம்பது கலியுள்ளுங் கைக்கிளை பற்றி இவ்வாறு வருங் கலிவெண்பாட்டுக் காணுமாயினமையிற் காட்டாமாயினும். இலக்கணமுண்மையின் இலக்கியம் பெற்ற வழிக் கண்டுகொள்க.

''கனவினிற் காண்கொடா கண்ணுங் கலந்த
நனவினுள் முன்விலக்கு நாணு—மினவங்கம்
பொங்கோதம் போழும் புகாஅர்ப் பெருமானர்
செங்கோல் வடுப்படுப்பச் சென்று''

(முத்தொள்ளாயிரம் : 69)

இது, கைக்கிளைபற்றி வந்த கலிவெண்பாட்டென்னுமோ வெனின், என்றுமன்றே, அது பாடாண்டிணைப் புறப்பொருளாகலானும் ஒருபொருணுதலுதல் ஐந்திணைக்கண்ணதேயாக லானும் பன்னிரண்டடியின் இசந்ததன்றுகலானும் வெண்பா வேயாமென்பது. இப் பொருட்பகுதி யுணராதாரும் அது மர பென்பதறியாதாரும், நூற்றைம்பது கலியுள்ளும் இவை கோப் புண்டனவென்பது நினையாதாரும் இவற்றுள் ஒரு பொருணுத லியன ஒழிந்தனவெல்லாம் வெண்பாவென்று அடிவரை கூறு தொழிப. அங்ஙனம் மரபழியக் கூறின் ஒரு சாத்தனை நாட்டி அவனைக் காமுற்று இவள் இன்னவாறுயினளென ஆசிரியத் தானும் வஞ்சியானும் பொருள் வேற்றுமையுடைய ஒருசார்க் கொச்சகமல்லாத கலிப்பாவினானுஞ் செய்யுள் செய்தலும், இனி அதனிலையாகிய ஆண்பாற் கைக்கிளை ஆசிரியத்தானும் வஞ்சி

யானும் வருதலும் பிறவும் இன்னோரன்னவெல்லாம் புலனெறி வழக்கினுட் காட்டல்வேண்டுமென மறுக்க. என்றார்க்கு வரைவு கடாதற்கண்ணுந் தலைவனை அன்பிலனாகச் சொல்லுவன பாடாண் டிணைக் கைக்கிளை யாகாவோவெனின்,-

"அவை சுட்டி யொருவர் பெயர்" (தொல்-அகத்-54)

கொள்ளாமையின் ஆகாவென்பது. அஃதேல்,

"விடியல்வெங் கதிர்காயும் வேயம லகலறை" (கலி-45)

என்னுங் குறிஞ்சிப்பாட்டினுள்,

"கால்பொர நுடங்கல கறங்கிசை யருவிநின்
மால்வரை மலிசுனை மலரேய்க்கு மென்பதோ
புல்லாராப் புணர்ச்சியாற் புலம்பிய வென்றோழி
பல்லிதழ் மலருண்கண் பசப்பநீ சிதைத்ததை"

எனவும்,

"நறவினை வரைந்தார்க்கும் வரையார்க்கும்" (கலி-99)

என்னும் மருதப்பாட்டினுள்,

"அறனிழ லெனக்கொண்டா யாய்க்குடை யக்குடைப்
புறநிழற் பட்டாளோ விவளிவட் காண்டிகா
பிறைநுதல் பசப்பூரப் பெருவிதுப் புற்றாளை"

எனவும் இவை சுட்டியொருவர் பெயர்கொள்ளாக் கைக்கிளை வந்தனவாலெனின்,-அற்றன்று; தலைமக னன்பின்மையே மெய் யாயினன்றே அன்னதாவது; இவை அன்னவின்றி வரைவு கடாமலும் ஊடலுங் காரணமாக அன்பிலனென்று இல்லது சொல்லினமையின் அவை ஒருதலையன்பாகா வென்பது. மற்று,

"என்னை, புற்கை யுண்டும் பொருந்தோ ளன்னே
.. ... ... ...
உமணர் வெரூஉந் துறையன் னன்னே" (புறம்-84)

என்னும் புறநானூற்றுப் பாட்டும் பெண்பாற் கைக்கிளையாதலின் அதனை ஆசிரியத்தான் வாராதென்றதென்னையெனின்,-

"ஒத்தவை யெல்லாம் வெண்பா யாப்பின"

(தொல்-செய்-118)

என்புழிச், சிறுபான்மை தலைவி கூற்றாகியே வருவன அமையு மென்று போதந்தாமாகலின் அதுவே பெருவிதியாகா தென்பது.

இனிக் கைக்கிளை வருமாறு:

"திருநுதல் வேரரும்புந் தேங்கோதை வாடு
மிருநிலஞ் சேவடியுந் தோயு-மரிபரந்த
போகித முண்கணு மிமைக்கு
மாகுமற்றிவ ளகலிடத் தணங்கே" (புற-வெ-மாலை கை-3)

இது, நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லினது; நற்காமமன்றுமாகலின். இக்கருத்தினானே இதனைப் புறத்திணையுட்கொண்டாரும் கைக்கிளைப் படலத்து,

"நெஞ்சிற் குரைத்தலுங் கேட்போ ரின்றி
யந்தர மருங்கிற் கூறலு மல்லது
சொல்லலுங் கேட்டலு மில்லை யாக
வகத்திணை மருங்கி னவகை யானு
மிகத்த லென்ப விவ்வயி னான'

என்றாரெனக் கொள்க.

பாடாண் கைக்கிளைக்கும் ஈண்டே அளவு கூறுகவெனின் கலிவெண்பாட்டினைக் கைக்கிளை யென்னுமாயினன்றே அது கடாவாவது. மருட்பாவிற்குக் கைக்கிளைப்பகுதி வரைந்தோதல் வேண்டுவதின்மையின் அதற்கும் இதுவே அளவாமென்பது. ஒழிந்த மருட்பா மூன்றற்கும் உதாரணம் மேற்காட்டுதும். இக் காலத்தார் 'ஏறிய மடற்றிற (51)' மென்னும் பெருந்திணைப் பொருண்மேலுங் 'காமஞ்சாலா விளமையோளை' ஒழிந்த மகளிரொடுங் கூட்டியுரைக்குங் கைக்கிளைப்பொருண்மேலுங் கலி வெண்பாட்டெனப் பெயர் கொடுத்துச் செய்யுள் செய்பவால் அவை அவ்வாறு செய்தற்கும் அவை முப்பதிற்றடியின் இகந்து எத்துணையடியினும் ஏற்குமென்றற்கும் என்னை ஓத்தெனின், அவ்வாறு வருமென்பது இந்நூலுட் பெற்றிலமாயினும் இரு பதின்சீர்க் கழிநெடிலடியானும் இது பொழுது செய்யுள் செய்யுமாறுபோலக் காட்டலான் அமையும். அவை புலனெறி வழக்கிற்குச் சிறந்திலவாகலிற் சிறுவரவின வென்றொழிக. (160)

புறநிலை வாழ்த்து முதலிய மூன்றும் மருட்பாவாய் வருமெனல்

**473. புறநிலை வாயுறை செவியறி வுறூஉவெனத்
திறநிலை மூன்றுந் திண்ணிதிற் றெரியின்
வெண்பா வியலினு மாசிரிய வியலினும்
பண்புற முடியும் பாவின வென்ப.**

இது, கைக்கிளை மருட்பாவல்லாத மருட்பாவும் அதுவே போல வெண்பா முதலாக ஆசிரியம் பின் வந்து முடியுமென்று ஈண்டு அவற்றுக்கு இடம்பட்டது கண்டு கூறியவாறு; என்னை?

"மருட்பா வேனை யிருசா ரல்லது
தானிது வென்னுந் தனிநிலை யின்றே"
(தொல்-செய் 85)

என்றவழி, ஆசிரியம் முன்னர் நிறீஇப் பின்னர் வெண்பாவினைக் கூறி,

"வெண்பா வியலினும் மாசிரிய வியலினும்
பண்புற முடியும் பாவின" (473)

என்றமையின். இங்ஙனம் எண்ணப்பட்ட மூன்று பொருட்கும் இலக்கணம் முன்னர்ப் பாவிரியோத்தினுட் கூறினவற்றுக்கு இன்னவாறு செய்யுள் செய்க வென்றற்கு இது கூறினானென்பது.

(இ-ள்.) இம்மூன்றும் வெண்பா முன்னும் ஆசிரியம் பின்னுமாய் வரும் (எ-று).

'திறநிலை மூன்று' என்றான், முற்கூறியனவெல்லாம் அகத்திணையாகலின். இவை புறத்திணையுளல்லது வாராவென்றற்கென்பது. 'திண்ணிதிற் றெரியி'னென்பது இவை மூன்றுங் கைக்கிளை மருட்பாப்போல் ஆண்பாற் கைக்கிளையும் பெண்பாற் கைக்கிளையுமாகி அகனும் புறனும் பற்றி வாராது ஒருதலையாகவே புறத்திணையென்று தெரியப்படுவன வென்றவாறு. இதன் பயம்; கைக்கிளை மருட்பாப் புறத்திணையானும் வருமென்பது. 'இயல்' என இருகாற் சொல்லியவதனான் இயற்சீர் வெள்ளடியான் வெண்பா வருதல் சிறந்ததெனவும் அதற்கேற்ற வகையான் ஆசிரியம், இயற்சீரான் வருதல் சிறந்ததெனவுங் கொள்க. 'பண்புற முடிதல்' என்பது மேற்சிறுமைக்கெல்லை கூறுமையின் வெண்பாவிற் கிழிபாகிய எழுசீரன்றி எண்சீரான் வரினும் ஆசிரியத்திற் கிழிபாகிய மூன்றடி வரினும் எருத்தடி குட்டமாகி வரினும் அங்ஙனம் மூன்றடி வந்தவழி வெண்பா நான்கு முதல் பன்னிரண்டளவும் உயரினும் அவையெல்லாம் பண்பெனப்படுவன வெனவும், அல்லன சிறப்பிலவெனவுஞ் சொல்லினவாறு. இக்கருத்தினான் வெண்பாவடி வரையிலவாயினும் ஆசிரியவடி மூன்றிகவாவென்பது கைக்கிளைப்படலத்துள்ளுஞ் சொல்லப்பட்டது; என்னை?

"முச்சீ ரெருத்திற் ருகிமுட் டின்றி
யெச்சீ ரானு மேகாரத் திறுமே"
(கடியநன்னியார், யா.வி.ப.204)

என்றாராகலின், 'பாவின'வென்றதனுன் இவ்விரு பகுதியுந் தத்தம் பாக்கள் வேறு பெற நிகழுமென்பது. எனவே இயற்சீர் வெள்ளடி யாசிரியந் தொடுக்குங்கால்,

"எறும்பி யளையிற் குறும்பல் சுனைய
வுலைக்கல் லன்ன பாறை யேறி" (குறுந்.12)

எனப் பாவினை ஒன்ருகத் தொடுத்தாற்போலத் தொடுத்தல் ஈண்டு அமையாதென்றுனும். இவை மூன்றற்கும் உதாரணங் காட்டுங்கால் மேற் காட்டாது நின்ற பாடாண்டிணைக் கைக்கிளை மருட்பாவிற்கு உதாரணங் காட்டியே காட்டப்படும்.

பரிபாட்டின் அடிவரையறை கூறல்

474. [1]பரிபாட்டெல்லை
நாலீ ரைம்ப துயர்படி யாக
வையைந் தாகு மிழிபடிக் கெல்லை

இது, பரிபாட்டின்கண் வரும் வெண்பாவிற்கு அளவு கூறுகின்றது.

(இ-ள்) பரிபாடற்கு உறுப்பாகிய வெண்பாவுக்கு நானூறடி பெருக்கத்திற்குகெல்லையாகவும் இருபத்தைந்தடிசுருக் கத்திற்கெல்லையாகவும் பெறும் (எ-று) (162)

அவை பரிபாடலுட் கண்டுகொள்க.

அளவியலின் வகை

475. அளவியல் வகையே யனைவகைப் படுமே.

இது, மேற்கூறிய அளவினை வரை பறுக்கின்றது.

(இ-ள்). இத்துணையும் அளவியலான் ஒரு கூறே சொல் லப்பட்டது (எ-று).

எழுநிலத்தெழுந்த செய்யுள் (476) களுள் அடிவரையறை யுடையனவற்றுக்குக் கூறினும். ஆண்டில்லாதன அடிவரை

1. பரிபாடல்லே எனப்பாடம் கொள்வர் நச்சினர்க்கினியரும் இளம்பூரணரும்.

யின்றி வரும் இலக்கணத்த வென்பதூஉம் இனிக் கூறுதுமென்பதூஉம் இதனது பயம். (163)

அடிவரையறையில்லாத செய்யுட்கள்

**476. எழுநிலத் தெழுந்த செய்யுட் டெரியின்**
**அடிவரை யில்லன வாறென மொழிப.**

மேலைச் சூத்திரத்தான் அளவியல் வகையை வரையறைப் படுத்தான்; அடிவரையறையின்மையும் அளவியலென்பதுங் குறிப்புக் கருத [1]இலக்கணமாகிய செய்யுள் கூறினுன் இச்சூத்திரத்தானென்பது.

(இ-ள்.) அகமும் புறமுமாகிய எழுநிலத்துந் தோன்றிய செய்யுளை ஆராயின் அடிவரையின்றி வரும் இலக்கணத்தன ஆறும் (எ-று)

இதனானே 'ஆறென்பதூஉம் ஓரளவியலாயிற்று.

(வி-ரை)

எழுநிலமாவன பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என்பன. அவற்றுள் பாட்டு ஒழிந்த ஆறும் அடிவரையறையில என்பர் இளம்பூரணர். (164)

அவையாவன

**477. அவைதாம்.**
**நூலி னான வுரையி னான**
**நொடியொடு புணர்ந்த பிசியி னான**
**ஏது நுதலிய முதுமொழி யான**
**மறைமொழி கிளந்த மந்திரத் தான**
**கூற்றிடை வைத்த குறிப்பி னான.**

இதுமேற்கூறி (476) நிறுத்த ஆறற்றும் பெயரும் முறையு முணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) அவைதாமென்பது, அடிவரையில்லன ஆறெனப்பட்டவைதாம் நூலின் கண்ணவும், உரையின் கண்ணவும், நொடிதன் மாத்திரையாகிய பிசியின்கண்ணவும், ஒருமொழிக்

1. இவ்விடத்தில் சில சொற்கள் விடுபட்டிருக்கவேண்டும்.

கேதுவாகி வரும் முதுமொழிக்கண்ணவும், மறைத்துச்சொல் லுஞ் சொல்லாற் கிளந்த மந்திரத்தின் கண்ணவுஞ், சொல்லு கின்ற பொருளை இடைகரந்து சொல்லுங் குறிப்பின்கண்ணவு மென அறுவகைப்படும் (எ-று)

அவற்றுச்கிலக்கணம் போக்கிச் சொல்லுதும். நூலின் கண்ணவுமென்றது சூத்திரச்செய்யுளை நோக்கிக் கூறியவாறு. அதனுள்ளும் அடிவரையுடைய ஆசிரியம்போல் அளவைபெற்று மேலே அடங்குமென்பது. இனி அச்சூத்திரப் பொருளும் உரையின் கண்ணதாகி வருவதூஉம் ஒரு செய்யுளாம். அதனது விகற்பம் முன்னர்க் கூறுதும்.

நொடியொடு புணர்ந்த பிசியும், ஏது நுதலிய முதுமொழி யும், மறைமொழிகிளந்த மந்திரமுங், கூற்றிடை வைத்த குறிப்புமென நான்கும் வழக்குமொழியாகியுஞ் செய்யுளாகியும் வருதலின் அவற்றுட் செய்யுளையே கோடற்கு அவற்றுக்கு 'அளவில' வென்றானெனபது. இவை இத்துணையெனவே மேலைச்சூத்திரமும் அளவியலே கூறியவாறாயிற்று. இனி அவைபடும் பகுதி யாவையுங் கூறுகின்றான். 'நொடியொடு புணர்ந்த' வென்ற மிகையான் இதுவன்றி இது போல்வது பண் ணத்தி யென்பதும் ஒன்று டண்டென்பது கொள்க. அது முன் னர்ச் (492) சொல்லுதும். (165)

நூலின் பொதுவிலக்கணம்

478. அவற்றுள்
[1]நூலெனப் படுவது நுவலுங் காலை
முதலு முடிவு மாறுகோ ளின்றித் [காட்டி
தொகையினும் வகையினும் பொருண்மை
உள்நின் றகன்ற வுரையொடு[2] பொருந்தி
நுண்ணிதின் விளக்க லதுவதன் பண்பே.

இது, நூலினது பொதுவிலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) நூலென்று சொல்லப்படுவது முன்னும் பின்

1. நூலெனப் படுவது - என்று மட்டும் பாடம் கொள்வர் நச்சினார்க்கினியர்.

2. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே. புணர்ந்து எனப் பாடம் கொள்வர் இளம்பூரணர்.

னும் மாறுபடாது தொகுத்தும் வகுத்தும் பொருள்காட்டி அடங்கிநின்ற பொருள் விரித்துச் சொல்லப்பட்டுப் பருப் பொருட்டாகாது நுண்பொருட்டாகப் பொருள்விளக்கல். அதற் கிலக்கணம் அது (எ-று (166)

இதன் அகலம் உரையிற் கொள்க.

நூலின் வகை

**479. அதுவே தானும் [1]ஈரிரு வகைத்தே.**

அதன் வகை உணர்த்துகின்றது

(இ-ள்) அந்நூற் பகுதி நான்குவகையாம் (எ-று).

அவை முன்னர்ச் சொல்லுதும் இதனது பயம்: மேல் 'தொகையினும் வகையினும்' (478) என்றதனுனே தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்ப்பு (452) என்னும் நால் வகை யாப்பிற்குந், தொகையினும் வகையினும் பொருண்மை காட்டுதல் ஒக்குமெனை அவையிரண்டும் நான்காதலுமுடைய வென்பது.

அவை எழுத்து முப்பத்துமூன்றெனத் தொகுத்த வழிக் குறிலும் நெடிலும் மெய்ம் மூவினமுஞ் சார்ந்துவரும் மூன்று மென வகுத்தலும்,

"இரண்டு தலையிட்ட முதலா கிருபஃ
தறுநான் கீறு" (தொல்-எழுத்-புணர்:1)

என வகுத்தலுமென்றாற்போல்வன, உயர்திணை அஃறிணை யெனத் தொகுத்து ஐம்பாலென வகுத்தலும் அது. ஒழிந்த மூவகை நூலிற்கும் இவ்வாறே ஒருவழித் தொகுத்தலும் வகுத் தலுங் கொள்க. (167)

அவையாவன

**480. ஒருபொருள் நுதலிய சூத்திரத் தானும்
இனமொழி கிளந்த வோத்தி னானும்
பொதுமொழி கிளந்த படலத் தானும்
மூன்றுறுப் படக்கிய பிண்டத் தானுமென்று
ஆங்கனை மரபி னியலு மென்ப.**

இஃது, அந்நான்கினுக்கும் பெயரும் முறையு முணர்த்துதல் நுதலிற்று.

---

1. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே. ஒருநால்வகைத்தே எனப்பாடம் கொள்வர் இளம்பூரணர்.

(இ-ள்) நூலுள் ஒருபொருளையே நுதலிவருவது சூத்திரமெனவும்' இனமாகிய பொருளினையே தொகுப்பது ஒத்தெனவும், பலபொருட்கும் பொதுவாகிய இலக்கணங் கூறுவது படலமெனவும், மூன்றுறுப்பினையுமுடையது பிண்டமெனவுங் கூறிய மரபினான் இயலும் நூல் (எ-று). (168)

சூத்திரத்தின் இலக்கணம்

481. அவற்றுட், சூத்திரந் தானே
ஆடி நிழலி னறியத் தோன்றி
நாடுத லின்றிப் பொருள்நனி விளங்க
யாப்பினுட் தோன்ற யாத்தமைப் பதுவே.

இது, முறையானே சூத்திர இலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) மேல் ஓதியவற்றுள் ஒருபொருணுதலிய எனப்பட்ட சூத்திரம் பொருள் நுதலுங்கால் ஆடி சிறிதாயினும் அது அகன்றுபட்ட பொருளையும் அறிவித்தல்போலத் தேர்தல்வேண்டாமை அகன்றபொருள் அடங்குமாற்றான் அச்செய்யுளுள் தோன்றச்செய்து முடிக்கப்படுவது (எ-று). (169)

ஒத்தின் இலக்கணம்

482. நேரின மணியை நிரல்பட வைத்தாங்கு
ஓரினப் பொருளை யொருவழி வைப்பது
ஓத்தென மொழிப வுயர்மொழிப் புலவர்.

இஃது ஓத்திலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) மேல், 'இனமொழி கிளந்த ஓத்து' என்றான். அங்ஙனம் இனமொழி கிளக்குங்காற் சிதர்ந்துகிடப்பப் பல ஓத்தாகச் செய்யாது நேரினமணியை நிரலே வைத்தாற்போல ஓரினப்பொருளையெல்லாம் ஒருவழியே தொகுப்பது ஓத்தாவது (எ-று).

*நேரினமணியெனவே ஒருசாதியாயினுந் தம்முள் ஒத்தனவே கூறல்வேண்டுமென்பதாம்.

---

482,483 ஆகிய இருநூற்பாக்களையும் கொண்டெடுத்துமொழிவர் நன்னூலார்

வேற்றுமையோத்தும் வேற்றுமை மயங்கியலும் விளிமரபும் என மூன்றன் பொருளும் வேற்றுமையென ஒரினமென்று ஒரோத்தாக வையாது வேறு வைக்கப்படுமென்பது.

உயர்மொழிப் புலவரென்பது, அங்ஙனம் நூல்செய்தல் உயர்ந்தோர் கடனென்றவாறு. (170)

படலத்தின் இலக்கணம்

**483. ஒருநெறி யின்றி விரவிய பொருளாற்**
**பொதுமொழி தொடரினது படல மாகும்.**

இது, மேல் (480) 'பொதுமொழி கிளந்த படல'மெனப் பட்டதற்கு இலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஒருநெறியவன்றிப் பல்வேறு வகைப்பட்ட பொருளெல்லாவற்றிற்கும் வேறு வேறு இலக்கணங்கூற நுதலின் அவற்றுக்குப் பொதுவாகி வருவது படலம் (எ-று).

'பொதுமொழி கிளந்த படலம்' (480) என்றவழி ஒரு நெறிப் பொருட்குப் பொதுவாகப்பட்டதனை விலக்கி ஈண்டு விரவிய பொருட்குப் பொதுவாக மொழிவதே படலமென்றா னென்பது. அவை அதிகாரங்களாமெனக் கொள்க. (171)

பிண்ட இலக்கணம்

**484. மூன்றுறுப் படக்கிய தன்மைத் தாயின்**
**தோன்றுமொழிப் புலவரது பிண்டமென்ப.**

இது பிண்டங் கூறுகின்றது. வாளாதே 'மூன்றுப்படக் கிய பிண்ட' மென்றான் மேல்; (தொல்-செய்-168) ஈண்டுச் சூத் திரமும் ஒத்தும் படலமுங் கூறிய அதிகாரத்தானே அம்மூன் றனையும் அடக்கிநிற்பது பிண்டமென்கின்றானென்பது.

(இ-ள்) அம்மூன்று உறுப்பினையும் அடக்கி வருவது பிண்டம் (எ-று).

அம்மூன்றனையும் உறுப்பெனவே, பிண்டமென்பனதாம் உறுப்பினவென்பது பெற்றாம். தொல்காப்பியமென்பது, பிண் டம்: அதனுள், எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் பொருளதிகாரம் என்பன படலம் எனப்படும்; அவற்றுள் ஒத்துஞ் சூத்திரமும் ஒழிந்த இருகூறுமெனப்படும்.

"தோன்றுமொழிப் புலவர் அது பிண்ட மென்ப"

என்றதனாற் பிண்டத்தினையும் அடக்கி நிற்பது வேறு பிண்ட முளதென்பது, அது முதனூலாகிய அகத்தியமேபோலும். என்னை? அஃது இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழென்னு மூன்று பிண்டத்தினையும் அடக்கி நிற்றலின்.

(வி-ரை)

சூத்திரத்தால் பிண்டமாயிற்று இறையனார் களவியல், ஒத்தினாற் பிண்டமாயிற்று, பன்னிரு படலம், அதிகாரத்தான் பிண்டமாயிற்று இந்நூல் என்று கொள்க. இவற்றைச் சிறு நூல், இடை நூல், பெருநூல் என்பர் இளம்பூரணர்.

உரைநடை வகை

485 பாட்டிடை வைத்த குறிப்பி னானும்
பாவின் றெழுந்த கிளவி யானும்
[1]பொருளொடு புணராப் பொய்ம்மொழி யானும்
பொருளொடு புணர்ந்த நகைமொழி யானுமென்
றுரைவகை நடையே நான்கென மொழிப.

இஃது, உரையாமா றுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) உரைப்பகுதிவழக்கு இந்நான்காகு மென்று சொல்லுவர் புலவர் (எ-று).

'பாட்டிடைவைத்த குறிப்பினானு மென்பது ஒரு பாட்டு இடையிடை கொண்டு நிற்குங் குறிப்பினான் வருவனவெனப் படும்; என்னை? பாட்டுவருவது சிறுபான்மையாகலின். அவை தகடூர்யாத்திரை போல்வன.

மற்றுப் பிறபாடைவிரவியும் வருவனவோவெனின், அவற் றுள்ளுந் தமிழுரையாயின எல்லாம் பாட்டிடைவைத்த குறிப்பு என ஈண்டடங்கும், பிறபாடைக்காயின் ஈண்டு ஆராய்ச்சியின் றென்பது.

"பாவின் றெழுந்த கிளவி யானும்"

என்பது, பாட்டின்றிச் சூத்திரத்திற்குப் பொருளெழுதுவன போல்வன. சூத்திரம் பாட்டெனப் படாவோவெனின், படா

---

1. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே. பொருண்மரபில்லா "எனப்பாடம் கொள்வர் இளம்பூரணர்.

பாட்டும் உரையும் நூலுமென (391) வேறோதினமையின். அல்லாத சூத்திரத்தாற் சொல்லாத பொருளினை உரையாற்சொல்லித் தொடர்பு படுப்பது பாட்டிடை வைத்த குறிப்பாவது. இஃது அன்னதன்று, வேறொருவன் சூத்திரத்திற் கூறிய பொருளையே மற்றொருவன் கூறுகின்றானாதலானென்பது. ஒழிந்த பாட்டிற்கும் இவ்வாறே பொருளெழுதின் அஃதொக்கும். அவை பாரதம் பருப்பதம் முதலாயின.

"பொருளொடு புணராப் பொய்ம்மொழி யானும்"

என்பது,

ஒரு பொருளின்றிப் பொய்படத் தொடர்ந்து சொல்வன. அதை ஓர் யானையுங் குரிஇயுந் தம்முள் நட்பாடி இன்னுழிச் சென்று இன்னவாறு செய்தனவென்று அவற்றுக்கியையாப் பொருள்படத் தொடர்நிலையான் ஒருவனுழை ஒருவன் கற்று வரலாற்றுமுறையான் வருகின்றன.

பொருளொடு புணர்ந்த நகைமொழியானுமென்பது, பொய்யெனப்படாது மெய்யெனப்பட்டும் நகுதற்கேதுவாகுந் தொடர்நிலை. அதுவும் உரையெனப்படும். அவையாவன சிறுகுரீஇயுரையும், தந்திரவாக்கியமும் போல்வனவெனக்கொள்க. இவற்றுட் சொல்லப்படும் பொருள் பொய்யெனப்படாது உலகியலாகிய நகை தோற்றுமென்பது. இவ்வகையான் உரை நான்கெனப்படு மென்றவாறு. 'உரைநடை' யென்னாது வகையென்றதனான் இவ்வுரைப்பகுதி பிறிதும் ஒன்றுண்டு. அது மரபியலுட் பகுத்துச் சொல்லுதும். (173)

மேற்கூறிய உரைவகை இரண்டாகுமாறு

**486. அதுவே தானும் [1]ஓரிரு வகைத்தே.**

இஃது அவற்றின் தொகை கூறுகின்றது.

(இ-ள்.) அந்நான்கனுள் முதலன இரண்டும் ஒன்றாகவும் ஏனைய இரண்டும் ஒன்றாகவுந் தொகுக்கப்படும் அவ்வாற்றாற் பயங்கொள்ளுங்கால் (எ-று) (174)

அவையாவன கூறுகின்றான்.

---

1. இருவகைத் தாகும் என இளம்பூரணரும், ஈரிரு வகைத்தே என நச்சினார்க்கினியரும் பாடம் கொள்வர்.

உரைப் பகுதியின் இயல்பு

**487. ஒன்றே மற்றுஞ் செவிலிக் குரித்தே-
யொன்றே யார்க்கும் வரை நிலை யின்றே.**

இஃது அவற்றது இயல்புணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்). இதுவும், மேனின்ற அதிகாரத்தான் இறுதி நின்ற இரண்டன் தொகுதியாகிய ஒன்று செவிலிக்கே உரித்து. ஒழிந்த இரண்டானுமாகிய ஒன்று வரைவின்றி எல்லார்க்கும் உரித்து எனவுங் கூறியவாறு.

தலைமகளை வற்புறுத்துஞ் செவிலியர் புனைந்துரைத்து நகுவித்துப் பொழுது போக்குதற்குரியரென்பது இதன்கருத்து. இக்கருத்தே பற்றிப் பிற சான்றோருஞ்,

''செம்முது செவிலியர் பொய்ந்நொடி பகர''

என்றாரென்பது; பிறவும் அன்ன

'மற்றும்' என்றதனான் அவையன்றி வருகின்ற பிசியுஞ் செவிலியர்க்கு உரித்தென்பது கொள்க இனி,

''பாட்டிடை வைத்த குறிப்பும் பாவின் றெழுந்த
கிளவியும்'' (485)

யாருக்கும் வரைவின்றி வருமாறு அவ்வச்செய்யுளுட் காணப் படும். (175)

பிசியின் வகை

**488. ஒப்பொடு புணர்ந்த வுவமத் தானும்
தோன்றுவது கிளந்த துணிவி னானும்
என்றிரு வகைத்தே [1]பிசிவகை நிலையே.**

இது, முறையானே பிசி இரண்டெனப்படு மென்கின்றது.

(இ-ள்) ஒப்பொடு புணர்ந்த வுவமமென்பது தன்கட் கிடந்த ஒப்புமைக் குணத்தோடு பொருந்தி வரும் உவமப்பொருளானும்; மற்று இனி ஒன்று சொல்ல ஒன்று தோன்றுந் துணிவிற்றாகச் சொல்லுஞ் சொல்லானுமென்று இவ்விரு கூற்றதாகும் பிசி கூறுபடும் நிலைமை (எ-று).

---

1. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே பிசிநிலை வகையே எனப் பாடம் கொள்வர் இளம்பூரணர்.

அவை "பிறைகவ்வி மலைநடக்கும்" என்பது ஒப்பொடு புணர்ந்த உவமம். இஃது யானையென்றுவது.

"முத்துப்போற்பூத்து முதிரிற்களாவண்ண
நெய்த்தோர் குருதி நிறங்கொண்டு—வித்துதிர்த்து"

என்பது மது; இது, கமுகின் மேற்று.

"நீராடான் பார்ப்பா னிறஞ்செய்யா னீராடி
லூராடு நீரிற்காக் கை"

என்பது, 'தோன்றுவது கிளந்த துணிவினான்' வந்தது. இது நெருப்பென்றுவது. 'வகைநிலை' யென்ற மிகையான் இவையுஞ் செவிலிக் குரித்தென்பது கொள்க. (176)

முதுமொழியின் இலக்கணம்

486. நுண்மையுஞ் சுருக்கமு[1] மொளியுடை மையும்
[2]எண்மையு மென்றிவை விளங்கத் தோன்றிக்
குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்
ஏது நுதலிய முதுமொழி யென்ப.

இது, முதுமொழியுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) கூரிதாய்ச் சுருங்கி விழுமிதா யெளிதாகி இயற்றப்பட்டுக் குறித்த பொருளொன்றனை முடித்தற்கு வருமாயின், அங்ஙனம் வந்ததனைப் பொருண் முடித்தற்குக் காரணமாகிய பொருளினைக் கருதுவது முதுமொழியென்ப புலவர் (எ-று).

"உழுத வுழுத்தஞ்செய் யூர்க்கன்று மேயக்
கழுதை செவியரிந் தற்றால்—வழுதியைக்
கண்டன கண்க ளிருப்பப் பெரும்பணைத்தோள்
கொண்டன மன்னோ பசப்பு" (பழமொழி)

என்றவழி, மற்று வழுதியைக் கண்ட கண் இருப்பத் தோள் பசந்தன என்றக்கால் ஒன்றன் வினைப்பயன் ஒன்று நுகர்ந்த தென்புழிக் குறித்த பொருளிலையபின்மை கூறுதலாயிற்று.

---

2. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே. ஒளியும் உடைமையும் எனப் பாடம் கொள்வர் இளம்பூரணர்.

3. மென்மையும் எனப்பாடம் கொள்வர் நச்சினார்க்கினியரும் இளம்பூரணரும்.

அதனைச் சொற்றொடர் இனிது விளக்கிற்றன்றாயினும் முற்கூறிய முதுமொழி முடித்ததென்பது; என்னை? அதன் கண்ணே அது முடித்தற்கேதுவாகிய இயைபின்மை கிடந்தமையினென்பது. இது பருப்பொருட்டன்றி நுண்ணிதாகிச் சொற்சுருக்கமுடைத்தாய் விழுமிதாகி எளிதிற் பொருடோன்றியவாறு கண்டுகொள்க. எனவே, இதுவும் அந்நாற்குபதித்தென்றவாறு. (177)

மந்திரச் செய்யுள்

**490.** **நிறைமொழி மாந்த ராணையிற்[1] கிளந்த**
**மறைமொழி தானே மந்திர மென்ப.**

இது, மந்திரச் செய்யுளுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) நிறைமொழி மாந்தரென்பது, சொல்லிய சொல்லின் பொருண்மை யாண்டுங் குறைவின்றிப் பயக்கச் சொல்லும் ஆற்றலுடையராவார். ஆணையாற் கிளக்கப்பட்டுப் புறத்தார்க்குப் புலனாகாமன் மறைத்துச் சொல்லுஞ் சொற்றொடரெல்லாம் மந்திரமெனப்படும். (எ-று).

அவை வல்லார்வாய்க் கேட்டுணர்க. 'தானே' யென்று பிரித்தான் இவை தமிழ்மந்திரமென்றற்கும் பாட்டாகி அங்கதமெனப்படுவனவும் உள, இவை நீக்குதற்குமென உணர்க. அவை,

"ஆரிய நன்று தமிழ்தீ தெனவுரைத்த
காரியத்தாற் காலக்கோட் பட்டானைச்-சீரிய
அந்தண் பொதியி லகத்தியனா ராணையாற்
செந்தமிழே தீர்க்கசுவா கா"

எனவும்,

"முரணில் பொதியின் முதற்புத்தேள் வாழி
பரண கபிலரும் வாழி—யரணியல்
ஆனந்த வேட்கையான் வேட்கோக் குயக்கோடன்
ஆனந்தஞ் சேர்கசுவா கா"

எனவும், இவை தெற்கண் வாய்திறவாத பட்டி மண்டபத்தார் பொருட்டு நக்கீரர் ஒருவனைச் சாவவும் வாழவும் பாடிய மந்திரம்

---

1. கிளக்கும் எனப்பாடம் கொள்வர் இளம்பூரணர்.

அங்கதப்பாட்டாயின. மேற்பாட்டுரை நூலென்புழி அங்கத மென்றோதினான் இன்ன மந்திரத்தை. இஃது ஒருவனை இன்ன வாற்றாற் பெரும்பாணமையுஞ் சபித்தற் பொருட்டாகலின் அப் பெயர்த்தாயிற்று. இக்கருத்தேபற்றிப் பிறரும்,

"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்" (—குறள்: 28)

என்றாரென்க. அங்கதப்பாட்டாயவழி அவற்றுக்கு அளவை

"அங்கதப் பாட்டவற் றளவோடு ஒக்கும்"

என மேற்கூறினானென்பது. (178)

குறிப்புமொழி

## 491. எழுத்தொடுஞ் சொல்லொடும் புணரா தாகிய பொருட்புறத் ததுவே குறிப்புமொழி யென்ப

இது, முறையானே கூற்றிடைவைத்த குறுப்புணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) எழுத்து முடிந்தவாற்றானுஞ் சொல் தொடர்ந்த வாற்றானும் சொற்படு பொருளானுஞ் செவ்வன் பொருளறிய லாகாமையின், எழுத்தொடுஞ் சொல்லொடும் புணராது பொருட்குப் புறத்தே பொருளுடைத்தாய் நிற்பது குறிப்பாவது (எ-று).

இதனைப் 'பாட்டுரை நூல்' என்றவழி 'வாய்மொழி' என் றோதினான், கவியாற் பொருள்தோன்றாது பின்னர் இன்னதிது வெனச் சொல்லி உணர்த்தப்படுதலின்.

இனி, அதனை இதன் தொகைச்சூத்திரத்துக் 'கூற்றிடை வைத்த குறிப்'பென்று (477) ஓதினான் பாட்டிடைப் படுபொருள் பெரிதாகி அதனிடையே குறித்துக்கொண் டுணரினல்லது மெய்ப்படா தென்றற்கென்பது. பிறர் அவற்றைப் பொரு ளிசையென்று சொல்லுப.

"குடத்தலையர் செவ்வாயிற் கொம்பெழுந்தார் கையி
னடக்கிய மூக்கினரா ம்."

எனவரும். இதனுட் குடமே தலையாகப் பிறந்தாரெனவுங் கொம் பெழுந்த வாயினரெனவுங் கையுட்கொண்ட மூக்கினரெனவுங்

1. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே. குறிப்பு மொழியே எனப்பாடம் கொள்வர் இளம்பூரணர்.

கூறியக்கால் எழுத்துஞ் சொல்லும் பொருளும் இயல்பிலவாத லுங் குறிப்பினுன் அதனைக் குஞ்சரமென்று கொண்டவாறுங் கண்டுகொள்க. பிறவும் அன்ன.

மற்றிது பிசியெனப்படாதோவெனின்-இது பாட்டுவடிவிற் ருகலின் அற்றன்றென்பது, அஃதேற் பாட்டெனப்படாதோ வெனின்,— குறித்த பொருண் முடிய நாட்டாமையின் யாப் பழிந்து, நாற்சொல்லியலான் யாப்புவழிப்படாமையின் மரபும் அழிந்து, பிறவுறுப்புப் பலவுங்கொண்டமையிற் பாட்டெனவும் படாதென்பது. இஃது எழுத்து முதலாக ஈண்டிய அடியெனப் படாமையின் அதனையும் அடிவரையில்லனவற்றோடு ஓதினு னென்பது. அல்லாதார் குறிப்பிசைவந்த செய்யுளெல்லாங் குறிப்பெனப்படுமென்ப அங்ஙனங் கூறிற் குறிப்பிசையுடைய பாட்டினுள் வாராவாகிய செல்லுமெனை மறுக்க. (179)

பண்ணத்தியின் இயல்பு

492. பாட்டிடைக் கலந்த பொருள வாகிப்
[1]பாட்டி னியல பண்ணத்தி யியல்பே.

இது, பண்ணத்தி கூறுகின்றது.

(இ-ள்) பழம்பாட்டினூடு கலந்த பொருளே தனக்குப் பொருளாகப் பாட்டும் உரையும்போலச் செய்யப்படுவன பண் ணத்தி (எ-று.)

மெய்வழக்கில்லாத புறவழக்கினைப் பண்ணத்தியென்ப. இஃது எழுதும் பயிற்சியில்லாத புறவுறுப்புப் பொருள்களைப் பண்ணத்தி யென்பவென்பது. அவையாவன: நாடகச்செய்யு ளாகிய பாட்டும் மடையும் வஞ்சிப்பாட்டும் மோதிரப்பாட்டுங் கட கண்டும் முதலாயின. அவற்றை மேலதேபோலப் பாட்டென்று ராயினர், நோக்கு முதலாயின உறுப்பின்மையினென்பது. அவை (645) வல்லார்வாய்க் கேட்டுணர்க. (180)

---

1. பண்ணத்தியல்பே எனப் பாடம் கொள்வர் இளம்பூரணர்.

அதுபிசியோடொக்குமெனல்

## 493. அதுவே தானும் பிசியோடு மானும்.

இதுவும் அது.

(இ-ள்) மேற்கூறப்பட்ட பண்ணத்தி பிசியோடொக்கும் (எ-று).

அதனை ஒத்தலென்பது அதுவுஞ் செவிலிக்குரித்தென்றவாறு. 'பிசியொடும்' என்ற உம்மையால்,

"பொருளொடு புணராப் பொய்ம்மொழி யோடும்
பொருளொடு புணர்ந்த நகையோடும்"
(தொல்-செய்:173)

ஒக்குமென்றுணர்க. தானும்' என்ற மிகையாற் பாட்டுமடை வசைக் கூத்திற்கே உரித்தென்பது கொள்க.

பண்ணத்தியின் அடிப்பெருக்கம்

## 494. [1] அடிநிமிர் கிளவி யீரா றாகும்

(இ-ள்.) அப்பண்ணத்தியின் அடிப்பெருக்கங் கிளக்குங் காற் பன்னிரண்டாம் (எ-று).

'ஆகும்' என்றதனாற் சிறுபான்மை அப்பன்னிரண்டடியின் ஏறியும் வரப்பெறுமென்பது. 'ஈராறாகும்' என்றதனான் இது நெடுவெண்பாட்டாகி வருமெனவும் அதுபோல ஆறடியின் இழிந்து வாராதெனவுங் கொள்க. (182)

பண்ணத்திக்குக் கூறிய அடியெல்லையின் மிகுந்து வருதல்

## 495. அடியிகந்து வரினுங் கடிவரை யின்றே

இதுவும் அது.

(இ-ள்). அது முழுதும் அடியாகி வாராது. இடையிடை ஒரோவடி பெற்று அல்லுழியெல்லாம் பரந்துபட்டு வரவும் பெறும் (எ-று)

அவை, முற்காலத்துள்ளார் செய்யுளுட் காணமையிற் காட்டாமாயினும். இக்காலத்துள்ளனவேற் கண்டுகொள்க. இலக்கணம் உண்மையின் இலக்கியங் காணமாயினும் அமையுமென்பது. (183)

---

1. இந்நூற்பாவையும், அடுத்த நூற்பாவையும் இணைத்து ஒரே நூற்பாவாகக் கொள்வர் இளம்பூரணர்.

அளவியற் பகுதியின் வகை

**496.** [1]கிளரியல் வகையிற் கிளந்தன தெரியின்
அளவியல் வகையே யனைவகைப் படுமே.

இதுவும் மேலவற்றுக்கெல்லாம் புறனடை.

(இ-ள்) எடுத்தோதிய வகையாற் சொல்லியன ஆராயின் அளவியற் பகுதி அக்கூற்றதாம் (எ-று)

எடுத்தோதியவகையானென்பது நூலும் உரையும் நந்நான்கெனவும், பிசி இரண்டெனவும், முதுமொழியும் மந்திரமுங் கூற்றிடை வைத்த குறிப்பும் ஒரோவொன்றெனவுங் கூறிவந்த வகையான் அவற்றை இனைத்தென்றெண்ணி அளந்த பகுதியும் அளவியலேயாமாகலின் அவ்வளவியல் அடிவரையறை கூறிய வாற்றானும் அடி வரையறையிலவற்றுக்குக் கூறியவாற்றானும் இருவகைப்படும் அளவியலென்றவாறு. (184)

திணையுறுப்பு உணர்த்துதல்

**497.** கைக்கிளை முதலா வெழுபெருந் திணையும்
முற்கிளந் தனவே [2]முறைநெறி வகையின்.

இது, பதின்மூன்றும் முறைமைக்கணின்ற திணையுறுப் புணர்த்து (313) கின்றது.

(இ-ள்). கைக்கிளைமுதற் பெருந்திணையிறுவாய் ஏழும் முன்னர்க் கிளக்கப்பட்டன (எ-று).

'முறைநெறி வகையான்' என்பது அவற்றுக்கு முறைமை யாற் புறமெனப்பட்ட வெட்சி முதல் பாடாண் பகுதியீறாகிய எழுபகுதியோடுமென்றவாறு. எனவே, அவற்றுக்குப் பொது வாகிய முறையாற் கரந்தையுள்ளிட்டுப் பதினைந்து திணையுள் ஒன்று செய்யுட்குறுப்பாகி வரல்வேண்டுமெனவும், முன்னோதிய வாறே கொள்ளப்படுமெனவுஞ் சொல்லினனும்; இது சொல் லாக்கால் அவை வரினும் வரும், வாராதொழியவும் பெறுமென்

1. இளம்பூரணர் பாடமும் இதுவே. கிளரிய எனப் பாடம் கொள்வர் நச்சினார்க்கினியர்.
2. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே. முறையினான எனப் பாடம் கொள்வர் இளம்பூரணர்.

யதுபடுமென்பது. இது மேல்வருகின்ற கைகோண் முதலியன வற்றுக்கும் ஒக்கும். (185)

களவின் வகை

498. காமப் புணர்ச்சியு மிடந்தலைப் [1]பாடும்
பாங்கொடு தழாஅலுந் தோழியிற் புணர்வுமென்று
ஆங்கநால் வகையினு மடைந்த [2]சார்பொடு
மறையென மொழிதன் மறையோ ராறே.

களவு கற்பென்பன காமத்திணையின் ஒழுகலாறு ஆகலான் ஆண்டுப் பரந்து பட்டனவெல்லாந் தொகுத்துக் கூறுகின்றான். அவை செய்யுட் குறுப்பாயடங்கலின், அவற்றுள் இது கள வென்னுங் கைகோளுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) காமப்புணர்ச்சியும், அது நிகழ்ந்தபின்னர் இடந்தலைப்பாடும் அதற்குப் பின்னர்ப் பாங்கற்குச் சொல்லி அவனாற் கூடுதலும், அதன்பின்னர்த் தோழியைப் பின்னின்று குறைமுடித்துக் கோடலுமென அந்நாற்பகுதிக்கண்ணும் பொருந்திய சார்பினாற் களவொழுக்கம் இதுவென்று கருது மாற்றாற் செய்யுள் செய்தல் கந்திருவ வழக்கம் (எ-று)

கந்திருவவழக்கம் மறையோரொழுகிய நெறியதுவாகலான் 'மறையோராறு' என்றானென்பது. எனவென்பது வினை யெச்சம். எனவே, பாங்கனுந் தோழியும் உணர்ந்தவழியும் அது மறையோர் வழித்தென்றவாறு. காமப்புணர்ச்சி நிகழ்ந் தன்றி இடந்தலைப்பாடு நிகழாதெனவும் அவ்விடந்தலைப்பாடு பிற்பயத்தலரிதென்பது அவள் ஆயத்தோடுங் கூடிய கூட்டத் தான் அறிந்த தலைமகன் பாங்கனை உணர்த்தி அவனாற் குறை முடித்துக் கோடலுந் தன்வயிற் பாங்கன் அவள்வயிற் பாங்கு செய்யானாகலின் அவன்பின்னர்த் தோழியாற் குறைமுடித்துக்

1. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே படலும் எனப் பாடம் கொள்வர் இளம்பூரணர்.
2. சார்வொடு என இளம்பூரணரும், சார்போடு என நச்சரும் பாடம் கொள்வர்.

கோடலுமென இந்நான்கும் முறையான் நிகழுங் களவொழுக்கம் (எ-று).

''வேட்கை யொருதலை யுள்ளுதன் மெலிதல்
ஆக்கஞ் செப்பல் நாணுவரை யிறத்தல்
நோக்குவ வெல்லா மவையே போறல்
மறத்தன் மயக்கஞ் சாக்கா டென்றச்
சிறப்புடை மரபினவை ......' (தொல்-கள : 9)

என்பனவுங் கைகோளாகாவோவெனின், — ஆகா; கைகோளென்பது ஒழுகலாறுகலான். அவை அவற்றுட் பிறந்த உள்ள நிகழ்ச்சி ஒன்றொன்றனிற் சிறந்து பெருகியக்கால் அவ்வப்பகுதி யாகுமெனக் கொள்க.

மற்றுக் களவியலுள்,

''ஆங்ஙனம் புணர்ந்த கிழவோன் தன்வயிற்
பாங்கி னோரிற் குறிதலைப் பெயலும்
பாங்கிலன் தமியோ ளிடந்தலைப் படலும்''
(இறையனார் : 3)

எனப் பாங்கற்கூட்டம் முற்கூறியதாலெனின்;—இது கைகோள் கூறிய இடமன்மையின் முற்கூறினும் அமையுமென்பது.

மற்று; இயற்கைப்புணர்ச்சி புணர்ந்த தலைமகனைப் பாங்கன் கண்டு இவ்வேறுபாடு எற்றினானாயிற்றென்று வினவுமன்றே? அதனாற் பாங்கற்கூட்டம் நிகழ்ந்த பின்னரன்றி இடந்தலைப்பாடு நிகழாதாம் பிறவெனின்,-அற்றன்று; யாழோர் கூட்டம் உலகியலாகாதாதலான் இல்லதன்றுமாகவே உலகத்தார் நிறையுடையாராகி மறை வெளிப்படாமல் ஒழுகுவாரும் மறைவெளிப்படுத்து விளம்பும் பாங்கனையுடையாரும், இல்லாதாருமெனப் பலவகையராதலின் வினாதல் ஒருதலையன்றென்பது: அல்லதூஉம் இடந்தலைப்பாடு நிகழாதாயினன்றே துணைவேண்டுமென்பது. என்னை? துணையின்றி நிகழுங் களவு சிறப்புடைத்தாகலானும் பாங்கன் கழறுமென்று அஞ்சி அவனை முந்துற மறைத்தொழுகுமாகலானு மென்பது. களவொழுக்கமெல்லாம் இந்நான்கு வகையானும் அடங்கும். அவற்றுக்குச் செய்யுள்,

''கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்

செறியெயிற் றரிவை கூந்தலி
னறியவு முளவோ நீயறியும் பூவே" (குறுந்:2)

என்னும் பாட்டு இயற்கைப் புணர்ச்சிக்கண் நிகழ்ந்த செய்யுள்.

"சொல்லிற் சொல்லெதிர் கொள்ளாய் யாழநின்
திருமுக மிறைஞ்சி நாணுதி கதுமெனக்
காமங் கைம்மிகின் தாங்குத லெளிதோ
கொடுங்கே ழிரும்புற நடுங்கக் குத்திப்
புலிவிளை யாடிய புகர்முக வேழத்தின்
தலைமருப் பேய்ப்பக் கடைமணி சிவந்தநின்
கண்ணே கதவ வல்ல நண்ணா
ராண்டலை மதில ரர்கவு மூரசுகொண்டு
ஓம்பரண் கடந்த அடுபோர்ச் செழியன்
பெரும்பெயர்க் கூட லன்னநின்
கரும்புடைத் தோளு முடையவா லணங்கே" (நற்றிணை:39)

என்பது, இடந்தலைப்பாடு.

"இடிக்குங் கேளிர் நுங்குறை யாக
நிறுக்க லாற்றினோ நன்றுமன் தில்ல
ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கிற்
கையி லூமன் கண்ணிற் காக்கும்
வெண்ணெ யுணங்கல் போலப்
பரந்தன் றிந்நோய் நோன்றுகொளற் கரிதே" (குறுந்:58)

என்பது பாங்கற் கூட்டத்துக்கண் வந்தது.

"தலைப்புணைக் கொளினே தலைப்புணைக் கொள்ளும்
கடைப்புணைக் கொளினே கடைப்புணைக் கொள்ளும்
புணைகை விட்டுப் புனலோ டொழுகின்
ஆண்டும் வருகுவள் போலு மாண்ட
மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகை
செவ்வெரி நுறழுங் கொழுங்கடை மழைக்கண்
துளிதலைத் தலைஇய தளிரன் னோளே" (குறுந்:222)

என்பது தோழியிற்கூட்டம் பிறவும் அன்ன. (186)

கற்பு

499. மறைவெளிப் படுதலுந் தமரிற் பெறுதலும்
[1]இவைமுத லாகிய வியனெறி திரியாது
மலிவும் புலவியு மூடலு முணர்வும்
பிரிவொடு புணர்ந்தது கற்பெனப் படுமே.

இது, கற்பென்னுங் கைகோளுணர்த்துத னுலிற்று.

(இ-ள்) மறைந்தொழுகும் ஒழுகலாறு வெளிப்படுதலும் அதன்பின் தமர் கொடுப்பத் தான் அவ்வகையாற் பெறுதலு மென்னும் இவ்விரண்டும் முதலாகிய வழக்குநெறி திரியாது மகிழ்ச்சியும் புலத்தலும் ஊடலும் உணர்த்தலுமென்னும் நான் குடன் பிரிவுளப்பட ஐந்தும் புணர்ந்தது கற்பென்னுங் கை கோளாம் (எ-று).

'இவை முதலாகிய' வென்றதனால்,

"கொடுப்போ ரின்றியுங் கரண முண்டே
புணர்ந்துடன் போகிய காலை யான" (தொல்-கற்:2)

என்றவழிக் கூடிய வதுவைபோல்வன கொள்க. அவைதாங் கற்பெனப்படுவதல்லது ஒழுகலாறெனப்படா; என்னை? இவ ரொழுக்கமன்றி வேள்வியாசான் முதலாயினார் செய்விக்கும் ஒழுக்கமாகலான். அங்ஙனமாயினும் அவற்றையுங் கைகோளின் பாற் சார்த்தியுணரப்படுமென்றற்கு ஈண்டுக் கூறினானென்பது.

இனிக் கூறும் ஐந்துந், 'தலைவனுந் தலைவியும் ஒழுகும் ஒழுகலாறெனவே படும். முன்னைய இரண்டும் போலப் பிறர் கொடுக்கப்பட்டன அல்லவென்பது.

மலிதலென்பது, இல்லொழுக்கமும் புணர்ச்சியும் முதலாய வற்றான் மகிழ்தல்.

புலவியென்பது புணர்ச்சியான் வந்த மகிழ்ச்சி குறைபடா மற் காலங்கருதிக் கொண்டுய்ப்பதோர் உள்ள நிகழ்ச்சி.

ஊடலென்பது உள்ளத்து நிகழ்ந்ததனைக் குறிப்பு மொழி யானன்றிக் கூற்றுமொழியானுரைப்பது.

---

1. இளம்பூரணர் பாடமும் இதுவே. இரு முதலாகி எனப்பாடம் கொள்வர் நச்சினார்க்கினியர்.

அங்ஙனம் ஊடனிகழ்ந்தவழி அதற்கேதுவாகிய பொரு ளின்மை யுணர்வித்தல் உணர்வெனப்படும். இல்லது கடுத்த மயக்கந்நீர உணர்த்துதலால் உணர்ந்துதலெனவும் அதனை உணர்தலால் உணர்வெனவும்படும்; புலவிக்காயின் உணர்த்தல் வேண்டா, அது குளிர்ப்பக் கூறலுந் தளிர்ப்ப முயங்கலும் முதலாயவற்றான் நீங்குதலின் அம்முறையானே கூறி அவற்றுப் பின் பிரிதல் கூறினான். அஃது இவை நான்கனோடும் வேறு படுதலின்; அதனை ஊடலோடு வைக்கவே அவ்வூடலிற் பிறந்த துனியும் பிரிவின்பாற் படுமென்பதூஉங் கொள்க; என்னை? காட்டக் காணாது கரந்து மாறுதலின். இவற்றுக்குச் செய்யுள்:

"எம்மனை முந்துறத் தருமோ
தன்மனை யுய்க்குமோ யாதவன் குறிப்பே" (அகம்:194)

என்பது மறைவெளிப்பாடு.

"தமர்தர-வோரிற் கூடியுடன்புணர் கங்குல்" (அகம்:86)

என்பது தமரிற் பெறுதல்.

"கேள்கே டூன்ற" என்னும் (93) அகப்பாட்டினுள்,

"நலங்கே ழாகம் பூண்வடுப் பொறிப்ப
முயங்குகஞ் சென்மோ நெஞ்சே"

என்பது மலிதல்,

"நாணுக்கடுங் குழைய ளாகிப்
புலவி வெய்யள்யா முயங்குங் காலே"

என்பது புலவி.

"நோய்சேர்ந்த திறம்பண்ணி நின்பாண னெம்மனை
நீ சேர்ந்த வில்விணய் வாராமற் பெறுகற்பின் (கலி:77)

என்பது ஊடல்.

"விருந்தெதிர் கொள்ளவும் பொய்ச்சூ ளஞ்சவும்
அரும்பெறற் புதல்வனை முயங்கக் காணவு
மாங்ஙவிந் தொழியுமென் புலவி" (கலி;75)

என்பது உணர்தல்.

"திறனல்ல யாங்கழற யாரை நகுமிம்
மகனல்லான் பெற்ற மகன்" (கலி:86)

என்பது துனி. துனித்தலென்பது வெறுத்தல். அறுவகைப் பிரிவும் பிரிவெனவே அடங்கும். அவை மேற்காட்டப் பட்டன

(187)

கைகோள்வகை

**500. [1]மெய்பெறு வகையே கைகோள் வகையே.**

இது, புறத்திணைக் கைகோளுணர்த்துகின்றது.

(இ-ள்.) பொருள்கள் பெற்ற கைகோட்பகுதி அகத்திணைக் கைகோளே (எ-று).

கைகோளென்பது, ஒழுக்கங்கோடல்; எனவே, அகத்திற்குப் புறனாயினும் புறத்திணைக்குச் கைகோள் அவ்வாறு வேறுவகைப்படக் கூறப்படா; பொதுவகையானே மறைந்த ஒழுக்கமும் வெளிப்பாடுமென இரண்டாகி அடங்கும் அவையுமென்றவாறு. அவை வெட்சியுள்ளும் ஒழிந்த திணையுள்ளுங் காட்டப்பட்டன. (188)

களவின் கண்வரும் கூற்றிற்குரியார்

**501. பார்ப்பான் பாங்கன் றோழி செவிலி**
**சீர்த்தகு சிறப்பிற் கிழவன் [2]கிழத்தியோ**
**டளவியன் மரபி னறுவகை யோருங்**
**களவினிற் கிளவிக் குரிய ரென்ப.**

இது, கூற்றென்னும் உறுப்புணர்த்துகின்றது.

(இ-ள்) எண்ணப்பட்ட அறுவருங் களவொழுக்கினுள் (107) நிகழ்ந்தன கூறினராகவல்லது ஒழிந்தோர், கூறினராகச் செய்யுள் செய்யப்பெறார் (எ-று).

பார்ப்பானென்பான், நன்றுந் தீதும் ஆராய்ந்து உறுதி கூறுவானெனப்படும். பாங்கனென்பான் அவ்வாறன்றித் தலைமகன் வழிநின்றொழுகி வருமாகலின் அவனை அவன்பின் வைத்தான் தோழி அவன்போன்றும் பெண்பாலாகலின் அவளைப் பின் வைத்தான். செவிலி மாற்றஞ் சிறுவரவிற்றாதலின் அவளை அவளின்பின் வைத்தான். அவரிற் சிறந்தமையிற் சீர்த்தகு சிறப்பிற் கிழவனையுங் கிழத்தியையும் அவர்பின் வைத்தான். அவ்விருவருள்ளுந் தலைமகளது கூற்றே பெருவரவினதாகலின் அவளை ஈற்றுக்கண் வைத்தானென்பது.

---

1. மெய்பெற அவையே என நச்சினார்க்கினியரும் மெய்பெறும் அவையே என இளம்பூரணரும் பாடம் கொள்வர்
2. கிழத்தி யொடு எனப்பாடம் கொள்வர் நச்சினார்க்கினியர்

உ-ம்: “சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை

--- --- ---

தேருங்கா னும்மக னுமக்குமஃங் கனையனே” (கலி:9)

என்பது, பார்ப்பான் கூற்று.

‘காமங் காம மென்ப காம
மணங்கும் பிணியு மன்றே நினைப்பின்
முதைச்சுவற் கலித்த முற்றா விளம்புன்
மூதா தைவந் தாங்கு
விருந்தே காமம் பெருந்தோ ளோயே” (குறுந்:204)

என்பது, பாங்கன் கூற்று.

“ஏனல் காவ லிவளு மல்லள்

--- ... ---

சொல்லு மாடுப கண்ணி னானே”

என்பது, தோழி கூற்று.

“பெயர்த்தனென் முயங்கயான் வியர்த்தன னென்றனள்

... --- ...

ஆம்பல் மலரினும் தான்தண் ணியளே” (குறுந்:84)

என்பது, செவிலி கூற்று.

“பாலு முண்ணாள் பழங்கண் கொண்டு
நனிபசந் தனளென வினவுதி” (அகம்:48)

என்பது அது.

“கேளிர் வாழியோ கேளிர் நாளுமென்

--- --- ---

அரைநாள் வாழ்க்கையும் வேண்டலென் யானே”

(குறுந்:280)

என்பது, கிழவன் கூற்று.

“விளங்குதொடி முன்கை வளைந்துபுறஞ் சுற்றி
நின்மார்பு அடைதலின் இனிதா கின்றே” (அகம்-58)

என்பது, கிழத்தி கூற்று. பிறவும் அன்ன. (189)

கற்பின்கண் வரும் கூற்றிற்குரியார்

502. பாணன் கூத்தன் விறலி பரத்தை
யாணஞ் சான்ற வறிவர் கண்டோர்
பேணுதகு சிறப்பிற் பார்ப்பான் முதலா
முன்னுறக் கிளந்த கிளவியொடு தொகைஇத்
தொன்னெறி மரபிற் கற்பிற் குரியர்.

இதுவுமது.

(இ-ள்.) இவ்வெண்ணப்பட்ட எல்லாருஞ் சொல்லிய சொல்லாகச் செய்யுள் செய்யப்பெறுங் கற்பினுள் (எ-று.)

'முன்னுறக் கிளந்த கிளவி' யென்பது, பொருளுணர்க்கிற்று. இசையின் பின்னரது நாடகமாகலிற் பாணன் பின் கூத்தனை வைத்தும், பெண்பாலாகலான் விறல்பட ஆடும் விறலியைக் கூத்தன் பின் வைத்தும், அவ்வினத்துப் பரத்தையரை அதன்பின் வைத்தும், பொருட்குச் சிறந்தாராகலின் நற்பொருள் உணரும் அறிவரை அவர்பின் வைத்தும், ஏதிலராகிய கண்டோரை அவர்க்குப்பின் வைத்துங் கூறினானென்பது. இவ்வாற்றான் இவரோடு முன்னர்க் களவொழுக்கத்திற் கூறிய அறுவருங் கூறப்பெறுவரென்றவாறு. 'தொன்னெறி மரபின்' என்றதனாற் பாகனுந் தூதனுங் கூறவும் அமையும்: அவை புறப்பொருட்குச் சிறந்துவரும். அவற்றுக்குச் செய்யுள்:

"செவ்வழி நல்யா ழிசையினென் பையெனக்
கடவுள் வாழ்த்திப் பையுள் மெய்நிறுத்
தவர்திறஞ் செல்கவெனக் கண்டனென் யானே"
(அகம்-14)

என்பது, பாணன் கூற்று.

"ஆடலிற் பயின்றனை யென்னு தென்னுரை
யூடலில் தெளிதல் வேண்டும்"

என்பது, கூத்தன் கூற்று.

"மரந்தலை மணந்த நனந்தலைக் கானத்து
... ...
நறுங்கண் ணியன்கொல் நோகோ யானே" (நற்றிணை:394)

என்னும் நற்றிணைப்பாட்டுக் கண்டோர் கூற்று.

---

1. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே. அறுவரொடு எனப் பாடம் கொள்வர் இளம்பூரணர்.

"விதையர் கொன்ற முதையற் பூழி

... ... ... ...

மெல்லிறைப் பணைத்தோள் துயிலமர்ந் தேனே"

(நற்றிணை-121)

என்னும் நற்றிணைப்பாட்டுப் பாகன் கூற்று.

ஒழிந்தனவுங் கற்பியலுட் கூறியவாற்றான் அறிக. (190)

கூற்றிற்கு உரியரல்லாதார்

**503. ஊரு மயலுஞ் சேரி யோரு**
**நோய்மருங் கறிநருந் தந்தையுந் தன்னையுங்**
**கொண்டெடுத்து மொழியப்[1] படுத லல்லது**
**கூற்றவ ணின்மை யாப்புறத் தோன்றும்.**

(இ-ள்) இவ்வெண்ணப்பட்ட அறுவகையோருஞ் சொல்லிய சொல்லாகச் செய்யுள் செய்யப் பெறார் (எ-று)

இவை, களவிற்குங் கற்பிற்கும் பொது. 'கொண்டெடுத்து மொழியப்படுதலல்ல' தென்பது இவர் கூற்றாகப் பிறர் சொல்லினல்லது இவர்தாங் கூறாரென்றவாறு. அவை

"ஊஉ ரலரெழச் சேரி கல்லென

... ... ... ...

ஆனா தலைக்கும் அறனி லன்னை" (குறுந்-262)

எனவும்,

"தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிச்

......சாய்த்தார் தலை" (கலி : 39)

எனவும் வருவன போல்வன.

'யாப்புறத் தோன்றும்' என்றதனான் அகத்திணைக்கண் இவ்வாறு நிலைபெற்றதென்பது; எனவே, புறத்திணைக்கண் அவர் கூறவும் பெறுமென்பது. இது நோக்கிப்போலுங் கூறுதாரையுங் கூறுவாராயிற்றென்பது. 'நோய்மருங் கறிநரை' இடைவைத்தான் முன்னைய மூன்றும் பெண்பாலெனவும் ஒழிந்தன ஆண்பாலெனவும் அறிவித்தற்கென்பது. எனவே, நோய்மருங்கறிநர் பெண்பாலும் ஆண்பாலுமாயினரென்பது.

---

1. இளம்பூரணர் பாடமும் இதுவே. படுவதல்லது எனப் பாடம் கொள்வர் நச்சினார்க்கினியர்.

நற்றாய் தலைவன் தலைவியொடு கூறாள் எனல்

504. கிழவன் தன்னொடுங் கிழத்தி தன்னொடு
நற்றாய் கூறல் முற்றத் தோன்றாது

இஃது, எய்தாத தெய்துவித்தது; விலக்கியல் வகையால் விதித்ததெனவும் அமையும்.

(இ-ள்.) கிழவனொடுங் கிழத்தியோடும் இடையிட்டு நற்றாய் கூறுதல் நிரம்பத்தோன்றாது (எ-று)

'நற்றாய்' என்று ஒருமை கூறியவதனால் தலைமகள் தாயையே கொள்ளப்படும். இதனானே தந்தை தன்னையரென்பன போல்வனவற்றுக்கும் இஃதொக்கும். 'முற்ற' வென்றதனால் தானே தலைவனாதலால் தலைவன் தமர் யாவருங் கூறார்; முற்கூறப் பட்டார் அல்லரென்பது கொள்க. முற்றுதென்னாது 'தோன்றாது' என்றதனாற் புறத்திணைக்கண் இவை வரைவின்றி வழக்கினொடு பொருந்துமாற்றாற் கொள்ளப்படுமென்பது. 'கிழவன் றன்னொடும் கிழத்தி தன்னொடும் கூறாள்' எனவே, அல்லுழிச் சொல்லப்பெறும் நற்றாயென்பதாம்; அஃது,

"எம்வெங் காம மியைவ தாயின்
* * *
செறிந்த சேரிச் செம்மல் மூதூர்
அறிந்த மாக்கமட் டாகுக தில்ல
* * *
மென்தோள் அஞ்ஞை சென்ற வாறே" (அகம்:15)

எனவரும். (192)

கண்டோர் கூற்று

505. ஒண்டொடி மாதர் கிழவன் கிழத்தியொடு
கண்டோர் மொழிதல் கண்ட தென்ப.

(இ-ள்) தலைமகனொடும் தலைமகளோடும் இடைச்சுரத்துக் கண்டோர் மொழிதல் (40) அறியப்பட்டது (எ-று).

'ஒண்டொடி மாதர் கிழவன்' எனவே அவ்விருவர் கூட்டத்துக்கண்ணுமன்றி அவ்விருவரோடும் தனித்துக் கூற்றில்லையென்றவாறு. 'கண்டது' என்ற மிகையான் இடைச்சுரத்துக் கண்டோர் செவிலிக்குரைப்பனவுங் கொள்க. அவை,

"இளையள் மெல்லியள் மடந்தை
யரிய சேய பெருங்கான் யாறே" (சிற்றெட்டகம்)

எனவும்,

"அணித்தாத் தோன்றுவ தெம்மூர்
மணித்தார் மார்ப சேர்ந்தனை சென்மே"

எனவும் வரும்.

இதனுள், ஒண்டொடி மாதர் கிழவன் எனச் செவ்வனந் தோன்றக் கூறியது தலைமகனையாதலின்,

"வில்லோன் காலன கழலே தொடியோள்
மெல்லடி மேலன சிலம்பே" (குறுந்:7)

என்பது செவிலிக்குக் கண்டோர் கூறியது. (193)

இடைச்சுரத்துத் தலைவன் கூறுமாறுணர்த்தல்

506. இடைச்சுர மருங்கிற் கிழவன் கிழத்தியொடு
வழக்கிய லாணையிற் கிளத்தற்கு முரியன்.

இதுவும் கூற்றுவிகற்பமே கூறுகின்றது

(இ-ள்) இடைச்சுரத்து உடன்போகிய கிழத்தியொடும் கிழவன் நீதிநூல்வகையாற் கிளத்தற்கு முரியன் (எ-று)

நீதிநூல் வகையாற் கிளத்தலென்பது கிழத்தி தன் தமர் இடைச்சுரத்துக் கண்ணுறின் அவர் கேட்பத் தலைவிக்குச் சொல்லுவானாய் வழக்கியல் கூறுதலு முரியனென்பது. 'வழக்கிய லாணை' யென்றதனான் நீதநூல் விதிபிறழக்கூறின் அஃது இராக்கதம்போன்று காட்டுமென்பது. உம்மையாற் கிழத்தியோடு வழக்கியலாணையானன்றி மருட்டிக்கூறவும் பெறுமென்பது.

"அழிவிலர் முயலு மார்வ மாக்கள்
வழிபடு தெய்வங் கண்கண் டாஅங்கு
அலமரல் வருத்தந் தீர யாழநின்
னலமென் பணைத்தோ ளெய்தின மாகலிற்
பொரிப்பூம் புன்கி னெழில்தகை யொண்முறி
சுணங்கணி வனமுலை யணங்குகொளத் திமிரி
நிழல்காண் டோறு நெடிய வைகி
மணல்காண் டோறும் வண்ட றைஇ
வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே
மானனை கொழுதி மகிழ்குயி லாலு

நறுந்தண் பொழில கானங்
குறும்பல் லூரயாஞ் செல்லு மாறே" (நற்றிணை:9)

என்பதனுள், 'வருந்தா தேகுமதி' யெனவே, 'வழிபடு தெய்வங் கட்கண்டால்' விடுவார் இல்லாததுபோல நின்னை விடுதல் எனக்கு அறனன்றெனக்கூறி மெல்லெனச் செல்கவென மருட்டிக் கூறியவாறு காண்க (194)

கண்டோர் தலைவன் தலைவியொடு கூறுமாறுணர்த்தல்

507. ஒழிந்தோர் கிளவி கிழவன் கிழத்தியொடு
மொழிந்தாங் குரியர் முன்னத்தி னெடுத்தே

இதுவுங் கண்டோர் கூற்று

(இ ள்.) மேலைச்சூத்திரத்துக் கூறிய தலைமகனையுந் தலைமகளையும் ஒழித்து ஒழிந்தோரெனப்படுவார் கண்டோரெனப் படுப. அவர் கூற்றுங் கிழவன் கிழத்தியொடு மொழிந்தாங்கு வழக்கியலானை (:06)யிற் கிளத்தற்கும் உரியர் என்பான் முன்னத்தினெடுத்துக் கூறுப என்றுனென்பது.

முன்னத்தினெடுத்தலென்பது அதிகாரத்தான் அறநாற்குத் தக ஒத்திஞனெடுத்துரைப்பவென்றவாறு; அவை,

"பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினு மலைக்கவைதா மென்செய்யு
நினையுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே' (கலி:9)

என்றாற் போல்வன.

இவ்வாறு வழக்கியலானையாற் கிளவாது (40) வாளாதே அவரைக் கண்டனமெனவும் அவரின்னுழிப் புகுவரெனவுஞ் சொல்லுவன,

"கண்டோர் மொழிதல் கண்டதென்ப"
(தொல்-செய்:193)

என்புழிக் கூறினும். (195)

கேட்போர்

508. மனையோள் கிளவியுங் கிழவன் கிளவியு
நினையுங் காலைக் கேட்குந ரவரே.

இது, கேட்போரென்னும் உறுப்புணர்த்துகின்றது.

(இ-ள்.) முன்னர்க் கூற்றிற்குரியரெனப்பட்ட பன்னிருவருட் கேட்டற்குரியார் தலைமகனுந் தலைமகளும் ஒழித்து ஒழிந்த பதின்மரும் (எ-று.)

அவர் கேட்பனவும் அவ்விருவர் கிளவியுமேயெனவுந் தத்தங்கிளவி கேளாரெனவுங் கூறியவாறு. 'மனையோள் கிளவியும் கிழவன் கிளவியு மென்பதனை மேற்போயின கூற்றிற்குங் கூட்டியுரைக்க. உரைக்கவே கூறுவனவுங் கேட்பனவு மெல்லாம் அவ்விருவர் கிளவியுமேயெனவுந் தத்தங்கிளவி கூறவுங் கேட்கவும் பெறாரெனவுங் கூறியவாறாயிற்று. இங்ஙனம் விலக்கப்பட்டனவற்றுள் வேறுபட வருவனவும் மேற்கூறுகின்றும். மற்றுக் கூற்றுக்கு உரியரெனப்படுவார், அவ்வயின் தலைவியுந் தலைவனுங் கூறக் கேளாரோவெனின், அவை தங் கிளவியாகலின் தாங்கேட்டல் விதந்தோத வேண்டுவதன் றென்பது.

'நினையுங்காலை' யென்றதனால் தலைமகள் சொல்லக் கேட்போருந் தலைமகன் சொலலக் கேட்போருந் தலைவனுந் தலைவியுந் தம்முட் கேட்டனவற்றுக்குரியனவும் ஆராய்ந்து கொள்ளப் படும் மேற்கூறிய வகையானென்பது; எனவே, தலைமகன் கூறப் பரத்தை கேட்டலுந் தலைமகள் கூறப் பரத்தை கேட்டலும் முதலாயின புலனெறி வழக்கிற் செய்தாதன விலக்கப் பட்டன. ஒழிந்தனவற்றுட் சில வருமாறு:

"விளங்குதொடி முன்கை வளைந்துபுறஞ் சுற்ற
நின்மார்பு அடைதலின் இனிதா கின்றே" (அகம்:58)

என்னுந் தலைமகள் கூற்றுத் தலைமகன் கேட்டது'

'வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே'' (நற்:9)

என்பது, தலைமகன் கூற்று தலைமகள் கேட்டது.

"நின்கேள்,
புதுவது பன்னாளும் பாராட்ட யானும்
இதுவொன் றுடைத்தென எண்ணி (கலி:24)

எனவும்,

"மாலையு முள்ளா ராயிற் காலை
யாங்கா குவங்கொல் பாண" (அகம்:14)

எனவும்,

"உயங்கின் றன்னையென் மெய்யென்று அசைஇ' '(அகம்:17)

எனவும்,

"ஒண்தா ரகலமு முண்ணுமோ பலியே" (குறுந்:362)

எனவும்,

"எல்லீரு மென்செய்தீ ரென்னை நகுதிரோ" (கலி:42)

எனவும் இன்னோரன்னவெல்லாந் தோழியும் பாணனுஞ் செவிலியுங் கண்டோரும் அறிவருங் கேட்பத் தலைமகள் கூற்று வந்தன. பிறவும் அன்ன

"இடிக்குங் கேளிர் நுங்குறை யாக
... ... ... ...
பரந்தன் றிந்நோய் நோன்றுகொளற் கரிதே" (குறுந்:58)

எனவும்,

"எலுவ சிறாஅ ரேம்முறு நண்ப
... ... ...
புதுக்கோள் யானையிற் பிணித்தற்று லெம்மே" (குறுந்:129)

எனவும்,

"ஊர்க பாக வொருவினை கழிய"

எனவும்,

"பேரமர் மழைக்கண் நின் தோழி யுறீஇய
ஆரஞ ரெவ்வங் களையா யோவென"

எனவும்,

"சான்றவிர் வாழியோ சான்றவி ரென்றும்'; (கலி:139)

எனவும் இவை பார்ப்பானும் பாங்கனும் பாகனுந் தோழியுங் கண்டோரும் கேட்போராகத் தலைமகன் கூற்று நிகழ்ந்தன. பிறவும் அன்ன; இனி.

"ஒன்றித் தோன்றுந் தோழி" (தொல்-அகத்:39)

என்றமையின், தோழி கூற்றுந் தலைமகள் (225) கூற்றேயாமென்பது. (196)

பார்ப்பார், அறிவர் கூற்றுணர்த்தல்

509. பார்ப்பா ரறிவ ரென்றிவர் கிழவர் கிளவி
யார்க்கும் வரையார் யாப்பொடு புணர்ந்தே

இதுவுமது.

(இ-ள்) இது மேற்கூறிய பார்ப்பாரும் அறிவரும் கூறிய கூற்றுக் கேட்போரை இன்னாரென்று வரையப்படாது (எ-று)

என்றவழி, 'யார்க்கும்' என்றது அகத்திணையோர்க்கும், புறத்திணையோர்க்கு மென்றவாறு 'யார்க்கும் வரையா' ரென்றதனை, எச்சப்படுத்துச் சிலர்க்கு வரையப்படுமென்பது கொள்க. என்னை? பார்ப்பார் கூற்று, தலைமகனுஞ் செவிலியும்,

நற்றாயுங் கேட்பினல்லது பிறர் கேட்டற்கேலா அறிவர் கூற்று. தலைமகளுந் தோழியுஞ் செவிலியும் நற்றாயுங் கேட்டற்குரியர்

புறத்திணைக்கண்ணும் பொதுவியற்கரந்தையோர்க்கும் (185) பார்ப்பார் கிளவி ஏலாவெனவும் அறிவர் கிளவி ஏற்றாவெனவும். பிறவு மின்னோரன்ன கொள்க.

'யாப்பொடு புணர்ந்து' என்பது அகப்பொருளும் புறப் பொருளுமாகயாக்கப்படுஞ்செய்யுளெல்லாவற்றோடும் பொருந்து மென்றவாறு. இவர் கிளவி வரையப்படாதெனவே அவர் வாயிலாகிய வழித் தலைமகள் வாயின் மறுத்தலிலளென்பதூஉம் புறத்திணைத் தலைவர்க்கும் அவ்வாறே வழிநிற்றல் வேண்டு மென்பதூஉங் கூறியவாறாயிற்று; என்னை? அறிவரெனப்படு வார் மூன்றுகாலமுந் தோன்ற நன்குணர்ந்தோரும் புலனன் குணர்ந்த புலமையோரு (647) மாகலானும், இனிப் பார்ப்பாரும் அவ்வாறே சிறப்புடையராகலானும், அவர்வழி நிற்றல் அவர்க்குக் கடனாகலானுமென்பது. (197)

பரத்தையும் வாயில்களும் தலைவி கேட்பக் கிளக்க வேண்டுமெனல்.

510 பரத்தை வாயி லெனவிரு[1] கூற்றுங்
கிழத்தியைச் சுட்டாக் கிளப்புப்பய[2] னிலவே.

இது, பயனில் கூற்றுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) பரத்தையும் வாயில்களுமென்னும் இரண்டு வேறுபாட்டின்கண்ணும் எழுந்த கிளவி கிழத்தி கேட்பாளாகக் கருதிச் சொல்லாக்காற் பயனில (எ-று).

கிழத்தியைச் சுட்டுதலெனவே பாங்காயினார் கேட்பச் சொல்லினும் அமையுமென்பதாயிற்று.

"செறிதொடி தெளிர்ப்ப வீசிச் சிறிதவ
ணுலமந்து வருகஞ் சென்மோ தோழி" (அகம்: 106)

என்றக்கால் தலைவிக்குப் பாங்காயினார் கேட்பக்கூறல் வேண்டுமென்பது. வாயில்களுந் தலைமகளை ஊடல் காப்ப

---

1. வீற்றும் எனப்பாடங்கொள்வர் நச்சரும், இளம்பூரண ரும்.

2. இளம்பூரணர் பாடமும் இதுவே. "பயமிலவே" எனப் பாடங்கொள்வர் நச்சர்.

அல்லது சொல்லாராகலான் தலைமகள் கேட்பாளாகச் சொல்ல வேண்டுமென்பது. 'சுட்டாக் கிளப்புப் பயனில' வென்றதனான் வாயில்கள் கூறுவனவுங் கிழத்திக்குப் பாங்காயின தோழி கேட்பச் சொல்லினும் அமையும். அவற்றுக்குச் செய்யுள்.

"ஒருயிர் மாத ராகலி னிவளுந்
தேரா துடன்றனள் மன்னே"

என்பது கிழத்தி கேட்ப வாயில்கள் கூறியது! தோழி கேட்பச் சொல்லியதூஉமாம். (198)

வாயில்கள் தம்முள் உரையாடவும் பெறுவரெனல்.

**511 வாயி லுசாவே [1]தம்முளு முரிய.**

இதுவுமது.

(இ-ள்.) மேனின்ற அதிகாரத்தால் தலைமகனைச் சுட்டி ஒருவர்க்குரைப்பார்போல வாயில்கள் தம்முட் கூறவும் பெறும், அவையுந் தலைமகள் கேட்பன (எ-று).

அதற்குச் செய்யுள்:

"தண்ணந் துறைவன் கொடுமை
நம்முள் நாணிக் கரப்பா டும்மே" (குறுந்-9)

என்பது, பாடினி பாணர்க்குரைத்தது. 'தம்முளும்' உம்மை எதிர்மறை யாகலான், கேட்குநன் அவளெனப்பட்டவாறன்றித் தம்முள் தாங் கேட்டல் சிறுபான்மை யெனக்கொள்க. (199)

சொல்லுந போலவும் கேட்குந போலவும் கூறற்குரியன

**512 ஞாயிறு திங்க ளறிவே நாணே
கடலே கானல் விலங்கே மரனே
புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே
யவையல பிறவு [2]நுவலிய நெறியாற்
சொல்லுந போலவுங் கேட்குந போலவுஞ்
சொல்லியாங் கமையு மென்மனார் புலவர்.**

இது, கேளாதன சில பொருள், கேட்பனவாகப் பொருளியலுள் (196) வழுவமைக்கப்பட்டனவற்றை இலக்கணவகையாற் கூறுவனவும் கேட்குநவும் ஆகற்கண்ணும் ஆராய்கின்றனென்பது.

---

1. நச்சர் பாடமும் இதுவே. "தம்முளுரிய" எனப்பாடங் கொள்வர் இளம்பூரணர்.

2. நச்சர் பாடமும் இதுவே. "நுதலிய" எனப்பாடங் கொள்வர் இளம்பூரணர்.

(இ-ள்.) ஞாயிறுந் திங்களும் அறிவும் நாணுங் கடலுங் கானலும் விலங்கும் மரனும் பொழுதும் புள்ளும் நெஞ்சும் இன்னோரன்ன பிறவும் மேற் பொருளியலுள்,

"செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்கியும்"
(தொல்-பொரு:2)

என்று பொதுவகையாற் கூறியவற்றுள் அவைதாஞ் சொல்லுவனபோலவுங் கேட்பன போலவுஞ் சொல்ல அமையும் (எ-று).

ஈண்டுக் கூற்றும் உடன் கூறினன் மேலிவற்றை வரையறுத்துக் கூற்றிற்கு உரியவென்றிலனாகலின்- புலம்புறு பொழுதென்பது மாலையும் யாமமும் எற்பாடும் காரும் கூதிரும் பனியும் இளவேனிலும் போல்வன. 'பிறவு' மென்றதனால் புல் புதல் முதலியன கொள்க. அவற்றுட் சிலவருமாறு:

"கதிர்பகா ஞாயிறே கல்சேர்தி யாயி
னவரை நினைத்து நிறுத்தென்கை நீட்டித்
தருகுவை யாயின் தவிருமென் னெஞ்சத்
துயிர்திரியா மாட்டிய தீ" (கலி:142)

என்றாற் போல்வனகண்டுகொள்க. (200)

களன் என்பது

**513. ஒருநெறிப் பட்டாங் கோரியன் முடியுங்**
**கரும நிகழ்ச்சி யிடமென மொழிப**

இது, களனெனப்பட்ட உறுப்புணர்த்துகின்றது.

(இ-ள்) பலவும் ஒருவழிப்பட்டு ஓரிலக்கணத்தான் முடியுங் கருமநிகழ்ச்சியை இடமென்று கூறுப (எ-று)

இடமெனினுங் களமெனினும் ஒக்கும். ஒரு செய்யுட் கேட்டால் இஃது இன்னவிடத்து நிகழ்ந்ததென்று அறிதற் கேதுவாகியதோர் உறுப்பினை இடமென்றானென்பது. ஒரு நெறிப்படுதலென்பது, ஒருவழிப் பலவுந் தொகுதல்; ஓரியலென்பது அவற்றுக்கெல்லாம் இலக்கணமொன்றாதல்: அஃதாவது, காட்சியும் ஐயமுந் துணிவும் புணர்ச்சியும் நயப்பும் பிரிவச்சமும் வன்புறையுமென்று இன்னோரன்ன எல்லாம் ஒருநெறிப்பட்டு இயற்கைப்புணர்ச்சி யென்னும் ஓரிலக்கணத்தான் முடியுமென்பது. கருமநிகழ்ச்சி யென்பது காமப்புணர்ச்சி

யென்னுஞ் செயப்படு பொருணிகழ்ச்சி. அஃது இடமெனப் பட்டது. இது வினைசெய்யிடம். நிலமாயின முன்னர்த் திணை யெனப்பட்டன. காலம் முன்னர்ச் சொல்லுதும்.

"எலுவ சிறாஅ ரேம்முறு நண்ப" (குறுந்: 129)

என்னும் பாட்டும்,

"கேளிர் வாழியோ கேளிர் நாளுமென்
நெஞ்சுபிணிக் கொண்ட அஞ்சில் லோதிப்
பெருந்தோள் குறுமகள் சிறுமெல் லாக
மொருநாள் புணரப் புணரி
னரைநாள் வாழ்க்கையும் வேண்டலென் யானே"(குறுந்:280)

என்னும் பாட்டும் பாங்கற்கூட்டமே இடனாக ஒருவழிப்பட்டன என்னை? நின்வேறுபாடு எற்றினானாயிற்றென்று வினவிய பாங் கற்கு இதனினானாயிற்றென்று உரைத்ததூஉம் அதற்குப் பாங் கன் கழறினானை எதிர்மறுத்ததூஉமென இரண்டும் பாங்கற் கூட்டத்துப் பட்டு ஓரியலான் முடிந்தன. அவை மேற்கூறிய வகையானே கண்டுகொள்க. (201)

காலவகை

514. இறப்பே நிகழ்வே யெதிர தென்னுந்
திறத்தியன் மருங்கிற் றெரிந்தன [1]ருள்ளப்
பொருணிகழ் வுரைப்பது கால மாகும்.

இது, காலமுணர்த்துகின்றது.

(இ-ள்.) மூன்று காலத்தினும் நிகழ்கின்ற நிகழ்ச்சி அச்செய்யுளுட்டோன்றச் செய்யிற் காலமென்னும் உறுப் பாம் (எ-று).

பொருணிகழ்ச்சியைக் காலமென்றதென்னை? காலமென வேறு பொருள் இல்லதுபோலவெனின், அஃது ஈண்டாராய்ச்சி யின்று: நியாயநூலாராய்ச்சி யென்க.

"வில்லோன் காலன கழலே தொடியோள்

... ... ... ...

வேய்பயி லழுவம் முன்னி யோரே" (குறுந்:7)

1. "உணரப்" எனப்பாடங்கொள்வர் நச்சரும், இளம்பூரணரும்.

என்னும் பாட்டினுள் வில்லோனுந் தொடியோளும் பொருளெனப்படும்;

"வேய்பயி லழுவம் முன்னி யோரே"

என்பது அப்பொருணிகழ்ச்சியான் இறந்தகாலமெனப்படும். அப்பாட்டிற்குச் சிறந்தார் அவராகலின் அவரே பொருளாயினு ரென்பது.

"மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே
அரும்பிய சுணங்கி னம்பகட் டிளமுலைப்
பெருந்தோள் நுணுகிய நுசுப்பிற்
கல்கெழு கானவர் நல்குறு மகளே" (குறுந்:71)

என்பது, நிகழ்காலம்;

"பகலும் பெறுவையிவள் தடமென் றோளே" (கலி:9)

என்பது எதிர்காலம்.

புறத்திற்கும் இவ்வாறே இன்றியமையாதென்பது. பெரும்பொழுது சிறுபொழுதென்பன ஈண்டுத் திணையெனப்பட்டடங்கின; என்னை? முதலும் கருவும் உரிப்பொருளுங் கூட்டித் திணையாகலின். (202)

பயன்

515. இதுநனி பயக்கு[1]மிதனு னென்னுந்
[2]தொகை நிலைக் கிளவி பயனெனப்படுமே.

இது, முறையானே பயனென்னும் உறுப்புணர்த்துகின்றது

(இ-ள்.) இது மிகவும் பயக்கும் இதனுனெனத் தொகுத்துச் சொல்லப்படும் பொருள் பயனென்னும் உறுப்பாம் (எ-று).

"மாறுக் காதலர் மலைமறந் தனரே
யாறுக் கட்பனி வரலா னாவே
வேறு மென்தோள் வளைநெகி ழும்மே"
கூறுய்தோழியான் வாழு மாறே"

என்னும் பாட்டு, தோழியைத் தூதுவிடுவாளாதற் பயன்பட

1. "இதன்மாறென்னும்" எனப்பாடங்கொள்வர் நச்சரும் இளம்பூரணரும்.

2. நச்சர் பாடமும் இதுவே. "தொகுநிலை" எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

வந்தது. இவ்வாறெல்லாப் பாட்டும் பயனுறுப்பாகவன்றி வாரா வென்க. இவை புறத்திற்கும் ஒக்கும். [203]

மெய்ப்பாடு

516. உய்த்துணர் வின்றித் தலைவரு [1]பொருளான்
மெய்ப்பட முடிப்பது மெய்ப்பா டாகும்

இது, மெய்ப்பாட்டுறுப்புணர்த்துகின்றது.

(இ-ள்.) உய்த்துணர்ச்சியின்றிச் செய்யுளிடத்துச் சொல்லப்படும் பொருள் தானே வெளிப்பட்டாங்குக் கண்ணீரரும்பல் மெய்ம்மயிர் சிலிர்த்தல் முதலாகிய சத்துவம் படுமாற்றான் வெளிப்படச் செய்வது மெய்ப்பாடென்னும் உறுப்பாம் (எ-று.)

கவிப்பொருளுணர்ந்தால் அதனுளே சொல்லப்படும் பொருள் உய்த்து வேறு கண்டாங்கு அறிதலை மெய்ப்பாடென்றான், அது தேவருலகங் கூறினும் அதனைக் கண்டாங்கறியச்செய்தல் செய்யுளுறுப்பாம் என்றவாறு. அவை,

"மையற விளங்கிய மணிமரு ளவ்வாய்தன்
மெய்பெறா மழலையில் விளங்குபூ ணனைத்தர" (கலி:81)

என்றாற்போல வருவன. 'தலைவரு பொருளா' னெனவே நோக்குறுப்பால், உணர்ந்த பொருட் பிழம்பினைக் காட்டுவது மெய்ப்பாடென்பது இதன் கருத்து. இக்கருத்தினாற் 'கவி கண்காட்டும்' எனவுஞ் சொல்லுப. [204]

அதன் இயல்பு

516 எண்வகை யியனெறி பிழையா தாகி
முன்னுறக் கிளந்த முடிவின தது வே.

இஃது, எய்திய திகந்துபடாமைக் காத்தது.

(இ-ள்) இதுவும் மேற்கூறப்பட்ட மெய்ப்பாடே; பிறிதிலக்கணத்தனவென்று கொள்ளற்க (எ-று).

எனவே,

"நகையே யழுகை யிளிவரன் மருட்கை
யச்சம் பெருமிதம் வெகுளி யுவகை" (தொல்-மெய்ப்:3)

1. நச்சர் பாடமும் இதுவே. "பொருண்மையின்" எனப்பாடங் கொள்வர் இளம்பூரணர்.

என அவை நந்நான்காமெனவும் மெய்ப்பாட்டியலுட் கூறியவா றெல்லாம் பிறவாற்றான் வேறுபடுவனவுங் கொள்ளப்படுமென்ற வாறு. [205]

எச்சம்

518 சொல்லொடுங் குறிப்பொடு முடிவுகொளியற்கை
புல்லிய கிளவி யெச்ச மாகும்

இஃது, எச்சங் கூறுகின்றது.

(இ-ள்.) கூற்றினானுங் குறிப்பினானும் முடிக்கப்படும் இலக்கணத்தோடு பொருந்திய கிளவி, எச்சமென்னும் உறுப்பாம் (எ-று).

'முடிவுகொள் இயற்கை' யெனவே, செய்யுளின்கண்ண தன்றிப் பின்கொணர்ந்து முடிக்கப்படுமென்பது பெற்றாம்.

(உ-ம்) "செங்களம் படக்கொன் றவுணர்த் தேய்த்த
செங்கோ லம்பின் செங்கோட் டியானைக்
கழல்தொடிச் சேஎய் குன்றம்
குருதிப் பூவின் குலைக்காந் தட்டே" (குறுந்: 1)

எனச் செய்யுண் முடிந்தவழியும், 'இவற்றான் பயங் குறையுடையம் அல்லேமென்று தலைவற்குச் சொன்னாளேல் அது கூற்றெச்சமாம். என்னை? அவ்வாறு கூறவுஞ் சிதைந்ததின்மையின். தலைமகட்குச் சொன்னாளேல் அது குறிப்பெச்சம்; என்னை? அது காண்பாயாகிற் காணெனத் தலைமகளை இடத்துய்த்து நீக்கிய குறிப்பினளாகி அது தான் கூறுளாகலி' னென்பது. (206)

முன்னம்

519. இவ்விடத் திம்மொழி யிவரிவர்க் குரியவென்
றவ்விடத் தவரவர்க் [1]குரைப்பது முன்னம்.

இது, முன்னமென்று கூறப்பட்ட உறுப்புக் கூறுகின்றது.

(இ-ள்) யாதோரிடத்தானும் யாதானுமொரு மொழி தோன்றியக்கால் இம்மொழி சொல்லுதற்குரியாருங் கேட்டற்

---

1. இளம்பூரணர் பாடமும் இதுவே. "உரைப்பதை" எனப் பாடங் கொள்வர் நச்சினார்க்கினியர்.

குரியாரும் இன்னாரென்று அறியுமாற்றான் அங்ஙனம் அறிதற்கு ஓரிடம் நாட்டி அவ்விடத்துக் கூறுவார்க்குங் கேட்பார்க்கு மேற்ற செய்யுட்கு ஈடாகச் சொல்லுவது முன்னம் (எ று).

'இவரிவர்க் குரியவென்று' அறிவான், செய்யுட் கேட்டா னெனவும், அவ்விடத்தவரவர்க் குரைக்கவென்றான் ஆசிரிய னெனவுங் கொள்க. என்றென்பது எனவென்பதுபோலச் சொல்லினெச்சமாதலும் வினையெச்சமாதலும் உடைமையின் இஃது,

"எனவெ னெச்சம் வினையொடு முடிமே"
(தொல்–சொல்-எச்-42)

என்பதொரு வினையெஞ்சி நிற்கும். அவ்வினைதான் எச்சமாக லான் உரைப்பதென்னும் வினைகொண்டு முடியுமென்பது.

"யாரிவ னெங்கூந்தற் கொள்வா னிதுவுமோ
ரூராண்மைக் கொத்த படிறுடைத்து" (கலி:89)

என்றக்கால் இம்மாற்றஞ் சொல்லுகின்றாள் தலைவியெனவுஞ் சொல்லப்பட்டான் தலைமகனெனவும் முன்னத்தான் அறியப் படுத்தலின் இது முன்னவுறுப்பாயிற்று. ஒழிந்தனவற்றிற்கும் இஃதொக்கும். இவையெல்லாம், அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவாகக் கூறுகின்றானென்பது. (207)

பொருள் வகை

**520. இன்பமு மிடும்பையும் புணர்வும் பிரிவும்**
**ஒழுக்கமு மென்றிவை யிழுக்கு நெறியின்றி**
**யிதுவா கித்திணைக் குரிப்பொரு[1] ளன்னாது**
**பொதுவாய் நிற்றல் பொருள்வகை யென்ப.**

இது, பொருள்வகை கூறுகின்றது.

(இ-ள்.) இன்பமுந் துன்பமும் புணர்தலும் பிரிதலும் ஒழுக்கமுமெனப்பட்ட இவை இழுக்காதவாற்றான் இத்திணைக்கு இது பொருளென்று ஆசிரியனோதிய உரிப்பொருளன்றி அவற் றுக்கெல்லாம் பொதுவாகப் புலவனாற் செய்யப்படுவது பொருட் கூறெனப்படும் (எ-று).

1. "பொருள் என்னாது" எனப் பாடங்கொள்வர் நச்சரும், இளம்பூரணரும்.

'வகை'யென்றதனாற் புலவன்றான் வகைந்ததே பொருளென்று கொள்க. அஃதன்றிச் செய்யுள் செய்தலாகாதென்பது இதன் கருத்து. அவை,

"கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
நாணொடு மிடைந்த கற்பின் வாள்நுதல்
அந்தீங் கிளவிக் குறுமகள்
மென்தோள் பெறல்நசைஇச் சென்றவென் னெஞ்சே"

என்றாற்போலச் செய்யுள் செய்தவன் தானே வகுப்பன வெல்லாங் கோடல்; இது பாலைப்பாட்டினுள் வந்ததாயினும் முல்லை முதலாயவற்றுக்கும் பொதுவாமென்பது. பொதுமை என்பது எல்லா வுரிப்பொருட்கும் ஏற்கப் பலவேறு வகையாற் செய்தல். (208)

துறை

**521. [2]அவ்வம் மாக்களும் விலங்கு மன்றிப்**
**பிறவவண் வரினுந் திறவதி னாடித்**
**தத்த மியலன் மரபொடு முடிவின்**
**அத்திறந் தானே துறையெனப் படுமே.**

இது, துறையென்னும் உறுப்புணர்த்துகின்றது.

(இ-ள்) ஐவகை நிலத்திற்கும் உரியனவெனப்படு பல்வேறு வகைப்பட்ட மக்களும் மாவும் புள்ளும் ஓதிவந்தவாறன்றிப் படைத்துச் செயினும் அவ்வத்திணைக்கேற்ற இலக்கணமும் வரலாற்று முறைமையும் பிறழாமைச் செய்யின் அது மார்க்கமெனப்படும் (எ-று).

மார்க்கமெனினும் துறையெனினும் ஒக்கும்.

"ஊர்க்கால் நிவந்த பொதும்பருள் நீர்க்கால்" (கலி:56)

என்னுங் கலியினுள்,

---

2. "அவ்வ மாக்களும் என இளம்பூரணரும்" நச்சரும் பாடங் கொள்வர்.

3. "இயலான்" எனப்பாடங் கொள்வர் இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும்.

"கொழுநிழன் ஞாழன் முதிரிணர் கொண்டு
கழும முடித்துக் கண்கூடு கூழை"

என, நெய்தற்றலைமகள்போலக் கூறி அவளை மருதநிலத்துக் கண்டான்போல,

"ஊர்க்கால் நிவந்த பொதும்பருள்"

எனவுஞ் சொல்லிப் பின் குறிஞ்சிப் பொருளாகிய புணர்தலுரிப் பொருளான் முடித்தான்; இவ்வாறு மயங்கச்செய்யினுங் குறிஞ்சித் துறைப்பாற்படச் செய்தமையின் அத்துறையுறுப்பான் வந்ததென்பது. இதுவும் மேலைப்பொருள்வகைபோலப் புலவராற் செய்துகொள்ளப்படுவதாகலான் அதற்குப் பின் வைத்தானென்பது. மற்று,

"எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்" (தொல்-அகத்: 19)

என்றதனுன், இது முடியாதோவெனின், அது கருப்பொருளை மயங்குதற்குக் கூறினுன், இது மக்களேயன்றித் தலைவனுந் தலைவியும் மயங்குமாறும் நான்கு திணையும் ஒன்றுென்றனோடு மயங்குமாறுங் கூறி அது புலவராற் செய்துகொள்ளுவதோர் உறுப்பெனவும் ஓதிவந்த இலக்கணத்ததன்றுயினும் அது பெறுமெனவும் கூறினுனென்பது. [209]

மாட்டு

522. அகன்று பொருள் கிடப்பினும் அணுகியநிலையினும்
[1]இயற்பொருள் முடியத் தந்தன [2]ருணர்த்தன்
மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்.

இது, மாட்டென்னும் உறுப்புணர்த்துகின்றது.

(இ-ள்.) பொருள் கொள்ளுங்கால் அகன்று பொருள் கிடப்பச் செய்யினும் அணுகிக் கிடப்பச் செய்யினும் இருவகையானுஞ் சென்று பொருள்முடியுமாற்றுற் கொணர்ந்துரைப்பச் செய்தலை மாட்டென்னும் உறுப்பென்று சொல்லுவர் செய்யுள் வழக்கின் (எ-று)

---

1. "இயன்று பொருள்" எனப்பாடங் கொள்வர் இளம்பூரணர் நச்சினுர்க்கினியர்.
2. இளம்பூரணர் பாடமும் இதுவே "உரைத்தல்" எனப்பாடங் கொள்வர் நச்சினுர்க்கினியர்.

இதுவும் நால்வகைப் பொருள்கோளன்றிப் புலவரது வேறு செய்கை; அது,

"முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்
வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய
வாரேன் வாழிய நெஞ்சே" (பத்துப்:பட்டின: 218.20)

என நின்றது, பின்னர்,

"வேலினும் வெய்ய கானமவன்
கோலினுந் தண்ணிய தடமென்தோளே"
(பத்துப்:பட்டின:.00.20)

எனச் சேய்த்தாகச் சென்று பொருள் கோடலின் அஃது அகன்று பொருள் கிடப்பினும் இயன்று பொருண்முடியத் தந்து உரைத்ததாம்,

"திறந்திடுமின் தீயவை பிற்காண்டு மாதர்
இறந்து படிற்பெரிதா மேதம்—உறந்தையர்கோன்
தண்ணார மார்பில் தமிழர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு" (முத்தொள்ளாயிரம்:42)

என்பது, அணுகிய நிலையெனப்படும்; பிறவும் அன்ன; மாட்டுதலென்பது கொண்டுவந்து கொளுத்தல். [2.0]

மாட்டும் எச்சமும் இன்றியும் செய்யுள் அமையுமெனல்

523. மாட்டு மெச்சமு நாட்ட லின்றி
உடனிலை மொழியினுந் [1]தொடர்நிலை பெறுமே.

இது, மேற்கூறியவற்றுள் ஒருசாரனவற்றுக்குப் புறனடை

(இ-ள்.) மேற்கூறிய எச்சமும் மாட்டும் இன்றியும் அச்செய்யுளுட் கிடந்தவாறே அமையச் செய்யவும்பெறுஞ் செய்யுள் (எ-று).

எச்சமும் மாட்டும் என்னாது மாட்டும் முற்கூறியதென்னையெனின் எச்சம் முதலாகிய ஐந்து உறுப்பும் இவ்விதிபெறுமென்று கோடற்கு எதிர் சென்று தழீஇயினானென்பது.

---

1. நச்சர் பாடமும் இதுவே. "தொடைநிலை" எனப்பாடங் கொள்வர் இளம்பூரணர்.

(உ-ம்) "வாரா ராயினும் வரினு மவர்நமக்
கியாரா கியரோ தோழி நீர
நீலப் பைம்போ துளரிப் புதல
பீலி யொண்பொறிக் கருவிளை யாட்டி
நுண்முள் ஈங்கைச் செவ்வரும்பு ஊழ்த்த
வண்ணத் துய்ம்மல ருதிரத் தண்ணென்
றின்னு தெறிதரும் வாடையொடு
என்னா யினள்கொ லென்னு தோரே"

என்பது, எச்சமின்றி வந்தது.

"தாமரை புரையுங் காமர் சேவடி"(குறுந்; கடவுள் வாழ்த்து) என்பது, முன்னமின்றி வந்தது.

"மருந்தெனின் மருந்தே" (குறுந்:71)

என்பது, பொருளின்றி வந்தது.

"ஈயற்புற்றத் தீர்ம்புறத் திறுத்த" (அகம்:8)

என்பது. துறைவகையின்றி வந்தது.

"யானே யீண்டையேனே" (குறுந்:54)

என்பது, மாட்டின்றி வந்தது. இடைநின்ற மூன்றினை இலேகினுற்கொண்டு இரண்டினை எடுத்தோதினன். இவை இரண்டும் அவற்றது துணை இன்றியமையாச் சிறப்பினவல்ல என்றற் கென்பது. (211)

வண்ணத்தின் வகை

524. வண்ணந் [1]தாமே நாலைந் தென்ப.

இது, முறையானே ஈற்றுநின்ற வண்ணம் இத்துணைப்பகுதித் தென்கின்றது.

(இ-ள்) வண்ணம் இருபது வகைப்படும் (எ-று)

வண்ணமென்பது, சந்தவேறுபாடு. நூறும் பலவுமாகி வேறுபடினும் அவை ஈண்டடங்குமென்பதூஉம், அவ்வேறுபாடெல்லாம் சந்த வேற்றுமை செய்யாவென்பதூஉங் கூறியவாறு அது நுண்ணுணர்வுடையார்க்குப் புலனாமென்பது. (212)

1. நச்சர் பாடமும் இதுவே. "தாமே" எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

அவையாவன

525. அவைதாம்
பாஅ வண்ணந் தாஅ வண்ணம்
வல்லிசை வண்ண மெல்லிசை வண்ண
மியைபு வண்ண மளபெடை வண்ண
நெடுஞ்சீர் வண்ணங் குறுஞ்சீர் வண்ணஞ்
சித்திர வண்ண நலிபு வண்ண
மகப்பாட்டு வண்ணம் புறப்பாட்டு வண்ண
மொழுகு வண்ண மொரூஉ வண்ண
மெண்ணு வண்ண மகைப்பு வண்ணந்
தூங்கல் வண்ண மேந்தல் வண்ணம்
உருட்டு வண்ண முடுகு வண்ணமென்
[1]றாங்கன மொழிப வறிந்திசி னோரே.

இது, மேற்கூறப்பட்ட வண்ணங்களது பெயர் வேறுபாடு கூறுகின்றது.

(இ-ள்) மேற்சொல்லிய நாலைந்து வண்ணமும் இவ்விருபது பெயர் வேறுபாட்டினவென்று சொல்லுப அவற்றை உணர்ந்த ஆசிரியர் (எ-று).

இது, முறையாயினவாறென்னையெனின், இது வரலாற்று முறைமையென்றற்கு 'ஆங்ஙனம் மொழிப அறிந்திசினோ'ரென்று னென்பது. அதையாமர்று சொல்லுகின்றான். (213)

பாவண்ணம்

526. அவற்றுள், பாஅ வண்ணஞ்
சொற்சீர்த் தாகி நூற்பாற் பயிலும்.

இது, நிறுத்த முறையானே பாஅவண்ண முணர்த்துதல் நுதலிற்று,

(இ-ள்) பாஅவண்ணமென்பது, நூற்பாவண்ணம் (எ-று). எற்றுக்கு? 'நூற்பாற்பயிலு'மென்றமையின் இது சொற்

1. நச்சர் பாடமும் இதுவே. "ஆங்கென" எனப் பாடங் கொள்வர் இளம்பூரணர்.

சீரடித்தாகி வருமென்பது. இதனுட் 'பயிலு'மெனவே அந்நூற் 'பாவினுளல்லது அகவலுள் இத்துணைப் பயிலாதென்பது; இது,

"வடவேங்கடந் தென்குமரி" (தொல்: பாயிரம்)

எனவும்

"எழுத்தெனப் படுப அகரமுத
னகர விறுவாய் முப்பஃ தென்ப" (தொல்-எழுத்து-நூன்:1)

எனவும்,

"அவற்றுள், அஇஉ,
எஒ என்னு மப்பா லைந்தும்" (தொல்-எழுத்-நூன்:8)

எனவும் பயின்று வரும்.

"சிறியகட் பெறினே" (புறம்:255)

என்பது சொற்சீராகி அகவலுட் பயிலாது வந்தது. சொற்சீரடியென்னுது 'சொற்சீர்' என்றான் அடியோடு தொடராதுஞ் சொற்சீர் வருமாதலினென்பது. அவை,

"நன்றுபெரி தாகும்" (தொல்-சொல்-உரிச்:45)

என்றாற்போல வேறாகி நிற்பன. கலியுள்ளும் பரிபாடலுள்ளுஞ் சொற்சீர்வருமென மேற்கூறினானாகலின் அவற்றுள்ளுஞ்சந்தவேற்றுமைப்பட்டன பாஅ வண்ணமேயா மென்பது. [214]

தாவண்ணம்

527 தாஅ வண்ண
மிடையிட்டு வந்த வெதுகைத் தாகும்.

(இ-ள்.) இடையீடுபடத் தொடுப்பது தாஅவண்ணம் (எ-று).

அவை பொழிப்பும் ஒரூஉவுமாகலின் எதுகையென வரைந்து கூறினானென்பது. அடியிடையிட்டு வருவது தொடை வேற்றுமையாவதல்லது வண்ணவேற்றுமை யாகாதென்பது ஒரு செய்யுளுட் பல அடிவந்தால் அவைஎல்லாம் இடையிட்டுத் தொடுத்தல் வேண்டுமோவெனின், வேண்டா; அவை வந்தவழித் தாஅ வண்ண மெனப்படுமென்பது; எனவே, இவ்வண்ண வகைகளெல்லாஞ் செய்யுண் முழுவதுமே பெறுவனவாகக் கொள்ளக் கிடந்தனவல்ல; இவற்றை உறுப்பென்ற தன்மையாற் கந்திருவ நூலார் வண்ணங் கூறியவாறு போல ஒரு செய்யுளுட் பலவும் வரப்பெறுமென்பதாம். அவை,

"உலக முவப்ப வலனேர்பு திரிதரு" (திருமுரு:1)
எனவும்,
"உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை
(ஐங்குறு-ப: 456)
எனவும் வரும். பிறவும் அன்ன. [215]

வல்லிசை வண்ணம்

**528. வல்லிசை வண்ணம் வல்லெழுத்துப் [1]பயிலும்**

(இ-ள்.) வல்லிசை வண்ணம் வல்லெழுத்துப் பயின்று வரும் (எ-று).

வல்லெழுத்துப் பயின்று வருதலால் அப்பெயர்த்தாயிற்று,
"முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்"
(பத்துப்-பட்டினப்:218)
எனவும்,
"முள்தாள் தாமரைத் துஞ்சி" (பத்துப்-திருமுருகு:73)
எனவும் வரும். பிறவும் அன்ன. [216]

மெல்லிசை வண்ணம்

**529. மெல்லிசை வண்ண மெல்லெழுத்து மிகுமே**

(இ-ள்.) மெல்லெழுத்து மிகுவது மெல்லிசை வண்ணம் (எ-று).

ஒரு செய்யுண் முழுவதும் ஓரினத்தெழுத்தே பயிலச்செய்தால் இன்னாதாதலின் இவை உறுப்பெனப்பட்டு இடையிட்டு வருமென்றுணென்பது. அவ்வாறு செய்யின் அவை மிறைக்கவி யெனப்படும். ஒழிந்த எழுத்திற்கும் இஃதொக்கும்.
"பொன்னி னன்ன புன்னை நுண்தாது" (யா-வி-ப: 352)
என மெல்லெழுத்து பயின்றவாறு. [217]

இயைபு வண்ணம்

**530. இயைபு வண்ண மிடையெழுத்து மிகுமே.**

(இ-ள்.) இடையெழுத்து மிகுவது இயைபு வண்ணம் (எ-று).

"அரவி னதிர வுரீஇய வரகுகதிரின்"

1. நச்சர்பாடமும் இதுவே. "மிகுமே" எனப்பாடங் கொள்வர் இளம்பூரணர்.

என இடையெழுத்து மிக்கு வந்தமையின் இயைபு வண்ணமா யிற்று. மென்மை வன்மைக்கு இடைநிகரவாகிய எழுத்தான் வருதலின் இயைபுவண்ணமென்றார். (218)

அளபெடை வண்ணம்

**531. அளபடை வண்ண மளபெடை பயிலும்.**

(இ-ள்.) இரண்டளபெடையும் பயிலச் செய்வன அள பெடைவண்ணமாம் (எ-று).

"மராஅ மலரொடு விராஅய்ப் பராஅம்' (அகம்:99)

என்பது அளபெடை வண்ணம்.

"கண்ண் டண்ண்ணெனக் கண்டுங் கேட்டும்"

[பத்துப்: மலைபடு:352]

என்பதும் அது. (219)

நெடுஞ்சீர் வண்ணம்

**532. நெடுஞ்சீர் வண்ணம் நெட்டெழுத்துப் பயிலும்**

[இ-ள்] நெட்டெழுத்துப் பயின்றுவருவது நெடுஞ்சீர் வண்ணம் [எ-று].

அது,

"மாவா ராதே மாவா ராதே" [புறம்:273]

என்பது, நெடிதாய் வருவது நெடுஞ்சீரெனப்பட்டது. [220]

**533. குறுஞ்சீர் வண்ணம் குற்றெழுத்துப் பயிலும்.**

(இ-ள்.) குற்றெழுத்துப் பயில்வது குறுஞ்சீர்வண்ணம் (எ-று).

"குரங்குளைப் பொலிந்த கொய்சுவல் புரவி" (அகம்-4 எனவரும். (221)

சித்திரவண்ணம்

**534. சித்திர வண்ணம்**
**நெடியவுங் குறியவு நேர்ந்துடன் [1]வருமே.**

(இ-ள்) சித்திரவண்ணம் நெட்டெழுத்துங் குற்றெழுத் தும் ஒப்ப விராஅய்ச் செய்யப்படுவது (எ-று.)

---

1. இளம்பூரணர் பாடமும் இதுவே. "வரூஉம்" எனப்பாடங் கொள்வர் நச்சர்.

அது,

"சாரல் நாட நீவர லாறே"

என வரும்,

சித்திரவண்ணமென்பது பலவண்ணம்படச் செய்வதாக லின் அப்பெயர்த்தாயிற்று. [222]

நலிபு வண்ணம்

**535. நலிபு வண்ண மாய்தம் பயிலும்**

(இ-ள்.) ஆய்தம் பயின்று வருவது நலிபு வண்ணமாம் (எ-று).

அஃது,

"அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை"

எனவும், (குறள்: 178)

"எஃகான் றஃகா ஞன்க னுருபிற்கு"

[தொல்-எழுத்-புணர்: 21]

எனவும் வரும் நலிபென்பது ஆய்தம். [223]

அகப்பாட்டு வண்ணம்

**536 அகப்பாட்டு வண்ண**
**முடியாத் தன்மையின் முடிந்ததன் மேற்றே.**

(இ-ள்.) அகப்பாட்டு வண்ணமென்பது இறுதியடி இடை யடி போன்று நிற்பது [எ-று].

அவையாவன: முடித்துக் காட்டும் ஈற்றசை ஏகாரத்தா னன்றி, ஒழிந்த உயிரீற்றானும் ஒற்றீற்றானும் வருவன; அவை:—

"தவழ்பவை தாமு மவேற்று ரன்ன" [தொல்-மர; 5]

எனவும்,

"உண்கண் சிவப்ப தெவன்கொ லன்னாய்" [ஐங்குறு: 21]

எனவும்,

"கோடுயர் வெண்மணை லேறி
யோடுகலன் எண்ணுந் துறைவன் தோழி"

எனவும்,

"ஆணமில் பொருளெமக் கமர்ந்தனை யாடி"

[கலி: கடவுள் வாழ்த்து]

எனவும்.

"சென்றீ பெருமநின் தகைக்குநர் யாரோ" [அகம்:46]
எனவும், இவை ஆசிரிய ஈற்றன.

"குளிறு குரலருவிக் குன்றத் திதண்மேற்
களிறு வருவதுகண்டு—வெளிறெனன
லாயினன் பின்னை யணங்கிற் குயிரளித்துப்
போயினன் யாண்டையான் போன்ம்"

என இதனுள் இறுதியடி முடியாத்தன்மையின் முடிந்ததாகலின் அகப்பாட்டு வண்ணமாயிற்று.

"கொடி யுவணத் தவணரோ"

எனக் கலிப்பாவுள் அரோவந்து பின் முடியாத்தன்மையின் முடிந்தது.

ஆ ஈ ஊ ஏ ஐ ஓ என்பனவற்றுள் ஆசிரியம் இறுமெனா வரையறுப்பாருண்மையின் அவ்வச் சொல்லானே அவை முடிந்தனவென்று கொள்வலெனின், — அங்ஙனம் வரையறை யில வென்பது மேற்காட்டிய உதாரணங்களால் அறிந்தாமாக லின் அக்கடா வரையறுப்பார் மேற்றெனவிடுக்க.

புறப்பாட்டு வண்ணம்

537. புறப்பாட்டு வண்ண
முடிந்தது போன்று முடியா தாகும்.

[இ-ள்] புறப்பாட்டு வண்ணமென்பது, இறுதியடிப் புறத்ததாகவுந் தான்முடிந்ததுபோல நிற்றல் [எ-று].

"இன்று லைவகல் வாரா முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பக முழுதுடன் துறந்தே" [புறம்:363]

என்புழி. ஈற்றயலடி 'முன்னிய வினையே' யென முடிந்தது போன்று முடியாதாயிற்று. [225]

ஒழுகு வண்ணம்

538. ஒழுகு வண்ண மோசையி னொழுகும்.

(இ-ள்) முற்கூறிய வகையானன்றி ஒழுகிய லோசையாற் செல்வது ஒழுகுவண்ணம் (எ-று).

ஒழிந்தனவும் ஒழுகுமாயினும் அவை வேறு வேறிலக்கண முடையன என்பது.

"அம்ம வாழி தோழி காதலர்க்
கின்னே பனிக்கு மின்று வாடையொடு
புன்கண் மாலை யன்பின்று நலிய
வுய்யல ளிவள்" (யா. வி. ப. 638)

எனவரும். (226)

ஒரூஉ வண்ணம்

**539. ஒரூஉ வண்ண [1]மொரீஇத் தொடுக்கும்.**

(இ-ள்) யாற்றொழுக்குப்போலச் சொல்லிய பொருள் பிறிதொன்றனோ அவாவாமை அறுத்துச் செய்வது ஒரூஉவண்ணம் [எ-று]

ஒரீஇத்தொடுத்தலென்பது எல்லாத் தொடையும் ஒரீஇச் செந்தொடையால் தொடுத்தலென்பாரும் உளர். செந்தொடையுந் தொடையாகலான் அற்றன்றென்பது; அது,

"யானே யீண்டை யேனே யென்னலனே
யானு நோயொடு கான லஃதே
துறைவன் தம்மூ ரானே
மறையல ராகி மன்றத் தஃதே" [குறுந்:97]

என வரும்.

"சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே" [புறம்:235]

என்பதும் அது.

யாப்புப் பொருள்நோக்கியவாறுபோல இது பொருள்நோக்காது ஓசையே கோடலானும் அடியிறந்து கோடலானும் யாப்பெனப்படாது. (227)

எண்ணு வண்ணம்

**540. எண்ணு வண்ண மெண்ணுப் பயிலும்.**

(இ-ள்) எண்ணுப் பயில்வது எண்ணுவண்ணம் (எ-று)

இஃது, அடியெண்ணுப் பயிறலான் எண்ணுவண்ணமெனக் காரணப்பெயராயிற்று. அவை,

---

1. நச்சர் பாடமும் இதுவே. "ஒரூஉத் தொடை தொடுக்கும்" எனப்பாடங் கொள்வர் இளம்பூரணர்.

"நன்னன் ஏற்றை நறும்பூண் அத்தி
துன்னருங் கடுந்திறல் கங்கன் கட்டி" (அகம்:44)
என்றாற் போல்வன.
"நுதலுந் தோளுந் திதலை யல்குலும்" (அகம்:19)
என்பதும் அது. (228)

அகைப்பு வண்ணம்

## 541. அகைப்பு வண்ண மறுத்தறுத் தொழுகும்.

(இ-ள்) அறுத்தறுத்துப் பயில்வது அகைப்பு வண்ணம் (எ-று)

இது விட்டுவிட்டுச் சேறலின் அகைப்புவண்ணமென்னும் பெயர் பெற்றது.

"வாரா ராயினும் வரினு மவர்க்
கியாரா கியரோ தோழி" (குறுந்:110)

என்புழி, ஒருவழி நெடில் பயின்றும் ஒருவழிக் குறில் பயின்றும் அறுத்தொழுகிய அகைப்புவண்ணமாம். (229)

தூங்கல் வண்ணம்

## 542. தூங்கல் வண்ணம் வஞ்சி பயிலும்.

(இ-ள்) தூங்கல்வண்ணந் தூங்கலோசைத்தாகி வருவது (எ-று)

வஞ்சியென்பது, வஞ்சித்தூக்குப்போல இதுவும் அற்றுச் சேறலுடைத்தென்பது.

அது,
"யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டபின்
தானூட யானுணர்த்தத் தானுணர்ந்தான்"
(முத்தொள்ளாயிரம்:104)

என நின்ற தொடர்நிலைக்கண்ணே அத்தூங்கல் கண்டுகொள்க. இக்கருத்தறியாதார் கலிப்பாவினுள் வஞ்சிப்பாப் பிறக்குமென வும் வஞ்சியுட் கலிப்பாப் பிறக்குமெனவும் மயங்குப. (230)

ஏந்தல் வண்ணம்

## 543. ஏந்தல் வண்ணஞ்
சொல்லிய சொல்லிற் சொல்லியது சிறக்கும்.

[இ-ள்] சொல்லிய சொல்லானே சொல்லப்படும் பொருள் சிறப்பச் செய்வது ஏந்தல் வண்ணம் [எ-று]

ஏந்தலென்பது, மிகுதல்; ஒரு சொல்லே மிக்கு வருதலின் ஏந்தல்வண்ண மென்றுயிற்று. அது,

"வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார்" [நாலடி: 4-9]

என வரும். [231]

உருட்டு வண்ணம்

544. உருட்டு வண்ண மராகந் தொடுக்கும்.

[இ-ள்.] உருட்டிச் சொல்லப்படுவது அராகமாகலின் அராகந் தொடுப்பது உருட்டுவண்ணமாம் [எ-று].

"உருமுரறு கருவிய பெருமழை தலைஇய" [அகம்:158]

எனவும்,

"எரியுரு வுறழ விலவ மலர" [கலி-33]

எனவும் வரும். இது நெகிழாது இருண்டவோசையாகலிற் குறுஞ்சீர் வண்ணமெனப்படாது உருட்டுவண்ணமெனப்படு மென்பது. [232]

முடுகு வண்ணம்

545. [1]முடுகு வண்ணம்
அடியிறந் தோடி யதனோ ரற்றே.

(இ-ள்) முடுகுவண்ணமென்பது, நாற்சீரடியின் மிக்கு ஓரடி அராகத்தோடொக்கும் (எ-று).

அது,

"நெறியறி செறிகுறி புரிதிரிபு அறியா அறிவினை முந்துறீஇத்
தகைமிகு தொகைவகை யறியுஞ் சான்றவ ரினமாக
வேய்புரை மென்தோட் பசலையு மம்பலும்" (கலி:39)

என வரும்.

இவற்றைக் கொச்சகம் அராகமெனவுஞ் சொற்சீரடியும் முடுகியலடியுமெனவும் பரிபாடற்கு வேறுபடுத்தோதினன் இவ் வேறுபாடு நோக்கியென்பது. (233)

---

1. நச்சர் பாடமும் இதுவே. "முடுகுவண்ணமுடிவறியாமல், அடியிறந்தொழுகி அதனோரற்றே" எனப்பாடங்கொள் வர் இளம்பூரணர்.

வண்ணம் இவையல்லதில்லை எனல்

546 வண்ணந் தாமே[1] யிவையென மொழிப.

இது புறனடை.

(இ-ள்.) வண்ணமென்பன சந்தமாதலான் அச்சந்த வேற்றுமை செய்வன இவையல்லதில்லை (எ—று.)

எனவே என்சொல்லப்பட்டதாம்; நான்கு பாவினோடும் இவற்றை வைத்துறழவும் அவைமயங்கிய பொதுப்பா இரண்டினோடும் உறழவும் நூற்றிருபதாகலும், உயிர்மெய் வருக்க மெல்லாவற்றோடும் உறழ்ந்து பெருக்கின் எத்துணையும் பலவாக லும், இனிப் பிறவாற்றாற் சில பெயர்நிறீஇ அவற்றால் உறழ்ந்து பெருக்க வரையறையிலவாகலும் உடையவாயினும் இவ்விரு பது வகையானல்லது சந்தவேற்றுமை விளங்காதென்பது கருத்து (234)

அம்மை

547. [2]வனப்பியல் தானே வகுக்குங் காலைச்
சின்மென் மொழியாற்[3] றாய பனுவலோ
டம்மை [4]தானே யடிநிமிர் பின்றே

இது தொகைச் சூத்திரத்துள்.

"ஆறுதலை யிட்ட வந்நா லைந்தும்" (தொல்—செய்:1)

எனக் கூறு செய்து நிறீஇப், பின்னர் எட்டுறுப்புக் கூறினு னன்றே? இவை அவற்றோடொத்த இலக்கணத்த அன்மையான்; என்னை? அவை ஓரோர செய்யுட்கே ஓதிய உறுப்பாகலானும் இவை பல செய்யுளுந் திரண்டவழி இவ்வெண்வகையும் பற்றித் தொடுக்கப்படுமெனக் கூறப்பட்டதாகலானுமென்பது. இவற்றை வனப்பென்று கூறப்படுமாறென்னை? அச்சூத்திரத்துப் பெற் றிலமாலெனின், வனப்பென்பது, பெரும்பான்மையும் பல

---

1. நச்சர் பாடமும் இதுவே. "அவை" எனப்பாடங் கொள்வர் இளம்பூரணர்.
2. இவ்வடி மற்ற உரையில் இல்லை.
3. "சீர்புனைந்தியாப்பின்" என இளம்பூரணரும், தாயபனு வலின்" என நச்சினார்க்கினியரும் பாடங்கொள்வர்.
4. இளம்பூரணர் பாடமும் இதுவே. தாமே எனப்பாடங் கொள்வர் நச்சினார்க்கினியர்.

உறுப்புந்திரண்டவழிப் பெறுவதோர் அழகாகலின் அவ்வாறு கோடும். அதனாற் பல செய்யுளும் உறுப்பாய்த் திரண்டு பெருகிய தொடர்நிலையதே வனப்பென்னும் பெயர்ப்பகுதி வகையான் ஏற்பதென்பது. அஃதேல், இவ்வெட்டுந் தனிவருஞ் செய்யுட்கண் வந்தால் அழகுசெய்யாவோவெனின், அவை போல் இவை தனிவரும் செய்யுட்குமாகும் என்றற்கன்றே அவ்விருபத்தாறுறுப்போடும் இவற்றை ஓரினப்படுத்து ஓதிய தென்பது. அஃது, இயைபிற்கொப்ப வாராதென்பது முன்னர்ச் (522) சொல்லுதும். இதனானே முன்னையுறுப்புக்கள் தொடர் நிலைச் செய்யுட்கு வருமென்பதூஉங் கொள்க. அல்லாக்கால், மாத்திரை முதலாகிய ஒரோவுறுப்பான் அழகு பிறவாதாகிய செல்லும் இவற்றையே வனப்பென்று ஒரோ செய்யுட்கே கொள்ளினென்பது. இங்ஙனம் இருபத்தாறும் எட்டுமென வகுப்பவே அவை அகமென்பன, தனிநிலைச் செய்யுட்கு முற் கூறப்படா, இத்தொடர்நிலைச் செய்யுட்கு முழ்கூறுமென்பது; இனி, இவற்றைச் சூத்திரத்தான் வனப்பென்ஹறுங் குறியெய்து விக்கவேண்டுவாளுகச் சூத்திரத்தை,

"வனப்பியல் தானே வகுக்குங் காலைச்
சின்மென் மொழியால் தாய பனுவலின்"

என்பது பாடமாக உரைத்தானென்க; அதுவும் அறிந்தவாறே கொள்க.

(இ-ள்.) சிலவாய மெல்லியவாய சொல்லோடும் இடை யிட்டு வந்த பனுவலிலக்கணத்தோடும் அடிநிமிர்வில்லது அம் மையாம் (எ-று.)

'அடிநிமிராதெனவே அம்மையென்பது முழுவதும் ஒரு செய்யுளாகல் வேண்டும்; வேண்டவே, அஃது உறுப்பன்றாகிய செல்லும்; அதனை உறுப்பெனல் வேண்டுமாதலான் அடிநிமி ராதெனப்பட்ட செய்யுள் உறுப்பாக அவை பல தொடர்ந்து முடிந்து ஈண்டுச் செய்யுளாமென்பது. சிலவாகவென்பது, எண்ணுச் சுருங்குதல், மெல்லியவாதல், சிலவாகிய சொற்கள் எழுத்தினான் அகன்றுகாட்டாது சிலவெழுத்தினான் வருவது. அடிநிமிராதென்றது, ஐந்தடியின் ஏறாதென்றவாறு.

தாயபனுவலோடென்றது, அறம்பொருளின்பமென்னும் மூன்றற்கும் இலக்கணஞ் சொல்லுப (போன்று) வேறிடையிடை

அவையன்றியுந் தாய்ச்செல்வதென்றவாறு, அஃதாவது பதி ணெண் கீழ்க்கணக்கென வுணர்க. அதனுள் இரண்டடியானும் ஐந்தடியானும் ஒரோ செய்யுள் வந்தவாறும், அவை சிலவாய மெல்லிய சொற்களான் வந்தவாறும், அறம்பொருளின்பமென அவற்றுக்கு இலக்கணங் கூறிய பாட்டுப் பயின்றுவருமாறுங் கார்நாற்பது, களவழிநாற்பது முதலாயின வந்தவாறுங் கண்டு கொள்க.

"பொருள்கருவி காலம் வினையிடனோ டைந்து
மிருடீர வெண்ணிச் செயல்" (குறள்:675)

என்பது இலக்கணங் கூறியதாகலிற் பனுவலோடென்றான்.

"மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று" (குறள்:1112)

என இஃது இலக்கியமாகலாற் றூயபனுவலெனப்பட்டது.

இவை தனித்துவரினும் அவ் வனப்பெனப்படும். தாவுத லென்பது, இடையிடுதல். இவ்விருவகையுஞ் செய்யுளெனப் படும். அம்மையென்பது, குணப்பெயர். அமைதிப்பட்டு நிற்ற லின் அம்மையென்றாயிற்று. அதனுள் உறுப்பாகிய பாட்டுக் கடோறும் மாத்திரை யுறுப்பு முதலாகிய உறுப்பினுள் ஏற்பன பலவும் வருமாறும், இவ்வனப்பினுள் ஏற்பன பலவும் வரு மாறும் அறிந்துகொள்க. (235)

அழகு

548. செய்யுள் மொழியாற் சீர்புனைந் தியாப்பின்
அவ்வகை தானே யழகெனப் படுமே.

இஃது, இரண்டா மெண்ணுமுறைமைக்க ணின்ற அழ குணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) திரிசொற் பயிலாது செய்யுளுட் பயின்று வரும் மொழிகளாற் சீரறுத்துப் பொலிவுபட்ட யாப்பின் பொருள் அழகு (எ-று).

'அவ்வகை'யென்றதனால் அவை வேறு வேறு வந்து ஈண்டிய தொகைநிலைச் செய்யுளென்றவாறு. அவையாவன, நெடுந்தொகை முதலாகிய தொகையெட்டு மென்றவாறு. அழகு

செய்யுண் மொழி யென்றதென்னையெனின், அது பெரும்பான்மையாற் கூறினன். அம்மொழியானே இடைச்சங்கத்தாருங் கடைச்சங்கத்தாரும் இவ்விலக்கணத்தாற் செய்யுள் செய்தார்; இக்காலத்துச் செய்யினும் விலக்கின்றென்பது. மற்று மூவடி முப்பது முதலாயின அம்மையெனப்படுமோ அழகெனப்படுமோ வெனின்,—தாயபனுவலின்மையின் அம்மையெனப்படாவென்பது. இவற்றுள்ளும் ஒரோ செய்யுட்கண்ணே மாத்திரை முதலாகிய உறுப்பும் ஏற்றவகையான் வருவன அறிந்துகொள்க, ஒழிந்தன வற்றிற்கும் இஃதொக்கும். (236)

தொன்மை

**549.** [1]**தொன்மை தானே**
**உரையொடு புணர்ந்த பழைமை மேற்றே.**

இது தொன்மையுணர்த்துதல் நுதலிற்று.

(இ—ள்). தொன்மையென்பது உரைவிராஅய்ப் பழைமைய வாகிய கதைப்பொருளாகச் செய்யப்படுவது (எ—று).

அவை பெருந்தேவனாராற் பாடப்பட்ட பாரதமும், தகடூர் யாத்திரையும் போல்வன. (237)

தோல்

**550.** **இழுமென் மொழியான் விழுமியது நுவலினும்**
**பரந்த மொழியா னடிநிமிர்ந் தொழுகினுந்**
**தோலென மொழிப**[2] **தொன்மொழிப் புலவர்.**

இது, முறையானே தோலென்னும் வனப்புணர்த்துதல் நுதலிற்று. அஃதிருவகைப்படும்; கொச்சகக்கலியானும் ஆசிரியத்தானுஞ் செய்யப்படுவன.

"யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது"

என்றவழித் தேவபாணியுங் காமமும் பொருளாக வன்றியுங் கொச்சகக் கலி வருமென்றானாகலான் அவை மேல் வருதல் கண்டுக் கொள்ளப்பட்டது.

---

1. நச்சர் பாடமும் இதுவே. "தொன்மைதானே சொல்லுங் காலை" எனப்பாடங் கொள்வர் இளம்பூரணர்.
2. "தொன்னெறிப்புலவர்" எனப்பாடங் கொள்வர் நச்சரும், இளம்பூரணரும்.

[இ-ள்] இழுமென் மொழியான் விழுமியது நுவலினும்-மெல்லென்ற சொல்லான் அறம்பொருளின்பம் வீடென்னும் விழுப்பொருள் பயப்பச் செய்வன; அவை செய்த காலத்துள்ளன கண்டிலம்; பிற்காலத்து வந்தன கண்டுகொள்க.

பரந்த மொழியான் அடிநிமிர்ந்து ஒழுகினும்-ஆசிரியப் பாட்டான் ஒரு கதைமேல் தொடுக்கப்பட்டன; அவை பொருட்டொடர்நிலை.

தோல் என மொழிப தொன்மொழிப் புலவர்-தோலென்று சொல்லுப புலவர் (எ-று)

'தொன்மொழி யென்றார் பழைய கதையைச் செய்தல் பற்றி; இது முன்வருஞ் சூத்திரத்தானும் பெறுதும். (238)

விருந்து

551. விருந்தே தானும்
புதுவது [1]கிளந்த யாப்பின் மேற்றே.

(இ-ள்) விருந்துதானும் புதிதாகத் தொடுக்கப்படுந் தொடர்நிலைமேற்று (எ-று)

'தானு'மென்ற உம்மையான் முன்னைத் தோலெனப்பட்டதூஉம் பழைய கதையைப் புதியதாகக் சொல்லியதாயிற்று இது பழங்கதை மேற்றன்றிப் புதிதாகச் சொல்லப்படுதல் ஒப்புமையின் உம்மையான் இறந்தது தழீஇயினானென்பது. 'புதுவது கிளந்த யாப்பின் மேற்று' என்றதென்னையெனின், புதிதாகத் தாம் வேண்டியவாற்றாற் பல செய்யுளுந் தொடர்ந்துவரச் செய்வது. அது, முத்தொள்ளாயிரமும். பொய்கையார் முதலாயினோர் செய்த அந்தாதிச் செய்யுளுமென உணர்க. கலம்பகம் முதலாயினவுஞ் சொல்லுப.

---

1. நச்சர் பாடமும் இதுவே. "புனைந்த" எனப்பாடங்கொள்வர் இளம்பூரணர்.

இயைபு

**552.** [1]ஞகாரை முதலா [2]ளகாரை யீற்றுப்
புள்ளி யிறுதி யியையெனப் படுமே.

இஃது, இயைபுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஞ ண ந ம ன, ய ர ல வ ழ ள வென்னும் பதி னொரு புள்ளியீற்றினுள் ஒன்றனை இறுதியாகச் செய்யுஞ் செய்யுள் பொருட்டொடராகவுஞ், சொற்றொடராகவுஞ் செய்வது இயைபெனப்படும் (எ—று)

இயையென்றதனன் பொருளும் இயைந்து சொல்லும் இயைந்து வருமென்பது கருத்து; சீத்தலைச் சாத்தனாராற் செய்யப்பட்ட மணிமேகலையுங் கொங்குவேளிராற் செய்யப்பட்ட தொடர்நிலைச்செய்யுளும் போல்வன அவை னகார ஈற்றான் இற்றன. மற்றையீற்றான் வருவனவற்றக்கும் ஈண்டிலக்கணம் உண்மையின் இலக்கியம் பெற்றவழிக் கொள்க. இப்பொழுது அவை வீழ்ந்தனபோலும்.

பரந்த மொழியான் அடிநிமிர்ந்தொழுகிய தோலோடு இத னிடை வேற்றுமை யென்னையெனின், அவை உயிரீற்றவாதல் பெரும்பான்மையாகலான் வேறுபாடுடைய சொற்றொடரான் வருதலுமுடையவென்பது. சொற்றொடரென்பது, அந்தாதி யெனப்படுவது; என்றதனன், உயிரீற்றுச் சொற்றொடர் சிறு பான்மை யெனபது கொள்க. (240)

புலன்

**553.** [3]சேரி மொழியாற் செவ்விதிற் கிளந்து
தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றிற்
புலனென மொழிப புலனுணர்ந் தோரே.

இது, புலனுமா றுணர்த்துதல் நுதலிற்று.

---

1. ஞகார முதலா எனப் பாடம் கொள்வர் இளம்பூரணர்.
2. இளம்பூரணர் பாடமும் இதுவே. "னகார ஈற்றும்" எனப் பாடங் கொள்வர் நச்சர்.
3. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே. தெரிந்த மொழியான் எனப் பாடங் கொள்வர்.

(இ—ள்) சேரிமொழியென்பது பாடிமாற்றங்கள். அவற்றானே செவ்விதாகக் கூறி ஆராய்ந்து காணாமைப் பொருட்டொடரானே தொடுத்துச் செய்வது புலனென்று சொல்லுவர் புலன் உணர்ந்தோர் (எ—று)

அவை விளக்கத்தார் கூத்து முதலாகிய நாடகச் செய்யுளாகிய வெண்டுறைச் செய்யுள் போல்வனவென்பது கண்டு கொள்க. (241)

இழைபு

554. ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத் [1]தடக்காது
குறளடி முதலா வைந்தடி யொப்பித்து
ஓங்கிய மொழியா [2]னுங்கன் மொழுகின்
இழைபி னிலக்கண மியைந்த தாகும்.

இஃது, இறுதிநின்ற இயைப்பிலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

(இ—ள்.) ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்து அடக்காது — வல் ஒற்றடுத்த வல்லெழுத்துப் பயிலாது; குறளடி முதலா ஐந்து அடி ஒப்பித்து — இருசீரடி முதலாக எழுசீரடியளவும் வந்த அடி ஐந்தினையும் ஒப்பித்து: ஒப்பித்தலென்பது, பெரும் பன்மையான் நாற்சீரடி படுக்கப்பட்டென்றவாறு; ஓங்கிய மொழியான் — நெட்டெழுத்தும் அந்நெட்டெழுத்துப் போல் ஓசை எழும் மெல்லெழுத்தும் லகார ளகரங்களும் உடைய சொல்லான்; ஆங்ஙனம் ஒழுகின் — இவையும்,

"சேரி மொழியாற் செவ்விதிற் கிளந்து
தேர்தல் வேண்டாது" (513)

பொருள் புலப்படச் சென்று நடப்பின்;

இயைபின் இலக்கணம் இயைந்ததாகும் — இயைபென்று சொல்லப்படும் இலக்கணத்தது (எ—று)

---

1. அடங்காது எனப் பாடம் கொள்வர் இளம்பூரணர்.
2. ஆங்கவன் மொழியர் என இளம்பூரணரும், இங்ஙனம் ஒழுகின என நச்சரும் பாடம் கொள்வர்.

அவையாவன, கலியும் பரிபாடலும் போலும் இசைப்பாட்டாகிய செந்துறைமார்க்கத்தன வென்பது. இவற்றுக்குக் காரணந் தேர்தல் வேண்டாது பொருள் இனிது விளங்கல் வேண்டுமென்றது, அவிநயத்திற்கு உரியவாதல் நோக்கியென்பது. மற்றிதனை வெண்டுறைச் செய்யுட்குமுன் வைப்பினென்னெனின், இஃதிசைப்பாட்டாகலின் இனி வருகின்றது இசைத்தமிழாகலின் அதற்குபகாரப்பட இதனை, இறுதிக்கண் வைத்தானென்பது. (242)

புறனடை

555. செய்யுள் மருங்கின் மெய்பெற நாடி
யிழைத்த விலக்கணம் பிழைத்தன போல
[1]வருவ வுளவெனினும் வந்தவற் றியலாற்
[2]றிரிவின்றி முடித்த றெள்ளியோர் கடனே.

இஃது, இவ்வோத்திற்கெல்லாம் புறனடை கூறுகின்றது.

(இ—ள்.) செய்யுளிடத்துப் பொருள்பெற ஆராய்ந்து தந்திரம் செய்யப்பட்ட இலக்கணத்தின் வழிஇயின போன்று பின் தோன்றுவனவுளவேல் முற்கூறப்பட்ட இலக்கணத்தோடு திரியாமல் முடித்துக் கோடல் அறிவுடையோரது கடன் (எ—று).

அவை எண்சீர் முதலாயின வரிற் கழிநெடிலடிப்பாற் சார்த்திக் கோடலும், ஏது நுதலிய முதுமொழியோடு, பாட்டிற்கு இயைபின்றியுந் தொடர் படுப்பனவும் யாப்பென்னும் உறுப்பின் பாற்கோடலும், பிறவும் ஈண்டோதாதன உளவெனின் அவையுமெல்லாஞ் செய்யுளிலக்கண முடிபாகுமென்றவாறு: (243)

செய்யுளியல் முற்றிற்று

1. 'வருவனை உளவேனும்' என இளம்பூரணரும், 'வருப உளவேனும்' என நச்சினார்க்கினியரும் பாடம் கொள்வர்.
2. நச்சினார்க்கினியர் பாடமும் இதுவே. திரிபின்றி எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

ஒன்பதாவது

# மரபியல்

## பொருளமைப்பு

எப்பொருள் எச்சொலின் எவ்வாறு உயர்ந்தோர் செப்பினர் அப்படிச் செப்புதல் மரபாம். ஆசிரியர் தமிழ்கூறு நல்லுலகத்து வழக்கச்செய்யுளும் ஆயிரு முதலின் எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி இவ்விலக்கணத்தைச் செய்தவராவர். ஆதலின் எழுத்ததிகாரத்தும் சொல்லதிகாரத்தும் அவ்வவ்விலக்கணம் பற்றிய மரபுகளை அவ்வவ்விடங்களில் கூறி வந்தது போல இவ்வதிகாரத்து இறுதியிலும் பொருள் பற்றிய மரபுகள் பல வற்றையும் கூறுகின்றார். இவ்வியற்கண் கூறப்படும் மரபுகள் இருதிணைக்கும் உரியவாம்.

இளமைப்பெயர்கள்: பார்ப்பு, குட்டி, குருளை, கன்று, பிள்ளை, மகவு, மறி, குழவி ஆகிய ஒன்பதும் இருதிணை பற்றி வரும் இளமைப் பெயர்களாம்.

பார்ப்பு, பிள்ளை என்பன பருந்து, கிளி போன்ற பறப்பனவற்றிற்கும், ஆமை, உடும்பு முதலை, போன்ற தவழ்வனவற்றிற்கும் உரிய இளமைப்பெயர்களாம்

கீரியுள் ஓரினமாய மூங்கா என்பதும், பூனையுள் ஓரினமாய வெருகு என்பதும் எலியும், அணிலும் குட்டி, பறழ் என்ற இளமைப் பெயர்களைப் பெறும்.

நாய், பன்றி, புலி, முயல், நரி ஆகிய ஐந்தின் இளமைப் பெயர் குருளை, குட்டி, பறழ் என்பனவாம். மேற்கூறிய ஐந்தனுள் நாய் நீங்கலாக ஏனையவற்றிற்குப் பிள்ளை என்னும் பெயரும் உரியதாகும்.

மறி என்பது, ஆடு, குதிரை, நவ்வி, உழை, புல்வாய் ஆகிய ஐந்தின் இளமைப்பெயர் ஆகும்.

குட்டி, மகவு, பிள்ளை, பறழ், பார்ப்பு ஆகிய ஐந்தும் குரங்கின் இளமைப்பெயர்களாம்

யானை, குதிரை, கழுதை, கடமை, மான் எருமை, மரை கவரி, கராம், ஒட்டகம் ஆகியவற்றின் இளமைப்பெயர் கன்று என்பதாம்.

குஞ்சரம், ஆ, எருமை, கடமை, மரை குரங்கு, முசு, ஊகம், ஆகியவற்றின் இளமைப்பெயர் குழவி என்பதாம்.

மேற்கூறிய ஒன்பான் இளமைப்பெயர்களில் குழவியும் மகவும் மக்கட்குரிய இளமைப்பெயர்களாம். அவ்வொன்பான் பெயர்களுள் பிள்ளை, குழவி, கன்று, போத்து என்பன ஓரறிவு உயிர்களின் இளமைப்பெயர்களாகவும் வரும்.

ஆனால் நெல் புல் என்பன மேற்கூறிய இளமைப்பெயர்களைப்பெறு

ஆண்பாற் பெயர்கள். :- ஏறு, ஏற்றை, ஒருத்தல், களிறு, சே, சேவல், இரலை, கலை, மோத்தை, தகர், உதள், அப்பர், போத்து, ஆண், கடுவன் ஆகியன ஆண்பால் பற்றி வரும் மரபுப்பெயர்களாம்.

வேழம் கேழல் ஆகிய இரண்டும் களிறு என்னும் ஆண்பாற் பெயர் பெறும். புல், வாய், புலி, உழை, மரை, கவரி, கராம், யானை, பன்றி, எருமை ஆகியன ஒருத்தல் என்னும் ஆண்பாற் பெயர் பெறும்.

பன்றி, புல்வாய், உழை, கவரி, எருமை, மரை, பெற்றம், சுறவு, ஆகியன ஏறு என்னும் ஆண்பாற் பெயர் பெறும்,

பெற்றம், எருமை, புலி, மரை, புல்வாய், சுறு, முதலை, இடங்கர், கராம், வரால், வாளை, மயில், வல்லூறு ஆகியன போத்து என்னும் பெயர் பெறற்குரியது.

இரலை, கலை, என்பன புல்வாய்க்குரிய ஆடு, மோத்தை, தகர், உதள், அப்பர் ஆகிய நான்கின் பெயர் பெறற்குரியது.

பறப்பனவற்றுள் ஆண்பால் எல்லாம் சேவல் என்னும் பெயர்க்குரிய. அவற்றுள் மயில் அப்பெயர் பெறுவதில்லை. முருகவேள் ஊர்ந்த மயில் எனின் அப்பெயர் பெறும்.

புலி, செந்நாய், முதலை, முதலிய ஆற்றலொடு புணர்ந்த ஆண்பாற் பெயர்களெல்லாம் ஏற்றை என்னும் பெயர் பெறும்.

பெண்பாற் பெயர்கள்:—. பேடை, பெடை, பெட்டை, பெண், மூடு, நாகு, கடமை, அளகு, மந்தி, பாட்டி, பிணை, பிணவு. பிடி ஆகிய பதின்மூன்றும் பெண்பாற் பற்றிவரும் மரபுப் பெயர்களாம்.

ஆண்பாற் பெயர்களெல்லாம் ஆண் என்றும், பெண் பாற் பெயர்கள் எல்லாம் பெண் என்றும் பெயர் பெறும்.

பிடி என்னும் பெண் பெயர், யானைக்குரியது.

ஒட்டகம். குதிரை, கழுதை, மரை, பறவைகள் ஆகியவை பெட்டை என்னும் பெயர் பெறற்குரியன.

பறவைகள் பேடை, பெடை என்னும் பெயர் பெறும்.

கோழி, கூகை, மயில் ஆகியன அலகு எனும் பெயர் பெயற் குரிய.

புல்வாய், நவ்வி, உழை, கவிரி, ஆகிய நான்கும் பிணை என்னும் பெயர் பெறற்குரிய.

பன்றி, புல்வாய், நாய் என்பன பிணவு, பிணவல் என்னும் பெயர் பெறற்குரியன.

பெற்றம், எருமை, மரை என்பன ஆ என்னும் பெயர் பெறற்குரியன.

எருமை, மரை, பெற்றம், நந்து ஆகியன நாகு என்னும் பெயர் பெறற்குரியன.

ஆடு, மூடும் கடைமையுமாகிய பெயர் பெறற்குரியது.

பன்றி, நாய், நரி, என்பன பாட்டி என்னும் பெயர் பெறற் குரிய. குரங்கு மூசு, முசுகம் ஆகிய மூன்றும் மந்தி எனும் பெயர் பெறற்குரிய.

மருவி வந்த மரபுப் பெயர்கள்:

ஆண் குரங்கினைக் கடுவன் என்றலும், கூகையைக் கோட்டான் என்றலும், கிளியைத் தத்தை என்றலும், வெருகினைப் பூசை என்றலும், ஆண் குதிரையைச் சேவல் என்றலும், பன்றியை ஏனம் என்றலும், ஆண் எருமையைக் கண்டி என்றலும் மருவி வந்த மரபுப் பெயர்களாம்.

பெண், ஆண், பிள்ளை என வாளா கூறியவழிய அவை உயர்திணைக்குரியவாம்.

பெண் பிணா என்பன மக்களுள் பெண்மைக்கு உரியன.

உயிரினங்கள் :

உயிரினங்கள் ஓரறிவு முதல் ஆறறிவு ஈறாக அறுவகைப் படும். ஓரறிவுயிர் என்பது தீண்டியவழி அறிவதாகும். புல், மரன் முதலியன இவ்வகையன.

அகத்தே வயிரம் உடையது மரமாகும். புறத்தே வயிரம் உடையது புல்லாகும். புறத்தே வயிரமுடைய பனை தெங்கு முதலிய வற்றின் உறுப்புக்கள் தோடு, மடலை, ஓலை, ஏடு, இதழ், பாளை, ஈர்க்கு, குலை, எனப் பெயர் பெறும். அகத்தே வயிர முடைய இருப்பை, புலி, முதலிய மரங்களின் உறுப்புக்கள் இலை தளிர், தோடு, சினை, குழை, பூ, அரும்பு, நனை எனப்பெயர் பெறும். மேற்கூறிய இரண்டற்கும் காய், பழம், தோல், செதிள், வீழ் என்பன உறுப்புக்களாக அமையும்,

ஈரறிவுயிர்: மேலைய உணர்வோடு நாவுணர்வும் உடையதாம். நந்து, முரள், முதலியன இவ்வகையினவாம்.

மூவறிவுயிர்: மேலைய உணர்வுகளோடு மூக்கு உணர்வும் உடையதாம். சிதல், எறும்பு முதலியன இவ்வகையினவாம்.

நாலறிவுயிர்: மேலைய உணர்வுகளோடு கண் உணர்வும் உடையதாம். நண்டு, தும்பி முதலியன இவ்வகையின வாம்.

ஐயறிவுயிர்: மேலைய உணர்வுகளோடு செவி உணர்வும் உடையதாம். விலங்கும், அவைபோலும் உணர்வுடைய மாக்களும் இவ்வகையினவாம்.

ஆறறிவுயிர்: மேலைய உணர்வுகளோடு மன உணர்வும் உடையதாம். மக்களும், தேவர் முதலாயினோரும் இவ்வகையினராவர்.

இனம் பற்றி வரும் மரபுகள்:

அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என மக்களினத்தை நான்கு வகைகளாகப் பிரிப்பர்.

அந்தணர்: முந்நூலும், குண்டிகையும், முக்கோலும், யாமை வடிவாகச் செய்த இருக்கைப்பலகையும் இவர்க்கு உரியவாம். அரசரில்வழி ஒரோ வழி இவர் அரசியலை மேற்கொள்ளுதற்கும் உரியர்.

அரசர்: இவர் முடியுடை மன்னரும் குறுநிலமன்னரும் என இருவகைப்படுவர். முடியுடை மன்னர்: படை, கொடி முரசு, குதிரை, யானை, தேர், தார், முடி, செங்கோல் முதலியன இவர்க்கு உரியவாம். இவையன்றி மேல் அந்தணர்க்குரிய எனக்கூறப்பட்ட முந்நூல், இருக்கை போல்வனவும் இவர்க்கு உரியவாம். பரிசில் வேண்டியும், பரிசில் பெற்று விடை கொண்டு கூறும்பொழுதும், கைக்கிளைப் பொருண்மைப் படக்கூறும் பொழுதும், கொடைத்தொழில் பற்றிக்கூறும் பொழுதும், காளை, இளையோன், நெடுந்தகை, செம்மல் முதலிய பெயர்களால் இவர்கள் அழைக்கப்படுவர்.

குறுநிலமன்னர்: வில், வேல், கழல், கண்ணி, தார், மாலை தேர், வாள் ஆகியன இவர்க்கு உரியவாம்.

வணிகர்: இவர்களுக்கு வாணிக வாழ்க்கை உரியது. பயறு, உளுந்து, கடுகு, கடலை, எள், கொள், அவரை, துவரை ஆகிய எண்வகை உணவுப்பொருள்களையும் விளைத்து இவர் வாணிகம் செய்வர். இவர்களுக்குச் சூடும் பூவும், நற்குடிப் பிறந்தார்க்கென வரையறுக்கப்பட்ட தாரும் உரியவாம்.

வேளாளர்: இவர் உழவுத்தொழிலையே சிறப்பாக மேற்கொள்வர். அரசரால் கொடுக்கப்பெற்ற படையும் கண்ணியும் இவர்க்கு உரியவாம்.

அரசரும் வணிகரும் வேல், வாள், முதலிய படைக்கலங்கள் வைத்திருத்தற்கு உரியவராவர்.

நால்வகை வருணத்தார்க்கும் உரிய மரபு:

மேற்கூறிய நால்வகை வருணத்தாரும் அவரவர் பிறந்த ஊர், அவரவர்க்குரிய தொழில், கருவிகள் ஆகியவற்றோடு சார்த்திக்கூறற்கும் உரியர். இந்நால் வகை இனத்தார்களும் தத்தம் நிலைமைக்கேற்ப உயர்த்திக் கூறவும் பெறுவர்.

இருதிணை ஐம்பாற்பொருள்:

நிலம், தீ, நீர், வளி, விண் எனும் ஐம்பெரும் பூதமும் கலந்த கலவையே உலகம் ஆகும். ஆயினும் இவ்வைம்பெரும் பூதங்களையும் தனித்து வழங்குமிடத்து அஃறிணை வாய்பாட்டால் வழங்குதல் வேண்டும். இவ்வைந்தும் சேர்ந்த உலகத்துக் காணப்படும் பொருள்களை அவ்வாறன்றி இருதிணை ஐம்பாலாகப் பிரித்து அவ்வவற்றின் இயல்பு மாருது நெறிப்படக்கூறல் வேண்டும். இவ்வாறு கூறற்கு இதுகாறும் வழங்கி வந்த மரபே காரணமாகும். வழக்கில் இத்தகைய மரபு பிறழாதிருப்பின் அல்லது செய்யுளில் இவற்றை ஏற்கச் செய்தல் இயலாதாம். வழக்கென்பது உயர்ந்தோர் கூறும் வழக்கே ஆகும். காரணம் அவர்களை அன்றி உலகியல் அமையாதாகலின். மரபு என்ற ஒன்றின்றேல் உலகத்துச் சொல் எல்லாம் பொருள் இழந்தும் பிறழ்ந்தும் விடும். செவிப்புலனுய ஓசை கேட்டுக் கட்புலனுகப் பொருள் உணர்வதெல்லாம் இம் மரபு பற்றியதன்றி வேறில்லை.

நூல்மரபு: மரபுநிலை திரியாதவாறு மாட்சிமைப்பட்ட குணங்களையுடைய நூல் இருவகைப்படும். ஒன்று முதனூல் என்பது. பிறிதொன்று வழிநூல் என்பது.

முதனூல்: இயல்பாகவே வினையினின்று நீங்கியவனும், விளங்கிய அறிவை உடையவனும் ஆன முன்னவனுல் செய்யப் பட்டதே முதனூலாம்.

வழிநூல்: முதனூலின் வழித்தோன்றியது வழிநூலாகும். அது தொகுத்துச் செய்தல், விரித்துச் செய்தல், தொகுத்தும் விரித்தும் செய்தல், மொழி பெயர்த்துச் செய்தல் என நால் வகைப்படும்.

இத்தகைய வழிநூல் சூத்திரம், உரை, உத்தி, அழகு, முதலிய அனைத்துச் சிறப்புக்களும் பொருந்தயிருப்பினும் முதனூலோடு மாறுபடின் அது சிறப்பிலதாம். முதனூலின் வழித்தாய், வழிநூல் செய்யப்படினும் தொகுத்தல், விரித்தல் தொகைவிரி ஆகிய மூன்றனும் பிறழ்தலின்றிச் செய்தல் வேண்டும். இவ்வாறு செய்வது இசை புணர்ப்பான் முதற்கூறு புணர்த்ததற்கு மாறுகாது பிற்கூறு புணர்ப்பான் புணர்த்துவ தோடு ஒக்கும்.

நூல் இலக்கணம்: சூத்திரமும், அதனை விளக்குதற்குரிய சொற்படு பொருளும், அதனையும் விளக்குதற்குரிய விளக்க உரையும் அமைந்ததாய்ப் பத்துவகைக் குற்றமும் இன்றி 32 வகை உத்தியோடு கூடியதாய் அமைவதை நூல் என்பர்.

சூத்திரத்திலக்கணம்: யாப்பமைதி பெற்றதாய், சில்வகை எழுத்தினை உடையதாய், நுண்மையொடு புணர்ந்த உரைகள் பலவற்றையும் தன்னகத்தடக்கிய ஒண்மை யுடையதாய், நிலைபேறுடைய கருத்து வகையான் முன்னும் பின்னும் உள்ள நூற்பாக்களின் கருத்தோடு இயைபு உடையதாய், எத்துணை நுண்ணறிவாளர் கூறும் பொருளினும் மேலும் பல அறிதற்கரிய பொருளாழம் உடையதாய்ப், பொருள் விளங்கத்தக்கதாய் அமைவதே சூத்திரத்தின் இயல்பாகும்.

உரை இயல்பு:- காண்டிகை உரையும், விருத்தியுரையும் என உரை இருவகைப்படும்.

1. காண்டிகை உரை:- சூத்திரத்தின் உட்பொருளை மறைவின்றி விளக்கிக்கூறுவது காண்டிகை உரையாம். சூத்திரம் குறித்த பொருளை ஐயமின்றி விளக்குவதற்கு உரிய விரிவும், அதற்கு ஏதுவும், எடுத்துக்காட்டும் கொண்டு விளக்கும் திட்பமும் இவ்வுரைக்கண் மிளிரும்.

2. விருத்தியுரை:- மேற்கூறிய வகையான் எல்லாம் சூத்திரத்தின் உட்பொருளை விளங்கச்செய்வதோடு அச்சூத்திரப் பொருளை உணர்தற்கு இன்றியமையாததாயும் அதற்கு இயைபானதாயும் உள்ள அனைத்தும் பொருந்த உரைப்பது விருத்தியுரையாகும். இவற்றிற்கும் மேலாக இடையிடையே வினாவும் விடையுமாக உள்ளுறுத்துக்கூறவும்படும். தன்னூலானும் அதற்கு

ஒத்த பிற நூலானும் ஐயம் திரிபற விளங்க உணர்த்தும் உரை நுட்பம் கொண்டும் இவ்வுரை விளங்க வேண்டும்.

பத்துவகைக் குற்றங்கள்.

கூறியது கூறல், மாறுகொளக்கூறல், குன்றக்கூறல், மிகை படக்கூறல், பொருளில மொழிதல், மயங்கக்கூறல், கேட்போர்க் கின்னுயாப்பிற்றாதல், பழித்த மொழியான் இழுக்கம் கூறல், தன்னால் ஒரு பொருள் கருதிக்கூறல், என்ன வகையினும் மனங் கோள் இன்மை என்பனவாம். இப்பத்து வகைக்குற்றமும் இன் றிச்செய்வதே நூலின் மாண்பாகும். இவற்றுள் கூறியது கூறல், மாறுகொளக்கூறல், மிகை படக்கூறல், பொருளில மொழிதல், மயங்கக்கூறல், ஆகிய ஐந்தானும் ஆசிரியன் குறித்த பொரு ளுடன் மற்றொரு பொருளும் விளங்கக்கூறுமாயின் அவற்றை ஏற்கலாம் என்பர் பேராசிரியர்.

பத்துவகை அழகுகள்.

மேற்கூறிய பத்து வகைக் குற்றங்களுக்கும் மறுதலையாக வருவன நூலிற்கு அழகு எனப்படும். அவையாவன:- சுருங்கச் சொல்லல், விளங்கவைத்தல் முதலாயினவாம்.

உத்திகள்:- நூற்பொருள் வழக்கொடு வாய்ப்பப் பொருந்தி ஏற்பது அறிந்து இதற்கிவ்வகையாம் எனப்பகுத்துக் கூறல் உத்தியாம். அவ்வுத்திகளாவன:-

1. நுதலி அறிதல்! சூத்திரத்தின் பொருளை அறிந்து அதற் கேற்ற வகையான் உணரப்படும் பொருள் இன்னதென்று கொள்ளுதல்.

2. அதிகார முறைமை: முன் சூத்திரப் பொருண்மை பின்வரு வதற்கும் பெற வைத்தல்.

3. தொகுத்துக்கூறல்: கருத்துக்களைத் தொகுத்து உரைத்தல்.

4. வகுத்து மெய்நிறுத்தல்: தொகுத்ததனைப் பின்னும் வகுத்தும் முறை நிறுத்தியும் கூறதல்.

5. மொழிந்த பொருளோடொன்ற அவ்வயின் மொழியாததனை முட்டின்றி முடித்தல்:- சொன்னதனோடு பொருந்தச் சொல்லாத வற்றையும்தடையின்றிக் கூறல்.

6. வாராததனுன் வந்தது முடித்தல்:- ஒரு பொருளுக்கு வேண்டும் இலக்கணம் முழுமையும் வாராததோர் சூத்திரத்தானே அங்ஙனம் வந்த பொருளுக்கு வேண்டும் முடிபினைக்கூறல்.

7. வந்தது கொண்டுவாராததுணர்த்தல்:- வந்த பொருண்மையைக் கொண்டு வராததனை அறிய வைத்தல்.

8. முந்து மொழிந்ததன் தலைதடுமாற்றம்:- முன்னே கூறியதற்கு மாறுகப் பின்னர்த் தலைதடுமாற்றமாகக்கூறல்.

9. ஒப்பக்கூறல்:- ஒன்றினைக்கூறும்பொழுது இருபொருட் குரித்தாக ஒப்பக்கூறல்.

10 ஒருதலை மொழிதல்:- ஓர்அதிகாரத்திற் சொல்லுவதனை வறு அதிகாரத்தில் சொல்லி அவ்விலக்கணமே ஆண்டும் கொள்ளச்செய்தல்.

11. தங்கோட்கூறல்:- சொல்லாதன பிற உளவாயினும் அந்நூலுக்கு வேண்டுவதே கொள்வல் என்றல்.

12. முறை பிறழாமை:- காரணமில்லாமல் சில பொருள்களை எண்ணிக்கூறிய பின்னர் அம்முறை பிறழ்ந்த வழியும் குற்றமில் வழியும் அம்முறையினையே கூறல்.

13. பிறனுடம்பட்டது தானுடம்படுதல்:- உள் பொருள் அன்றுயினும் வழக்கியலால் கொள்பொருள் இதுவெனக்கூறல்.

14. இறந்தது காத்தல்:- முன் கூறியதோர் சூத்திரப்பொருண்மையைப் பின்ஞெரு சூத்திரத்தான் விலக்குதல் என்பர் பேராசிரியர். மேற்கூறப்பட்ட சூத்திரத்தால் கூறப்படாத பொருளைப் பின் வருகின்ற சூத்திரத்தான் அமைத்தல் என்பர் இளம்பூரணர்

15. எதிரது போற்றல்:- வருகின்ற சூத்திரப்பொருண்மைக்கு ஏற்ப வேருெரு பொருள் முற்கூறுதல்.

16. மொழிவாம் என்றல்:- ஒரு பயன் நோக்கி முற்கூறுதும் என்றல்.

17. கூறிற்று என்றல்:- முற்கூறிய இலக்கணத்தினை மீட்டும் கூற வேண்டிய வழித் திரும்பவும் கூருது மேற்கூறிய வாற்றுனே கொள்க என்றல்.

18. தான் குறியிடுதல்:- உலகு குறியின்றித் தன்னூலுள்ளே வேறு குறியிட்டாளுதல்.

19. ஒருதலையன்மை:- யாண்டும் ஒரு தலையாக வாராது வருஞான்று வருவது ஆண்டொன்று கொள்ள வைத்தல்.

20. முடிந்தது காட்டல்:- சொல்லுகின்ற பொருட்கு வேண்டுவன எல்லாம் சொல்லாது தொல்லாசிரியர் கூறினர் என்று கூறல்.

21. ஆணை கூறல்:- இவ்வாசிரியரின் கருத்து இது எனக்கொள்ள வைத்தல்.

22. பல்பொருட்கேற்பின் நல்லன கோடல்:- ஒரு சூத்திரத்துட் பயந்த சொற்றொடர் பல் பொருட்கு ஏற்றதாயினும் நல்லது கொள்கின்றார் எனக்கருதி அவ்வாறு செய்தல்.

23. தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்: ஒரு வாய்பாடு எடுத்து ஓதப் பல வாய்ப்பாடு அதற்கு வந்து பூணுமென்று வகுத்துக்கொள்ள வைத்தல்

24. மறுதலை சிதைத்துத் தன் துணிபுரைத்தல்:- ஒரு பொருளினை ஒருவன் வேறுபடக்கொள்வதோர் உணர்வு தோன்றியக்கால் அவ்வேறுபாட்டினை மாற்றித் தான் துணிந்தவாறு அவற்கும் அறிவுறுத்தல்.

25. பிறன் கோட் கூறல்:- தன்னூலே பற்றாகப் பிற நூற்கு வருவதோர் இலக்கணம் கொள்ளுமாறு கூறுதல்.

26. அறியாதுடன்படல்:- தானோதிய இலக்கணத்தின் வேறுபட வருவன தான் அறிந்திலனாகக் கூறி அதன் புறத்துச் செய்வதொரு புறனடை செய்தல்.

27. பொருளிடையிடுதல்: வேற்றுமைப்பொருளினைச் சொல்லின்ற பொருண்மைக்கு இடையே பெய்து சொல்லுதலும் சொல்லின்ற பொருட்கு இயைபுடையதனை ஆண்டுச்சொல்லாது இடையிட்டுப்போய்ப் பிறிதொரு வழிச்சொல்லுதலும் போல்வன.

28. எதிர்பொருள் உணர்த்தல்:- தான் கூறிய இலக்கணத்திற் சில பிற்காலத்துத் திரிபு படினும் படுமென்பது முற்கால முதனூலும் கொண்டுணர்ந்த ஆசிரியன் எதிர்காலத்து வருவது நோக்கி அதற்கேற்றதோர் இலக்கணம் கூறிப் போதல்.

29. சொல்லின் எச்சம் சொல்லியாங்குணர்த்தல்:- சொல்லின் ஆற்றலால் பெறப்படும் பொருளினையும் எடுத்தோதியாங்குக் கொள்ளவைத்தல்.

30. தந்து புணர்ந்து உரைத்தல்:- உள் பொருள் அல்லதனை உள போலத்தந்து கூட உணர்த்தல்.

31. ஞாபகங்கூறல்:- சூத்திரம் செய்யுங்கால் அதற்கு ஓதிய இலக்கணவகையானே சில்வகை எழுத்தின் செய்யுட்டாகவும் நாடுதலின்றிப் பொருள் நனி விளங்கவும் செய்யாது, அரிதும் பெரிதுமாக நவிந்து செய்து மற்றும் அதனானே வேறு பல பொருள் உணர்த்தல்.

32. உய்த்துக்கொண்டுணர்தல்:- ஒரு வழி ஒரு பொருள் சொல்லியக்கால் அதன் கண்ணே மற்றொரு பொருளையும் கொணர்ந்து கொண்டறியுமாறு தோன்றச்செய்தல்.

ஒன்பதாவது

# மரபியல்

இளமைப் பெயர்கள்

**556. மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பிற்**
**பார்ப்பும் பறழுங் குட்டியுங் குருளையுங்**
**கன்றும் பிள்ளையு மகவு மறியுமென்**
**றொன்பதுங் குழவியோ டிளமைப் பெயரே.**

என்பது சூத்திரம். இவ்வோத்து என்ன பெயர்த்தோவெனின், மரபியலென்னும் பெயர்த்து இதனானே ஓத்து நுதலியதூஉம் மரபு உணர்த்துதலென்பது பெற்றாம்.

மரபென்ற பொருண்மை என்னையெனின், கிளவியாக்கத்து மரபென்று வரையறுத்து ஓதப்பட்டனவுஞ் செய்யுளியலுள் (செய்யுளியல் 1-உரை) மரபென்று வரையறுத்து ஓதப்பட்டனவுமன்றி, இருதிணைப் பொருட்குணனாகிய இளமையும் ஆண்மையும் பெண்மையும்பற்றிய வரலாற்று முறைமையும், உயர்திணை நான்கு சாதியும் பற்றிய மரபும், அஃறிணைப் புல்லும் மரனும் பற்றிய மரபும், அவைபற்றி வரும் உலகியன் மரபும், நூன்மரபுமென இவையெல்லாம் மரபெனப்படுமென்பது.

மற்றுப் பொருள்களின் இளமைபற்றி வரும் மரபு கூறினான் மூப்புப்பற்றி வரும் மரபு கூறானோவெனின்,- அது வரையறையின்மையிற் கூறானென்பது.

மற்று மேலை ஓத்தினோடு இவ்வோத்திடை இயைபென்னையெனின், முன்னர் வழக்கிலக்கணங் கூறியதன்பின் செய்யுளிலக்கணஞ் செய்யுளியலுட் கூறினான், அவ்விரண்டற்கும் பொதுவாகிய மரபு ஈண்டுக் கூறினமையின் இது செய்யுளியலோடு இயைபு உடைத்தாயிற்று.

மற்று, வழக்கிலக்கணஞ் செய்யுட்கும் பொதுவாகலின் இங்ஙனம் இரண்டற்கும் பொதுவாகிய மரபினையுஞ் செய்யுளியலின்முன் வைக்கவெனின்,- அவ்வாறு வழக்குஞ் செய்யுளுமென்ற இரண்டுமல்லாத நூலிற்கும் ஈண்டு மரபு கூறினமையின் இது செய்யுளியலின் பின் வைக்கப்பட்டது.

இவ்வோத்தின் முதற்சூத்திரம் என்னுதலிற்றோவெனின் எல்லாப் பொருளின் கண்ணும் இளமைக்குணம்பற்றி நிகழுஞ் சொல் இவையென்று வரையறுத்துக் கூறுகின்றது.

(இ-ள்) மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பின்-விலக்கருஞ் சிறப்பிற்றாகிய மரபிலக்கணங்கூறின்: பார்ப்பும் பறழும் குட்டியும் குருளையும் கன்றும் பிள்ளையும் மகவும் மறியும் என்று குழவியோடு இளமைப்பெயர் - குழவியோடு இவை யொன்பதும் இளமைப்பெயர் (எ-று).

மேலன எட்டுங் குழவியுமென இளமைப்பெயர் ஒன்பதாயின. குழவியோடொன்பதென்னது 'ஒன்பதுங் குழவியோ' டென மயங்கக் கூறியதனாற் போத்தென்பதும் இளமைப்பெயரெனவும் பிறவும் வருவன உளவாயினுங் கொள்ளப்படும். இவற்றையெல்லாம் மேல்வரையறுத்து இன்ன பொருட்கு இன்ன பெயர் உரித்தென்பது சொல்லும்.

''மாற்றருஞ் சிறப்பின்''

என்றதனானே இவை ஒருதலையாகத் தத்தம் மரபிற் பிறழாமற் செய்யுள் செய்யப்படுமென்பதூஉம், ஈண்டுக் கூறுதனவாயின் வழக்கொடுபட்ட மரபு பிறழவுஞ் செய்யுளின்பட்படின் அவ்வாறு செய்பவென்பதூஉங் கூறியவாறாயிற்று

''அகலிரு விசும்பிற் பாயிருள் பருகிப்
பகல்கான் றெழுதரு பல்கதிர்ப் பரிதி'' (பெரும்பாண்:1-2)

எனவும்,

''நும்மினுஞ் சிறந்தது நுவ்வை யாகுமென்று
அன்னை கூறினள் புன்னையது சிறப்பே'' (நற்றிணை: 172)

எனவும் வரும். இவற்றுள் பரிதியஞ் செல்வனைப் 'பருகும்', காலும்' என்றலும், புன்னைமரத்தினை 'நுவ்வை' யென்றலும் மரபன்மையின் வழக்கினுள் மாற்றுதற்கு உரியவாமென்பது, கருத்து.

நிலவுக் குவித்தன்ன வெண்மணல்'' (குறுந்:123

எனவும்,

''இருண்துணிந் தன்ன வேனங் காணின்',(பத்துப்-மலை:247

எனவும்,

"இருள்நூற் றன்ன விரும்பல் கூந்தல்"
எனவும் வருவனவும் அவை.

(வி-ரை)

கிளவியாக்கத்துள் மரபென்று ஓதப்பட்டன—மரபு வழா நிலையாகவும் மரபு வழுவமைதியாகவும் கூறப்பட்டனவாம். செய்யுளியலுள் மரபென்று ஓதப்பட்டன— 391, 392 ஆகிய நூற்பாக்களில் கூறப்பட்டனவாம். — நான்கு சாதி—அரசர், அந்தணர், வணிகர், வேளாளர்.

வழக்கிலக்கணம்—அகத்திணை புறத்திணை பற்றிய வழக்கு.
நுவ்வை—நுமது தங்கை.
நிலவைக்குவித்தலும், இருளைத்துணித்தலும், நூற்றலும் வழக்கில் வரும் மரபன்று. எனினும் செய்யுட்கண் வருதல் மரபாம். (1)

ஆண்பாற் பெயர்கள்

557 ஏறு மேற்றையு மொருத்தலுங் களிறுஞ்
சேவுஞ் சேவலு மிரலையுங் கலையு
மோத்தையுந் தகரும் உதளும் அப்பரும்
போத்துங் கண்டியுங் கடுவனும் பிறவும்
யாத்த வாண்பாற் பெயரென மொழிப.

(இ-ள்.) ஆண்பாற்பெயர் இவ்வெண்ணப்பட்ட பதினைந்தும் (எ-று).

'பிறவும்' என்றதனான் ஆணென்றும் விடையென்றும் வருவன போல்வனவுங் கொள்க.

இவற்றை வரையறை கூறும்வழி (589-605) உதாரணங் காட்டுதும். 'யாத்த ஆண்பாற்பெயர்' என்றதனாற் போத்தென்பது இளமைப்பெயராமாயினும் இங்ஙனம் ஆண்பாற்குச் சிறந்து வருமாறுபோலச் சிறவாது அதற்கென்பது கொள்க.

---

1. எருதும் எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

பெண்பாற் பெயர்கள்

**558. பேடையும் பெடையும் பெட்டையும் பெண்ணும்**
**மூடு நாகுங் கடமையும் அளகும்**
**மந்தியும் பாட்டியும் பிணையும் பிணவும்**
**அந்தஞ் சான்ற பிடியொடு பெண்ணே.**

(இ-ள்.) கூறப்பட்ட பதின்மூன்று பெயரும் பெண்மைப் பெயர் (எ-று.)

கடமையென்பதோர் சாதிப்பெயர் உண்டேனும் அது வன்று, ஈண்டெண்ணப்பட்டது. பெண்மை மேற்றென்று கொள்க.

'அந்தஞ் சான்ற' என்பது, முடிபமைந்தன இவையென்ற வாறு. எனவே, ஆ என்பது பெண் பெயராதலும் பெண் ஆணென்பன ஒருசார் புல்லிற்கு நேர்தலுங் கொள்க; என்னை? ஆனேறென்பது ஆவினுள் ஏறெனப்படுதலின். ஆவென்பது ஆண்பாற்கும் பொதுவாகலின் அடி முடிபமையாதெனப் பட்டது; அது மேற்காட்டுதும்.

ஆண்மை பெண்மை புல்லிற்கின்மையின் அவையும் முடி புடையன ஆகாவாயினுங் காயாப்பனையை ஆண்பனையென்றுங் காய்ப்பனவற்றைப் பெண்பனையென்றும் வழங்குப இவை யெல்லாம் வழக்காகலிற் செய்யுளுள் வருமாறு அறிந்து கொள் ளப்படும். இவற்றுக்கு மேல் வரையறை கூறும்வழி (606–22) உதாரணங் காட்டுதும்.

(விரை)

கடமை என்பது காட்டுப் பசுவையும் குறிக்குமாதலின் அதனைச் சாதிப்பெயர் என்றார்.

ஆன் என்பது பசு, காளை இரண்டையும் குறிக்கும். 'ஆவும் ஆனியல் பார்ப்பன மாக்களும்', 'ஆனேறு உயர்த்தோன் அருளில் தோன்றிய' என்பன காண்க. ஆ என்பதே பெயர். னகரமெய் சாரியையாம்.

ஆண்பனை பெண்பனை என வழங்கும் வழக்காறு ஞான சம்பந்தர் வரலாற்றாலும் அறியப்படும். (3

பார்ப்பும் பிள்ளையும் இவற்றிற்குரியவெனல்

**559. அவற்றுட்**
**பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற்று இளமை**

இது, நிறுத்த முறையானே இளமைப்பெயருண் முற்கூறிய பார்ப்பினைக் கூறுவான் அதனோடொப்புமை கண்டு பிள்ளைப் பெயருங் கூறுகின்றது

(இ-ள்) இவ்விரண்டும் புள்ளிளமைக்குரிய (எ-று).

இவையெல்லாம் இக்காலத்து வழக்கினுள் அரியவாகலிற் சான்றோர் செய்யுளுட் காணப்படும்; அல்லன வழக்கின்மேற் காட்டுதும்.

"மேற்கவட் டிருந்த பார்ப்பினங் கட்கு" (அகம்:31)
எனவும்,

"இல்லிறைப் பள்ளிதம் பிள்ளையொடு வதியும்" (குறுந்:46)
எனவும்,

"பைதற் பிள்ளைக் கிளிபயிர்ந் தாஅங்கு" (குறுந்:139)
எனவும் இவை பருந்தும் ஊர்க்குருவியும் கிளியுமென்னும் பறவைமேல் வந்தன; பிறவும் அன்ன.

புள்ளுக்குலம் பலவாகலான் இச்சூத்திரத்தினுள் அடங்கிய மரபு எத்துணையும் பலவாத னோக்கி முதற் சூத்திரத்துட் பார்ப்பினை முற்கூறினானென்பது.

(வி-ரை)

புள்ளுக்குலம்—பறவை இனம். இவ்வினம் பலவாதலின் இவற்றிற்கு வரும் மரபாகிய பார்ப்பும் பலவாம். இத்தகைய மிகுதி நோக்கி இவற்றை முற்கூறினர். 'நீர்பறவை நாற்கால் ஓர்பப்பத்து' எனச் சான்றோர் தொகை கூறுவனவும் காண்க.

தவழ்பவைக்கும் பார்ப்பும் பிள்ளையும் உரிய எனல்.

**560. தவழ்பவை தாமு மவற்றோ ரன்ன.**

(இ-ள்.) பார்ப்பும் பிள்ளையுத் தவழ்பவற்றிற்கும் உரிய (எ-று).

அவை, ஆமையும் உடும்பும் ஓந்தியும் முதலையும் முதலாயின. ஆமையும் முதலையும் நீருள் வாழினும் நிலத்தியங்குங்கால் தவழ்பவை யெனப்படும்.

(உ-ம்). "யாமைப் பார்ப்பி னன்ன
காமங் காதலர் கையற விடினே" (குறுந்:152)

எனவும்,

"தன்பார்ப்புத் தின்னு மன்பின் முதலை" (ஐங்குறு:41)

எனவும்

"தாய்சாப் பிறக்கும் புள்ளிக் கள்வனொடு
பிள்ளை தின்னு முதலைத் தவணூர்" (ஐங்குறு:24)

எனவும் வரும்.

'தாமும்' என்றதனான் ஊர்வன நடப்பனவுஞ் சிறுபான்மை பிள்ளைப்பெயர்க்கு உரியன கொள்க. அது, பிள்ளைப்பாம்பென ஊர்வன மேல் வந்தது.

"பிள்ளை வெருகிற் கல்கிரை யாகி" (குறுந்: 107)

என நடப்பனமேல் வந்தது. 'மூங்காப்பிள்ளை' என்பதும் ஈண்டே கொள்ளப்படும். பார்ப்பும் அவ்வாறே வருவன உள வேற் கொள்க. இதுவுஞ் தவழுஞ் சாதிக்கெல்லாம் பொது வாகிய பரப்புடைமையின் இரண்டாவது வைத்தானென்பது,

(வி-ரை)

யாமைப் பார்ப்பின் அன்ன காமம்—யாமைப் பார்ப்பு தன் தாயின் முகம் நோக்கி வளரும். அது போலத் தலைவியின் காமமும் தலைவன் முகம் நோக்கி வளரும். ஆதலின் இவ்வாறு கூறினார்.

வெருகு—காட்டுப்பூனையுள் ஓரினம் - மூங்காப்பிள்ளை—கீரிப் பிள்ளை. (5)

குட்டியெனப்படுவன

**561. மூங்கா வெருகெலி மூவரி யணிலோ
டாங்கவை நான்குங் குட்டிக் குரிய.**

இது, மேல் எடுத்தோத்தானும் இலேசானும் அதிகாரப்பட்ட தவழ்வனவும் நடப்பனவும் பற்றிக் குட்டியென்னும் பெயரினையு முறையன்றிக் கூறுகின்றது.

(இ-ள்) குட்டியெனப்படுவன இவை நான்கும் (எ-று)

அவை, மூங்காக்குட்டி, வெருக்குக்குட்டி. எலிக்குட்டி, அணிற்குட்டி யெனவரும்.

'மூவரியணி' லென்றதனுள் ஒழிந்த மூன்றுந் தம்முள் ஒரு பிறப்பினவாம்; இது யொருநிகரனவே என்பது கொள்க.

'ஆங்கவை நான்கும்', என்றதனுல் தத்துவனவற்றுக்கும் குட்டிப்பெயர் கொடுக்கப்படும்; தவளைச்குட்டி யெனவரும். மேல் ஊர்வனவற்றுக்குந் தவழ்வனவற்றிலக்கணம் எய்துவித்தமையாற் பாம்புக்குட்டி யென்பதுங் கொள்க

மற்றுக் கீரியும் நாவியும் போல்பவற்றையுங் குட்டியென்ஞரோவெனின், என்ஞர்: அவற்றைப் பிள்ளையென்றலே பெரும். பான்மையாகலின்.

'உரிய' வென்றதனுற் சிறுபான்மை குட்டியென்பதுங் கொள்க. மூங்காவின் விகற்பமென்பாரு முளர். (6)

மூங்கா முதலியன பறழெனவும் கூறப்படுமெனல்

**562. பறழெனப் படினும் உறழாண் டில்லை**

(இ-ள்) மேற்கூறிய நான்கும் பறழெனவும்படும் (எ-று)

இவை இக்காலத்து வீழ்ந்தன. மற்று முற்கூறிய நான்கினையும் இப்பெயரானே முற்கூறுக, முதற்சூத்திரத்துள் ஓதிய முறைமைக் கேற்பவெனின், அற்றன்று: அவற்றுக்கு இப்பெயர் சிறுபான்மை யென்பான் பிற்கூறினனென்பது.

'உறழாண்டில்லை' யென்ற மிகையானே;

"கைம்மை யுய்யாக் காமர் மந்தி
கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்த்தி" (குறுந்:69)

என்பதுங் கொள்க. (7)

குருளை என்னும் பெயர்க்குரியன இவையெனல்

**563. நாயே பன்றி புலிமுய லென்கு
மாயுங் காலைக் குருளை யென்ப.**

இது, முறையானே நான்காம் எண்ணு முறைமைக்கணின்ற குருளையாமா றுணர்த்துதல் நுதலிற்று

(இ-ள்) நாயும் பன்றியும் புலியும் முயலும் என நான்கும் குருளையென்று சொல்லப்படும் (எ-று).

"திறவாக் கண்ண சாய்செவிக் குருளை" (சிறுபாண்:130)

எனவும்,

"விழியாக் குருளை மென்முலை சுவைப்பக்
குழிவயின் துஞ்சுங் குறுந்தாள் பன்றி"

எனவும்,

"இரும்புலிக் குருளையின் தோன்றுங் காட்டிடை" (குறுந்:47)

எனவும்,

"குருளை கோட்பட லஞ்சிக் குறுமுயல்
வலையில் தப்பாது மன்னுயி ரமைப்ப"

எனவும் வரும்.

'ஆயுங்காலை' யென்றதனால்,

"சிறுவெள் ளரவி னவ்வரிக் குருளை" (குறுந்:119)

என்பதுங் கொள்க. (8)

நரியும் குருளையென்னும் பெயர்க்குரியதெனல்

564. நரியு மற்றே நாடினர் கொளினே.

(இ-ள்) நரியுங் குருளையெனப்படும் (எ-று)

"பிணந்தின் பெண்டிர்க்குக் குருளை காட்டிப்
புறங்காட் டோரி புலவுத்தசை பெறூஉம்"

என வரும்.

'நாடினர் கொளினே' யென்றதனானே,

"வெயிலாடு முசுவின் குருளை யுருட்டுங்
குன்ற நாடன் கேண்மை" (குறுந்: 38)

என்றாற்போல முசுவிற்குங் குருளைப்பெயர் கொடுக்க.

(வி-ரை)

ஓரி—நரி (9)

மேற்கூறிய ஐந்தற்கும் குட்டியும் பறழும் உரியவெனல்

565. குட்டியும் பறழுங் கூற்றவண் வரையார்.

(இ-ள்.) மேற்கூறிய ஐந்திணையுங் குட்டியென்றும் பறழென்றுங் கூறுதல் வரையார் (எ-று).

அவை நாய்க்குட்டி பன்றிக்குட்டி புலிக்குட்டி முயற்குட்டி நரிக் குட்டி என வழக்கினுள் வந்தன.

"பாசிப் பரப்பிற் பறழொடு வதிந்த
வுண்ணாப் பிணவி னுயக்கஞ் சொலிய
நாளிரை தரீஇய வெழுந்த நீர்நாய (அகம்:336)

எனவும்,

"வயநா யெறிந்து வன்பறழ் தழீஇ
... ... ... ...
தறுகட் பன்றி (அகம்: 248)

எனவும்,

"புலிப்பற ழன்ன பூஞ்சினை வேங்கை"

எனவும்,

"பதவுமேயல் பற்றி முயற்பற ழோம்புஞ்
சீறூ ரோளே நன்னுதல்"

எனவும்,

"நரிப்பறழ் கவர நாய் முதல் சுரக்கும்"

எனவும் முறையானே வந்தன.

நாயெனச் செந்நாய் நீர்நாய் முதலாயினவும் அடங்குமென்பது.

'மூவரியணி' யென்றவழிச் (561) சொல்லப்பட்டவாறும் உய்த்துணர்க. பிறவும் அன்ன.

(வி-ரை)

நாய் பன்றி நரி ஒரு நிகரன. புலியும் முயலும் தனி வகையன.

மேற்கூறிய ஐந்தனுள் நாயொழித் தேனைய பிள்ளைப்
பெயர்க்குமுரிய எனல்

**566. பிள்ளைப் பெயரும் பிழைப்பாண் டில்லை**
**கொள்ளுங் காலை நாயலங் கடையே.**

(இ-ள்). மேற்கூறிய ஐந்து சாதியுள்ளும் நாயொழித்து ஒழிந்த நான்கற்கும் பிள்ளையென்னும் பெயர்க்கொடையும் உரித்து (எ-று).

இவை செய்யுட்கண் வருவன கண்டுகொள்க. 'கொள்ளுங் காலை'யென்றதனுன் முற்கூறிய நாய் முதலாகிய நான்கும் விலக்கி நரிப்பிள்ளை யென்பதே கோடலும் ஒன்று. (11)

விரை)
பெயர்க்கொடை—பெயர் கொடுத்துக் கூறுதல். (11)

மறியெனும் பெயர்க்குரியன இவையெனல்

**567. யாடுங் குதிரையு நவ்வியும் உழையும்
ஓடும் புல்வா யுளப்பட மறியே.**

(இ-ள்.) இவ்வைந்து சாதியின் இளமைப் பெயர் மறியெனப்படும் (எ-று).

அவை,

"மறித்துரூஉத் தொகுத்த பறிப்புற விடையன்"
(அகம்: 94)

எனவும்,

"உள்ளில் வயிற்ற வெள்ளை வெண்மறி" (அகம்:104)

எனவும் யாட்டின்மேல் வந்தன. மறிக்குதிரையெனவும் மறி நூக்கிற்றெனவுஞ் சொல்லுதலின் இது குதிரைக்கும் உரித்தாயிற்று.

"நவ்வி நாள்மறி கவ்விக்கடன் கழிக்கும்" (குறுந்:282)

எனவும்,

"மறியாடு மருங்கின் மடப்பிணை யருத்தித்
தெள்ளறல் தழீஇய......" (அகம்:34)

எனவும்,

"தெறித்துநடை மரபில்தன் மறிக்குநிழ லாகி"
(குறுந்:213)

எனவும் இவை, நவ்வியும் உழையும் புல்வாயும் முறையானே மறியென்னும் பெயர் எய்தியவாறு அவ்வச்செய்யுளுட் கண்டு கொள்க.

நவ்வியும் உழையும் புல்வாயுள் அடங்குமன்றே, அவற்றை மூன்றாக ஓதியதென்னை? நாயென்றதுபோல அடங்காதோ வெனின், மாவென்பது, குதிரையும் யானையும் புலியுஞ் சிங்கமும் முதலாயவற்றுக்கெல்லாம் பெயராகலின் அவ்வாறு ஓதானென்பது.

'ஓடும் புல்வா' யென்றதனானே மடனுடையன நவ்வியெனவும் இடைநிகரன உழையெனவுங் கொள்க.

எட்டாம் முறைமைக்கண் ஓதிய மறியினை ஐந்தாம்வழிக் கூறியவதனானே,

"செவ்வரைச் சேக்கை வருடை மான்மறி" (குறுந்:187) என்றது போல்வன கொள்க.

(வி-ரை)

மா என்பது குதிரை யானை புலி சிங்கம் முதலியவற்றிற் கெல்லாம் பெயராயினும் அவற்றின் வேறுபாடு கருதி தனித் தனியே கூறப்படுவது போலப் புல்வாய் என்பதனுள் நவியும் உழையும் அடங்குமேனும் அவற்றின் வேறுபாடு பற்றித் தனித்தனியே கூறினர். (12

குரங்கும் குட்டியெனும் பெயர் பெறுமெனல்

**568. கோடுவாழ் குரங்குங் குட்டி கூறுப.**

(இ-ள்.) கோட்டினையே வாழ்க்கையாகவுடைய குரங்கும் குட்டியென்று கூறப்படும் (எ-று).

"கோடுவாழ் குரங்கு' எனவே குரங்கின் பிறப்புப் பகுதி யெல்லாங் கொள்க. அவை குரங்குக்குட்டி முசுக்குட்டி ஊகக் குட்டியென்பன.

உம்மை இறந்தது தழீஇயிற்றுதலான் மேற் கூறிய யாடு முதலாகிய ஐந்துசாதிக்குங் குட்டியென்னும் பெயர் கூறப் படுமென்பது. அவை யாட்டுக்குட்டி குதிரைக்குட்டி நவ்விக் குட்டி உழைமான்குட்டி புல்வாய்க்குட்டி எனவரும்

(வி-ரை)

கோடு—மரக்கிளை. குரங்கேயன்றி ஏனைய முசு ஊகமும் ஆகியவற்றையும் ஈண்டுக் கூறியது 577 ஆம் நூற்பாவினை நோக்கியாம். அந்நூற்பா உரையையும் காண்க. (13)

குரங்கிற்கு மகவு முதலியனவும் உரியவெனல்

**569. மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்பும்**
**அவையு மன்ன வப்பா லான.**

(இ-ள்) மேலைச்சூத்திரத்தெடுத்தோதிய குரங்கிற்குக் குட்டியென்னும் பெயரேயன்றி மகவும் பிள்ளையும் பறழும்

பார்ப்புமெனப்பட்ட இந்நான்கும் குட்டியென்னும் பெயர் போல அக்குரங்கின் பகுதிக்கு உரியவாம் (எ-று).

"உயர்கோட்டு
மகவுடை மந்திபோல" (குறுந்:2)

எனவும்,

"குரங்குப் பிள்ளை"

எனவும்,

"வரையாடு வன்பறழ்த் தந்தை" (குறுந்:26)

எனவும்,

"ஏற்பன வேற்பன வுண்ணும்
பார்ப்புடை மந்திய மலையிறந் தோரே" (குறுந்:278)

எனவும் வரும்,

'அன்ன' வென்பதுன் முன்னையவற்றோடொக்கும், மிகுதி குறைவு இலவென்பதாம்.

வெயிலாடு முசுவின் குருளை யுருட்டும்" (குறுந்:38)
என (564) இலேசினாற் கூறிப்போந்தமையின் ஈண்டு அது கூறு துயினன்; அன்றி, அஃது இத்துணைப் பயிலாமையானுமென்க. ஏழாமுறை நின்ற மகவினை ஈண்டு வைத்தான் அதிகாரப்பட்ட பெயர்க்குரிமையானென்பது.

வி ரை)

குரங்கினைக்குட்டி என்றற்கு இயைவது போலவே மகவு, பிள்ளை, பறல், பார்ப்பு எனக் கூறற்கும் இயைவதாம். அதிகாரப் பட்டது குரங்காம். (14)

கன்றென்னும் பெயர்க்குரியன இவையெனல்

570. யானையுங் குதிரையுங் கழுதையுங் கடமையும்
ஆவோ டைந்துங் கன்றெனற் குரிய

(இ-ள்) ஐந்தாம் எண்ணுமுறைமைக்கண் நின்ற கன் றென்னும் பெயர்க்கு இவை உரிய (எ-று)

அவை, யானைக்கன்று குதிரைக்கன்று கழுதைக்கன்று கடமைக்கன்று ஆன்கன்று எனவரும்.

"கன்றுகா லொய்யுங் கடுஞ்சுழி நீத்தம்
புன்றலை மடப்பிடிப் பூசல் பலவுடன்
வெண்கோட் டியானை விளிபடத் துழவும்" (அகம்-8)
என்பது, யானைக்கன்று.

"கன்றுபுகு மாலை நின்றோள் எய்தி" (அகம்-?)

என்பது ஆன்கன்று. பிறவும் அன்ன உளவேற் கொளுக. இனி உரியவென்றதனானே மான்கன்று குதிரைக்குட்டி யென்பனவுஞ் சொல்லுப.

(வி-ரை)

கால் ஓய்யும்—காலை இழுக்கும் (15)

கன்றென்னும் பெயர் இவற்றிற்கும் உரியதெனல்

**571. எருமையு மரையும் வரையா ரண்டே.**

(இ-ள்) எருமையும் மரையுங் கன்றெனப்படும் (எ-று).

அவை, எருமைக்கன்று, மரையான் கன்று என்பன வழக்கு.

"[1]கன்றுடை மரையா துஞ்சும்" (குறுந்:115)

கன்றூற்றுப் படுத்த புன்தலைச் சிறுஅர்
— ... ... —
குன்ற நாடற் கண்டவெங் கண்ணே" (குறுந்:241)

எனவும் வரும். - 'வரையா' ரெனவே அவையெல்லாம்போலாது சிறுவரவின என்பது பெற்றும். (16)

கன்றென்னும்பெயரை இவையும் பெறுமெனல்

**572 கவரியுங் கராமு[2] நிகரவற் றுள்ளே.**

இஃது, அவற்றொடு மாட்டெறிந்தது.

(இ-ள்) கவரியுங் கராமுங் கன்றெனப்படும் (எ-று).

---

1. மென்னடை மரையா என்றே பாடம் உள்ளது.
2. கராகமும் எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

கவரிமான்கன்று கராக்கன்று எனவரும். 'அவற்றுள்ளே யென்பது முற்கூறிய ஏழனுண் முதனின்ற (571) யானையோ டொக்கு மென்றவாறு.

இதன் பயம்,

''குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க்கொடை''

(தொல்-மர:19)

என வருகின்ற பெயரும் இவற்றுக் கெய்துவித்தலாயிற்று. அது முன்னர்ச் சொல்லும். இவையெல்லாந் தம்மினொத்த வரவின அன்மையின் வேறுவேறு சூத்திரஞ் செய்கின்றவா றுயிற்று. (17)

ஒட்டகமும் கன்றெனப்படும் எனல்

**573. ஒட்டக மவற்றோ டொருவழி நிலையும்.**

(இ-ள்) சிறுபான்மை ஒட்டகமுங் கன்றெனப்படும் (எ-று.)

அஃது, ஒட்டகக்கன்று எனவரும். 'ஒருவழி'யென்றதனானே எவற்றினும் இது சிறுபான்மை யெனவுணர்க. (18)

குழவி எனும் பெயர் யானைக்குரியதெனல்

**574. குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க்கொடை.**

(இ-ள்.) ஒழிந்துநின்ற குழவிப்பெயர் குஞ்சரத்திற்கு உரியது எ-று.)

அது,

''ஒய்யென வெழுந்த செவ்வாய்க் குழவி'' (அகம்: 165)

எனவரும். நிகரவற்றுள்ளென மேற் 572 குஞ்சரத்தோடொக்கு மேனப்பட்ட கராத்தின் குழவியுங் கவரிக் குழவியும் வந்தவழிக் கண்டுகொள்க. (19)

ஆவும் எருமையும் குழவியெனப்படும்எனல்

**575. ஆவு மெருமையு மவைசொலப் படுமே.**

(இ-ள்.) ஆவும் எருமையும் அவைபோலக் குழவிப் பெயர்க் கொடைபெறும் (எ-று)

குஞ்சரம், ஆணும்பெண்ணுமென இருகூற்றனவாகலான் 'அவை' யென்றான். மக்கண்மேல் வருங்காலும் இஃதொக்கும்.

"மடக்கண் குழவி யணவந் தன்ன
நோயே மாகுத லறிந்துஞ்
சேயர் தோழி சேய்நாட் டோரே" (குறுந்: 64)

என்பது ஆன்குழவி

"மோட்டெருமை முழுக்குழவி
கூட்டுநிழல் துயில்வதியும்" (பத்துப்-பட்.டி: (14)

என்பது, எருமைக்குழவி (20)

இவையும் குழவிப்பெயர் பெறுமெனல்.

**576. கடமையு மரையு முதனிலை யொன்றும்.**

(இ ள்.)இவையும் அப்பெயர்க்கு உரிய (எ-று).

குஞ்சரம்போலக் குழவிப்பெயர் பெறுமென்பான் 'முதனிலையொன்று' மென்றானென்பது. அவை வந்துழிக் கண்டு கொள்க.

(வி-ரை)

முதனிலை—மூந்திய சூத்திரத்திற்கு முதல் சூத்திரத்தின் நிலை:574 ஆம் நூற்பா காண்க. (21)

இவையும் குழவியெனப்படும் எனல்

**577. குரங்கு முசுவும் ஊகமு மூன்றும்**
**நிரம்ப நாடி னப்பெயர்க் குரிய.**

(இ-ள்.) இம்மூன்றுங் குழவியென்னும் பெயர்க்கு உரிய (எ-று).

'நிரம்ப நாடின்' என்பது, மூன்றுபெயரும் ஒருபிறப்பின் பகுதியாகலின் அம்மூன்றற்கும் ஒப்பவருமென்றவாறு.

இக்கருத்தானே

"கோடுவாழ் குரங்கு" (தொல்-மர: 13)

என்றவழி இம்மூன்றுங் கொண்டாமென்பது. இவற்றுக்கு உதாரணங் காணாமையிற் காட்டாமாயினும், இலக்கணம் உண்மையின் அமையுமென்பது. (22)

மக்கட்குரிய இளமைப் பெயர்

**578. குழவியு மகவு மாயிரண் டல்லவை**
**கிழவ வல்ல மக்கட் கண்ணே.**

(இ-ள்) குழவியும் மகவுமென்னும் இரண்டுமல்லது மக்கட்கணின்ற இளமை தமக்கு வேறுபெயருடையவல்ல (எ-று.)

ஆணிளமையும் பெண்ணிளமையுமென இரண்டாகலின் 'அல்லவை, யெனப் பன்மை கூறினான்.

"காவல்,
குழவி கொள்பவரி னோம்புமதி" (புறம்: 5)

எனவும்.

"மான்தோல் பள்ளி மகவொடு முடங்கி"
(பத்துப்-பெரும்பாண்: 89)

எனவும் வரும்.

'கிழவ வல்ல' என்ற மிகையானே ஆண்பிள்ளை பெண்பிள்ளையெனப் பிள்ளைப்பெயரும் மக்கட்பாற்படுவன கொள்க. (23)

இளமைப் பெயர்கள் ஓரறி வுயிர்க்குரியன

**579. பிள்ளை குழவி கன்றே போத்தெனக்**
**கொள்ளவு மமையு மோரறி வுயிர்க்கே.**

(இ-ள்.) பிள்ளை குழவி கன்று போத்தென்னும் நான்கும் ஓரறிவுயிரின் இளமைப்பெயர் (எ-று).

ஓரறிவுயிரென்பன முன்னர்ச் (583) சொல்லப்படும். ஓரறிவுயிரென்பது, பண்புத்தொகை.

'கமுகம்பிள்ளை' 'தெங்கம்பிள்ளை,

எனவும்.

"வீழில் தாழைக் குழவித் தீநீர்"
(பத்துப்-பெரும்பாண்: 357)

எனவும்.

'பூங்கன்று'

எனவும்,

'போத்துக்கால்'

எனவும் வரும்.

வீழிருழை யெனப்பட்டது தெங்கு. போத்துக்காலென் பது கரும்பு.

ஓரறிவுயிர்க்குக் கொள்ளவும் அமையும் என்னும் உம்மையை எச்சப்படுத்துப் பிறவழியுங் கொள்ளப்படும்; அவை,

'குழவிவேனில்' (கலி:36)

எனவும்,

'குழவித்திங்கள்' (கலி-103, சிலப் 2:38)

எனவும்,

'குழவிஞாயிறு' (பெருங்1--33:29)

எனவும்,

''பகுவாய் வராஅற் பல்வரி யிரும்போத்து'' (அகம்:36)

எனவும்,

''புலிப்போத் தன்ன புல்லணற் காளை'' (பெரும்பாண்;138)

எனவும் இவையும் இளமைக்குறிப்பினவாகலிற் காட்டப்பட்டன

மற்று, ஓரறிவுயிர் ஈண்டுக் கூறியதென்னையெனின், குழவிப் பெயர் அதிகாரப்பட்டமையானென்பது.

மற்றுப் புல்லும் மரனும் உயிரெனப்படுமோவெனின்,— அவற்றை யுயிரென்றன் மரபுபட்ட வழக்காகலின் அம்மரபுங் கோடற்குக் கூறினன், மரம் உய்ந்த'தென்பவாகலின். (24)

மேற் கூறப்பட்ட பெயர்களை நெல்லும் புல்லும் பெறுவெனல்

## 580. நெல்லும் புல்லு நேரா ரீண்டே

இஃது, எய்தியது விலக்குகின்றது.

(இ-ள்) அந்நான்கு பெயரானும் நெல்லும் புல்லுஞ் சொல்லப்படா (எ-று).

மற்றுப்,

''புறக்கா ழனவே புல்லென மொழிப'' (தொல்-மர:85)

எனுமாகலான் மேற்காட்டிய கமுகு முதலாகிய புல்லும் விலக்குண்ணும் பிறவெனின், அற்றன்று; புல்லென்பது பல பொருளொரு சொல்லாகலான் நெல்லென்னும் இனத் தானே வேறுபடுத்துப் புல்லென்பது (புறம்;248) உணவின்மேற் கொள்க. (25)

இளமைப் பெயர் அவையன்றி வேறிலவெனல்

581. சொல்லிய மரபி னிளமை தானே
சொல்லுங் காலை யவையல விலவே

இது, புறனடைச் சூத்திரம்.

(இ-ள்). சொல்லிய மரபின் இளமை "பாடலுட் பயின்றவை நாடுங் காலை" (தொல்-அகத்:3) எனவும், "பாடல் சான்ற புலனெறி வழக்கு" (தொல்-அகத்:53) எனவும், அகத்திணையியலுட் கூறிய புலனெறி வழக்கிற்றாகிய இளமை; சொல்லுங்காலை அவையல இல—அவற்றுக்கு இலக்கணங் கூறுங்கால், வேறு பலவின்றி வரும்; இங்ஙனம் வரையறைப் பட்டன அன்றி (எ-று)

'இளமையும் அவையல இல'வெனவே அதற்கு மறுதலையாகிய முதுமையாயின் அவையலதிலவென்பதோர் வரையறைப் படுத்து இலக்கணங் கூறப்படாவென்பது கருத்து.

'சொல்லுங்காலை' யென்றதனாற் சொல்லாத இளமைப் பெயருங்கொள்க, அவை,

"நன்னாட் பூத்த நாகிள வேங்கை' (அகம்:85)

எனவும்,

"நாகிளவளை" (புறம்:266)

எனவும்,

"கணைக்கோட்டு வாளைக் கமஞ்சூல் மடநாகு" (குறுந்:164)

எனவும்,

"எருமை நல்லான் கருநாகு பெறூஉம்" (பத்துப்-பெரும்பாண்:165)

எனவும் வரும், இவற்றுள் ஓரறிவுயிர் முதலாக ஐந்தறிவுயிரளவும் நாகென்னும் இளமைப்பெயர் வரையறையின்றிச் சென்றது; வண்டென்பதற்கும் ஒக்கும், அது விரவுப் பெயராகலின்

(வி-ரை)

நாகு என்பது ஓரறிவு முதல் ஐயறிவுவரையுள்ள உயிர்க்கும் பொதுவாகலின் அதனை விரவுப் பெயரென்றார். (26)

ஓரறிவுயிர் முதலியன

582. ஒன்றறி வதுவே யுற்றறி வதுவே
யிரண்டறி வதுவே யதனொடு நாவே
மூன்றறி வதுவே யவற்றொடு மூக்கே
நான்கறி வதுவே யவற்றொடு கண்ணே
யைந்தறி வதுவே யவற்றொடு செவியே
யாறறி வதுவே யவற்றொடு மனனே
நேரிதி னுணர்ந்தோர் நெறிப்படுத் தினரே.

இது, மேல் அதிகாரப்பட்ட ஓரறிவுயிர் உணர்த்தும்வழி அவ்வினத்தனவெல்லாங் கூறுதல் நுதலிற்று.

(இ-ள்) ஒன்றறிவதென்பது ஒன்றனையறிவது; அஃதாவது உற்றறிவதென்பதும்; இரண்டறிவதென்பது அம்மெய்யுணர்வினோடு நாவுணர்வுடையதெனவும், மூன்றறிவுடையது அவற்றோடு நாற்றவுணர்வுடையதெனவும், நான்கறிவுடையது அவற்றோடு கண்ணுணர்வுடையதெனவும், ஐந்தறிவுடையது அவற்றோடு செவியுணர்வுடையதெனவும், ஆறறிவுடையது அவற்றோடு மனவுணர்வுடையதெனவும், அம்முறையானே நுண்ணுணர்வுடையோர் நெறிப்படுத்தினார் (எ-று).

இது முறையாதற்குக் காரணமென்னையெனின், — எண்ணு முறையாற் கூறினாரென்பது; அல்லதூஉம், எல்லா உயிர்க்கும் இம்முறையானே பிறக்கும் அவ்வவற்றுக்கோதிய அறிவுகளென்றற்கு அம்முறையாற் கூறினாரென்பது; என்னை அது பெறுமாறெனின், — நேரிதினுணர்ந்தோர் நெறிப்படுத்தினரென்பதனாற் பெறுதும்.

மற்று, ஒன்றுமுதல் ஐந்திறுகிய பொறியுணர்வு மனமின்றியும் பிறப்பனபோல வேறு கூறியதென்னையெனின், — ஓரறிவுயிர்க்கு மனமின்மையின் அங்ஙனங் கூறினாரென்பது. அதற்கு உயிருண்டாயின் மனமின்றாமோ எனின், உயிருடையவாகிய நந்து முதலாகியவற்றுக்குச் செவி முதலாய பொறியின்மை கண்டிலையோவென்பது. அவ்வாறே ஒழிந்தவற்றிற்கும் மனவுணர்வில்லையென்பாரும் மனமுண்டென்பாருமென இருபகுதியர். அவையெல்லாம் வல்லார்வாய்க் கேட்டுணர்க.

அல்லதூஉம் பொறியுணர்வென்ப தாமே உணரும் உணர்ச்சி; அங்ஙனம் உணர்ந்தவழிப் பின்னர் அவற்றை மனஞ் சென்று கொள்ளுமென்பதென்னையெனின், — மனம் ஒன்றினை நினையாநிற்க மற்றொன்று கட்புலனாயக்கால் அதனைப் பொறியுணர்வு கொள்ள அதன்வழியே மனந்திரிந்து செல்லுமாகலின்; என்னை? மனனுணர்வு மற்றோர் பொருட்கண் நின்றகாலத்துப் பிறபொருட்கட் சென்றதெனப் படாதன்றே? பின்னர் அதனை அறிவித்தது பொறியுணர்வாகலான் அவை தம்மின் வேற்றுமையுடையன வென்பது.

அல்லதூஉந் தேனெய்யினை நாவின்பொறி உணர்ந்தவழி இன்புற்றுங், கண்ணுள் வார்த்து மெய்யுணர்வுணர்ந்தவழித் துன்புற்றும், நறிதாயின் மான்மதத்தினை மூக்குணர்வுணர்ந்தவழி இன்புற்றுங், கண்ணுணர்வுணர்ந்தவழி இன்பங்கொள்ளாமையும் வருதலின் அவை பொறியுணர்வெனப்படும். மனவுணர்வும் ஒருதன்மைத்தாதல் வேண்டுமாலெனின்,- ஐயுணர்வின்றிக் கனாப்போலத் தானே யுணர்வது மனவுணர்வெனப் படும். பொறியுணர்வு மனமின்றிப் பிறவாதெனின், முற்பிறந்தது மனவுணர்வாமாகவே பொறியுணர்வென்பது ஓரறிவின்றாகியே செல்லுமென்பது.

அற்றன்றியும், ஒருவனுறுப்பிரண்டு தீண்டியவழி அவ்விரண்டும் படினும் ஒருகணத்துள் ஒருமனமே இருமனப்பட்டு அவ்வுறுப்பிரண்டற்கும் ஊற்றுணர்வு கெடாது கவர்ப்ப வாங்கிக் கைக்கொண்டு மீளுமென்பது காட்டலாகாமையானும் அஃதமையாதென்பது.

(விரை)

உற்று அறிவது—தொட்டு அறிவது

இவற்றை இம்முறையே கூறுதற்குரியகாரணம் இரண்டாம் ஒன்று ஒன்று இரண்டு என எண்ணுமுறை பற்றியாம். பிறிதொன்று உயிர்கட்கு அறிவு வளர்ச்சி இம்முறையானே வளருமென்பது பற்றியாம்.

ஓரறிஉயிரும் மன உணர்வுடையது என்றும் இன்பதுன்ப உணர்வுடையது என்றும் தொட்டால் சுருங்கி, அனிச்சமலர் முதலியன கொண்டு அறுதியிடுவர்.

பொறியுணர்வு முன்னதாய் மனஉணர்வு அதன் பின்னதாய் எழுதல் இயற்கை எனினும் பொறியுணர்வு இன்றியும் மனவுணர்வு நனவிலும் கனவிலும் செயற்படுதல் கண்கூடு. ஆனால் மனவுணர்வோடு இயைந்து பொறியுணர்வு செயல்பட்டாலன்றி உயிர் அப்பொறியுணர்வால் மட்டும் செயற்படுவதில்லை.

தேன் நெய்—தேன் குழம்பு. மன உணர்வும் ஒரு தன்மைத்தாகல்—மனவுணர்வு பொறியுணர்வாதலன்றித்தனக்கென ஒரு தன்மை உடையதாகும். கனாக் காண்புழி இந்நிலை உண்டென்பது தெளிவு. நனவிலும் ஒரோவழி பொறியுணர்வின்றிச் செயற்படுதலுமுண்டு. (27)

ஓரறிவுயிர்

583. புல்லு மரனு மோரறி வினவே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே.

இது முறையானே ஓரறிவுடையன வுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) புறக்காழனவாகிய புல்லும் அகக்காழனவாகிய மரனும் ஓரறிவுடைய; பிறவும் அக்கிளைப் பிறப்பு உள்ளன (எ-று)

'கிளைப்பிறப்' பென்பது கிளையும் பிறப்புமென்றவாறு. கிளையென்பன; புறக்காழும் அகக்காழுமின்றிப் புதலுங் கொடியும் போல்வன. பிறப்பென்பன, மக்களானும் விலங்கானும் ஈன்ற குழவி ஓரறிவின் ஆகிய பருவமும், எஞ்ஞான்றும் ஓரறிவினவே யாகிய என்பில் புழுவுமென இவை. இவை வேறு பிறப்பெனக் கொள்க.

மற்று இவற்றுக்கு அறிவில்லை பிறவெனின், பயிலத் தொடுங்காற் புலருமாகலின் ஓரறிவுடையவென வழக்கு நோக்கிக் கூறினன், இது வழக்குநூலாதலின் - அஃதேல் இவை உணர்ச்சியாயின் இன்பதுன்பங் கொள்ளுமோவெனின் அதற்கு மனமின்மையின் அது கடாவன்றென்பது

(வி-ரை)

பிறவாவன—கொட்டியும் தாமரையும் கழுநீரும் என்பர் இளம்பூரணர். (28)

ஈரறிவுயிர்

**584. நந்தும் முரளு மீரறி வினவே**
**பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே.**

இது, முறையானே ஈருணர்வுடையன உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) நந்தும் முரளும் ஈரறிவாகிய ஊற்றுணர்வும் நாவுணர்வுமுடையன. பிறவும் அக்கிளைப் பிறப்பு உள (எ-று.)

இரைசுவைகோடலும் பிறிதொன்று தாக்கியவழி அறிதலுமுடைமையின் மெய்யுணர்வோடு நாவுணர்வு முடையன வென்றவாறு. இவற்றுக்குக் கிளையென்பன கிளிஞ்சிலும் முற்றிலும் முதலாகிய கடல்வாழ் சாதியும் பிறவுமெனக் கொள்க. பிறப்பென்பன முற்கூறியாவாறே கொள்ளப்படும்.

(வி-ரை)

முற்றில்—மட்டிச் சுண்ணும்பு என்பர். இது பொருந்துமா என்பது ஆய்தற்குரியது. நந்து என்றதனால் சங்கு, நத்தை, அலகு, நொள்ளை என்பனவும், முரள் என்றதனால் இப்பி, கிளிஞ்சில், ஏரல் என்பனவும் கொள்க என்பர் இளம்பூரணர். (29)

மூவறிவுயிர்

**585. சிதலு மெறும்பு மூவறி வினவே**
**பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே**

இது, மூவறிவின கூறுகின்றது.

(இ-ள்.) சிதலும் எறும்பும் ஊற்றுணர்வும் நாவுணர்வும் மூக்குணர்வு முடைய; அவற்றுக் கிளையும் பிறப்பும் அவ்வாறே மூவறிவுடைய (எ-று).

இவை உற்றுணர்ந்து மீடலும் நாச்சுவை கோடலும் நெய்யுள்வழி மோந்தறிதலுமென மூன்றறிவினையுடையவாறு கண்டு கொள்க இவற்றுக்குக் கண்ணுஞ் செவியுமின்மை எற்றால் அறிதுமெனின்-ஒன்று தாக்கியவழியன்றி அறியாமையிற் கண்ணிலவென்பதறிதும்; உரப்பியவழி ஓடாமையிற் செவியில வென்பதறிதும் இவற்றின் கிளையென்பன ஈயன்மூதாய்

போல்வன. பிறப்பென்பன, முற்கூறியவாறே மக்கட் குழவியும் விலங்கின் குழவியும் இம்மூன்றுணர்வாகிய பருவத்தனவும் அட்டை முதலாகியவுமெல்லாங் கொள்க.

(வி-ரை)

சிதல்—கறையான் உரப்பியவழி—ஒலி எழுப்பிய விடத்து. ஈயல் மூதாய்—இந்திர கோபம்; தம்பலப் பூச்சி.

இவ்வாறும் அறிதலாவது; உடம்பினுல் வெப்பம் தட்பம் வன்மை மென்மை அறியும் நாவினுற் கைப்பு, காழ்ப்பு, துவர்ப்பு' புளிப்பு, மதுரம் என்பன அறியும், மூக்கினுல் நன்னுற்றம் தீய நாற்றம் அறியும். கண்ணினுல் வெண்மை, செம்மை, பொன்மை பசுமை, கருமை நெடுமை, குறுமை, பருமை, நேர்மை, வட்டம், கோணம், சதுரம் என்பன அறியும். செவியினுல் ஓசை வேறுபாடும் சொற்படும் பொருளும் அறியும். மனத்தினுலறியப் படுவது இது போல்வன வேண்டுமெனவும், இது செயல் வேண்டுமெனவும், இஃது எத்தன்மையெனவும் அனுமானித்தல் அனுமானித்தலாவது புகை கண்ட வழி நெருப்புண்மை கட்புலன் அன்முயினும் அதன் கண் நெருப்பு உண்டென்று அனுமானித்தல் என்பர் இளம்பூரணர்.

நன்னூலார் உயிரினத்தை ஐவகையாகப் பிரிப்பர்.

'மெய்ந்நா மூக்கு நாட்டஞ் செவிகளின், ஒன்று முதலாக் கீழ்க் கொண்டுமே லுணர்தலின், ஓரறி வாதியா வுயிரைந் தாகும்' என்னும் நன்னூல். ''ஆறறிவதுவே அவற்றெருடுமனனே', ''மக்கட்தாமே ஆறறி வுயிரே' பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே'' (மரபு-சூ 27,33) எனத் தொல்காப்பியம் ஆருவது அறிவும் அதனையுடைய உயிரும் உண்டென்று கூறும்; 'அவர்' மனத்தையும் ஒரு பொறியாக்கி அதனுன் உணரும் மக்களையும் விலங்கினுள் ஒரு சாரனவற்றையும் ஆறறிவுயிரென்முர்; இவர் அம்மனக்காரிய மிகுதி குறைவாலுள்ள வாசியல்லது அஃது எல்லாவுயிர்க்கும் உண்டென்பார் மதம் பற்றி இவ்வாறு சொன்னுரென்க! எனவும் கூறுவர் மயிலைநாதர். (.0)

நான்கறிவுயிர்

586. நண்டுந் தும்பியு நான்கறி வினவே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே.

நண்டுந் தும்பியும் நான்கறிவினவெனவும், அந்நாலறிவினை யுடைய கிளையும் பிறப்பும் வேறுளவென்பதூஉங் கூறியவாறு.

(இ-ள்.) நண்டிற்குந் தும்பிக்குஞ் செவியுணர்வொழித்து ஒழிந்த நான்கு உணர்வும் உள; அவற்றுக் கிளையும் பிறப்பும் பிறவும் உள (எ-று.)

மெய்யுடைமையின் ஊற்றுணர்வும், இரைகோடலின் நாவுணர்வும், நாற்றங்கோடலின் மூக்குணர்வும், கண்ணுடைமையிற் கண்ணுணர்வுமுடையவாயின. நண்டிற்கு மூக்குண்டோவெனின், அஃது ஆசிரியன் கூறலான் உண்டென்பது பெற்றாம். இவற்றுக்குக் கிளையென்பன வண்டுந் தேனீயுங் குழவியும் முதலாயின. பிறப்பென்பன நான்கறிவுடைய பிற சாதிகளென முற், கூறியவாறே கொள்க.

(வி-ரை)

நன்னூலார் 'தும்பி, வண்டு, ஆதி, கண்ணறிவின் நாலறியுயிர்' என்பார். நச்சினார்க்கினியரும் தும்பியும் வண்டும் செவியறிவும் உடையன என்பர். ஆதலின் வண்டும் தும்பியும் எனப் பாடம் இருந்திருக்குமோ என நினைய இடனுண்டு. நண்டுக்கு மூக்கில்லை என்பது இக்காலத்தார் கருத்து. பிறவும் என்றதனால் ஞிமிறு, சுரும்பு என்பன கொள்க என்பர் இளம்பூரணர். (31)

ஐயறிவுயிர்

587. மாவு மாக்களும்[1] ஐயறி வினவே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே.

இஃது, ஐயறிவுடையன கூறுகின்றது.

(இ-ள்.) ஐயறிவுடையன விலங்கும் அவை போல்வன ஒருசார் மானிடங்களுமாம். அக்கிளைப்பிறப்புப் பிறவும் உள (எ-று).

1. ஒத்து என்னும் பாடம் உளது.

மாவென்பன - நாற்கால்விலங்கு. மாக்களெனப்படுவார்-மனவுணர்ச்சியில்லாதார். கிளையென்பன எண்கால் வருடையுங் குரங்கும் போல்வன. எண்காலவாயினும் மரவெனப்படுதலின் வருடை கிளையாயிற்று. குரங்கு நாற்காலவாகலிற் கிளையாயிற்று. பிறப்பென்பன கிளியும் பாம்பும் முதலாயின.

மற்றுப் பாம்பிற்குச் செவியுங் கண்ணும் ஒன்றேயாகிக் கட்செவி யெனப்படுமாகலின் ஐயறிவில்லை பிறவெனின்,-பொறி யென்பன வடிவுநோக்கின அல்லவாகலின் ஒன்றே இரண்டுணர் விற்கும் பொறியாமென்பது. கிளியென்பது பறவையாகலின் அதனை வேறோதுகவெனின், [1]முன்னையவற்றிற்கும் பறவையென் றோதிய திலனுகலான் அவ்வச்சூத்திரங்களானே எல்லாம் அடங்குமென்பது.

மற்றுப் புல்லும் மரனும் முதலாக (583-587 வரை) இவ் விரண்டு பிறப்பெடுத்தோதி ஒழிந்தனவற்றையெல்லாம் பிறவு முளவெனப் புறனடுத்ததென்னையெனின், - அவை வரையறை யிலவாகலின் அங்ஙனங்கூறினுன். அல்லதூஉம், மக்களும் புள் ளும் விலங்கும் முதலாயின ஓரறிவினவென்றும் ஈரறிவினவென் றும் எண்ணி வரையறுக்கப்படாமையானும் அவ்வாறு கூறினு னென்பது.

(வி-ரை)
எண்கால் வருடை-செங்குத்தான மலையில் வசிக்கும் ஒரு வகை விலங்கு: குறுந்தொகை 187 உரை நோக்குக. முன்னைய வற்றிற்கும்-மூற்கூறிய பிறப்புகளுக்கும். (32)

ஆறறிவுயிர்

588. மக்கள் தாமே யாறறி வுயிரே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே.

இஃது, ஆறறிவுயிர் கூறுகின்றது.

---

1. முன்னையவற்றிற்குப் பறவை வேறு ஓதியது இலனுகலான் என்றிருப்பின் பொருத்த முடைத்து.

(இ-ள்.) மக்களெனப்படுவோர் ஐம்பொறியுணர்வேயன்றி மனமென்பதோர் அறிவும் உடையர்; அக்கிளைப் பிறப்பு வேறும் உள (எ-று).

முப்பத்திரண்டு அவயவத்தான் அளவிற்பட்டு அறிவொடு புணர்ந்த ஆடூஉ மகடூஉ மக்களெனப்படும். அவ்வாறு உணர்விலுங் குறைவுபட்டாரைக் குறைந்தவகை அறிந்து மூற்கூறிய சூத்திரங்களானே அவ்வலப் பிறப்பினுட் சேர்த்திக்கொள்ள வைத்தானென்பது. அவை, ஊமுஞ் செவிடும் குருடும் போல்வன. கிளையெனப்படுவார் தேவருந் தானவரும் முதலாயினர். பிறப்பென்றதனாற், குரங்கு முதலாகிய விலங்கினுள் அறிவுடையன வெனப்படும் மனவுணர்வுடையன உளவாயின் அவையும் ஈண்டு ஆறறிவுயிராயடங்குமென்பது. 'நாமே'யெனப் பிரித்துக் கூறினமையான் நல்லறிவுடையாரென்றற்குச் சிறந்தாரென்பதுங் கொள்க.

(வி-ரை)

உறுப்பானும் உணர்வானும் நிறைவுடையவரே மக்களாவர். இவ்விரண்டனுள் ஒன்று குறைந்த வழியும் 'சிறப்பில் சிதடும் உறுப்பில் பிண்டமும் கூனும் குறளும் ஊமும் செவிடும் மாவும் மருளும் உளப்படவாழ்நர்க்கு எண்பேரெச்சம் என்று இவையெல்லாம் பேதமையல்லது ஊதியம் இல்லென முன்னும் அறிந்தோர் கூறினர்' 'உறுப்பு ஒத்தல் மக்கள் ஒப்பு அன்று' என்றும், 'ஊண் உடை எச்சம் உயிர்க்கெல்லாம் வேறல்ல நாணுடைமை மாந்தர்தம் சிறப்பு' என்றும் கூறுமாறு காண்க.

அநுமன், வாலி, சுக்ரீவன் முதலியோர் குரங்கினத்தவராயினும் அவர்கள் தம் அறிவுடைமை மிக உயர்ந்தது என்பது இராமாயண வரலாற்றால் அறிந்ததொன்று. எனவே உயர்வு இழிவு என்பது பிறப்பினாலன்று என்பது விளங்கும்.

பிறவாவன தேவர், அசுரர், இயக்கர் முதலாயினோரின் பிறப்புக்கள் என்பர் இளம்பூரணர். நன்னூலார் "வானவர் மக்கள் நரகர் விலங்கு புள், ஆதிசெவியறிவோடு ஐயறிவுயிரே" என்பர். இங்குக் கூறப்பெற்ற மக்கள் நரகர் வானவரையே" 'மக்கள் தேவர் நரகர் உயர்திணை' என முன்னும் கூறினர். எனவே

நன்னூலார்க்கு ஆறறிவுடைய உயிரினம் இல்லையென்பது கருத்தாகின்றது. தொல்காப்பியர்க்கோ ஆறறிவுடை உயிரினம் உண்டென்பதும், அதுவே மக்களினம் என்பதும் அம் மக்களிடம் தானும் நன்கு மதித்தற்கு உரிய உயர்நிலை இருக்கும் பொழுதே உயர்திணையெனப்படும் என்பதும் கருத்தாகும். இதனை இந்நூற்பாவில் 'உயர்திணையென்மனார் மக்கட் சுட்டே' எனக் கூறுமாற்றானும் நன்கறியலாம். அங்ஙனமாகவும் சிவஞானமுனிவர், ஆசிரியர் தொல்காப்பியர் "மக்கடாமே யாறறி வுயிரே" எனக் கூறியிருக்க மக்கள் முதலியோரை ஐயறிவுயிரெனக் கூறல் மாறுகொளக் கூறலாம் பிறவெனின்-: மக்கள் முதலியோர் மனவறிவோடு ஆறறிவுயிரென்பது நோக்கியன்றே முன்னர் 'மக்கடேவர் நரக ருயர் திணை' எனக் கூறிப் போந்ததூஉம் ஆதலின் இங்ஙனம் ஐம்புலன் மாத்திரையே நுகரும் அறிவுடைய மக்கள் முதலியோரை விலங்கு முதலியவற்றோடு எண்ணி ஐயறிவுயிரெனக் கூறினாரென உய்த்துணர்ந்து கொள்க எனக் கூறுவது பொருத்தமில் கூற்றேயாம்.

இந்நூற்பாவை அடுத்து இளம்பூரணத்தில் ஒரு நூற்பா உளது. ஒரு சார் விலங்கும் உளவென மொழிப என்பது அந் நூற்பாவாகும். அவையாவன: கிளியும் குரங்கும் யானையும் முதலாயின என்பர் இளம்பூரணர். (33)

யானையும் கேழலும் களிறெனப்படுமெனல்

589 [1]வேழக் குரித்தே விதந்துகளி றென்றல்
கேழற் கண்ணுங் கடிவரை யின்றே.

'மக்கடாமே ஆறறிவுயி'ரெனப் பிரித்துக் கூறினமையால் ஆண்பால் அதிகாரப்பட்டது கண்டு மற்றை விலங்கினுள் ஆண் பாற்குரியன கூறிய தொடங்கியவாறு.

நிறுத்தமுறையாற் கூறாது களிற்றினை முற்கூறினான் அப் பொருள் விலங்கினுட் சிறந்தமையானென்பது. ஏறும் ஏற்றையும் பயின்ற வரவினவாகலின் முதற்சூத்திரத்துண் (557) முற் கூறினானென்பது.

1. இந்நூற்பாவில் முதலடியை ஒரு நூற்பாவாகவும், அடுத்த அடியைப் பிறிதொரு நூற்பாவாகவும் கொள்வர் இளம் பூரணர்.

(இ-ள்.) யானைக்கு விதந்து களிறென்றலுரித்து; கேழற் கண்ணுஞ் சிறுபான்மை வரும் (எ-று).

'விதந்'தென்ற விதப்பினாற் களிறென்பது சாதிப்பெயர் போலவும் நிற்குமென்பது; அஃதாவது, யானையென்னுஞ் சாதிப் பெயரினைக் களிறென்னும் பெயர்வந்து குறிப்பித்தால்.

"கடுங்களிற் றொருத்தல்" (கலி: 2)

என்றும் ஆகுமென்பது.

"இரலைமா னேறு"

என்பதும் அதனாற் கொள்க.

பன்றிக்கும் அவ்வாறு வருவனவுளவேற் கொள்க.

"கேழற் பன்றி" (புறம்: 152)

என்பதனைக் களிற்றுப்பன்றியென்றுஞ் சொல்லுப.

(விரை)

நிறுத்தமுறையால்-மேல் 557-ஆம் நூற்பாவிவ் கூறிய முறையால். முதல் சூத்திரத்துள்-முனபு கூறப்பட்ட 557-வது சூத்திரத்துள்.

களிறு என்பது யானையுள் ஆணைக்குறிப்பதன்றிப் பொதுப் பட அவ்வினத்தையுணர்த்துவது முண்டு என்பது கருத்து. கடுங் களிற்று ஒருத்தல் என்ற விடத்து ஒருத்தல் என்பது ஆண்பால் என்பதை உணர்த்திற்று. களிறு என்பது யானையை உணர்த் திற்று இரலைமான் ஏறு என்ற விடத்து இரலை என்பது மான் இனத்தையே பொதுப்பட உணர்த்திற்று. (34)

ஒருத்தலெனும் பெயர் பெறுதற்குரியன.

**590. புல்வாய் புலியுழை மரையே கவரி**
**சொல்லிய கராமோ டொருத்த லொன்றும்.**

**591. வார்கோட்டியானையும் பன்றியு மன்ன.**

**592. ஏற்புடைத் தென்ப வெருமைக் கண்ணும்.**

இவை, உரையியைபுநோக்கி உடனெழுதப்பட்டன.

(இ-ள்.) இவை, ஒன்பதுபெயரும் ஒருத்தலென்னும் பெய ருக்கு ஒன்றும் (எ-று).

இவற்றைப் பெரும்பான்மை சிறுபான்மை பற்றி மூன்று சூத்திரத்தான் ஓதினானென்பது. உதாரணம்,

"காடுமீக் கூறுங் கோடேந் தொருத்தல்" (அகம்: 65)

என யானை ஒருத்தலென்றாயிற்று. பிறவும் வந்தவழிக் கண்டு கொள்க.

(வி-ரை)

590 வது நூற்பா முதல் இந்நூற்பாவரை கூறப்பட்ட விலங்கினங்கள் ஒன்பதாம். அவை ஒன்பதும் ஆண்பாலாய் வருமிடத்து ஒருத்தல் எனப் பெயர் பெறும். அங்ஙனமாக அவற்றை ஒரே நூற்பாவாகக் கூறாது மூன்றாகப் பிரித்துக் கூறியது, அவ்வவ்வினங்களிற் இவ்வாண்பாற் பெயர் வருதலில் பெரும்பான்மை சிறுபான்மை இருத்தல்பற்றியாம். (.7)

ஏறெனப் பெயர் பெறுதற்குரியன

**593. பன்றி புல்வா யுழையே கவரி**
**யென்றிவை நான்கு மேறெனற் குரிய**

**594. எருமை மரையும் பெற்றமு மன்ன**

**595. கடல்வாழ் சுறவு மேறெனப் படுமே**

இம்மூன்று சூத்திரத்தான் ஓதிய எட்டுச்சாதியின் ஆண் பாலும் ஏறெனப்படும் (எ-று).

"காற்றுச்சுவ டொற்றுக் கடிபுனங் கவரு
மேற்றிளம் பன்றியி னிருளை வெரூஉம்"

எனவும்,

"வெருளேறு பயிறு மாங்கண்" (அகம்: 121)

எனவும்,

"பொரிமலர்ந் தன்ன பொறியமை மடமான்
திரிமருப் பேறொடு தேரறேர்க் கோட" (கலி: 13)

எனவும்,

"ஏற்றிளங் கவரி யெரியென வெருவப்
பூத்த விலவத்துப் பொங்க ரேறி"

எனவும்,

"ஏற்றெருமை நெஞ்சம் வடிம்பி னிடந்திட்டு" (கலி: 103)
எனவும்,
"வரிமரற் பாவை மரையேறு கறிக்கும்"
எனவும்,
"புலம்பயி ரருந்த வண்ண னல்லேறு (குறுந்: 344)
எனவும்,
"சுறவே றெழுதிய மோதிரந் தொட்டாள்" (கலி: 84)
எனவும் வரும். பிறவும் அன்ன. (40)

போத்தெனும் பெயர் பெறுதற்குரியன.

596. பெற்ற மெருமை புலிமரை புல்வாய்
மற்றிவை யெல்லாம் போத்தெனப் படுமே.

597. [1]நீர்வாழ் சாதியு ளறுபிறப் புரிய.

598. மயிலு மெழாலும் பயிலத் தோன்றும்.

(இ-ள்) போத்தென்னும் பெயர் இப்பதின்மூன்று சாதியின் ஆண்பாற்கு முரியது (எ-று).

'மற்றிவை யெல்லா' மென்றதனாற் பன்றியும் ஒந்தியும் முதலாயினவும் கொள்ளப்படும். நீர்வாழ்சாதியுள் அறுபிறப் பென்பன சுறவும் முதலையும் இடங்கருங் கராமும் வராலும் வாளையுமென இவை.

'பயிலத் தோன்று' மென்றதனானே நாரை முதலியனவுங் கொள்க. மற்றிவை பயிலத்தோன்றுமெனிற் சூத்திரம் வேறு செய்ததென்னை? முதற்சூத்திரத்துள் எண்ணுக பிறவெனின், இவை பறவையுட் பயிலத்தோன்றுமாகலின் வேறோதினு னென்க.

'எறிபோத்து' உழுபோத்து, எருமைப்போத்து'
எனவும்,
"புலிப்போத் தன்ன புல்லணற் காளை"
(பத்துப், பெரும்பாண்: 138)
எனவும்,

---

1. நீர் வாழ் சாதியும் அதுபெறற்குரிய என்பது இளம்பூரணரின் பாடம் ஆகும்.

"மரைப்போத்து"

எனவும்,

"கவைத்தலை முதுபோத்து காலி ஞெற்றி

— — — ...

தெறித்துநடை மரபில்தன் மறிக்குநிழ லாகும்" (குறுந்: 13)

எனவும் வரும்.

'எல்லா' மென்றதனாற் பன்றிப்போத்தெனவும் வரும்.

"முதலைப் போத்து முழுமீ னாரும்" (ஐங்குறு: 5)

எனவும்,

"பகுவாய் வராஅற் பல்வரி யிரும்போத்து" (அகம்:36)

எனவும்,

"வாளை வெண்போத் துணீஇய" (அகம்:276)

எனவும், நீர்வாழ்சாதியுட் சில வரும்.

"மயிற்போத் தூர்ந்த அயிற்படை நெடுவேள்"

எனவும்,

"போத்தொடு வழங்கா மயிலு மெழாலும்"

எனவும் வந்தவாறு.

'பயில' என்றதனால்,

"நாரை நிரைபோத் தயிரை யாரும்" (குறுந்:166)

எனவும் ஒழிந்தனவும் இவ்வாறே கண்டு கொள்க. மற்று முதலையும் இடங்கருங் கராமுந் தம்மின் வேறெனப்படுமோ வெனின்,

"கராஅங் கலித்த குண்டுகண் ணகழி
யிடங்கருங் குட்டத்து உடன்தொக் கோடி
யாமங் கொள்பவர் சுடர்நிழற் கதூஉங்
கடுமுரண் முதலைய நெடுநீ ரிலஞ்சி" (புறம்:37)

என வேறெனக் கூறப்பட்டனவென்பது.

இனிச், செம்போத்தென்பதும் கண்டுக் கொள்ளாமோ வெனின், அது பெண்பாற்கும் பெயராகலின் ஒரு பெயரே: பண்புகொள் பெயரன் றென்பதுணர்க.

(வி-ரை)

எழாஅல்-வல்லூறு. போத்தொடு வழங்கா மயிலும் எழாஅலும் என்னும் வரி இந்நூற்பாவொடு மாறுபாடுடையதாம்.

அன்றியும் மயிற் போத்து உளர்ந்த என மயிலுக்குப் போத்தென்னும் பெயர் உளவாகக் காட்டியதற்கேற்ப அதனையடுத்து எழாஅலுக்கும் காட்டியிருத்தல் வேண்டும். அன்றி எழாஅல் அப்பெயர் பெறுதாயினும் அதனை யட்டும் விலக்குதலே தக்கதாம். எனவே இவ்வரி இங்கிருத்தல் பொருத்தமன்று. (45)

இரலை, கலையெனும் பெயர் பெறுதற் குரியன

**599. இரலையுங் கலையும் புல்வாய்க் குரிய.**

**600. கலையென் காட்சி யுழைக்கு முரித்தே.**

**601. நிலையிற் றப்பெயர் மூசுவின் கண்ணும்.**

இவை மூன்று சூத்திரமும் எண்ணிய மூன்று சாதிக்கும் இரலையுங் கலையுமென்னும் ஆண்பாற் பெயர் இன்னவாறுரிய வென்கின்றன.

(இ-ள்) இரலையுங் கலையுமென்பன புல்வாய்க்குரிய; அவற்றுட் கலையென்பது உழைக்குமுரித்து; அக்கலையென்பது மூசுவிற்கு வருங்கால் உழைக்குப்போலச் சிறுவரவிற்றன்றி வரும் (எ-று).

"புல்வா யிரலை நெற்றி யன்ன" (புறம்:374)

எனவும்,

"கலைத்தலை முதுகலை காலி னெற்றி" (குறுந்:213)

எனவும்,

"கள்ளியங் காட்ட புள்ளியம் பொறிக்கலை" (அகம்:97)

எனவும்,

"மைபட் டன்ன மாமுக முசுக்கலை"

எனவும் வரும்.

மூசுவிற்கு நிலைபெற்றதெனவே அத்துணை நிலைபெறின்றிக் குரங்கிற்கு வருவனவுங் கொள்க. அது,

"கருங்கண் தாக்கலை பெரும்பிறி துற்றென" (குறுந்:69)

என வருமாற்றான் அறிக. (46)

யாட்டிற்குரிய பெயர்கள்

**602. மோத்தையுந் தகரும் உதளு மப்பரும்**
**யாத்த வென்ப யாட்டின் கண்ணே.**

(இ-ள்) இக் கூறப்பட்ட நான்கு பெயரும் யாட்டிற்குரிய (எ–று)

அவை,

"வெள்யாட்டு மோத்தை"

எனவும்,

"தகர்மருப் பேய்ப்பச் சுற்றுபு சுரிந்த" (அகம்: 101)

எனவும்,

"உதள
நெடுந்தாம்பு தொடுத்த குறுந்தறி முன்றில்"
(பெரும்பாண்: 151-2)

எனவும் வரும்.

அப்பரென்பது இக்காலத்து வீழ்ந்தது போலும்.

யாத்த வென்றதனற் கடாவென்பதும் யாட்டிற்குப் பெயராகக் கொள்க. அது,

"நிலைக்கோட்டு வெள்ளை நரல்செவிக் கடாஅய்" (அகம்: 155)

என வரும்.

இனிக் குரங்கினை அப்பரென்றலுங் கொள்க. (47)

சேவலெனும் பெயர் பறப்பனவற்றுக்கு உரித்தெனல்

**603. சேவற் பெயர்க்கொடை சிறகொடு சிவணும்**
**மாயிருந் தூவி மயிலலங் கடையே.**

(இ-ள்) பறப்பனவற்றுள் ஆண்பாற்கெல்லாம் சேவற் பெயர் உரித்து; அவற்றுண் மயிற்காயின் அஃதாகாது (எ-று)

"காமர் சேவ லேமஞ் செப்ப" (அகம்: 103)

எனவும்,

"வளைக்கண் சேவல் வாளாது மடியின்" (அகம்: 122)

எனவும்,

"தொகுசெந் நெற்றிக் கணங்கொள்சேவல்" (குறுந்: 107)

எனவும்,

---

1. கடா என்ற பாடமும் உள்ளது.

"கானங் கோழிக் கவர்குரற் சேவல்"
(குறுந்: 242:புறம், 395:மலைபடு:510)

எனவும்,

"உள்ளூர்க் குரீஇத் துள்ளுநடைச் சேவல்" (குறுந்:85)

எனவும் வரும். பிறவும் அன்ன

'மாயிருந் தூவி மயில்' என்றதனுன் அவை தோகையுடைய வாகிப் பெண்பால் போலுஞ் சாயலவாகலான் ஆண்பாற்றன்மை இலவென்பது கொள்க. எனவே, செவ்வேள் ஊர்ந்த மயிற்காயின் அதுவும் நேரவும்மடுமென்பது.

(வி-ரை)

செவ்வேள் ஊர்ந்த மயிற்காயின் அதுவும் நேரவும் படும் என இந்நூற்பா உரையுள்ளும், 598-வது நூற்பாவில் "மயில் போத்து உளர்ந்த அயிற்படை நெடுவேள்" என மேற்கோள் காட்டுதலானும் இவர்தம் சமய நெறி உய்த்துணர்ந்தற்குரிய தாம் (48)

ஏற்றையெனும் பெயர் பெறுவன இவையெனல்

**604. ஆற்றலொடு புணர்ந்த வாண்பாற்கெல்லாம்**
**ஏற்றைக் கிளவி யுரித்தென மொழிப.**

(இ-ள் ஏற்றையென்னுஞ் சொல் ஆற்றலொடு கூடிய ஆண்பாற்கெல்லாம் உரித்து (எ-று)

அவை

"குறுங்கை யிரும்புலிக் கோள்வலேற்றை"
(ஐங்குறு:216:நற் 36:குறுந்:141)

எனவும்,

"செந்நா யேற்றை கம்மென வீர்ப்ப" (அகம்:111)

எனவும்,

"கொடுந்தாள் முதலைக் கோள்வ லேற்றை" (குறுந்:324)

எனவும் வரும்.

"பிணர்மோட்டு நந்தின் பே ழ் வா யேற்றை" (அகம்:246)

எனவும்,

"புன்றாள் வெள்ளெலி மோவா யேற்றை" (அகம்: 133)
எனவுங் கூறினர்.

அவையும் அப்பெயரானே வழங்குதல் ஆற்றலுடையவாகத் தோன்றும். 'எல்லா' மென்றதனாற் சிறுபான்மை ஆற்றல் இல்லாதனவுங் கொள்க. அது, "இடுகாட்டு ளேற்றைப் பனை" (நாலடி-96)
என்பது போன்று வருவன; பிறவும் அன்ன.

(வி-ரை)

ஏற்புழிக் கோடலென்பதனால் அஃறிணைக்கண்ணும் கொள்ளப் படும் என இந்நூற்பா உரையில் குறிக்கின்றார் இளம்பூரணர், இந்நூற்பாவிற்கு முன்னும் பின்னும் அஃறிணைப் பொருள் பற்றியே வருதலின் இக்குறிப்பு வேண்டுவதின்று. பேராசிரியரும் 616 வது நூற்பாவில் அஃறிணை அதிகாரம் பட்டு வருவது எனக் குறித்தல் காண்க. இளம்பூரணர் உரையில் உயர்திணைக்கண்ணும் என இருப்பின் பொருத்தமாகுமோ என்பது ஆராயத் தக்கது. (49)

ஆண்பால் பெண்பால் பெயர்களுக்குப் புறனடை கூறல்

605. ஆண்பா லெல்லா மாணெனற் குரிய
பெண்பா லெல்லாம் பெண்ணெனற் குரிய
காண்ப வவையவை யப்பா லான.

இது, மேற்கூறிய ஆண்பாற் பெயர்க்கும் இனிவரும் பெண்பாற் பெயர்க்கும் புறனடை.

(இ - ள்) ஆணென்னுஞ் சொல் எல்லாச் சாதியுள் ஆண்பாற்கு உரித்து; பெண்ணென்னுஞ்சொல் எல்லாச்சாதியுள் பெண்பாற்கு உரித்து; வழக்கினுள் அவ்வாறு காணப்படும் அவை (எ - று)

அவை ஆண்யானை, பெண்யானை, ஆண்குரங்கு, பெண் குரங்கு; ஆண்குருவி, பெண்குருவி என்றாற்போல்வன. இவை காணப்படும் எனவே, இத்துணை விளங்கவாராது சிறுவரவினான் வருவனவுமுள இருபாலு மல்லாதனவென்பது. ஆணலி பெண்ணலி எனவும், ஆண்பனை பெண்பனை எனவும் வரும்; பிறவும் அன்ன.

(வி-ரை)

இத்துணை விளங்க வாராது—இவ்வாறு பெரு வழக்காக வாராது. ஆண்அலி—பெண்மையுற்று ஆண் அவாவுவது. பெண் அலி—ஆண்மையுற்றுப் பெண் அவாவுவது. ஆண்பனை - காயவப் பனை; பெண்பனை—காய்க்கும்பனை.

வேழக்குரித்தென்னும் சூத்திர (35) முதலாக இத்துணையும் ஆண்பெயர் கூறினார். இனிப் பெண் பெயர் கூறுகின்றாரா கலின் அதிகாரப்பட்டபொருள் சே, கடுவன், கண்டி என்பன சிறப்புச் சூத்திரத்தாகலின் அதற்குரியவெனக் கூறிற்றிலரா லெனின்; அவற்றுள் கடுவனும் கண்டியும் முன்னரெடுத்தோ தப்படும். சே என்பதுஆவினுள் ஆனையே குறித்து வழங்கலின் ஓதாராயினர் ஈண்டு ஓதப்பட்டன பல பொருள் ஒரு சொல்லும் ஒரு பொருட் பல சொல்லும் என்று கொள்க. (50)

பிடியென்னும் பெயர் யானைக்குரித்தெனல்

606. பிடியென் பெண்பெயர் யானை மேற்றே

இது முறையானே மூன்றும் எண்ணு முறைமைக்கணின்ற பெண்மைப்பெயர் கூறிய தொடங்கி ஆண்பாலிற் களிறு முற் கூறியவாறு போலப் பிடியினை முற்கூறியது.

(இ-ள்), பிடியென்னும் பெயர் யானைக்கண்ணது (எ-று).

"பிடிபடி முருக்கிய பெருமரப் பூசல்" (அகம்:8)

என வரும். பெய'ரென்றதென்னை யெனின், அவை தொடங்கு கின்றதென்பது அறிவித்தற்கென்பது. (51)

பெட்டையென்னும் பெயர் பெறுவன இவையெனல்

607. ஒட்டகங் குதிரை கழுதை மரையிவை
பெட்டையென்னும் பெயர்க்கொடைக்குரிய.

(இ-ள்) ஒட்டகமுங் குதிரையுங் கழுதையும் மரை யாவும் பெட்டையென்னும் பெயர்பெறும் (எ-று).

ஒட்டகப்பெட்டை குதிரைப்பெட்டை கழுதைப்பெட்டை மரையான்பெட்டை என வரும்.

(வி-ரை)

பெயர் கொடைக்குரிய—பெயர் கொடுத்துக் கூறுதற்குரிய.

(52)

பறவைகளும் பெட்டை என்று அழைக்கப்படும் எனல்

**608. புள்ளு மூரிய வப்பெயர்க் கென்ப**

(இ-ள்). எல்லாப்புள்ளும் பெட்டை யென்னும் பெய ரான் வழங்குதற்குரிய எ-று).

அவை, கோழிப்பெட்டை மயிற்பெட்டை யென வரும்; பிறவும் அன்ன. (53)

பறவைகளுக்குப் பேடையும் பெடையும் உரியவெனல்

**609. பேடையும் பெடையு நாடி னொன்றும்.**

(இ-ள்) பேடையும் பெடையுமென்னும் இரண்டும் முன் னர் நின்ற புள்ளிற்கு ஒன்றும் (எ-று).

அவை குயிற் பேடை அன்னப்பெடை என வரும். 'நாடின்' என்றதனாற் பெட்டையென்பது வழக்கினுட் பயிலாவென்பது.

அளகெனும் பெயர் பெறுவன இவையெனல்

**610. கோழி கூகை யாயிரண் டல்லவை
சூழுங் காலை யளகென லமையா (55)**

**611. [1]அப்பெயர்க் கிழமை மயிற்கு முரித்தே.**

(இ-ள்) கோழியுங் கூகையும் மயிலுமென்பனவற்றுக்கு அளகென்னும் பெயர் உரியது (எ-று).

"மனைவாழ் அளகின் வாட்டோடு பெறுகுவிர்"

(பெரும்பாண்: 256)

என்பது கோழி; பிறவும் அன்ன. (56)

பிணையெனப் படுவன

**612. புல்வாய் நவ்வி யுழையே கவரி
சொல்வாய் நாடிற் பிணையெனப் படுமே.**

(இ-ள்) பிணையென்னும் பெண்பெயர்க்குரியன இவை நான்கும் (எ-று).

---

1. இளம்பூரணத்தில் பெண்பாலான என்றொரு தொடர் இந்நூற்பாவின் முதற்கண்ணுள்ளது.
1. உரிய எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

"அலங்கல் வான்கழை யுதிர்நெல் நோக்கிக்
கலைபிணை விளிக்குங் கானத் தாங்கண் (அகம்:129)

எனவும்,

"சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை (புறம்:2)

எனவும்,

"சிறுதலை நவ்விப் பிணையில் திரிந்த
நெறிகோட்டு இரலை மான்" (குறுந்: 183)

எனவும்,

"கவரி மான்பிணை நரந்தங் கனவும்" [பதிற்-11]

எனவும் வரும்.

"சொல்வாய் நாடிற் பிணையெனப் படுமே"

என்பது பிணையென்னுஞ் சொற்பொருளினை உண்மை நோக்கிற் பிரியாது பிணையும் பிற சாதிக்குஞ் சேவற்குஞ் செல்லுமாயினும், மரபுநோக்கப் பிணையென்றதற்குச் சிறப்புடையன இவை என்றவாறு.

(வி-ரை)

பிணையும் பிறசாதிக்கும்—ஆணும் பெண்ணுமாய்க் கூடிய பிற இனத்திற்கும். சேவற்கு—கோழிக்கு. (57)

பிணவெனும் பெயர்பெறுவன

613. பன்றி புல்வாய் நாயென மூன்றும்
ஒன்றிய வென்ப பிணவென் பெயர்க்கொடை

(இ-ள்) இவை மூன்று சாதியும் பிணவென்னும் பெயர் குரியன [எ-று].

"நெடுந்தாள் செந்தினைக் கெழுந்த கேழல்
குறுந்தாள் பிணவொடு குறுகல் செல்லாது"

எனவும்,

"குறியிறைக் குரம்பைக் குறத்தி யோம்பிய
மடநடைப் பிணவொடு கவர்கோட் இரலை"

எனவும்,

"நாய்ப்பிண வொடுங்கிய கிழநரி யேற்றை"

எனவும்,

"மென்புனிற் றம்பிணவு பசித்தெனப் பசுங்கண்
செந்நா யேற்றைக் கேழல் தாக்க" [அகம்: 21]
எனவும் வரும்,

'ஒன்றிய' என்றதனுன்.

"ஈருயிர்ப் பிணவின் வயவுப்பசி களைஇய" [அகம்: 72]
எனப் புலிக்குங் கொள்க; பிறவும் அன்ன. [58]

பிணவென்னும் பெயர் பெறுதற்குரியன

614. பிணவ லெனினு மவற்றின் மேற்றே.

[இ-ள்.] பிணவலென்பதூஉம் அம்மூன்றற்கும் உரித்து [எ-று].

"இரியற் பிணவல் தீண்டலின்" [அகம்: 21]
என்பது பன்றி

"நால் முலைப் பிணவல் சொலியக் கானெழிந்து"
]அகம்: 248]
என்பதுவும் அது; ஒழிந்தனவும் அன்ன. [59]

ஆவெனும் பெயர்பெறுவன

615. பெற்றமு மெருமையு மரையு மாவே.

இது, மேல் 'அந்தஞ் சான்ற' [558] வென்னும் இலேசினுனே ஆவென்பது தழீஇக்கொண்டமையின் அஃது இன்னுழி அல்லது ஆகாது என்கின்றது.

[இ-ள்.] ஆவென்னும் பெயர் பெற்றமும் மரையும் எருமையும் [எ-று].

அவை,

"புனிற்றுப் பாய்ந்தெனக் கலங்கி" [அகம்: 58]
எனவும்,

"சேற்றுநிலை முனைஇய செங்கண் காரான்"
[அகம்: 46, குறுந்: 261]
எனவும்,

"மரையா மரல்கவர மாரி வறப்ப" [கலி: 6]
எனவும் வரும். [60]

உயர்திணைப் பெண்மைக்குப் பெண்ணும் பிணவும் உரியவெனல்

**616. பெண்ணும் பிணவும் மக்கட் குரிய.**

[இ-ள்.] பெண்ணும் பிணவும் உயர்திணைப் பெண்மைக் குரிய [எ-று].

பெண்ணென்பது,

"பெண்பா லெல்லாம் பெண்ணெனற் குரிய"
[தொல். மர: 50]

என்றமையின், ஈண்டுக் கூறுதலின் மிகையாம் பிறவெனின், அற்றன்று; அச்சூத்திரம் அஃறிணையதிகாரமாகலின், ஈண்டு விதந்தோதினானென்பது.

ஒன்றென்முடித்த [665] லென்பதனான், உயர்திணை ஆணென்பதும் ஈண்டே கொள்ளப்படும்.

"பெண்கோ ளொழுக்கங் கண்கொள நோக்கி" [அகம்- 112]
எனவும்,

"பிணவு வொழியப் போகி" [பெரும்பாண்: 90]
எனவும் வரும்.

"ஆண்கட னுடையின்மை பாண்கட னாற்றிய" [புறம்: 201]
என ஆணென்பது உயர்திணைக்கண் வந்தது. பிறவும் அன்ன பிணாவென்னும் ஆகாரவிறுதி வன்கணமன்மையிற் குறியதன் இறுதிச் சினைகெட்டு உகரம்பெறாது நின்றது. 'மக்கட்குரிய வெனவே, உரியவன்றித்

"துறுகல் விடரளைப் பிணவுப்பசி கூர்ந்தென" (அகம்:146)
எனப் புலி முதலியவற்றிற்குங் கொள்க.

(வி-ரை)

பிணவும் என்பது பிணா உம் எனப் பிரிக்கப்படும். இங்கு வருமொழி வன்கணம் அன்மையின் பிணவு என ஆகாது பிணா என நின்றது என்றார். (31)

நாகெனும் பெயர்க்குரியன

**617. எருமையு மரையும் பெற்றமு நாகே** (62)

---

1. பிணவும் எனப் பாடங் கொள்வர் இளம்பூரணர்.

**618. நீர் வாழ் சாதியு ளந்து நாகே.**

(இ-ள்.) இந்நான்கற்றும் நாகெனும் பெயர் உரித்து (எ-று).

"எருமை நல்லான் கருநாகு பெறூஉம்" (பெரும்பாண்:165)
எனவும்,

"உடனிலை வேட்கையின் மடநாகு தழீஇ
யூர்வயிற் பெயரும் பொழுதின்" (அகம்:64)
எனவும்.

"நாகிள வளையொடு பகன்மணம் புகூஉம்" (புறம்-266)
எனவும் வரும். (63)

ஆட்டிற்கேயுரிய பெயர்கள்

**619. மூடுங் கடமையும் யாடல பெறு.**

(இ-ள்.) இவ்விரு பெயரும் யாட்டிற்கேயுரிய பெண்மைப் பெயர் (எ-று.)

**இவை இப்பொழுது வழக்கினுள் அரிய (64)**

பாட்டியென்று சொல்லப்படுவன

**620. பாட்டி யென்பது பன்றியு நாயும்.**

**621. நரியு மற்றே நாடினர் கொளினே.**

(இ-ள்.) பாட்டியென்று சொல்லப்படுவன பன்றியும் நாயும் நரியும் (எ-று).
இவையும் அன்ன

வி-ரை)

இவையுமன்ன — இவையும் மேற்கூறியவாறு வழக்கினுள் அரிய என்றவாறும். (66)

மந்தியென்னும் பெயர்பெறுவன

**622. குரங்கு முசுவும் ஊகமு மந்தி.**

(இ-ள்.) இம்மூன்று சாதிப் பெண்பாலும் மந்தியென் னும் பெயர் பெறும் (எ-று).

"கைம்மை யுய்யாக் காமர் மந்தி" (குறுந்:69)

எனவும்,

"கருமுக மந்தி[1] செம்பி னேற்றை"

எனவும் வரும்.

ஊகத்துக்கும் இஃதொக்கும். (67)

மரீஇ வந்த மரபுப்பெயர்கள்

623. [2]குரங்கி னேற்றினைக் கடுவ னென்றலும்
மரம்பயில் கூகையைக் கோட்டா னென்றலுஞ்
செவ்வாய்க் கிளியைத் தத்தை யென்றலும்
வெவ்வாய் வெருகினைப் பூசை யென்றலுங்
குதிரையு ளாணினைச் சேவ லென்றலு
மிருணிறப் பன்றியை யேன மென்றலு
மெருமையு ளாணினைக் கண்டி யென்றலு
முடிய வந்த [3]வவ்வழக் குண்மையிற்
கடிய லாகா கடனறிந் தோர்க்கே.

இது, மரீஇவந்து முடிந்த மரபுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) ஆண் குரங்கினைக் கடுவனென்றலும், மரப் பொதும்பினுள் வாழுங் கூகையைக் கோட்டானென்றலும், செவ்வாய்க் கிளியைத் தத்தையென்றலும், வெருகினைப் பூசை யென்றலும், ஆண் குதிரையைச் சேவலென்றலும், இருணிறப் பன்றியை ஏனமென்றலும், எருமையேற்றினைக் கண்டியென்றலும், அவ்வாறு முடிந்த வழக்குண்மையிற் கடியப்படா கடப்பாடு அறிந்தோர்க்கு (எ-று.)

"கடுவனு மறியுமக் கொடியோ னையே" (குறுந்:26)

கடுவன் - ஆண்குரங்கு. இதனைக் 'கடியலாகா' தெனப்பட்ட இழுக் கென்னையெனின் - மக்கட்கும் வெருகிற்கும் அக்காலத்துப்

1. செம்பினேற்றை என்பது இடக்கரடக்கலாம். எனவே இத்தொடர் இருப்பது பொருத்தமின்று.

2. குரங்கினுள் 3. வந்த வழக்கு எனப் பாடங்கொள்வர், இளம்பூரணர்.

பயின்றனபோலுமாதலின். கூகையைக் கோட்டானென்றலும் வழக்காகலான் அமையும்; 'மரம்பயில் கூகை'யென்ற தென்னை யெனின், — மரக்கோடு விடாமையிற் கோட்டானென்னும் பெயர்பெற்றதென்றற்கு. தத்தை யென்பது பெருங்கிளியாதலின் சிறுகிளிக்கும் அப்பெயர் கொடுத்த லமையுமென்றவாறு. 'செவ்வாய்க் கிளி' யென்றதனைச் சிறுகிளிமேற் கொள்க.

'வெவ்வாய் வெரு' கென்றதனாற் 'படப்பை வேலியும் புதலும் பற்றி, விடக்கிற்கு வேற்றுயிர்கொள்ளும் வெருகினை இல்லுறை பூசையின்' பெயர்கொடுத்துச் சொல்லலும் (புறம் : 117, 326) அமையுமென்றவாறு.

குதிரையைச் சேவலென்றல் இக்காலத்தரிதாயிற்று. அதுவுஞ் சிறகொடு சிவணுதாயினும் அதனைக் கடுவிசைபற்றிப் பறப்பதுபோலச் சொல்லுதல் அமையுமென்பது கருத்து.

எருமை யேற்றினையுங் கண்டியென்பபோலும்: அது காணலாயிற்றில்லை; அதனை, இலக்கணவகையானுடைய பெய ரென்றலுமாம்: இதுபொழு தின்றென்பது.

'கடனறிந்தோ' ரென்றதனன், வழக்கினுஞ் செய்யுளினும் அவை வந்தமையிற் கடப்பாடறிவோர்க்குக் கடியலாகாதென்ற வாறு. இன்னும் இப்பரிகாரத்தாலே கோழியை வாரணமென் றலும் வெருகினை விடை யென்றலும் போல்வன பலவும் கொள்க. அவை,

> 'கான வாரண மீனுங்
> காடாகி விளியு நாடுடை யோரே'' (புறம்:52)

எனவும்,

> ''வாரணக் கொடியோடு வயிற்பட நிறீஇ'' (திருமுரு-219)

எனவும்,

> ''வெருக்கு விடையன்ன வெருணோக்குக் கயந்தலை''
> (புறம்:324)

எனவும் வரும்.

(வி–ரை)

மரீஇ வந்து. — மருவி வந்து கோடு பற்றி வாழ்தலின் கோட்டான் ஆயிற்று. தத்தை பெருங்கிளி, சிறுகிளி, பூசை– பூனை: இது வீட்டில் வாழ்வது, சாதுவானது. வெருகு – பூனை;

இது தோட்டத்து வேலிகளிலும், புதரிலும் வாழ்வது. தன் உணவிற்காகப் பிற உயிரினங்களைக் கொன்று தின்பது. விடக்கிற்கு – உணவிற்கு. குதிரை பறவை போன்று விரைந்து செல்லும் இயல்பினது. இதனை'', புள்ளியற் கலிமா உடைமையான'', புள்ளியல் மான்தேர்ஆழி போன வழியெல்லாம்'' எனவரும் கூற்றால் தெளியலாம்.

இப்பரிகாரத்தால் — இப்பாதுகாப்பால் (78)

இதுவும் அது

624 பெண்ணு மாணும் பிள்ளையு மவையே

இதுவுமது. பெண் ஆணென்பன இருதிணைப்பெண்மைக்கும் ஆண்மைக்கும் பொதுவென்பன முற் கூறினன்; மேல் ஒன்றற்குரிய பெயர் மரீஇ வந்து பிறிதொன்றற்காய வழியுங் கடியலாகாதென நின்ற அதிகாரத்தான் இவையும் அவ்வாறே திரியினுங் கடியலாகாதென்றவாறு.

(இ-ள்) பெண்ணும் ஆணும் பிள்ளையுமென வாளாது சொல்லியவழி உயர்திணைக்கேற்றன மரீஇவந்த மரபு (எ-று)

மக, குழவியென்பனவோவெனின் - அவை அத்துணைப் பயின்றில உயர்திணைக்கென்பது; எடுத்தோதிய மூன்றும் ஆயின[1] வாளாதே 'பெண்வந்த' தென்றவழி அஃறிணைப்பொருளென்பது உணரலாகாது; 'பெண்குரங்கு வந்தது' என விதந்தே கூறல்வேண்டுமென்பது. 'பெண் பிறந்தது' 'ஆண் பிறந்தது' 'பிள்ளை பிறந்தது', என அடையடாது சொல்லியவழி உயர்திணைக்கேயாம். அஃறிணைக்காயின் அற்றன்றென்பது.

(வி-ரை)

பெண்ணும் ஆணும் பிள்ளையும் பற்றி வரும் சொல் மேல் எடுத்தோதினவை என உரை காண்பர் இளம்பூரணர். (69)

---

1. இவ்விடத்துச் சிதைவுண்டு போலும்.

அந்தணர்க்குரியன

625. நூலே கரக முக்கோ மணையேல்
யாயுங் காலை யந்தணர்க் குரிய.

இஃது, உயர்திணை நான்குசாதியும் பற்றிய மரபு உணர்த்து வான், முறையானே அந்தணர்க்குரிய மரபுபட்டுவருங் கலப்பை வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) முந்நூலுங் குண்டிகையும் முக்கோலும் யாமை மணையும் போல்வன அந்தணர்க்கு உரிய (எ–று).

'ஆயுங்காலை' யென்றதனாற் குடையுஞ் செருப்பும் முதலா யினவும் ஒப்பன அறிந்துகொள்க.

உதாரணம்:

"எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடைநீழ
லுறித்தாழ்ந்த கரகமு முரைசான்ற முக்கோலும் (கலி:9)

எனவும்,

"தண்டொடு பிடித்த தாழ்கமண் டலத்துப்
படிவ வுண்டிப் பார்ப்பன மகனே" (குறுந்:156)

எனவும் வரும்.

இன்னும் 'ஆயுங்காலை' யென்றதனான், ஒருகோலுடை யார் இருவருளர், அவர் துறவறத்து நின்றாராகலின் உலகிய லின் ஆராயப்படாரென்பது. முக்கோலுடையார் இருவருட் பிச்சை கொள்வானும் பிறண்டிருந்து தனதுண்பானும் உலகிய லின் நீங்காமையின் அவரையே வரைந்தோதினனென்பது.

மற்று அரசர்க்கும் வணிகர்க்கும் உரிய நூலின் ஈண்டு வரைந்தோதினதென்னையெனின், - ஒருகோலுடையான் நூல் களைவானாகலின் அவனுஞ் சிறுபான்மை அந்தணனெனப்படு மென்பது கோடற்குங் கரகமும் மணையும் உடைய னென்றற்கு மென்பது. நூலினை முற்கூறினான் பிறப்புமுறையானுஞ் சிறப்பு முறையானுமென்பது. இனிக் குடுமியுங் குசையும்போல்வன கூறிற்றிலன், அது முன்னரும் பின்னரும் வருதலானும் மன்ன ரும் வணிகரும் பெறுதலானுமென்பது.

(வி-ரை)

கலப்பை வேறுபாடு — துணைக் கருவிகளின் (உபகரணங்களின்) வேறுபாடு. குண்டிகை — நீர் முகந்து வைத்திருக்கும் கலம். யாமை மணை — யாமை வடிவால் செய்த இருக்கைப் பலகை. ஒரு கோலுடையார் இருவர் — கம்சன், பரம கம்சன் என்னும் பெயருடைய துறவியர். முக்கோலுடையார் இருவர் பகூதகள் குடீசகன் என்பார்.
பிறப்புமுறை—இருபிறப்பாளன் என்னும் பிறப்பு முறை. சிறப்பு முறை—நூல் தாங்கிய பின்னரே கரகம் முதலிய தாங்குதல் பற்றிய சிறப்பு முறை. குசை—தருப்பை. (70)

அரசர்க்குரியன

626. படையுங் கொடியுங் குடையு முரசு
நடைநவில் புரவியுங் களிறுந் தேருந்
தாரு முடியு நேர்வன பிறவுந்
தெரிவுகொள் செங்கோ லரசர்க் குரிய.

இது, முறையானே அரசர்க்குரியன கூறுகின்றது.

(இ-ள்) கொடிப்படையுங் கொடியுங் குடையும் முரசுங் குதிரையும் யானையுந் தேருந் தாரும் முடியும் பொருந்துவன பிறவும் அரசர்க்குரிய (எ-று).

'பிறவும்' என்றதனாற் கவரியும் அரியணையும் அரண்முதலாயினவுங் கொள்க: 'தெரிவுகொள் செங்கோல் அரச'ரென்றதனானே செங்கோல் கொளப்பட்டது.

'தாரெ'னவே போர்ப்பூவுந் தார்ப்பூவும் அடங்கின. படை, யென்புழி 'நடை.நவில் புரவியுங் களிறுந் தேரும்' அடங்காவோ வெனின், — அடங்கும், அவைநோக்கிக் கூறினானல்லன்; அவை பட்டஞ்சாத்தியவாதல் நோக்கிக் கூறப்பட்டன. அஃதேல், தேர்கூறியதென்னையெனின் - அதுவும் அவைபோல அரசர்க்கே உரியதென்றுளதென்றற்கும், அது பூண்ட குதிரையும் அவர்க்கே யுரியவென்றுளவென்றற்குங் கூறினானென்பது. இக்கருத்தினாற்போலும் நடைநவில் புரவியெனச் சிறப்பித்து அதனை முற்கூறியதென்பது.

எல்லாவற்றினுஞ் சிறந்தாதலான் முடி பிற் கூறப்பட்டது. தெரிவுகொள் செங்கோல் அரசரென்பதனுன் அரசரெல்லாம் தந்நாட்டு நன்றுந் தீதும் ஆராய்ந்து அதற்குத் தக தண்டஞ் செய்தற்கு உரிமையும் அதுவெனக் கொள்க.

(வி-ரை)

போர்ப்பூ—போர்குறித்துச் சூடும் பூ. வெட்சி முதலாயின. தார்ப்பூ-அடையாளங் குறித்துச் சூடும்பூ; 'உறுபகை ஏந்திடைத் தெரிதல் வேண்டி ஏந்துபுகழ்ப் போந்தை வேம்பே ஆரென வரூஉம் மாபெரும் தானையர் மலைந்த பூவும்' என ஆசிரியரும் கூறுவர். (71)

அந்தணர்க்குரியன சில அரசர்க்கும் உரியவாய் வருமெனல்

627. அந்த ணாளர்க் குரியவு மரசர்க்கு
ஒன்றிய வரூஉம் பொருளுமா ருளவே.

இது. மேலதற்கோர் புறனடை.

(இ-ள்) அந்தணாளர்க்கு உரியவென மேல் (625) ஓதப் பட்டனவற்றுள் முந்நூலும் மணையும்போல்வன அரசசாதிக் குரியவாகியும் வரும் (எ று).

'பொருளுமாருள' வென்றதனுன், அந்தணாளர்க் குரியன வற்றுள் வேள்விக்கலப்பை யொன்றிவருதற் பெரும்பான்மை யென உணர்க; ஈண்டு அவற்றை விதந்தோதினுன் ஒழிந்த புலனெறிவழக்கினுட் பயிலாமையினென்பது.

"அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்
ஐவகை மரபி னரசர் பக்கமும்
இருமூன்று மரபி னேனோர் பக்கமும்" (தொல்-புறத்;20)

பற்றி வாகைப்பொருள் பிறத்தலின் அவற்றைப் புறத்திணை யியலுட் கூறினுயினும், ஈண்டுத் தழீஇக்கொள்ளப்படும் மரபுவகையானென்பது; என்போலவெனின்,

"அ இ உ அம் மூன்றுஞ்சு ட்டு" (தொல்-எழுத்-நூல்:31) என நான்மரபினுள் ஓதிய மூவகைச்சுட்டினை இடைச்சொ லோத்தினுள் ஓதாணுயினுன், அது போலவென்பது.

"கொன்றுகளம் வேட்டஞான்றை" (அகம்:36)
எனவும்,

அடுகளம் வேட்ட வடுபோர்ச் செழிய" (புறம்:26)
எனவும் அரசர்க்கு வேள்வி கூறினவாறு; பிறவும் அன்ன.

(வி-ரை)

வேள்விக் கலப்பை-வேள்வி செய்தற்குரிய துணைக்கருவிகள். அரசர்க்கும் ஒன்றி வருதற்குரியன நான்கு தொழிலாம். அவை ஈதல் வேட்டல் வேட்பித்தல் ஓதல் என்பன என்பர் இளம்பூரணர்". (72)

அரசர்க்கே உரியன

628. பரிசில்பா டாண்டிணைத் துறைக்கிழ[1] மைப்பெயர்
நெடுந்தகை செம்ம லென்றிவை பிறவும்
பொருந்தச் சொல்லுத லவர்க்குரித் தன்றே.

இஃது, ஐயம் அறுத்தது; அந்தணாளர்க்குரியன அரசர்க்கு முரியன உளவெனக் கேட்ட மாணுக்கன் 'அரசர்க்குரியனவும் அந்தணர்க்குரிய கொல்' லென்று ஐயுறுமற் காத்தமையின். இஃது, எய்தியதன்மேற் சிறப்புவிதியெனினும் அமையும்; என்னை? ஈண்டு ஓதப்பட்டவை அரசர்க்குரியவென்பது கொள்ளவைத்தமையின்.

(இ-ள்) பரிசில் - பரிசில்கடாநிலையும், பரிசில்விடையும் போல்வன; பாடாண்டிணைத்துறைக்கிழமைப்பெயர் - பாடாண்டிணைக்குரிய கைக்கிளைப் பொருள்பற்றியுங் கொடைத்தொழில் பற்றியும் பெறும் பெயர்; அவை காளை இளையோன் என்பன போல்வன (அவையும்), நெடுந்தகை செம்மலென்பன முதலாயினவும், இவைபோல்வன பிறவும் புனைந்துரை வகையாற் சொல்லினல்லது சாதிவகையாற் கூறுதல் அந்தணர்க்குரித்தன்று (எ-று).

பரிசில்கடாநிலையும் பரிசில்விடையும் போல்வன கூறியுங், கைக்கிளைப்பொருள் கூறியுங், கொடைத்தொழில் கூறியும், அவற்றுக்கேற்ப எடுத்தோதிய பெயர்கூறியும், அந்தணரைத் தன்மை வகையாற் செய்யுள் செய்யப் பெறுவென்பது கருத்து.

1. கிழப்பெயர் எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

புனைந்துரை வகையான் அவையாமாறு:

"எண்ணுணப் பலவேட்டு
மண்ணுணப் புகழ்பரப்பியும்" (புறம்:166)

என வரும்.

கொடுத்தல்தொழில் வேள்விக்காலத்ததென வரையறுத் தலிற் பொருந்தக் கூறுதல் அவர்க்குரித்தன்றுஎன்றுனென்பது.

பாடாண்டிணைத் துறைப்பெயரென்றது, கிழமைப்பெய ரென்ற தென்னையெனின்,—அவை, ஐந்திணைப்பெயராகி வருங் காலும் அவர்க்குரியவல்லவென்றற்கு; எனவே, அரசர்க்காயின் இவையெல்லாம் உரியவென்பவாயிற்று.

மற்றுப் பாடாண்டிணைக்குரியவல்லவென மற்றைத்திணைக் கிழமைப்பெயர் உரியவாம் பிறவெனின், அஃது,

"இடையிரு வகையோ ரல்லது நாடிற்
படைவகை பெறுஅர்" (தொல்-மர-76)

என மேற்கூறி விலக்குமென்பது.

(வி-ரை)

பரிசில் கடாநிலை—பரிசில் வேண்டும்நிலை. தன்மை வகை—யால் இயற்கை வகையால். (73

நாற்சாதியினரும் பெறுதற்குரியன

629. ஊரும் பெயரு முடைத்தொழிற் கருவியும்
யாருஞ் சார்த்தி யவையவை பெறுமே.

இது, மேற்கூறிய அந்தணர்க்கும் அரசர்க்கும் உரியன வற்றெடு ஒழிந்த சாதியோர்க்கும் ஒப்பன உடன்கூறுகின்றது.

(இ - ள்.) நான்கு சாதியாரும் பிறந்த ஊரும், அவர் தம் பெயரும், அவர்சாதிக்கு உரித்தென்றற்கேற்ற கருவியும், யாரும் சார்த்தப்பட்டு அவை அவை பெறுப (எ - று).

இம்மூன்றும் வரையறுத்துச் சொல்லப்படா, எல்லாச் சாதியார்க்கும் ஒப்பச்செல்லுமென்பது கருத்து; [1]எற்றுக்கு? இவை சாதிபற்றி வேறுபடாப் பொருளாகலின். ஊரும் பெயருமென்பன: உறையூர் ஏணிச்சேரி முடமோசி, பெருங்

---

1. என்னை யென இருப்பின் பொருத்தமாகும்.

குன்றூர்ப்பெருங்கௌசிகன், கடியலூர் உருத்திரங்கண்ணன் என்பன அந்தணர்க்குரியன; உறையூர்ச் சோழன், மதுரைப் பாண்டியன் என்பன அரசர்க்குரியன; காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணன், மதுரை அறுவைவாணிகன் இளவேட்டன என்பன வாணிகர்க்குரியன; அம்பர்கிழான் நாகன், வல்லங்கிழான் மாறன் என்பன வேளாளர்க்குரியன.

'இனி உடைத்தொழிற் கருவி' யென்பன, அந்தணாளர்க்குச் சுருவையுஞ் சமிதைகுறைக்குங் கருவியும் முதலாயின; அரசர்க்குக் குடியும் கூழும் அமைச்சும் நட்பும் முதலாயின; வணிகர்க்கு, நாவாயும் மணியும் மருந்து முதலாயின; வேளாளர்க்கு நாஞ்சிலுஞ் சகடமும் முதலாயின. பிறவும் அன்ன. அவையெல்லாம் அவரவர் செய்யுட்குரியவென்பது.

(வி-ரை)

யாரும் சார்த்தி—எல்லா இனத்தவரையும் சார்த்திச் சொல்லப்பட்டு. சுருவை—நெய்யை முகந்து ஓமம் செய்யும் கருவி சமிதை—ஓமத்திலிடும் சுள்ளிகள். குறைக்கும் கருவி—சிறு சுள்ளிகளாக ஆக்குதற்குரிய அரிவாள் முதலியன. (74)

தலைமைக் குணச் சொல்லும் நான்கு இனத்தவரும் பெறுவரெனல்

**630. தலைமைக் குணச்சொலுந் [2]தத்தமக் குரிய**
**நிலைமைக் கேற்ப நிகழ்த்துக வென்ப.**

இதுவும் அது.

(இ - ள்) அந்நான்குசாதியார் தலைமைக்குணம்படச் சொல்லுஞ் சொல்லும் அவரவர்க்குரிய நிலைமைக்கேற்ப நிகழ்த்தவும் படும் (எ - று).

அந்தணர் தலைமைக்குணங் கூறுங்காற் பிரமனோடு கூறியும், அரசரை மாயனோடு கூறியும், வணிகரை நிதியின்கிழவனோடு கூறியும், வேளாண்மாந்தரை வருணனோடு கூறியுந் தலைமைக் குணச்சொல் நிகழ்த்தப்படும். அவையெல்லாம் அவரவர் செய்யுளுட் கண்டு கொள்க. (75)

---

2. தத்தமக்குரியதோர் எனப் பாடங் கொள்வர் இளம்பூரணர்.

(வி-ரை)

நிதியின் கிழவன்—குபேரன். தலைமைக்குணமுடையராகக் கூறுதலும் தத்தம் நிலைமைக்கு ஏற்பப் பொருந்துமாறு நிகழ்த்துப என உரை கண்டு, எனவே இறப்ப உயர்தல் இறப்ப இழிதல் ஆகாதென்றவாறும் என விளக்கங் காண்பர் இளம் பூரணர்.

அரசரும் வணிகருமே படை பெறுவாரெனல்

**631. இடையிரு வகையோ ரல்லது நாடிற்**
**படைவகை பெறாஅ ரென்மனார் புலவர்.**

மேல் நான்கு வருணத்தாரையும் உடன் கூறிவந்தான், இது முதலும் கடையும் ஒழித்து இடைநின்ற இருவருணத்தார்க்கும் ஆவதோர் புறனடை கூறுகின்றது.

(இ - ள்.) அரசரும் வணிகருமல்லது படைப்பகுதி பெறார் (எ – று.)

படைப்பகுதியென்பன: வேலும் வாளும் வில்லும் முதலா யின. 'நாடி' னென்பதனான், ஒருசார் அந்தணரும் படைக்குரியா ரென்பது கொள்க. அவர் இயமதங்கியாருந் துரோணனும் கிருபனும் முதலாயினாரெனக் கொள்க. வேளாண்மாந்தர்க்கும் இஃதொக்கும். இவை விகாரமெனவும் எடுத்தோதிய வருணங்கட்கே இஃதியல் பெனவும் கொள்க.

(வி-ரை)

இயமதங்கியார்—பரசுராமர். இவை விகாரம்—அந்தணரும் வேளாளரும் படைவகை பெறுதல் விகாரமாம். எனவே ஏனைய இருவரும் அதனைப் பெறுதல் இயல்பாம். (76)

வணிகர்க்கு வாணிகம் மரபென்றல்

**632. வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை.**

இது, வணிகர் மரபு கூறுகின்றது.

(இ - ள்.) வணிகர்க்குத் தொழிலாகிய வாணிகவாழ்க்கை உள்ளுறையாகச் செய்யுள் செய்தல் பெரும்பான்மையுமாம் (எ - று).

அவையும் அவர் செய்யுளிற் காணப்படுமாறு அறிந்து கொள்க.

(வி-ரை)

உள்ளுறையாக—செய்யுளுள் இடம் பெறும் பொருளாக. (77)

வாணிகர்க்கே உரிய தொழில்

**633. மெய்தெரி வகையி னெண்வகை யுணவின்**
**செய்தியும் வரையா ரப்பா லவ்ன.**

இன்னும் வணிகர்க்கே உரிய தொழில் கூறுகின்றது.

(இ-ள்.) பொருள் தெரிந்த வகையான் எண்வகைக் கூலமுஞ் செய்து விளைத்தலும் அவர் கடன் (எ-று).

அவையும் அவர் பண்டத்தோடு உபகாரப்படுமாகலின் வரையப்படா தென்றானென்பது.

எண்வகையுணவென்பன பயறும் உழுந்துங் கடுகுங் கடலையும் எள்ளுங் கொள்ளும் அவரையுந் துவரையுமாம்.

(வி-ரை)

எண்வகை உணவாவன. நெல்லு, காணம், வரகு, இறுங்கு, தினை, சாமை, புல்லு, கோதுமை என விளக்கங் கூறுவர் இளம் பூரணர். (78)

வணிகர்க்குரிய மாலைகள்

**634. கண்ணியுந் தாரு மெண்ணின ராண்டே.**

இதுவும் அது.

(இ-ள்.) இவையும் வணிகர் திறத்தன (எ-று).

கண்ணியென்பது சூடும்பூ. தாரென்பது ஒருகுடிப் பிறந்தார்க்குரித்தென வரையறுக்கப்படுவதாயிற்று. எண்ணப்படுமெனவே அவரவர்க்குரியவாற்றாற் பலவாகி வரும்; அவை வந்த வழிக்கண்டு கொள்க.

(வி-ரை)

இப்பர் கவிப்பர் பெருங்குடி என வணிகருள் குடிவகை இருத்தலின் அவரவர்க்குரியவாற்றால் பலவாகி வருமென்றார்.

வேளாண்மாந்தர்க்கு உழவுத்தொழில் உரித்தெனல்

**635. வேளாண் மாந்தர்க் குழுதூ ணல்லது
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி.**

இது, வேளாண்மாந்தர்க்குக் கூறப்படுந் தொழில் கூறுகின்றது.

(இ-ள்.) வேளாண்மாந்தர் பலவகைப்பட்ட தொழிலரேனும் உழுந்தொழிலே பெரும்பான்மைத்தாகலான் அதனையே சிறப்பித்துச் சொல்லுதல் மரபு (எ-று).

"உழுதுண்டு வாழ்வார்" (குறள்:1033)
என்பது, இதன் பொருளாயிற்று.

மற்றுப் பார்ப்பியன் முதலாகிய நால்வகைத் தொழிலும் வாகையுட் (தொல்-புறத்-20) கூறினமையின் இச்சூத்திரமும் மேலைச் சூத்திரங்களும் மிகையாம் பிற வெனின், அற்றன்று; பார்ப்பியலும் அரசியலும் வாணிகத்தொழிலுமாகிப் பொதுப் படநின்ற ஓதலும் வேட்டலும் ஈதலும் இவர்க்கு ஒத்த சிறப் பினவாகலானும், அவருள் வணிகர்க்கும் ஒழிந்த வேளாளர்க்கும் ஒத்த செய்தியனவாகிய உழவுத்தொழிலும் நிரை காத்தலும் வாணிகமுமென்பன அவற்றின் ஒத்த சிறப்பினவன்றி அவற்றுள் ளும் ஒரோவொன்று ஒரோவருணத்தார்க்கு உரியவாமாகலா னும் ஈண்டு அவை விதந்து கூறிஞனென்பது நிரை காவலும் உழவுத்தொழிலும் வணிகர்க்கும் வேளாளர்க்குந் தடுமாறுதல் போலாது வணிக வாழ்க்கை வேளாண் மாந்தர்க்குச் சிறுவர விற்றெனவும், உழுதுண்டல் வணிகர்க்குச் சிறுவாவிற்றெனவும், எண்வகைக்கூலத்தோடு பட்டதே பெருவரவிற்றெனவும், கூறி ஞன் இச்சூத்திரங்களானென்பது. இதனது பயம்: புலனெறி வழக்கினுள் இவர்க்கு இவை சிறந்த மரபென்றலாயிற்று.

(வி—ரை)

நால்வகை வருணத்தார்க்கும் உரிய தொழில்கள் புறத் திணையுள் பொதுப்படவே கூறப்பட்டன. ஈங்கு அத்தொழில் கள் சிறப்பு வகையான் உரிமை கூறுதற்காக மீண்டும் கூறப் படுகின்றன என்பது பேராசிரியர் கருத்தாம். அச்சிறப்பு முறையாவன:- ஓதல், வேட்டல், ஈதல் என்பன பார்ப்பனர்,

அரசர், வணிகர் ஆகிய மூவர்க்கும் உரிய என ஆண்டுப் பொதுப் படக் கூறப்பட்டது. ஈண்டு அம் மூத்தொழில்களும் அம்மூவர்க்கும் ஒத்த சிறப்பின என்பது கூறப்பட்டது. உழவு, நிரையோம் பல், வாணிகம், ஆகிய முத்தொழில்களும் வணிகர்க்கும் வேளாளர்க்கும் உரியவென ஆண்டுப் பொது வகையால் கூறப் பட்டது. வாணிகம் ஒன்றும் வணிகர்க்கே சிறப்புடையது. உழவு வேளாளர்க்கே சிறப்புடையது. நிரையோம்பல் இரு பாலார்க்கும் ஒத்த சிறப்புடையது என ஈண்டுச் சிறப்பு வகை யால் கூறப்பட்டது. (80)

வேளாண் மாந்தர்க்கோர் புறனடை

636. வேந்துவிடு தொழிலிற் படையுங் கண்ணியும்
வாய்ந்தன ரென்ப வவர்பெறும் பொருளே

இது, நான்காம் வருணத்தார்க்கோர் புறனடை.

(இ-ள்.) வேந்தர் கொடுப்பின் வேளாண்மாந்தர்க்குப் படைக்கலமுங் கண்ணியும் பெறும்பொருளாகச் சொல்லப்படும் (எ-று).

'வேந்து விடுதொழி' லென்பது, வேந்தனாற் கொடுக்கப் படுந்தண்டத் தலைமையாகிய சிறப்புக்காரணத்தானென்ற வாறு; அகத்திணையியலுள், "உயர்ந்தோர்க் குரிய வோத்தினான' என்புழிக் கூறப்பட்ட தெனின், வேளாளரை யொழித்து ஒழிந் தோரை நோக்கிற்று அச்சூத்திரமென்பது

மேற்கூறியவற்றையும் மரபுபற்றி ஈண்டு வரையறை கூறு கின்றவாறெனக் கொள்க. அவையும் அவரவர் பாட்டுக்களுட் கண்டுகொள்க.

(வி-ரை)

தண்டத் தலைமை—சேனைத்தலைமை. ஈண்டு 'உயர்ந்தோர்க் குரிய ஓத்தினான' என்ற இந்நூற்பாவை எடுத்தாளுதற்கு இயைபில்லை. அதற்குமாறாக 'வேந்து வினை இயற்கை வேந்த னின் ஒரீஇ இய, ஏனோர் மருங்கினும் எய்திடனுடைத்தே' என்னும் நூற்பாவைக் கூறி அமைதி கூறப்பட்டிருக்க வேண்டும்.

இந்நூற்பாவில் ஏனோர் என்பது குறுநிலமன்னரையேயாம். ஈண்டு அவ்வேந்துவினை இயற்கை வேளாளர்க்கும் உரியவாங்கால் படையும் கண்ணியும் அவர் பெறலாம் எனக் கூறப்பட்டிருத்தலின் அதனினும் இது வேறாகக் கூறப்பட்டதென அமைதி கூறுதலே பொருத்தமாம். (81)

அந்தணர்க்கு அரசுத் தொழிலும் நீக்கப்படாதெனல்

## 637. அந்த ணாளர்க் கரசுவரை வின்றே

இஃது, எல்லாவற்றினுஞ் சிறுவரவிற்றாகி அரசர்க்குரிய தொழில் அந்தணர்க்குரியவாகலின் ஈண்டுப் போதந்து கூறுகின்றது.

(இ ள்.) அரசர் இல்வழி அந்தணரே அவ்வரசியல் பூண்டொழுகலும் வரையப்படாது (எ - று).

மக்களைத் தின்ற மன்னவர்க்குப் பின்னை மறையோரான் அரசு தோற்றப்பட்டாற்போலக் கொள்க.

(வி-ரை)

மக்களைத்தின்ற—மக்கட் பேறில்லாத அல்லது இருந்து இறந்துவிட்ட, அத்தகைய மன்னர்க்குப்பின் மறையோர் அரசு செய்யலாம் என்பது இவர் கருத்து. இத்தகைய மரபு நாம் அறிந்தவரை இன்று. இதற்கு இளம்பூரணர் கூறும் உரை வேறாகும். அது வருமாறு, அமாத்திய நிலையும் சேனாபதி நிலையும் பெற்ற அந்தணாளர்க்கு அரசர் தன்மையும் வரைவில வென்றவாறு என உரை கண்டு அஃதாவது அந்தணர் மந்திரி புரோகிதனாகிய வழிக் கொடியும் குடையும் கவரியும் தார் முதலாயினவும் அரசராற் பெற்று அவரோடு ஒரு தன்மையராகி யிருத்தல் என விளக்கம் காண்பர் அவர். இதுவே சிறப்புடைத்தாம். (82)

குறுநில மன்னர்க்குரியன

## 638. வில்லும் வேலுங் கழலுங் கண்ணியுந்
## தாரு மாலையுந் தேரும் வாளும்
## மன்பெறு மரபி னேனோர்க் குரிய.

இது, முடியுடைவேந்தரல்லாக் குறுநில மன்னர்க்குரியன கூறுகின்றது.

(இ-ள்.) இவ்வெண்ணப் பட்டனவெல்லாங் குறுநில மன்னர்க்கும் உரியன (எ-று).

'மன்பெறு' மரபின் ஏனோ ரெனப்படுவார் அரசுபெறுமர பிற் குறுநிலமன்னர் எனக் கொள்க. அவை பெரும்பாணாற்றுள் ளும் பிறவற்றுள்ளுங் காணப்படும்.

(வி-ரை)

குறுநிலமன்னர் — கடையெழு வள்ளல்களும் அவர்களை யொத்தாரும். மன்பெறு மரபின் ஏனோர்—வைசிகரும் வேளாளரும் என்பர் இளம்பூரணர். (83

இழிகுலத்தோர்க்கு உரியன

639. அன்ன ராயினு மிழிந்தோர்க் கில்லை.

இஃது, எய்திய திகந்துபடாமைக் காத்தது.

(இ-ள்) மன்னவர் போலுஞ் செல்வத்தாராகிய இழிகுலத் தோர் நாடாண்டாராயினும் அவர்க்கு இவை கூறலமையாது (எ-று).

"மன்பெறு மரபி னேனோர்" (தொல்-மர:83)
எனவே, அரசர் வைசியரன்றிக் கீழ் அமையாவாயிற்று.

(வி-ரை)

இழிந்தோர்—வணிகர் என்பது இவர் கருத்து. கீழ் அமை யாவாயிற்று வேளாளர்க்கு அமையாவாயிற்று. 637வது நூற்பா முதல் இந்நூற்பாவரை பேராசிரியர் உரையால் அறியத்தக்கன ஆவன—அரசாளும் உரிமை அரசர்க்கே உரியது. அவர் தம் பரம்பரையினர் இலராயின் அந்தணர் அவ்வரசாட் சியை ஏற்கலாம். இவ்விருவரன்றி வைசியரும் ஒரோவழி நாடாட்சி பெறலாம். அவர் அதைப் பெறினும் வில், வேல், கழல் முதலிய அரசர்க்குரிய பெருஞ் சிறப்புக்களைப் பெறுதல் இல்லை.

எனவே வேளாண் மக்களுக்கு எவ்வாற்றானும் நாடாட்சி பெறும் உரிமை இல்லை என்பது இவர் கருத்தாகின்றது. இவ்வாறு அவரை ஒழித்தற்கோ, ஏனைய பார்ப்பனர், வைசிகர் ஆகியோர் அரசியற் சிறப்பும், அச்சிறப்பு இன்றியும் அரசாண்

டனர் என்பதற்கோ வரலாற்று வழிச் சான்று இன்மையின் இவ்வாறு கூறுதல் பொருத்தமின்றாம். இளம்பூரணர் அன்னர் தாமிழிந்தோராயினும் மேற் சொல்லப்பட்ட மன்னனால் வில்லு முதலாயின பெற்ற மரபினராயினும் நான்கு குலத்திலும் இழிந்த மாந்தர்க்கு அவை (படை, கொடி முதலியன) உளவாகக் கூறப்படா என்றவாறு எனவே அவரவர்க்குரியவாற்றால் கூறப்பெறும் என உரை காண்பர். (84)

ஓரறிவுயிர்கள் வழங்குமாறு

**640** [1]புறக்கா ழனவே புல்லென [2]மொழிப
வகக்கா ழனவே மரமென [3]மொழிப.

இது, மக்களை வழங்குமாற்றுக்கண் மரபு கூறி இனி ஓரறிவுயிர்க்கு இன்னவாறு சொல்லுதன் மரபென்ப துணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) புறத்துக் காழ்ப்புடையனவற்றைப் புல்லெனவும் அகத்துக் காழ்ப்புடையனவற்றை மரமெனவுஞ் சொல்லுப (எ-று).

'புறக்காழன' வெனவே, அல்வழி வெளிறென்பதறியப்படும்; பனையுந் தெங்குங் கமுகும் முதலாயின புல்லெனப்படும். இருப்பையும் புளியும் ஆச்சாவும் முதலாயின மரமெனப்படும்.

இங்ஙனம் வரையறைகூறிப் பயந்ததென்னை? புறத்தும் அகத்துங் கொடி முதலாயின காழ்ப்பின்றியும், அகின்மரம் போல்வன இடையிடை பொய்பட்டும் புல்லும் மரனும் வருவன உளவாலெனின், - இரண்டிடத்தும் ஏகாரம் பிரித்துக் கூறினமையானும் 'எனமொழிப' என்று இருவழியுஞ் சிறப்பித்து விதந்தமை யானுஞ் சிறுபான்மை அவையும் புல்லும் மரனுமென அடங்கு மென்பது.

"இரும்பனம் புல்லின் பசுந்தோட்டுக் குடம்பை"
எனவும்,

1. இந்நூற்பாவின் முதல் அடியை ஒரு நூற்பாவாகவும் இரண்டாம் அடியைப் பிறிதொரு நூற்பாவாகவும் கொள்வர் இளம்பூரணர்.

2. படுமே, 3. படுமே எனப்பாடங் கொள்வர் இளம்பூரணர்.

"யாஅங் கொன்ற மரஞ்சுட் டியவின்" (குறுந்;198)

எனவும் வரும்.

"நிலாவி னிலங்கு மணன்மலி மறுகிற்
புலாலஞ் சேரிப் புல்வேய் குரம்பை" (அகம்:200)

எனப் புறக்காழும் அகக்காழும் அல்லன புல்லெனப் பட்டனவென்பது. அது பனையோலையுமாகலிற் புறக்காழுடைய பனையுமாமென்பது. உதிமரக் கிளவியுமாமென்பது சிறு பான்மை. பிறவும் அன்ன.

(விளை-ர)

காழ்—வைரம், அல்வழி—புறம் அல்லாத அகத்து. வெளிறு—வைரமின்மை. பொய்பட்டும்—உள்ளீடு இன்றியும்.

புல்—கூரை வேய்தற்குரிய புல். கூரை வேய்தற்குப் பனை யோலையும் பயன் படுதலின், புல் பனையுமாம் என்றனர். இவ் வாறே அகத்தும் புறத்தும், வைரம் இல்லாத உதியையும் மரம் என்பர். உதிமரக் கிளவி (தொல்-எழுத்து-உயிர் 49) என் பர் தொல்காப்பியரும். இக்காலத்தார் இதனை ஒதிய மரமென் பர். (85)

புல்லின் உறுப்புக்கள்

641. தோடே மடலே யோலை யென்று
ஏடே யிதழே பாளை யென்று
ஈர்க்கே குலையென நேர்ந்தன பிறவும்
புல்லொடு வருமெனச் சொல்லினர் புலவர்.

இது, முறையானே புறக்காழனவற்றுறுப்பினைச் சொல்லும் மரபுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) எண்ணப்பட்ட வாய்பாடும் பிறவும் புல்லுறுப் பினைச் சொல்லும் வாய்பாடு (ஏ-று)

'பிறவு' மென்றதனாற் குரும்பை நுங்கு நுகும்பு போந்தை யென்றற் றொடக்கத்தனவுங் கொள்க.

"இரும்பனை வெண்தோடு மிலைந்தோ னல்லன்" (புறம்;45)

எனவும்,

மாவென மடலு மூர்ப" (குறுந்:17)

எனவும்,

"துகள்தபு காட்சி யவையத்தா ரோலை" (கலி:94)

எனவும் வரும். ஒழிந்தனவுங் கொள்க.

"வண்டோட்டு நெல்லின் வருகதிர் வணங்க"

(பத்துப் - நெடுநல்:22)

என்பதும் அது.

'நேர்ந்தன பிறவும்' என்பது கேட்டாரை உடம்படுவிப்பன பிறவுமென்றவாறு.

"வண்கோட் பெண்ணை வளர்ந்த நுங்கின்" (சிறுபாண்:27)

எனவும்,

"பனைநுகும் பன்ன சினைமுதிர் வராலொடு" (புறம்:249)

எனவும் வரும். பிறவும் அன்ன.

(வி-ரை)

நுகும்பு—சுருண்ட குருத்து அல்லது இளமடல் வாழை, ஈந்து, தாமரை, கழுநீர் முதலாயினவும் புல் எனப்படும் என்பர் இளம்பூரணர். (86)

மரத்தது உறுப்புக்கள்

642. இலையே தளிரே முறியே தோடே
சினையே குழையே பூவே யரும்பே
[1]நனையுள் ளுறுத்த வனையவை யெல்லா
மரனொடு வருஉங் கிளவி யென்ப.

இஃது, அகக்காழனவற் றுறுப்பினைச் சொல்லும் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) எண்ணப்பட்டனவும் பிறவுமெல்லாம் மரத்துறுப்பினைச் சொல்லும் வாய்பாடு (எ-று).

'அனையவை யெல்லாம்' என்ற புறநடையானே புல்லுந் தழையும் பொங்கரும் முதலாயின கொள்க. அவை,

---

1. நனையே உள்ளுறுத்த எனப்பாடங்கொள்வர் இளம்பூரணர்.

"தெய்வமடையின்தேக்கிலை குவைஇ' (பெரும்பாண்:104)
எனவும்,

"முறிமே யாக்கை" (பதிற்-மலைபடு:313)
எனவும்,

"யாஅ வொண்டளிர் அரக்கு விதிர்த்தன்ன" (அகம்:166)
எனவும்,

"தோடுதோய் மலிர்நிறை யாடி யோரே" (அகம்:166)
எனவும்,

"மேக்கெழும் பெருஞ்சினை யிருந்த தோகை" (குறுந்:26)
எனவும்,

"கொய்குழை யகைகாஞ்சித் துறையணி நல்லூர"
(கலி:74)
எனவும்,

"நனைத்த செருந்தி" (அகம்:150)
எனவும்,

"அண்டர் மகளிர் தண்தழை யுடீஇயர்
மரஞ்செல மிதித்த மாஅல் போல" (அகம்:59)
என்றாற்போல வருவனவுமெல்லாங் கொள்க.

மேலைச் சூத்திரத்துப் "புல்லொடு வருமெனச் சொல்லினர்" எனவும் இச்சூத்திரத்து "மரனொடு வரூஉங் கிளவி" யெனவும் மிகைபடக் கூறியதென்னையெனின்-, அம்மிகையானே எடுத்தோதிய புறக்காழனவும் அகக்காழனவுமன்றி அவற்றொடு தழீஇக்கொள்ளப்படுவனவுமெல்லாம் இவற்றுக் குரிய வென்பது கொள்க. அவை, ஊகம்புல்லுஞ் சீழகம்புல்லும் பஞ்சாய் முதலியனவும்; புழற்கால் ஆம்பல் முதலியனவும் புல்லெனப் பட்டடங்கி யவற்றின் பெயரும் பெறுமென்பது. பிடாவுங் காயாமுதலிய புதலும், பிரம்புமுதலாகிய கொடியும் மரமெனப்பட்டவற்று உறுப்பின் பெயர் பெறுமென்பது. அவை ஊகந்தோடு சீழகந்தோடு எனவும் பிடவிலை காயாம்பூ முல்லைப்பூ எனவும் வரும். பிறவும் அன்ன.

மற்றுப் பிறப்பு முறையால் தளிர் முற்கூறுது இலை முற் கூறியதென்னையெனின்,-புல்லினுள் ஒருசாரன இலையெனவும் பூவெனவும் படுமென அதிகாரங்கோடற்கென்க. அவை,

"ஈத்திலை வேய்ந்த வெய்ப்புறக் குரம்பை"

(பெரும்பாண்:88)

எனவும்,

"ஆம்பலிலை; தாமரையிலை"

எனவும்,

"ஆம்பற்பூ, தாமரைப்பூ"

எனவும் வரும், பிறவும் அன்ன கொள்க.

இன்னும் இவ்விலேசானே புல்லிற்குரியன மரத்திற்கு வருவனவுங் கொள்க; அவை,

"ஈனறவ டிதலையோ வீர்பெய்யுந் தளிரொடும்" (கலி:32)

என ஈர்க்கென்பது மாவிலைமேல் வந்தது, பிறவும் அன்ன. (87)

புல்லுக்கும் மரத்தும் உரிய பொது உறுப்புக்கள்

**643. காயே பழமே தோலே செதிளே**
**வீழொ டென்றுங் கவையு மன்ன.**

இது மேற்கூறிய இரண்டற்கும் பொதுவுறுப்புணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்,) இவையும் அவ்விருதிறத்தோடொக்கும் (எ-று).

உதாரணம்; தெங்கங்காய் கமுகங்காய் எனவும், வேப்பங் காய் மருதங்காய் எனவும், காயென்பது அவ்விரண்டற்கும் வந் தது. பழமென்பதற்கும் இஃதொக்கும். பனந்தோல் வேப்பந் தோல், பனஞ்செதிள் வேப்பஞ்செதிள், தாழைவீழ் இத்திவீழ் என இவையும் இருபாற்குமுரியவாயின.

மற்று இவையெல்லாம் வரையறையின்றிச் செல்லுமாயிற் புறக்காழன அகக்காழனவென வரையறுத்துப் பயந்ததென்னை யெனின்,- அவ்விருபகுதியுள் அடங்கக் கூறியவெல்லாம் புல் லெனவும் மரமெனவும் படாவென்றற்கும் அவற்றுறுப்பு ஓதிய வாற்றாற் புல்லின் கண்ணும் மரத்தின் கண்ணும் பெறுவர னவாமென்றற்கு மென்பது.

(வி-ரை)

அடங்க-முழுமையாக. (88)

இருதிணை ஐம்பாற் பொருள்களை மரபு திரியாமல் கூறல்வேண்டுமெனல்

**644. நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்துங்**
**கலந்த மயக்க முலக மாதலின்**
**இருதிணை யைம்பா லியனெறி வழாஅமைத்**
**திரிவில் சொல்லொடு தழாஅல் வேண்டும்.**

இஃது, உலகியலெல்லாம் மரபிற்றிரியாமையின் அதன் சிறப்புணர்த்தி அதற்குக் காரணமுங் கூறுகின்றது.

(இ-ள்.) நிலனுந் தீயும் நீருங் காற்றும் ஆகாயமுமென்னும் ஐம்பெரும் பூதமுங் கலந்த கலவையல்லது உலகமென்பது பிறிதில்லாமையின் அவற்றைச் சொல்லுமாறு சொல்லாது இரு திணைப்பொருளென வேறுபடுத்தும் ஐம்பாலென வேறு படுத்தும் வழங்குகின்ற வழக்கெல்லாம் மரபியல் திரியாத சொல்லொடு தழீஇ வரல்வேண்டும் (எ-று).

இதன் கருத்து; "நிலம்வலிது, தீவெய்து, நீர் தண் ணென்றது, வளியெறிந்தது, விசும்பு அகலியது" என அஃறிணைவழக்கினவாயினும் இவை கலந்த வழியும் அவ்வாய் பாட்டான் வழங்காது உயர்திணை வாய்பாடு வேறாகவும், அஃறிணை வாய்பாடு வேறாகவும் அவைதம்முட் பகுதியாகிய ஐந்துபாற்சொல்லும் வெவ்வேறாகவும் வழங்குகின்ற வழக்கிற் குக் காரணம் மரபல்லது பிறிதில்லை யென்றவாறு; எனவே மரபினை வலியுறுத்தவாறு.

மற்று'நிலம் நீர் தீ வளி ஆகாயமென ஒன்று ஒன்றனுள் அடங்குமுறையாற் கூறுதல் செய்யாது மயங்கக் கூறியதென்னை யெனின்,—அவை கலக்குங்கால் ஒரோபொருளின் கண்ணும் அம்முறையானே நிற்குங்கொலென்று கருதினுங் கருதற்க, மயங்கிநிற்குமென்றற்கு அவ்வாறு கூறினானென்பது.

(வி-ரை)

கலத்தலாவது முத்தும், பவளமும், நீலமும், மாணிக்கமும் விரவினாற் போறல்.

மயக்கமாவது பொன்னும், வெள்ளியும், செம்பும், உருக்கி ஒன்றுதல் போறல். உலக மென்றது உலகினையும் உலகினுட்

பொருளையும். உலகமாவது முத்தும் மணியும். கலந்தாற் போல நிலம், நீர், தீ, வளி, ஆகாயம் என விரவி நிற்கும். உலகினுட் பொருள், பொன்னும், வெள்ளியும், செம்பும், உருக்கி யொன்ற ஹற் போல வேற்றுமைப்படாது நிற்கும். அவ்விரண்டினையும் உலகம் உடைத்தாகலின் கலந்த மயக்கமென்றார். இப்பொருள் எல்லா உலகத்தையும் விட்டு நீங்காமையின் இவற்றை ஒரு முகத்தான் நோக்க வேறுபாடிலவாமாதலான் மேற்கூறிப் போந்த முறையினான் வேறுபடுத்து இருதிணையாகவும், ஐம்பாலாகவும் இயன்ற நெறி வழுவாமைத் திரிபுபடாத சொல்லோடே புணர்க்க என விளக்கம் காண்பர் இளம்பூரணர்.

செய்யுள் மரபு பிறழாமல் செய்யபடுமெனல்

**645. மரபுநிலை திரிதல் செய்யுட் கில்லை**
**மரபுவழிப் பட்ட சொல்லி னான.**

இது, மரபினையே வற்புறீஇயது.

(இ-ள்.) வழக்கினகத்து வரலாற்றுமுறைமை பிறழாது வருதலே தக்கது, மற்றுச் செய்யுள்செய்த சான்றோர் அதற் கேற்ற வகையாற் செய்யப்பெறுவராகலின் (எ-று).

அவர்க்கு இம்மரபு வேண்டுவதன்றுகொலென்று கருதினுங் கருதற்க.

"மரபே தானு, நாற்சொல் லியலான் யாப்புவழிப்பட்டன'
(தொல்-செய்; 80

என்றதனான், மரபுவழிப்படுங்காலென்பான், 'மரபு வழிப்பட்ட சொல்லி னான" என்றானென்பது. ஆண்டுக் கூறிய மரபு உலகியலாகலான் அவ்வுலகியல் அவ்வாறாதற்குக் காரணம் ஈண்டுக் கூறிச் செய்யுட்கும் அதுவே காரணமெனக் கூறினானென்பது.

இதனது பயன்: 'செஞ்ஞாயி' றென்பது வழக்கன்றாயினும் உண்மைநோக்கி அதனைச் செய்யுள் செய்யுஞ் சான்றோர் (புறம்-38) அவ்வாறு வழங்கினாற்போல உயர்திணைப் பொருளையும் ஐம்பெரும்பூதங்கள் அஃறிணையான் வழங்குதலுண்மை நோக்கி அவ்வாறுஞ் சொல்லப்பெறுவகொலென்று ஐயுற்றானை ஐயம் அறுத்தவாறு. அஃறிணைப் பாற்கும் இஃதொக்கும்;

அல்லதூஉம் இன்ன செய்யுட்கு இன்னபொருளுரித் தெனவும், இன்னபகுதியாற் பெயர்பெறுமெனவும் மரபுபற்றியே சொல்லப் படுமென்றற்கும், இனி 'நிறைமொழி மாந்தர் மறைமொழி. போல் வன சில மிறைக்கவி பாடினருளரென்பதே பற்றி அல்லாதாரும் அவ்வாறு செய்தன் மரபன்றென்றற்கும் இது கூறினனென்பது; அவை: சக்கரஞ் சுழிகுளங் கோமூத்திரிகை, ஏகபாதம்,எழுகூற் றிருக்கை, மாலைமாற்று என்றாற்போல்வன. இவை மந்திரவகை யானன்றி வாளாது மக்களைச் செய்யுள் செய்வார்க்கும் அகனைந் திணைக்கும் மரபன்றென்பது கருத்து. அல்லாதார் இவற்றை எல்லார்க்கும் செய்தற்குரியவென இழியக்கருதி அன்னவகை யான் வேறு சில பெய்துகொண்டு அவற்றிற்கும் இலக்கணம் சொல்லுப. அவை இத்துணையென்று வரையறுக்கலாகா; என்னை? 'ஒற்றை இரட்டை புந்தி வித்தார'' மென்றாற்போல் வன பலவுங் கட்டிக்கொண்டு அவற்றானே செய்யுள் செய்யினுங் கடியலாகாமையின், அவற்றிற்கு வரையறைவகையான் இலக்கணங் கூறலாகாவென்பது,

''ஐயைதன் கையு ளிரண்டொழித் தெனைம்பான்மேற்
பெய்தார் பிரிவுரைத்த தில்லையால்''

எனவும்,

''கோடாப் புகழ்மாறன் கூடலனையானை
யாடா வடகினுளுங் காணேன்'' (திணை நூற்;4)

எனவுஞ் சொல்லுவார் சொல்லுவனவற்றுக்கொல்லாம் வரை யறை யின்மையின் அவற்றுக்கு இலக்கணங் கூறார் பண்ணத்திப் பாற் (4/2) படுப்பினல்லதென்பது. (90)

(வி·ரை)

செய்யுள் செய்யும் சான்றோர் மரபுநிலை பிறழாது செய்யுள் செய்வார் ஆதலின், வழக்கினகத்தும் மரபு நிலை பிறழலாகாது என்பது கருத்தாம்.

உண்மை நோக்கிட — ஞாயிறு செம்மையுடைத்து என்பதை நோக்கி. மிறைக்கவி — சித்திரகவி.

இவ்வாறு செய்யுள் செய்தல் நிறைமொழி மாந்தர் தாம் கூறும் மறைமொழிக்கே உரியது என்பது இவர் கருத்து. அன்ன வகையால் வேறு சில பெய்து கொண்டு — அப்படிப்பட்ட வகை

யால் ஆசு, மதுரம், வித்தாரம், போல்வனவாய செய்யுள் வகைகளையும் கூட்டிக் கொண்டு,

ஒற்றை—முத்தகச் செய்யுள்: தனியே நின்று ஒரு பொருள் பயப்பது. இரட்டை—குளகச் செய்யுள். இரண்டு முதலிய பல பாடல்களால் ஒரு பொருள் பயந்து நிற்பது. புத்தி—நுட்ப அணி எனக் கூறப்படுவது போல்வது. வித்தாரம் – அகல கவி

ஐயைதன் கையுள் — காளியின் கைகள் எட்டனுள் இரண்டு ஒழித்து - 8—2=6, 6 என்றது கார்த்திகை: ஈண்டு அது கார்த்திகைப் பூவாகிய காந்தள் பூவைக் குறித்தது. ஐம்பால்—கூந்தல். அடா அடகு—விளை பாட்டு, அது நீண்டது.

மரபு நிலைதிரிதல் செய்யுட்கில்லை எனவே வழக்கினுள் சில திரியவும் பெறும். அவை ஆணியைப் போத்தென்றல் போல்வன என விளக்கம் காண்பர் இளம்பூரணர்.

மரபுநிலை பிறழ்ந்தால் பொருள் வேறுபடுமெனல்

## 646. மரபுநிலை திரியிற் பிறிதுபிறி தாகும்.

இது, மேற்போன வழக்கிற்குஞ் செய்யுட்கும் வருகின்ற இலக்கணத்திற்கும் பொது.

(இ ள்.) மரபினை நிலைதிரித்துச் சொல்லுபவெனின், உலகத்துச் சொல்லெல்லாம் பொருளிழந்து பிறிதுபிறி தாகும் (எ-று).

செவிப்புலனாய ஓசை கேட்டுக் கட்புலனாய பொருளுணர்வ தெல்லாம் மரபுபற்றாக அல்லது மற்றில்லையென்றவாறு. (91)

வழக்கெனப்படுவது

## 647 வழக்கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே
## நிகழ்ச்சி யவர்கட் டாக லான.

இது, வழக்கினுள் மரபினைப் பிழைத்துக் கூறுவனவும் உளவென்பதுணர்த்துதல் நுதலிற்று.

(இ ள்.) வழக்கென்று சொல்லப்படுவது உயர்ந்தோர் வழங்கிய வழக்கே; என்னை? உலகத்து நிகழ்ச்சியெல்லாம் அவரையே நோக்கினமையின் (எ-று).

அவரையே நோக்குதலென்பது அவராணையான் உலக நிகழ்ச்சி செல்கின்றதென்றவாறு; எனவே உயர்ந்தோரெனப் படுவார் (509) அந்தணரும் அவர்போலும் அறிவுடையோரு மாயினாரென்பது.

(விரை)

வழக்கினுள் மரபினைப் பிழைத்துக் கூறுதல் என்பது இழிந்தோர் அவ்வாறு கூறுதலை நோக்கியாம். அன்றி உயர்ந்தோராயின் மரபு பிழையார் என்பது கருத்து. உயர்ந்தோர்—அறிவானமைந்த சான்றோர்.

வழக்கென்று சொல்லப்பட்டது உயர்ந்தோர் மேலது; நூலின் நிகழ்ச்சி அவர் மாட்டாதலான் என்றவாறு.

மரபுநிலை திரிதல் செய்யுட் கில்லையெனவும் அதனானே வழக்கிற் சிறுபான்மை வருமெனவும் செய்யுள் மரபு ஒழியவரின் அது வழுவாமெனவும் கூறினாராயிற் பாயிரத்துள் 'வழக்குஞ் செய்யுளுமாயிரு முதலினெழுத்துஞ் சொல்லும் பொருளு நாடி' என்றதனோடு மாறு கொள்ளுமோவென ஐயுற்றார்க்கு ஆண்டு வழக்கென்று சொல்லப்பட்டது உயர்ந்தோர் வழக்கினை எனவும் இழிந்தோர் வழக்கு வழக்கெனப்படாதெனவும் கூறியவாறு.

(92)

நூலது வகை

648. மரபுநிலை திரியா மாட்சிய வாகி
யுரைபடு நூறா மிருவகை யியல
முதலும் வழியுமென நுதலிய நெறியின்.

இது, மேற்கூறப்பட்ட மரபு வழக்கிற்கேயன்றி இலக்கணஞ் செய்வார்க்கும் வேண்டுமெனவும் அவ்விலக்கணம் இனைப் பகுதித்தெனவுங் கூறுகின்றது.

(இ - ள்) மரபுநிலையில் திரியாமை தமக்குக் குணனாக உடையவாகி எல்லாரானும் உரைக்கப்படும் நூல் இரண்டிலக் கணத்தவாகும்; முதனூலெனவும், வழிநூலெனவுங் கருதிக் கொள்ளும் அடிப்பாட்டான் (எ-று).

"மரபுநிலை திரியிற் பிறிதுபிறி தாகும்" (தொல்-மர:91) என்பதனை இதற்குமேல் எய்துவித்தானன்றே, அதனான் மரபு நிலை திரியாமையே தமக்குத் தகுதியாவதெனவும் இவ்விரு வாற்றானும் ஒன்றனைச் செய்தலே மரபெனவுங் கூறியவாறு.

'நுதலிய நெறி' (648) யென்றதென்னையெனின்,- இன்னதே முதனூல் இன்னதே வழிநூலென்பதோர் யாப்புறவில்லை; ஒரு நூல்பற்றி ஒருவன் வழிநூல் செய்தவழி அவ் வழிநூல்பற்றிப் பின்னொருகாலத்து ஒரு நூல் பிறந்ததாயின் அது வழிநூலெனப் பட்டு முன்னை வழிநூலே முதனூலெனப்படுமென்றற்கென்பது. இதனைச் சார்புநூலென்னுமோவெனின், வழிநூலுஞ் சார்புநூலு மாகலின் அங்ஙனங் கூறானாயினான், எற்றுக்கு? சார்புநூலினைப் பற்றி ஒருநூல் பிறந்தவழிச் சார்பின் சார்பெனக் கூறல் வேண்டுவதாகவமனும் அதனைச் சார்ந்து தோன்றிற் சார்பென னுஞ் சொல்லை மும்முறை சொல்லியும் அதன்பின் தோன்றிய நூற்கு நான்முறை சொல்லியும் எண்ணிகந்தோடுதலானு மென்பது.

மற்று இரண்டாமென்னு முறைமைக்கண்நின்ற நூலினையே வழிநூலெனக் கொண்டு மூன்றாவது தோன்றிய நூலே சார்பு நூலாகாவும் அதன்பின்னர் நூல் செய்யப்பெறாரெனவும் கொள் ளாமோ வெனின்,- முதனூலிற் கிடந்த பொருளை ஓர் உபகாரப் பட வழிநூல் செய்த ஆசிரியன் செய்தக்காற் சார்புநூலெனப் பின்னர் ஓர் ஆசிரியன் நூல் செய்ததனாற் பயந்ததென்னை யெனக. என்றார்க்கு, வழிநூலும் பிற்காலத்தரிதாமாயின் அதனையும் எளிதாகச் செய்தலன்றே இதனாற் பயந்ததெனின், அதுதானும் பின்னொருகாலத்து அரிதாமாயின் அதனையும் எளிதாகச் செய்வானல்லனோவென்று மறுக்க. இவ்வாராய்ச்சி வேண்டா வென்றற்கன்றே இவ்விருவகையானும் வருதலே மரபெபன்னானுபிற்றென்றொழிக

ஒன்றன்வழியேயன்றியுந் தாந்தாம் அறிந்தவாற்றானும் நூல்செய்யப் பெறுரோவெனின்,- அது மரபன்று; அதுநோக்கி யன்றே "மரபுநிலை திரியிற் பிறிதுபிறி தாகும் (646) என்ற விதி நூலிற்கும் எய்துவித்துப் புகுந்ததென்பது; என்னை? பிறிது பிறி தாகுமாறெனின்,- ஒரு பொருட்கண்ணே மாறுபட்ட இலக்

கணங் கூறின் அவ்விரண்டும் அதற்கிலக்கணமாகாது; என் போல? மாணிக்க மணியினைச் செவ்வண்ணம் முதலாயின சில இலக்கணங்கூறிய நூல் கிடப்பக் கருவண்ண முதலாயினவும் அதற்கிலக்கணமென்று ஒருவன் எதிர்நூலென்பதோர் நூல் பிற்காலத்துச் செய்யுமாயின் அஃது அதன் இலக்கணமெனப் படாதாகலானென்பது.

மற்றுக் காலந்தோறும் வழக்கு வேறுபடுதலின் வழக்கு நூலும் வேறுபட அறையும்பிற எனின்,-

வழக்கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே நிகழ்ச்சி யவர்கட் டாக லான்" என்றமையானும் அங்ஙனம் காலந்தோறும் ஒரோர்நூல் செய்யின் வழக்கல்லது எஞ்ஞான்றும் அவ்விலக்கணத்தாற் பயமின்றாகிய செல்லுமாகலானும் அது பொருந்தாதென்பது. அல்லதூஉம், முற்காலத்து வழங்கிவந்ததனை வழுவென்று களைபவாயினன்றே பிற்காலத்துப் பிறந்த வழக்கு இலக்கணமெனத் தழிஇக்கொள்வதென்க.

இந்நூல் இலக்கணத்தினை இவ்வோத்தின் இறுதிக்கண் வைத்தான் வழக்குஞ் செய்யுளுமென்று விதந்து புகுந்த இரண்டிலக்கணமும் முடித்தல்லது அவற்றைக் கூறும் இலக்கணங் கூறலாகாமையினென்பது. இக் கருத்தறியாதார் செய்யுளியலினை ஒன்பதாம் ஓத்தென்ப.

அல்லதூஉம் இந்நூலிலக்கணம் வழக்கிற்குஞ் செய்யுட்குமேயன்றி அங்ஙனமாகப் பொருண்மேவும் பண்டம் முதலாயவற்றிற்கு இலக்கணஞ் செய்யுங்காலும் நியாயஞ்செய்யினுந் தமிழ்நூலதற்கிலக்கணம் எவ்வாற்றானும் இதுவே யென்றற்கும் கண்டுக் கூறினானென்பது, எனவே, பிறபாடை நூல்களாயின் இம் மரபு வேண்டுவதன்றாயிற்று.

மற்று முதனூலினை இன்னதென்பது துணிந்து உரையாரோவெனின்,-அது வன்றே இனிக் கூறுகின்றதென்பது.

(வி- ரை)

பண்டம் முதலாய—திரவியம் முதலாய. இவற்றிற்கு இலக்கணம் கூறுவது தர்க்க நூலாம். நியாயம் செய்யினும்—நியாய இலக்கணம் செய்யினும்.

சார்புநூல் என்பதும் ஒன்றுண்டாலெனின், அஃது இருவர் ஆசிரியர் கூறியவதற்கு உடம்பட்டு வருதலின் அதுவும் வழி நூலென அடங்கும்; எதிர்நூல் என்பதும் ஒன்றுண்டு. அதுவும் ஒரு முனைவனாற் செய்யப்படின் முதனூலாம்; பிறர் செய்யின் வழங்காது என விளக்கம் காண்பர் இளம்பூரணர்.

முதனூலின் இலக்கணம்

649. வினையி னீங்கி விளங்கிய வறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும்.

மேல் ஒன்றற்கு முதனூலாகியும் ஒன்றற்கு வழிநூலாகியும் வந்து தடுமாறுமென்றான், இனி அவ்வாறன்றி ஒன்றே முதனூலாகவுஞ் சிறுபான்மை உண்டென்கின்றது.

(இ-ள்) செய்வினையின் பயன் துவ்வாத மெய்யுணர்வுடையனாகிய முன்னோனாற் செய்யப்பட்டதே ஒருதலையாக முதனூலாவது (எ-று).

எனவே, மேலைச்சூத்திரத்து முதனூலும் வழிநூலுமெனப் பட்டன முதலுஞ் சினையும் போலத் தடுமாறுமென்பதூஉம் இதுவாயின் தடுமாறாது எஞ்ஞான்று முதனூலாமென்பதூஉம் பெற்றாம்.

வினையென்பன இருவினை, இன் நீக்கத்துக்கண் வந்தது. 'விளங்கிய அறி' வென்பது முழுதும் உணரும் உணர்ச்சி. 'அறிவி'னென நின்ற இன் சாரியை. இன்ன அறிவினொடு கூடிய முனைவன் அறிவின் முனைவனெனப்படும். முன்னோனை முனைவனென்பது ஓர்சொல் விழுக்காடாம். முன்னென்பதனை முனையென்பவாகலின்.

மற்று 'வினையி'னென்ற வேற்றுமை நிற்பதன் நிலையும் நீங்குவதன் நீக்கமுங் கூறுமாகலின் ஒருகாலத்து வினையின்கணின்று ஒருகாலத்து நீங்கினான்போலக் கூறியதென்னையெனின்,- அற்றன்று; வினைப்பயந் தொடரற்பாற்றுள்ளும் இலனென்பதன்றி அவர்க்குச் சில செய்கையுளவென்பது பல்லோர்க்கும் உடம்பாடாகலின், அவ்வினைக்கணின்றே; போகமும் பாவமும் மெய்யுணர்வு பற்றித் தெறப்பட்ட வித்துப்போலப், பிறப்பில்

பெற்றியனாகி நீங்குமாகலின் அவ்வாறு கூறல் அமையுமென்பது. என்னை? 'குற்றங் கெடுத்து முற்ற உணர்ந்தோரும்', 'கெடுப்பதோர் குற்றமின்றி முழுதுணர்ந்தோரும்' எல்லாம் பிறர்க்குறுதியாகிய ஆகமஞ் செய்யினுந் துறக்கம் முதலாகிய பயன்றுய்ப்பாரல்லராகலின்.

இனி முனைவனாற் செய்யப்படுவதோர் நூலில்லையென்பார் அவன்வழித் தோன்றிய நல்லுணர்வுடையார் அவன்பாற் பொருள் கேட்டு முதனூல் செய்தாரெனவும், அம்முனைவன் முன்னர் ஆகமத்துப் பிறந்ததோர் மொழியைப்பற்றி அனைத்துப் பொருளுங் கண்டு பின்னர் அவற்றவற்றுக்கு நூல்செய்தார் அவரெனவும், அவ்வாகமத்தினையே பிற்காலத்தாரும் ஒழுக்கம் வேறுபடுந்தோறும் வேறுபடுத்து வழிநூலுஞ் சார்புநூலுமெனப் பலவும் செய்தாரெனவுங் கூறுப. அவை எவ்வாற்றானும் முற்ற உணர்ந்தோர் செய்த நூலன்மையின் அவை தேறப்படா; அல்லதூஉம் அவை தமிழ்நூலன்மையின் ஈண்டு ஆராய்ச்சியில வென்பது.

மற்று, மேலைச்சூத்திரத்து நுதலிய நெறியானே முதலும் வழியுமா மெனவே, எல்லார்க்கும், முதல்வனாயின் செய்தது முதனூலேயாமென்பது பெறுமாகலின், ஈண்டு இச்சூத்திரங் கூறியதென்னையெனின்,- தாமே தலைவராவாரும் அத்தலைவரை வழிப்பட்டுத் தலைவராயினாரும் பலராகலின் தாமே தலைவராயினார் நூல் செய்யின் முதனூலாவ தெனின், அற்றன்று; தாமே தலைவராயினார் முற்காலத்துத் தமிழ்நூல் செய்திலராகலின் தலைவர் வழிநின்று தலைவனாகிய அகத்தியனாற் செய்யப்பட்டதும் முதனூலென்பது அறிவித்தற்கும், பிற்காலத்துப் பெருமானடிகள் களவியல் செய்தாங்குச் செய்யினும் பிற்காலத்தானும் முதனூலாவதென்பது அறிவித்தற்கும், அங்ஙனம் 'வினையி னீங்கி விளங்கிய அறிவினான்' முதனூல் செய்தானென்பது அறிவித்தற்கும் இது கூறினானென்பது. எனவே, அகத்தியமே முற்காலத்து முதனூலென்பதூஉம், அதன் வழித்தாகிய தொல்காப்பியம் அதன் வழிநூலென்பதூஉம் பெற்றாம்.

என்றார்க்கு முத்துநூலெனப்பட்டன முற்காலத்து வீழ்ந்தனவெனக் கூறித் தொல்காப்பியர் அகத்தியத்தோடு பிறழவும்

அவற்று வழி நூல் செய்தாரென்றக்கால் இழுக்கென்னையெனின் அது வேத வழக்கொடு மாறுகொள்வார் இக்காலத்துச் சொல்லினும் இறந்த காலத்துப் பிற பாசாண்டிகளும் மூன்று வகைச் சங்கத்து நான்கு வருணத்தொடு பட்ட சான்றோரும் அது கூறுரென்பது. என்னை? கடைச்சங்கத்தாருட் களவியற் பொருள் கண்ட கணக்காயனார் மகனார் நக்கீரர் "இடைச்சங்கத்தார்க்குங் கடைச்சங்கத்தார்க்கும் நூலாயிற்றுத் தொல்காப்பியம்" என்றாராகலானும், பிற்காலத்தார்க்கு உரையெழுதினேரும் அது கூறிக் கரிபோக்கினாராகலானும், அவர் புலவத் துறந்த நோன்புடையாராகலாற் பொய்கூறாராகலானுமென்பது. இங்ஙனங் கூறுக்கால் இதுவும் மரபுவழுவென்று அஞ்சி அகத்தியர் வழித்தோன்றிய ஆசிரியரெல்லாருள்ளுந் தொல்காப்பியனாரே தலைவரென்பது எல்லா ஆசிரியருங் கூறுபவென்பது; எங்ஙனமோவெனின்,-

"கூறிய குன்றினு முதனூல் கூட்டித்
தோமின் றுணர்ந்த தொல்காப் பியன்றன்
ஆணையிற் றமிழறிந் தோர்க்குக் கடனே"

இது பல்காப்பியப் புறனடைச் சூத்திரம்.

"வீங்குகட லுடுத்த வியன்கண் ஞாலத்துத்
தாங்கா நல்லிசைத் தமிழ்க்குவிளக் காகென
வானோ ரேத்தும் வாய்மொழிப் பல்புக
ழானாப் பெருமை யகத்திய னென்னு
மருந்தவ முனிவ னாக்கிய முதனூல்
பொருந்தக் கற்றுப் புரைதப வுணர்ந்தோர்
நல்லிசை நிறுத்த தொல்காப் பியனும்"

என்பதனால் அகத்தியர் செய்த அகத்தியத்தினை முதனூலெனவும் அவர் வானோர் ஏத்தும் வாய்மொழிப் பல்புகழ் ஆனாப் பெருமையுடையாரெனவும், அவராற் செய்யப்பட்ட முதனூல் பொருந்தக் கற்றுப் புரைதப உணர்ந்தோருள் தலைவராயினார் தொல்காப்பியனாரெனவும், பன்னிருபடலத்துப் புனைந்துரைவகையாற் பாயிரச் சூத்திரத்துள் உரைக்கப்பட்டது. இனிப், பன்னிருபடலம் முதனூலாக வழிநூல் செய்த வெண்பாமாலை ஐயனா ரிதனாரும் இது கூறினார்; என்னை?

"மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்
தென்மலை யிருந்த சீர்சால் முனிவரன்
தன்பால் தண்டமிழ் தாவின் றுணர்ந்த
துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன்முதற்
பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த"

எனப் பாயிரஞ் செய்தற்கு உடன்பட்டமையினென்பது.

இவற்றானெல்லாம் அகத்தியமே முற்காலத்து முதனூலென்பதூஉந், தொல்காப்பியம் அதன் வழிநூலென்பதூஉம், அதுதானும் பனம்பாரனார்,

"வடவேங்கடந் தென்குமரி" (தொல்:பாயிரம்)

எனக் குமரியாற்றினை எல்லையாகக் கூறிப் பாயிரஞ்செய்தமையிற் சகரர் வேள்விக்குதிரை நாடித் தொட்ட கடலகத்துப் பட்டுக் குமரியாறும் பலைநாட்டோடு கெடுவதற்கு முன்னைய தென்பதூஉம், அவ்வழக்குநூல் பற்றியல்லது ஈண்டு மூன்று வகைச் சங்கத்தாருஞ் செய்யுள் செய்திலரென்பதூஉம், ஆசிரியரும் அவர் போல்வாரும் அவர்வழி ஆசிரியருஞ் செய்யுள் செய்த சான்றோருஞ் சொல்லாதன சொல்லப்படாவென்பதூஉம் அவருடம் படாதன சொல் உளவென்று எதிர்நூலென ஒருவன் பிற்காலத்து நூல்செய்யுமாயின் தமிழ்வழக்காகிய மரபினோடுந் தமிழ்நூலோடும் மாறுபட நூல்செய்தானாகுமென்பதூஉம், இனித் தமிழ்நூலுள்ளுந் தமது மதத்துக்கேற்பன முதனூல் உளவென்று இக்காலத்துச் செய்துகாட்டினும் அவை முற்காலத்து இலவென்பது முற்கூறி வந்த வகையான் அறியப்படுமென்பதூஉம், பாட்டுந் தொகையும் அல்லாதன சிலநாட்டிக் கொண்டு மற்று அவையுஞ் சான்றோர் செய்யுளாயின; வழுவில் வழக்கமென்பார் உளராயின் இக்காலத்துள்ளும் ஒருசாரார்க் கல்லது அவர் சான்றோரெனப்படாரென்பதும், இங்ஙனங் கட்டளை செய்யவே காலந்தோறும் வேறுபடவந்த அழிவழக்கும் இழிசினர் வழக்கும் முதலாயினவற்றுக்கெல்லாம் நூல்செய்யின் இலக்கணமெல்லாம் எல்லைப்படாது இகந்தோடுமென்பதூஉம், இறந்தகாலத்து நூலெல்லாம் பிறந்த காலத்து வழக்குப்பற்றிக் குன்றக்கூற லென்னுங் குற்றந்தங்குமென்பதூஉம், ஒன்றாகப் புறனடுத்து ஒரு சூத்திரமே செய்துபோத அமையினன்றி ஒழிந்த

சூத்திரங்களெல்லாம் மிகையாமென்பதூஉமெல்லாம் படுமென்பது.

(வி-ரை)

செய்வினையின் பயன் துவ்வாது—தாம் செய்கின்ற செயல்களின் பயனை நுகராது. இறைவன் அருள் வழிப்பட்டோர் தம் மனத்தைத் அதன்கண் அழுந்த வைத்து வாழ்வர். 'ஆதலின் அவர் தம் செயல்களின் பயன்கள் அவரை அடைவதில்லை. ஆசையினில் வெறுப்பில் இவையல்லாதும் எல்லாம் அடைந்தாலும் ஞானிகள் தாம் அரனடியே அகலார்' என வரும் சிவஞான சித்தியாரும் காண்க. அவர் தம் உள்ளம் இறையருள் வழி நிற்றலால் வினைப்பயன் அவர்களைத் தொடருவதில்லை எனினும், உடல் ஊழாக சில செய்கை உளவாகும் ஆயினும் அச்செய்கையின் பயன் அவரைத் தாக்குதலில்லை. வினையின் நீங்கி விளங்கிய அறிவன் என்பதற்கு இறைவன் அருள் வழிப்பட்டோர் என்பது இவர் உரையாகின்றது. ஆயினும் இறைவனே எனக் கோடல் பொருந்துவதாம். சங்கரநமச்சிவாயரும் இறைவனென்றே உரை காண்பர்.

நிற்பதன் நிலையும்—வினைக்கண் நிற்பதும். நீங்குவதன் நீக்கமும் - அதனின்றும் நீக்குதல். வினையின் நீங்கி என்பதால் ஒரு காலத்து வினைக் கண் நின்று பின் நீங்கியது என்பது போதருகின்றது. அதனையே இவ்வாறு விளக்குகின்றார். தெறப் பட்ட வித்து-வறுத்த வித்து வறுத்த வித்து முளையாகாதவாறு போல இவர்கள் அறமும் பாவமும் வினைப்பயன் தாரா என்பது கருத்து. குற்றம் கெடுத்து முற்ற உணர்ந்தோர்—ஒரு காலத்து வினை வயப்பட்டுப்பின் அதனின் நீங்கியோர். குற்றமின்றி முழுதுணர்ந்தோர்-இறைவனின் ஆணை வழி நின்று இயங்குவோர்.

'மன்னுமாமலை மகேந்திரமதனிற் சொன்ன ஆகமம் தோற்றுவித்தருளியும்' எனவரும் திருவாக்கால் இறைவனே ஆகமம் செய்தனன் என உணரலாம்.

ஆகமத்துப் பிறந்ததோர் மொழி — உய்வதற்குரியதோர் நெறி: உபதேசம். பெருமானடிகள்—இறைபணர்.

பாசாண்டிகர்—வேத நெறியோடு மாறுபட்ட சமயத்தவர்கள். கரி போக்கினர்—சான்று பகர்ந்தார்: அடியார்க்கு நல்லார். அவர் புலவுத் துறந்த நோன்புடையார்—நக்கீரர்; உடம்பு மிகையெனக் கருதி அதனை ஒறுத்த விரதமுடையார்.

பனைநாடு குமரியாற்றிற்கும் பஃறுளியாற்றிற்கும் இடையே இருந்து அழிந்து பட்டதெனக் கூறும் ஏழ்குறும்பனை நாடு. அழி வழக்கு—கால வகையால் அழிந்து வரும் வழக்கு. (69)

வழிநூல் இலக்கணம்

650. வழியெனப் படுவ ததன்வழித் தாகும்.

இது, வழிநூலர்மா றுணர்த்துகின்றது.

(இ-ள்) நுதலிய நெறியானன்றி வழிநூலென்றற்குச் சிறப்புடையது அம்முதனூல்வழிப் பிறந்த வழி நூல் (எ-று).

அது தொல்காப்பியம். மற்றுப் பல்காப்பியம் முதலியன வோவெனின்,- அவை வழிநூலே; தொல்காப்பியத்தின் வழித் தோன்றினவென்பது; என்னை?

"கூறிய குன்றினு முதனூல் கூட்டித்
தோமின் றுணர்த றொல்காப் பியன்ற
ணாணையிற் றமிழறிந் தோர்க்குக் கடனே"

என்பவாகலானும், இவ்வாசிரியர் பல்காப்பியர் பல்காயனார் முதலாயினாரை அவ்வாறு கூறுராகலானுமென்பது; என்றார்க்குத், தொல்காப்பியங் கிடப்பப் பல்காப்பியனார் முதலியோர் நூல்செய்த தெற்றுக்கெனின், அவரும் அவர்செய்த எழுத்துஞ் சொல்லும் பொருளுமெல்லாஞ் செய்திலர். செய்யுளிலக்கணம் அகத்தியத்துப் பரந்து கிடந்ததனை இவ்வாசிரியர் சுருங்கச்செய்தலின் அருமை நோக்கிப் பகுத்துக்கூறினாராகலானும், அவர் தந்திரத்துக்கேற்ப முதனூலொடு பொருந்த நூல்செய்தாராகலானும் அமையுமென்பது. பிற்காலத்துக் காக்கைபாடினியாருந் தொல்காப்பியரோடு பொருந்தவே நூல்செய்தாரென்பது; மற்று,

"வடதிசை மருங்கின் வடுகுவரம் பாகத்
தென்றிசை யுள்ளிட் டெஞ்சிய மூன்றும்
வரைமருள் புணரியொடு கரைபொருது கிடந்த
நாட்டியல் வழக்க நான்மையின் கடைக்கண்
யாப்பின திலக்கண மறைகுவன் முறையே"

எனத் தெற்குக் குமரியன்றிக் கடலெல்லையாகிய காலத்துச் சிறுகாக்கைபாடினியார் செய்த நூலினையும் அதன் வழிநூலென்று என்னு மோவெனின்,- ஈண்டுக் கூறிய பொருளெல்லாந் தழுவு மாற்றாற் செய்தாராயின்' - அது வழிநூலாதற்கு இழுக்கின்மை யென்க. இனிச், சில குன்றக்கூறினுர் தொகுத்து நூல் செய் தாராகலினென்பாரும் உளர். ஒழிபொருளவாயின் அது தொகை யெனப்படாமையின் அங்ஙனங் கூறுதல் வழிநூலிலக்கண மன்றென்பது.

(வி-ரை)

அவர் தந்திரத்திற்கு ஏற்ப—அவர் செய்த நூலிற்கு ஏற்ப, ஒழிபொருளவாயின் — பொருள் வகையால் குறைவுபட்ட நூலாயின். [95]

அதன் தொகை

651. வழியி னெறியே நால்வகைத் தாகும்.

இது, வழிநூல் இனைத்துவகைத்தென்கின்றது.

[இ-ள்.] மேல், வழிநூலெனப்பட்டது நான்குவகையாற் செய்யப்படும் [எ-று].

இதன்பயன்; ஒருநூலுள் ஒன்றல்லது பல வாராவெனவும் அதனனே நான்குவகைய வழிநூலெனவும், முதனூலாயின் ஒன்றேயாமெனவுங் கூறியவாறாயிற்று.

அவையாவன மேற்கூறுப.

அதன்வகை (96)

652. தொகுத்தல் விரித்த றொகைவிரி மொழிபெயர்த்
ததர்ப்பட யாத்தலோ டனைமர பினவே.

இந்நான்கு வகையுங் காரணமாக மேற்கூறிய நால்வகை வழிநூலும் பெறலாம் என்றவாறு.

தொகுத்தலென்பது முதனூலுள் விரிந்ததனைச் சில்வாழ் நாட் சிற்றறிவின் மாக்கட்கு அறியத் தொகுத்துக்கூறல். விரித்த லென்பது முதனூலில் தொகுத்துக் கூறப்பட்டு விளங்காது நின்றதனை விளங்குமாற்றான் விரித்துக்கூறல், தொகைவிரி

